உ

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

# மகாத்ம சரிதாமிருதம்.

(40 பெயர் சரித வசநம்)

இது திருக்களர்

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள்

அவர்கள் மாணுக்கர்,

நவ வித விருதாலங்கிருத,

திருப்பூவணம், வேதாந்த மட ஸ்தாபகர்

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரிய ஸ்வாமிகள் அவர்களால்

1930ம் வருஷம் எழுதப் பெற்று




மதுரை

V. சுப்புராயலு நாயுடு பிரசில்

அச்சியற்றப் பெற்றது.

1969

விலை ரூபாய்] [4—00]

# பூமிகை.

உலக மாந்தர்கள் அவரோகணம், ஆரோகணம் என இரண்டு மார்க்கங்களை அநுஷ்டிக்கின்றனர், அடைகின்றனர். அவரோகணம் (1) ஊர்வன 11 (2) நீர் வாழ்வன 10, (3) பறப்பன 10, (4) நாற் கால் மிருகங்கள் 10, (5) தாவரங்கள் 16, (6) தேவர்கள் 16, (7) மனிதர்கள் 9, ஆக எழு வகையில் எண் பத் திரண்டு லெச்சத்தினை அடைகின்றனர். அவற்றுள், ஒன்பது லட்சம் பேத முடைய மனிதர்களே உயர்வுடையவர்க ளாவார்கள் ஏனைய அறுவகை, எழு பத் தொரு லெச்சம் வித்தியாச முடைய ஜெந்துக்கள் அருந்தல் பொருந்தல்களில் மூழ்கி திருப்தியடைகின்றனர். மனிதன் ஒருவனே, இன்ப அடைவு துன்ப ஒழிவுக்கு விரும்புதலால், அந்த ஒன்பது லெச்சம் வித்தியாசம் உடைய மனிதர்களே உயர்வுடையவர்களாவர்கள். அவர்களே மே லிருந்து கீழ் இறங்குவ தாகிய அவரோகண மார்க்கத்தையும், கீ ழிருந்து மேல் ஏறுவதாகிய ஆரோகண மார்க்கத்தையும் அடைகின்றனர். அதனுல், அவரோகண மார்க்கம் மீண்டும் மீண்டும் ஜென்மத்தினை கொடுப்பன வாம். ஆரோகண மார்க்கம், ஒன்றுமே ஜென்மத்தினை நிவிர்த்திப்பதாம், அதனுல், மனிதராகப் பிறந்தவர்கள் சார மான ஆத்ம சொருபத்தினை அடைவதே சாலச் சிறந்த தாம், அதனுல், ஜெந்மாந்தரங்களில் செய்த புண்ணியத்தால், நல்லோர் குலத்தில் அவதரித்து, நித்தியாநித்திய வஸ்து விவேகம், இகாமுத்தரார்த்த பல போக விராகம், சமாதி சட்க சம்பத்தி, முமுட்சுத்துவம், என்னும் நான்கு சாதநங்களும் கைவரப் பெற்று, ஞானாச்சாரியனை அடைந்து, 1 சுபேச்சை, 2 விசாரணை, 3 தநுமாநசி, 4 சத்துவாபத்தி, 5 அசம் சத்தி, 6 பதார்த்தாபாவனே, 7 துரியகா

24-4

என்னும் ஏழு பூமிகளையும் அடைந்து, ஆசாரிய அநுக்கிரகத்தினால், விரைவில் மோட்ச மடைந்த பல பெரியோர்கள் சரித்திரங்களை தெரிந்த மட்டும் எழுதி, இனி வரும் அதிகாரிகள் மோட்சம் அடைந்து சுகியாய் இருக்கும் பொருட்டு, சங்கராச்சாரியர் முதல் சிவாநந்த சுவாமிகள் வரை நாற்பது சரித்திரம் எழுதி வெளியிட்டு இருக்கின்றோம். இதன் பெயர் மகாத்ம சரிதாமிர்தம் ஆகும்.

இதனை யாவரும் வாங்கி படித்து ஒவ்வொரு பெரியார்களது சரித்திரத்தினையும் தெரிந்து, அவரவர்கள் அநுஷ்டித்தபடி முதல் பூமி முதல் ஏழாம் பூமி வரை அப்பியாசித்து, அவர் அவர்களது பிராரப்த கருமப்படி நடக்க கட்டுப்பட்டவர்களாக இருக்கிறார்கள் என்பதை இதன் மூலம் அறிவித்து இருக்கிறோம். இதில், பல பெரியோர்கள் சரித்திரம் பல வித் மாக இருப்பதால், அவரவர்களும் தங்களுக்கு யோக்கிய மான பூமியை அப்யாசித்து அடைய வேண்டு மென்று, திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமிகளின் திரு வடிகளை பன் முறை வாழ்த்தி வணங்கி கூறுகின்றோம்.

இந்த சரித்திரம் எழுதி நாற்பது வருஷங்களாகியும், இப்போது தான் அச்சு வாகன மேறி வெளிவருகின்றது என்பதை யாவரும் உணரவேண்டும்.

*காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள்*

வேதாந்த மடம், திருப் பூ வணம்.

1930.

## மகாத்ம சரிதாமிருதம் 1—446 (40 பெயர்கள்)

24-4



---

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 11 | 9 | உத்தாரணஞ்ஞு | உத்தாரணஞ் |
| 12 | 2 | தொளியில் | தொனியில் |
| ,, | 15 | விசுவேசுவா | விசுவேசுவரர் |
| 15 | 22 | மகிஷபதி | மாகிஷ்மதி |
| 17 | 27 | எஙஙாயினும் | எங்காயினும் |
| 22 | 22 | எங்குங் | எங்கும் |
| 38 | 6 | விாதிக | விரோதிக |
| 42 | 8 | திருவிருவாய் | திருவுருவாய |

| | | | |
|---|---|---|---|
| 47 | 13 | யிரகாச | பிரகாச |
| 70 | 18 | பேற்றும் | போற்றும் |
| 75 | 20 | ஞானோபபேஞ் | ஞானோபதேசஞ் |
| 82 | 8 | பேறிற் | பேரிற் |
| 90 | 8 | பாலச் | பால்ச் |
| 139 | 7 | தெக் | தெற் |
| 158 | 26 | மாஞ்ஞுபித்தா லும் | மாஞ்ஞாபித்தா லும் |
| 159 | 18 | றிரு | றிரு |
| 162 | 2 | சைவை | சைவ |
| ,, | 24 | செந்துதுரை | செந்துரை |
| 164 | 3 | டே | கட |
| | 13 | னிருந்து | ளிருந்து |
| 167 | 6 | ரோடஷன் | ரோஷ்டன் |
| 172 | 20 | சோங்கனர் | சேர்ந்தனர் |
| 181 | 17 | கக்ல | சுக்ல |
| 182 | 4 | நாவல | நாவலர் |
| 183 | 18 | தெர்ழு | தொழு |
| 186 | 18 | தம் | தம |
| 187 | 20 | லிருந்தும | லிருந்தும் |
| 192 | 8 | பண்டங்களே | யண்டங்களே |
| 193 | 2 | தேசிகரும | தேசிகரும் |
| 195 | 11 | வாழத் | வாத்த் |
| 198 | 4 | வாழத் | வாழ்த் |
| 203 | 1 | 19 | 20 |
| 204 | 11 | கத்தாத்திரய | தத்தாத்திரய |
| 205 | 1 | 19 | 20 |
| 207 | 1 | 20 | 22 |
| 211 | 18 | கமஞ் | க்ஞ் |
| 214 | 16 | யிருக்க | யிருந்த |

24-4

| | | | |
|---|---|---|---|
| 218 | 1 | தரிசித்து சுவாமிகளை | சுவாமிகளை தெரிசித்து |
| 239 | 13 | பதிக்கு | பதிக்கு |
| 315 | 1 | 28 சுயம் பிரகாச | 29 சுந்தர |
| 317 | 1 | 28 சுயம்பிரகாச | 29 சுந்தர |
| 319 | 1 | 28 சுயம்பிரகாச | 29 சுந்தர |
| 329 | 11 | வென்று றுதிக்க | வென்று துதிக்க |
| 331 | 28 | எண்ணீலாக் | எண்ணிலாக் |
| 346 | 1 | திரிச்சிர | திரிச்சிராப்பள்ளி |
| 361 | 1 | சாந்தலிங்க சுவாமிகள் | குமார தேவர் |
| 363 | 1 | சாந்தலிங்க சுவாமிகள் | குமார தேவர் |
| 365 | 1 | சாந்தலிங்க சுவாமிகள் | குமார தேவர் |
| 367 | 1 | சாந்தலிங்க சுவாமிகள் | குமார தேவர் |
| 368 | 24 | புத்திரரரபேக்ஷை | புத்திராபேக்ஷை |
| 371 | 17 | அடுமை | அடிமை |
| | 21 | அருளினுர | தருளினுர் |
| 386 | 17 | சொள்ள | கொள்ள |
| 394 | 4 | வுறையுனின்கண் | வுறையுளின்கண் |
| 397 | 5 | வுருத்திப் | வுறுத்திப் |
| | 21 | லாண | லான |
| 398 | 11 | களிபோ | கனிபோ |
| 409 | 14 | ற்மையனினு | றமையனினு |
| 417 | 13 | பீரகாச | பிரகாச |
| 429 | 8 | மியநங்தள் | மியாங்கள் |
| 430 | 6 | விஷப | விஷய |
| 431 | 15 | இஷ்த்தினை | இஷ்டத்தினைச் |
| 437 | 22 | சொன் | சொன்ன |
| 440 | 16 | நடராஜவைப் | நடராஜாவைப் |

## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரிய சுவாமிகள் இயற்றிய தோத்திரங்கள்.

கருவலி களையும் இபமுகன் தன்னைக்
கதிர்வடி வேலனை அடுத்தோர்,
இருமல ஹாரி ஈசுரன் தன்னை
இணையில்கா மாக்ஷியைச் சிறந்த,
திருஉரு துங்க பத்திரை புரக்கும்
சிருங்கைவாழ் செகத்குரு என்னும்,
பரன்உரு வான சங்கர பகவத்
பாதவா சிரியனைப் பணிவாம். 1

கருவலி களையும் இபமுகன் தன்னைக்
கதிர்வடி வேலனை அடுத்தோர்,
இருமல ஹாரி ஈசுரன் தன்னை
இணையில்கா மாக்ஷியைச் சிறந்த,
திருஉரு துங்க பத்திரை புரக்கும்
சிருங்கைவாழ் செகத்குரு மடத்துப்
பரன்உரு வான சுரேசுவரா சானற்
பாததா மரையினைப் பணிவாம். 2

கருவலி களையும் இபமுகன் தன்னைக்
கதிர்வடி வேலனை அடுத்தோர்,
இருமல ஹாரி ஈசுரன் தன்னை
இணையில்கா மாக்ஷியைச் சிறந்த,
திருஉரு துங்க பத்திரை புரக்கும்
சிருங்கைவாழ் செகத்குரு மடத்துப்
பரன்உரு வான தோடக ஆசான்
பாததா மரையினைப் பணிவாம். 3

கருவலி களையும் இபமுகன் தன்னைக்
　　கதிர்வடி வேலனை அடுத்தோர்,
இருமல ஆதி ஈசுரன் தன்னை
　　இணையில்கா மாக்ஷியைச் சிறந்த,
திருஉரு துங்கபத்திரை புரக்கும்
　　சிருங்கைவாழ் செகத்குரு மடத்துப்
பரன்உரு வான வித்யாரண்யர்
　　பாததா மரையினைப் பணிவாம். 4

உருவமார் யானை முகன்தனை உலகோர்
　　உணருருச் சண்முகன் றன்னைத்,
திருவளர் ஈசன் நற்றிடு வடியை
　　திவ்விய அம்பிகை அடியைக்,
கருவினில் வராம லிருக்குமத் தொய்தக்
　　கரைதனில் வாழுநற் பதியாம்,
நெரூரி னில்வாழ் சதாசிவப் பிரஹ்ம
　　நெடுங்கழல் நினைந்துவாழ்த் திடுவாம். 5

நாவலர் போற்றும் சமிநிழல் அமரும்
　　நாயகன் நளிநநன் மலரை,
மாஎழில் ஆறு முகன்தனைச் கொற்ற
　　வாள்இறை திருநெல்லை அம்மை,
ஆவல்நல் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
　　கருளொடு ஞாநம தளித்துக்,
கோவிலூ ரினில்வாழ் முக்திரா மேச
　　குருபரன் தாள்திநம் பணிவாம். 6

நாவலர் போற்றும் சமிநிழல் அமரும்
　　நாயகன் நளிநநன் மலரை,

மாஎழில் ஆறு முகன்றனைக் கொற்ற
வாழ்இறை திருநெல்லை அம்மை,
ஆவல்நல் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞானமும் அளித்துக்,
கோவிலூ ரினில்வாழ் அருணு சலநற்
குருபரன் தாள்திநம் பணிவாம். 7

நாவலர் பரவும் சமிசிழல் அமரும்
நாயகன் நளிநநன் மலரை,
மாஎழில் ஆறு முகன்றனைக் கொற்ற
வாள்இறை திருநெல்லை அமையை,
ஆவல்நல் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞானம தளித்துக்,
கோவிலூ ரினில்வாழ் அண்ணு மலைக்
குருபரன் தனைத்திநம் பணிவாம். 8

நாவலர் பரவும் சமிசிழல் அமரும்
நாயகன் நளிநநன் மலரை,
மாஎழில் ஆறு முகன்றனைக் கொன்ற
வாள்இறை திருநெலை அமையை
ஆவல்நன் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞானம தளித்துக்,
கோவிலூ ரினில்வாழ் பழநியப்ப ஞாந
குருபரன் தனைத்திநம் பணிவாம். 9

நாவலர் பரவுஞ் சமிசிழல் அமரும்
நாயகன் நளிநநன் மலரை,
மாஎழில் ஆறு முகன்றனைக் கொற்ற
வாள்இறை திருநெல்லை அமையை,
ஆவல்நல் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞானம தளித்துக்,
கோவிலூ ரினில்வாழ் முத்துவீரப்ப
குருபரன் தனைத்திநம் பணிவாம். 10

அல்லலை அகற்றும் திறத்தினைத் தொழுவார்க்
கருள்செயும் இபமுகத் திறையைத்
துல்லியர் துதிக்கும் அறுமுகத் தவனைச்
சோமசுந் தரேசனை இடம்சேர்.
நல்லசௌந் தரிய நாயகி பதத்தை
நறைமலர் சொரிபொழில் சூழும்,
கல்லல்வெள் ளயப்ப ஞானதே சிகனைக்
கவின்பெற நினைந்துவாழ்த் துதுமே. 11

நாவலர் போற்றும் சமிகிழல் அமரும்
நாயகன் நளிநநன் மலரை,
மாஎழில் ஆறு முகன்றனை கொற்ற
வாள்இறை திருநெல்லை அமையை
ஆவல்நல் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞானம தளித்துக்,
கோவிலூர் தனில்வாழ் சிதம்பர ஞான
குருபரன் தாள்திநம் பணிவாம். 12

விண்முகத் தமரர் முதலவர் வணங்க
விளங்குறும் பொற்கரி முகனைச்,
சண்முகத் திறையைப் பொருள்வைமா நகர்வாழ்
சம்புவைப் பொலம்புரி இறையைத்,
தண்முகத் தருளொ டொளிர்தரும் எனது
தாய்சௌந் தரியநா யகியை,
உண்முகத் தவர்கள் போற்றவீற் றருளும்
உகந்ததே சிகனைவாழ்த் துதுமே. 13

விண்முகத் தமரர் முதல்வர் வணங்க
விளங்கிடும் பொற்கரி முகனைச்,
சண்முகத் திறையைப் பொருள்வைமா நகர்வாழ்
சம்புவைப் பொலம்புரி இறையைத்,
தண்முகத் தருளொ டொளிர்தரும் எனது
தாய்சௌந் தரியநா யகியை

விண்முகத் தவர்கள் போற்றவீற் றருளும்
வீரபத் திரனைவாழ்த் துதுமே. 14

எண்டரும் பெரியோர் தொழுதெழ வருளும்
இபமுகத் திறைவனை விடத்தை
உண்டவர்க் கருள்வே லனை அருள் நிலத்தை
யுண்டவர் சுந்தரே சனைமண்
விண்டவர் புகழ்மீ நாக்ஷியை மேகம்,
விரைந்திவர் கண்டனூர் வாழும்.
திண்டரும் மநம் ஆர் நாகப்ப ஞாந
தேசிகன் தனைப்பணிந் திடுவாம். 15

சொல்லமு தருளும் ஞானமுக் குறுணித்
தோன்றலை ஆன்றவர் வழுத்தும்,
எல்லையில் கருணைக் குகன்றனைச் சகமி
எழில்சிவ காமியம் மையினை,
நல்லவர் புகழும் நடநா யகனை
நான்மறைப் பொருளெலாம் விரித்துத்,
தில்லையில் அமர்பொன் னம்பல ஞாந
தேசிகன் தனைத்திநம் பணிவாம். 16

தெருள்நிறை முனிவர் பணிதரும் கரியின்
றிரைகொளும் கருணைநா யகனைப்,
பொருள்நெறி அருளும் முருகவேள் இறையைப்
போதயன் அரியொடு நேடும்,
அருணநல் அசலம் எனும்என் றந் தையினை,
அணிஉண்ணு முலையினம் மையினை,
அருணையில் உறைகந் தப்பதே சிகனை
அநுதிநம் வணங்கிவாழ்த் திடுவாம் 17

மலர்மகள் மருகன் என்னுமாற் றுறைத்த
மாமுகன் திருவடி மலரை,

இலைநெடு வேலன் பாததா மரையை
இனியதியா கேச்சுரன் இணையை
கலைஉறும் கமல நாயகி கழலைக்
கருதும்ஆ ரூரினில் இலகும்,
திலகம் ஆம் தெக்ஷி ஞஸ்பஞா நேச
தேசிகன் தனைத்திநம் பணிவாம். 18

மாஉடை உருவும் நரர்உடை உருவும்
மன்னிடும் இபமுக இறையைத்,
தேவுடைத் தேவர் அரதநம்ஆகச் செப்பிடும்
அறுமுக இறையை,
ஆவுடை வயிரத் தூணரை எந்தம்
அழகிய நாயகி பதத்தைக்
காவுடை மழவா டியிலமரர் சுயம்பிர
காசதே சிகனைவாழ்த் துதுமே. 19

இந்துசேர் சடிலக் கயமுகன் தன்னை
இமையவர்க் கிறைவனும் குகனைச்,
சுந்தரேச் சுரனை உலகினை ஈன்ற
தோகைமீ னாக்ஷியை முகிழ்சூழ்,
கொந்தலர் பொழில்ஆர் ஞிமிறின ஒலிகள்
குமுகுமு கெனும்அரி மழம்வாழ்,
சுந்தர ஞாந தேசிகன் பதத்தைத்
தொழுபவர் கழல்பணிந் திடுவாம். 20

பேரையூர் விளங்கும் விநாயகன் அடியை
பெருங்குகப் பிரானத டியைப்,
போரையே கொண்ட பேரையூர் இறைவன்
பொங்குசெந் தாமரை அடியை,
நாரைகள் போற்றும் நயநநா யகியின்
நற்றிடு வடிகளைத் திநமும்,

பேரையூர் வாழும் சாந்தலிங் கேசன்
பிறைஅடி களைத்திநம் தொழுவாம், 21

அருத்தம்நன் கடைய வளிக்குநல் கருணை
ஆழத்துப் பிள்ளையைச் சிகரிக்,
கொருத்தனென் றுரைக்குங் குமரநற் குருவை,
யொருவிலா விருத்தநா யகனைத்
திருத்தநன் ஞாநங் கொடுக்குநம் குருவாச்
செப்பிடும் விருத்தநா யகியை,
விருத்தநல் லசலக் குமாரதே வன்நன்
விரைமலர் அடியிணை தொழுவாம். 22

கருணைஈ தென்னச் சொரிதரும் மதம்சேர்
கயமுகன் றனைக்கனை அசுரப்,
பருவரல் உறவேற் படைவிடு குகனைப்
பாநுபு ரீசரை உலகை,
அருள்மர கதவல் லியின்மலர் அடியை
அறம்வளர் வியாசர்பா டியில்வாழ்,
தெருள்உறும் கருணைச் சிவப்பிர காச
தேசிகன் தனைத்திநம் பணிவாம் 23

நாடரும் பொருளை நமக்கருள் சித்தி
நாயகன் நளிநநன் மலரைத்,
தாடரும் பரற்கும் பரங்கிரி யிறையைத்
தாணுவாம் சுந்தரேச் சுரனை
நீடிய வினைக ளியாவையும் பொடிசெய்
நீள்கயற் கண்ணியம் மையினைத்,
தேடமர் கூடல் அசுவத்த நாத
தேசிகன் தனைத்திநம் பணிவாம். 24



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்



ஸ்ரீ தத்துவராய ஸ்வாமிகள்.





கோவிலூர்
அண்ணாமலை ஞான தேசிகர்



எகாம்பரக் குப்பம்
சிவானந்த சுவாமிகள்

| பெயர் | கலி வருஷம் | தமிழ் வருஷம் | மாதட | |
|---|---|---|---|---|
| மிகள் | 4991 | விகிருதி | ஆவணி | 1 |
| ரி | 4992 | கர | ஆனி | 2 |
| கள் | 4994 | விஜய | சித்திரை | |
| மிகள் | 4997 | துந்முகி | சித்திரை | 1 |
| வாமிகள் | 4997 | துந்முகி | தை | 1 |
| ாமிகள் | 4998 | ஹேவிளம்பி | கார்த்தி | 2 |
| கள் | 4999 | விளம்பி | சித்திரை | |
| மிகள் | 4999 | விளம்பி | சித்திரை | 1 |
| கள் | 4999 | விளம்பி | வைகாசி | 2 |
| கள் | 5004 | சோபகிருது | ஆனி | |
| கள் | 5004 | சோபகிருது | ஐப்பசி | |
| ாந தேசிக ஸ்வாமிகள் | 5005 | குரோதி | ஐப்பசி | 2 |
| | 5005 | குரோதி | தை | 1 |
| கள் | 5007 | பராபவ | ஐப்பசி | 2 |
| ள் | 5008 | பிலவங்க | ஆடி | 2 |
| ந சுவாமிகள் | 5010 | சௌமிய | பங்குனி | |
| மிகள் | 5011 | சாதாரண | வைகாசி | |
| தசிக சுவாமிகள் | 5012 | விரோதிகிரு | வைகாசி | 2 |
| நவ நரசிம்ம பாரதி | 5012 | விரோதிகிரு | பங்குனி | |
| கள் | 5018 | பிங்கள | மார்கழி | 1 |
| ாமிகள் | 5018 | பிங்கள | பங்குனி | 2 |
| வாமிகள் | 5019 | காளயுக்தி | ஆவணி | 1 |
| ா தேசிக சுவாமிகள் | 5020 | சித்தார்த்தி | வைகாசி | |
| சரஸ்வதி சுவாமிகள் | 5020 | சித்தார்த்தி | ஆடி | 2 |
| ா | | | வைகாசி | 1 |
| மிகள் | | | புரட்டாசி | |
| கள் | | | ஆவணி | |
| ா | | | மார்கழி | |
| ா | | | சித்திரை | |





கோவிலூர்
அண்ணாமலை ஞான தேசிகர்



ஏகாம்பரக் குப்பம்
சிவாநந்த சுவாமிகள்

# மஹாத்மாக்கள் சித்தியான கால நிர்ணயம்.

| நிர். | ஊர். | பெயர் | கலி வருஷம் | தமிழ் வருஷம் | மாதம் | தேதி | கிழமை | திதி | நக்ஷத்திரம். | ஜாதி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | வியாச பகவான் | | | ஆடி | | | பௌர்ணமை | | |
| 2 | சிருங்க கிரி | சங்கராச்சாரிய ஸ்வாமிகள் ஜநநம் | 3058 | ஈசுவர | வைகாசி | | | சுக்ல பஞ்சமி | | பிராமணர் |
| 3 | திரு வொற்றி யூர் | பட்டினத்து சுவாமிகள் | | | ஆடி | | | | உத்திராடம் | தநவைசியர் |
| 4 | இறம் புதூர் | தத்துவராய சுவாமிகள் | | | ஆடி | | | | சதயம் | பிராமணர் |
| 5 | நேரூர் | சதாசிவ பிரஹ்மேந்திர சரஸ்வதி | | | ஆனி | | | சுத்த தகமி | | பிராமணர் |
| 6 | பட்டீச்சுரம் | சிவப் பிரகாச சுவாமிகள் | | | ஆனி | | | | பரணி | வேளாளர் |
| 7 | பேரூர் | சாந்த லிங்க சுவாமிகள் | | | மாசி | | | | மகம் | வேளாளர் |
| 8 | விருத்தாசலம் | குமார தேவ சுவாமிகள் | | | புரட்டாசி | | | சு சதுர்த்தசி | | வேளாளர் |
| 9 | திருப் போரூர் | சிதம்பர சுவாமிகள் | | | வைகாசி | | | பௌர்ணமி | விசாகம் | வேளாளர் |
| 10 | சிக்கல் பொருள் வைத்த சேரி | உகந்த லிங்க ஞாந தேசிக சுவாமிகள் | 4919 | வெகுதாந்ய | பங்குனி | 26 | செவ்வாய் | ஏகாதசி | மகம் | நவ வீரர் |
| 11 | திருவண்ணுமலை ஈசாந்ய மடம் | கந்தப்ப ஞாந தேசிக சுவாமிகள் | 4930 | விரோதி | மார்கழி | 26 | வியாழன் | திரயோதசி | மிருகசீரிஷம் | வேளாளர் |
| 12 | திரு வாரூர் மடப் புரம் | தக்ஷிணு மூர்த்தி சுவாமிகள் | 4935 | மந்மத | ஆவணி | 12 | புதன் | சு திரிதியை | உத்திரம் | வேளாளர் |
| 13 | காசி, கோவி லூர் | சின்னத் துறவு அருணுசல சுவாமிகள் | 4945 | குரோதி | ஆனி | 31 | வெள்ளி | கி துவாதசி | ரோஹிணி | வைசியர் |
| 14 | கோவி லூர் | முக்தி ராமலிங்க ஞாநதேசிக சுவாமிகள் | 4948 | பிலவங்க | பங்குனி | 8 | ஞாயிறு | பௌர்ணமி | உத்திரம் | வைசியர் |
| 15 | கோவி லூர் | துறவு அருணுசல ஞாநதேசிக ஸ்வாமிகள் | 4950 | சௌமிய | ஆடி | 9 | ஞாயிறு | சு சதுர்த்தசி | பூரம் | வைசியர் |
| 16 | கோவி லூர் கோட்டை யூர் | அண்ணுமலை சுவாமிகள் | 4960 | சித்தார்த்தி | பங்குனி | 26 | வெள்ளி | கி பிரதமை | சித்திரை | வைசியர் |
| 17 | சிக்கல் பொருள் வைத்த சேரி | வீர பத்திர சுவாமிகள் | 4961 | ரௌத்திரி | வைகாசி | 7 | வெள்ளி | கி சதுர்த்தசி | பரணி | நவவீரர் |
| 18 | கோவிலூர் நேமத்தான் பட்டி | பழநி யப்ப சுவாமிகள் | 4961 | ரௌத்திரி | ஆடி | 8 | சனி | சு திரிதியை | மகம் | வைசியர் |
| 19 | சிக்கல் பொருள் வைத்த சேரி | சிங்கார வேலு சுவாமிகள் | 4962 | துந்மதி | ஆவணி | 26 | திங்கள் | சு பஞ்சமி | விசாகம் | நவ வீரர் |
| 20 | மதுரை | குட் டைய சுவாமிகள் | 4973 | ஆங்கிரச | ஆவணி | 5 | திங்கள் | கி பிரதமை | சதயம் | வைசியர் |
| 21 | மதுரை | அரசப்ப சுவாமிகள் | 4975 | பவ | மார்கழி | 15 | திங்கள் | கி ஷஷ்டி | பூரம் | வைசியர் |
| 22 | கோவி லூர், பள்ளத்தூர் | முத்து வீரப்ப சுவாமிகள் | 4976 | யுவ | தை | 26 | திங்கள் | சு திரயோதசி | புநர் பூசம் | வைசியர் |
| 23 | கோவி லூர் | சிதம்பர ஞாந தேசிக சுவாமிகள் | 4977 | தாது | ஆடி | 4 | திங்கள் | கி ஏகாதசி | ரோஹிணி | வைசியர் |
| 24 | அரிமளம் | சுந்தர சுவாமிகள் | 4979 | வெகுதாந்ய | ஐப்பசி | 6 | திங்கள் | கி தசமி | பூரம் | பிராமணர் |
| 25 | கோவி லூர் | ராம சாமி ஞாந தேசிக சுவாமிகள் | 4984 | சுபாநு | மார்கழி | 6 | புதன் | கி ஷஷ்டி | மகம் | வைசியர் |
| 26 | சென்னை, குயப்பேட்டை | சச்சிதாநந்த சுவாமிகள் | 4986 | பார்த்திப | தை | 10 | வியாழன் | கி பிரதமை | ஆயில்யம் | |
| 27 | கல்லல் | வெள்ளையப்ப சுவாமிகள் | 4988 | சர்வஜித் | தை | 28 | வியாழன் | கி திரயோதசி | பூராடம் | வைசியர் |
| 28 | வளவ னூர் | ஷண்முக சுவாமிகள் | 4990 | விரோதி | ஆனி | | வியாழன் | கி ஷஷ்டி | பூர(ாட)ம் | |
| 29 | மானு மதுரை | நாராயண சுவாமிகள் | 4990 | விரோதி | பங்குனி | 18 | | பௌர்ணமை | அஸ்தம் | |

| நெ. | ஊர். | பெயர் | கலி வருஷம் | தமிழ் வருஷம் | மாதம் | தேதி | கிழமை | திதி | நக்ஷத்திரம் | ஜாதி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 30 | ஆளுடையார் கோவில் | மஹா தேவ சுவாமிகள் | 4991 | விகிருதி | ஆவணி | 18 | செவ்வாய் | கி சதுர்த்தசி | ரேவதி | வேளாளர் |
| 31 | மதுரை | சிந்நய சுவாமிகள் | 4992 | கர | ஆனி | 21 | வெள்ளி | கி திரயோதசி | ரோஹிணி | வைசியர் |
| 32 | கண்டனூர் | நாக லிங்க சுவாமிகள் | 4994 | விஜய | சித்திரை | | | | | வைசியர் |
| 33 | மதுரை | பிரஹ்மாநந்த சுவாமிகள் | 4997 | துந்முகி | சித்திரை | 14 | வெள்ளி | சு துவாதசி | உத்திரம் | பிராமணா |
| 34 | மழு வாடி | ஸ்வயம்பிரகாச சுவாமிகள் | 4997 | துந்முகி | தை | 12 | சநி | கி ஷஷ்டி | அஸ்தம் | வேளாளர் |
| 35 | சிக்கல் பொருள் வைத்த சேரி | சட்டை யப்ப சுவாமிகள் | 4998 | ஹேவிளம்பி | கார்த்தி | 29 | திங்கள் | சு சதுர்தசி | பூசம் | நவ வீரர் |
| 36 | சிதம்பரம் மௌந சாமி மடம் | ஆறு முக சுவாமிகள் | 4999 | விளம்பி | சித்திரை | 8 | செவ்வாய் | கி திரயோதசி | உத்திரட்டா | நவ வீரர் |
| 37 | திருவண்ணுமலை ஈசாந்ய மடம் | மஹா தேவ சுவாமிகள் | 4999 | விளம்பி | சித்திரை | 15 | செவ்வாய் | சு டஞ்சமி | திரு வாதிரை | வேளாளர் |
| 38 | சிக்கல் பொருள் வைத்த சேரி | முத் தைய சுவாமிகள் | 4999 | விளம்பி | வைகாசி | 25 | செவ்வாய் | கி துதியை | கிருத்திகை | நவ வீரர் |
| 39 | மதுரை | பாலாநந்த சுவாமிகள் | 5004 | சோபகிருது | ஆனி | 3 | புதன் | கி சப்தமி | பூரட்டாதி | பிராமணர் |
| 40 | வளவனூர் | நம சிவாய சுவாமிகள் | 5004 | சோபகிருது | ஐப்பசி | 2 | ஞாயிறு | கி திரயோதசி | உத்திரம் | |
| 41 | சிதம்பரம் | பொன் னம்பல ஞாந தேசிக ஸ்வாமிகள் | 5005 | குரோதி | ஐப்பசி | 22 | ஞாயிறு | அமாவாசை | சித்திரை | அகமுடை |
| 42 | சாக்கோட்டை | வீரப்ப சுவாமிகள் | 5005 | குரோதி | தை | 13 | புதன் | சு டஞ்சமி | உத்திரம் | வைசியர் |
| 43 | மதுரை | கண்ணப்ப சுவாமிகள் | 5007 | பராபவ | ஐப்பசி | 25 | சநி | சு நவமி | மகம் | வைசியர் |
| 44 | திருவாரூர் மடப் புரம் | சிவாநந்த சுவாமிகள் | 5008 | பிலவங்க | ஆடி | 27 | ஞாயிறு | சு துவிதியை | பூரம் | |
| 45 | மதுரை | சுத்த பிரஹ்மாநந்த சுவாமிகள் | 5010 | சௌமிய | பங்குனி | 3 | புதன் | சு ஷஷ்டி | கிருத்திகை | பிராமணர் |
| 46 | மதுரை | சங்கராநந்த சுவாமிகள் | 5011 | சாதாரண | வைகாசி | 7 | வெள்ளி | சு துவாதசி | சித்திரை | பிராமணர் |
| 47 | திருக் களர் | வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் | 5012 | விரோதிகிரு | வைகாசி | 27 | வெள்ளி | சு திரயோதசி | விசாகம் | வைசியர் |
| 48 | சிருங்க கிரி | சச்சிதாநந்த் சிமாபிநவ நரசிம்ம பாரதி | 5012 | விரோதிகிரு | பங்குனி | 8 | புதன் | சு துவிதியை | ரேவதி | பிராமணர் |
| 49 | கோவிற்பட்டி | முக்தாநந்த சுவாமிகள் | 5018 | பிங்கள | மார்கழி | 15 | சநி | கி பிரதமை | புநர் பூசம் | நாயகர் |
| 50 | சென்னை, வியாசர்பாடி | சிவப் பிரகாச சுவாமிகள் | 5018 | பிங்கள | பங்குனி | 22 | வியாழன் | கி அஷ்டமி | உத்திராடம் | வீர சைவர் |
| 51 | சாக்கோட்டை | முத்துக் கறுப்ப சுவாமிகள் | 5019 | காளயுக்தி | ஆவணி | 19 | புதன் | கி சதுர்த்தசி | மகம் | வைசியர் |
| 52 | கோவி லூர் | அண்ணுமலை ஞாநதேசிக சுவாமிகள் | 5020 | சித்தார்த்தி | வைகாசி | 8 | புதன் | கி ஷஷ்டி | திருவோணம் | வைசியர் |
| 53 | கோட்டையூர் | யோகாநந்தேந்திர சரஸ்வதி சுவாமிகள் | 5020 | சித்தார்த்தி | ஆடி | 21 | செவ்வாய் | சு நவமி | அநுஷம் | பிராமணர் |
| 54 | சிதம்பரம் | மௌந சுவாமிகள் | | | வைகாசி | 10 | | | | |
| 55 | சிதம்பரம் | நித்தியாநந்த சுவாமிகள் | | | புரட்டாசி | | | | ஆயில்யம் | |
| 56 | பசுபதி கோவில் | ஆறு முக சுவாமிகள் | | | ஆவணி | | | | திரு வாதிரை | |
| 57 | தஞ்சாவூர் | பாலைய சுவாமிகள் | | | மார்கழி | | | | திரு வோணம் | |
| 58 | கும்ப கோணம் | மௌந சுவாமிகள் | | | சித்திரை | | | | உத்திரம் | |

ஓம் தத் சத்.

# மஹாத்ம சரிதாமிருதம்.

## 1. ஸ்ரீ ஜகத் குரு.

## ஆதி சங்கராசாரிய சுவாமிகள் சரித்திரம்.

---

ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் துதி.

கருவலி களையும் இபமுகன் தன்னைக்
கதிர்வடி வேலனை அடுத்தோர்,
இருமல ஹாரி ஈசுரன் தன்னை
இணையில்கா மாக்ஷியைச் சிறந்த,
திருஉரு துங்க பத்திரை புரக்கும்
சிருங்கைவாழ் செகத்குரு என்னும்,
பரன்உரு வான சங்கர பகவத்
பாதவா சிரியனைப் பணிவாம்.

இப் பூ லோகத்தின்கண், கலியுகாதி 3000ஞலக்கு மேல், வைதிக மாகிய சந் மார்க்கம் குறைந்து, பௌத்தாதி அவைதிக பாஷண்ட மார்க்கங்கள் பெருகி, அதனுல், ஜீவர்கள் துன்புறுவதைக் கண்ட தேவர்கள், ஸ்ரீ கைலாச பதியினிடஞ் சென்று முறையிட்டனர். அப் போது, எம் பெருமான், அவர்கள் முறையீட்டிற் கிணங்கி, ஸ்ரீ குமாரக் கடவுளைப் பார்த்து, "இதற்கு முன் எம்மா லேவப்பட்ட விஷ்ணுவும், ஆதிசேஷனும், சங்கருஷ்ண, பதஞ்சலி முனிவர் களா யவதரித்து, வேதத்தின் தேவதா காண்டத்தினையும், யோக காண்டத்தினையும், விளக்குகின்றுர்கள். நீ புவியில், பட்ட பாத ரெனும் பெயரால், அவதரித்து ஜைமினியாற்

| தேதி கிழமை | திதி | நக்ஷத்திரம் | ஜாதி |
|---|---|---|---|
| செவ்வாய் | கி சதுர்த்தசி | ரேவதி | வேளாளர் |
| வெள்ளி | கி திரயோதசி | ரோஹிணி | வைசியர் |
| | | | வைசியர் |
| வெள்ளி | சு துவாதசி | உத்திரம் | பிராமணா |
| சநி | கி ஷஷ்டி | அஸ்தம் | வேளாளர் |
| திங்கள் | சு சதுர்தசி | பூசம் | நவ வீரர் |
| செவ்வாய் | கி திரயோதசி | உத்திரட்டா | நவ வீரர் |
| செவ்வாய் | சு பஞ்சமி | திருவாதிரை | வேளாளர் |
| செவ்வாய் | கி துதியை | கிருத்திகை | நவ வீரர் |
| புதன் | கி சப்தமி | பூரட்டாதி | பிராமணர் |
| ஞாயிறு | கி திரயோதசி | உத்திரம் | |
| ஞாயிறு | அமாவாசை | சித்திரை | அகமுடை |
| புதன் | சு பஞ்சமி | உத்திரம் | வைசியர் |
| சநி | சு நவமி | மகம் | வைசியர் |
| ஞாயிறு | சு துவிதியை | பூரம் | |
| புதன் | சு ஷஷ்டி | கிருத்திகை | பிராமணர் |
| வெள்ளி | சு துவாதசி | சித்திரை | பிராமணர் |
| வெள்ளி | சு திரயோதசி | விசாகம் | வைசியர் |
| புதன் | சு துவிதியை | ரேவதி | பிராமணர் |
| சநி | கி பிரதமை | புனர் பூசம் | நாயகர் |
| வியாழன் | கி அஷ்டமி | உத்திராடம் | வீர சைவர் |
| புதன் | கி சதுர்த்தசி | மகம் | வைசியர் |
| புதன் | கி ஷஷ்டி | திருவோணம் | வைசியர் |
| செவ்வாய் | சு நவமி | அநுஷம் | பிராமணர் |
| | | ஆயில்யம் | |
| | | திருவாதிரை | |
| | | திருவோணம் | |
| | | உத்திரம் | |

ஓம் தத் சத்.

# மஹாத்ம சரிதாமிருதம்.

## 1. ஸ்ரீ ஜகத் குரு.

### *ஆதி சங்கராசாரிய சுவாமிகள் சரித்திரம்.*

---

ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் துதி.

கருவலி களையும் இபமுகன் தன்னைக்
கதிர்வடி வேலனை அடுத்தோர்,
இருமல ஹாரி ஈசுரன் தன்னை
இணையில்கா மாக்ஷியைச் சிறந்த,
திருஉரு துங்க பத்திரை புரக்கும்
சிருங்கைவாழ் செகத்குரு என்னும்,
பரன்உரு வான சங்கர பகவத்
பாதவா சிரியனைப் பணிவாம்.

இப் பூ லோகத்தின்கண், கலியுகாதி 3000ளுக்கு மேல், வைதிக மாகிய சந் மார்க்கம் குறைந்து, பௌத்தாதி அவைதிக பாஷண்ட மார்க்கங்கள் பெருகி, அதனுல், ஜீவர்கள் துன்புறுவதைக் கண்ட தேவர்கள், ஸ்ரீ கைலாச பதியினிடஞ் சென்று முறையிட்டனர். அப் போது, எம் பெருமான், அவர்கள் முறையீட்டிற் கிணங்கி, ஸ்ரீ குமாரக் கடவுளைப் பார்த்து, ''இதற்கு முன் எம்மா லேவப்பட்ட விஷ்ணுவும், ஆதிசேஷனும், சங்கருஷ்ண,பதஞ்சலி முநிவர் களா யவதரித்து, வேதத்தின் தேவதா காண்டத்தினையும், யோக காண்டத்தினையும், விளக்குகின்ருர்கள். நீ புவியில், பட்ட பாத ரெனும் பெயரால், அவதரித்து ஜைமிநியாற்

செய்யப்பட்ட நூலை யாதரித்து, பிரஹ்ம தேவனது அவதார மாகிய மண்டநமிசிரன் என்னும் மாணுக்கனையும், இந்திரனது அவதார மான சுதந்வன் என்னும் அரசனையும், துணை யாகக் கொண்டு,சாருவாகர், புத்தர் முதலியோரைத் தண்டிப்பித்து, வேதத்தின் கர்ம காண்டத்தை நிலை நிறுத்துவாயாக. பின்னர், யாம் அவதரித்து, ஞாந காண்டத்தை நிறுத்துவாம்'' என்று ஆஞ்ஞாபிக்க, அவ் வாறே,குமாரக் கடவுளும் அவதரித்து, பாட்டப் பிரதீப மென்னும் பூர்வ மிமாம்ஸா நூலை யியற்றி,அவ் விரு வரையும் துணை யாகக் கொண்டு, நாஸ்திகர்களைக் கண்டித்துக், கர்ம காண்டத்தின்படி, உல கெங்கும் வைதீக வொழுக்கங்களைப் பரவச் செய்தனர். இப் பட்டபாதரே குமாரில பட்ட ரென்றும் சொல்லப்படுவர்.

பின்னர், கேரள நாட்டில், இடபாசலத்தின் பூரணு நதிக் கரையில், தானே முளைத்த ஜோதிர் லிங்க மூர்த்தியினருகி லிருந்த, காலடி யென்னும் அக்கிரகாரத்தில், வைதிக சிரேஷ்ட ராகிய வித்தியாதி ராயருக்கு, அவ் விடபாசலத்துச் சுயம்பு லிங்கேசன தருளாற், சிவ குரு என்பவர் பிறந்தனர். இவர், சிறு பொழுதே, சகல வேத சாஸ்திரங்களையும், ஆசிரியரிடம் கற்றுத் தேறி, பிரஹ்மசாரியாகவே இருக்க வேண்டு மென்றதை, வருங் கால முணர்ந்த அவ்வாசிரியர் மறுக்க, அவ ராஞ்ஞையைச் சிரமேற் கொண்டு, பிதாவின் இஷ்டப்படி, மகி பண்டித ரென்னும் பிராஹ்மணேத்தமரது புதல்வி யாகிய ஆரியாம்பாளை விதிப்படி மணஞ் செய்து கொண்டனர்.

அவ் விருவரும் விதி வழுவாது, இல் லற தருமம் நடத்தி வரு நாளில், அவர் பிதா வித்தியாதி ராயர், சிவப்

பேற்றை யடைய தம்பதிக ளிருவரும் சுகித்து வரும் நாளில், பத்திரியார் வேண்டுகோளின்படி புத்திரப் பேற் றைக் கருதி, இருவரும் தவஞ் செய்யுங்கால், 12-வது வரு டத்தில், பூர்ணவாகினி நதி தீரத்தில், சிவ பெருமான் அவர்க ளிருவருக்கும், சந்தான பல மருளுவதாக நித்திரையில் சேவை சாதித்தருளினர். அதனைப் பெற் றிருவரும், தமது கிருஹத்தில், புத்திர காமேஷ்டியாதி சர்வ கிரியைகளையும் முடித்துத் தருப்பாசனத்தில் படுத்திருக்கையில், அன் றிரவு, ஈசன் வேதியராய், வந்து, ''அற்பாயு சுள்ள ஞான நிறை வுற்ற ஒரு புதல்வன் வேண்டுமோ? அல்லது, தீர்க்காயு சுள்ள மூட மக்கள் பலர் வேண்டுமோ?'' என்று வினவ, அவர்கள், ஞான பூர்ண னுன ஒரு புதல்வனே போதும், ஆயுள், வேண்டின் மிருத்தியுஞ் சயன் கொடுப்பா னென, 'அவ்வாறே யாகுக' வென்று மறைந்தனர். உடனே விழித் தெழுந்து, சிவ பெருமான் மகிமையை வியந்திருந்தனர். அது முதல். மாயாவி யாகிய பரமேசுவரன், அவர்கள் கர்ப் பத்தில், முறையே பிரவேசித்துத், தனது சத்தியால் கர்ப்ப சின்னங்களையும், அநேக அற்புதங்களையும் காட்டி, இக் கலியுகத்தில், 3058-வது ஆண்டுக்குச் சரியான, விக்கிரம சகம் 14வ தாகிய, ஈஸ்வர வருஷம், வைசாக சுத்த பஞ்சமியில், தேவ துந்துபி முழங்கப், புஷ்ப விருஷ்டி பொழிய, வைதிகர் மனங் களிக்க, பேத வாதியர் மனம் புழுங்க, அவ் வாரியாம்பாளது கர்ப்பத்தினின்றும் வெளிப் பட்டது போல், சங்கர மூர்த்தி யானவர் ஆவிர்ப்பவித் தனர்.

அப் போது, சிவ குருவானவர், விதிப்படி ஜாத கர்ம முதலிய எல்லாச் சடங்குகளையுஞ் செய்து, புத்திரோற் சவங் கொண்டாடி, அக் குழந்தைக்கு, நெற்றியில், நெற்

றிக் கண்ணின் குறிப்பும், உச்சியில், எவ் வளவு துடைத் தாலும், உலராத ஈரமும், இளம் பிறை யொத்த வெண் ணிறக் கீற்றும், கண்டத்தின் மீது, கருத்த மருவும், கை களில் உடுக்கை, சூல முதலிய ரேகைககளும், சந்திர காந் தம் போன்ற, தேக காந்தியு மாகிய, பல சிந்நங்கள், சங்க ராம்ச மெனக் குறிப்பித்து நிற்றல் கண்டு, 'சங்கரர்' என் னும் நாம கரணம் சாற்றினர். அக் குழந்தை, நாளுக்கு நாள் வளர் பிறை போல் அபிவிர்த்தி யாய் வந்தது. பின்னர், இடபாசலத்து வேதியர், சுயம்பு லிங்கேசருக்குக். கார்த் திகைத் திங்களில், அர்ப்பித்த வில்வ ருத்திராக்ஷ மாலைகள், அப்பால் சங்கரர் கண்டத்தி லிருக்கக் கண்ட வேதியர், ஐய முற்று, ஆலயத்துட் சென்று பார்க்குமிடத்து, அவ் வீசன் திரு மேனியில் அவை யில்லா திருக்கக் கண்டு, வியப் புற்று, அம் மூர்த்தியே, இக் கோலங் கொண் டுளது, என்று கருதி, வந்தனை வழிபாடுகள் செய்தனர். அவ் வீசன் திரோபவத்தால், மறுபடியும் அவ் வுண்மையை மறந் தனர்.

மற் றொரு நாள், அச் சிவ குருவின் மனையில், ஸஹஸ்ர வேதிய சந்தர்ப்பணை யென்னும் விரதம் நடந்து வருகை யில், ஓர் சுழல் காற்று மழை நேர்ந்து, இப் பால சங்கரர் ஆகாய வெளியில் தூக்கிச் செல்லப்பட்டனர். பின், சிவ குரு முதலாயினோர் இடபாசலேசனைப் பக்தியோடும் துதித் தனர். எண் டிசையும் தேடிச் சென்றவர், எட்டுக் குழந் தைகளைக் கொண்டு வந்தனர். இவ் வாறு, ஒரு சங்கரர் எட் டுருவா யிருப்ப தென் என்று ஆச்சரிய முற்றிருக்கை யில், குரு வாயூர் என்னும் ஸ்தலத்தில், ஸ்ரீ கிருஷ்ணன் ஆலயத்துள் சின்முத்திரைக் கரத்தினரா யிருந்த, ஸ்ரீ சங்கர ரைப் பார்த்துச், சிலர் கொண்டுவர, மனையி லிருந்த எட்டுக்

குழந்தை வடிவமும், மறைந்தன. அதன் பின் காப்பு முதலிய மங்களாசரணஞ் செய்து, நமது புண்யப் பயனை யக் குழந்தை சுக மாக வந்ததே யென்று களித்திருந்தனர். அன் றிரவு, கனவில், பிரகஸ்பதி, சார்வாகர், லோகாயதர் முதலியோர், யுக்தி ரகஸ்யத்தினையும், வாயு, துவைத முதலிய வியவகார ரகஸியங்களையும், ஸ்ரீ கண்ணன், சுத்தாத்வைத விரகசியத்தையும், அக் குழந்தைக்கு உபதேசித் தனுப்பிய தாகக் கண்டவர், அப் பகற் போது, தாம் கனவிற் கண்ட காட்சிக் கொத்த தன்மையைக் கண் டாச் சரிய மடைந்தனர்.

அச் சங்கரர், இரண்டா மாண்டில், அகாராதி யக்ஷரங்களை யுச்சரிக்கத் தொடங்கிய வளவிலேயே, மிகுந்த நா வன்மை யுடைய பிற வாதியர், நா வானது இருந்தாங் கிருந்த படி யடங்கக் கண்டனர். அவர், நன் ருகச் சிறு மொழி கூறத் தொடங்கியபோது, அவ் வாதியர் நாக் குழறுதலை யடைந்தனர். எல்லா விஷயங்களையும் கேட்ட வளவிலேயே நன் குணர்ந்து, தெரிவிக்கத் தக்க அம் மைந் தர், மூன்ரு மாண்டிலேயே வைதிக லெளகிக பாஷைக ளெல்லா வற்றினையும் குற்றமற விவகரிக்கத் தொடங்கினர்.

மற் ருெரு நாள், இடபாசலேசர் ரதோற்சவம் நடந்த போது, பார்ப்பவர் யாவர்க்கும் ரதத்தில் உற்சவ மூர்த்தி தோற்ருது, இப் பால சங்கரரே இருப்பதாகவும், ஒவ் வொரு கூட்டத் துள்ளும், இச் சிறுவரே இருப்ப தாகவும் புலப்பட்டது. இஃ தோர் சித்த புருஷ கதை யென்று இச் செய்தி எங்கும் பரவியது.

ஒரு கால், சிவ குரு தீக்ஷிதர், வேள்விச் சாலையில் பதி ஞயிரம் அந்தணர் கூடி வேத சாத்திரப் பிரசங்கம் செய்து

கொண்டிருந்தனர். அப் போது, அங்கு அருகில் விளையா டிக்கொண்டிருக்கும் சிறுவர்கள், இப் "பூசினிக்காயினுள் எத்தனை வித்து, இக் கத்திரிக்காயுள், எத்தனை வித்து"என்று வினவி, விளையாடுமிடத்து, அவர்களுக்குள், விவாத முண்டாகி, இப் பால சங்கரரை வினவ, இவர், "உலக வித்தின் கணக்கினையே, உலக முற்று மாக நினைக்கலாம்.,' என்றனர். அதற்குப் பொருள் தெரியாத அச் சிறுவர்கள், அங்குப் பிரசங்கிக்கும் வித்வான்களிடம் தெரிவிக்க, அவர்களும், பொருள் தோன்றுது, அக் காய்களைச் சோதிக்குமிடத்து, ஒவ் வொன்றனுள், ஒவ் வொன்றே யிருக்கக் கண்டு வியந்து, அவ ருரைக்குப் பொருள் செய்ய விபலாது சித்திரப் பாவைபோ லசைவற் றிருந்தனர். இவ் வாறு, ஸ்ரீ கண்ண பிரானுக்கு நிகழ்ந்தது போல, எவ ராலும் வியக்கத் தக்கனவும், இன்பந் தருவனவாயு முள்ள, அநேக அற்புத மான, பல லீலைகள் ஸ்ரீ சங்கரரிடத்து நிகழ்ந்தன. இவ் வாறு, மூன் ருண்டு நிறை வுற்ற காலத்துப், பிதா வாகிய சிவ குரு தீக்ஷிதர் சௌள முதலிய கருமங்களைச் செய்வித்து, தேக வியோக மெய்தி, நற் கதி யடைந்தனர். அதன் பின், ஆரியாம்மையும், இக் குழந்தையை முன்னிட்டுத் தான் உடன்கட்டை யேருது, ஞாதியரைத் துணையாகக் கொண்டு, பர்த்தாவுக்குச் செய்ய வேண்டுங் கருமங்களைச் செய்து முடித்து, இவரைச் செவ்வை யாய்ச் பரிபாலித்து வந்தனர். பின் பருவத்தில், சான்ரோர் முன்னிலையில், அப் பால சங்கரருக்கு,உபநயநச் சடங்கினை செய்தனர். பிரஹ்ம வடிவின ராகிய இவர், பிரஹ்மோபதேசத்தால் பிரஹ்மாநுபூதி பெற்று, பிரஹ்மசர்ய மநுஷ்டித்து வரும் நாளில், ஒரு நாள், அயாசதி தீக்ஷிதர் வீட்டில், பிக்ஷைக்குப் போயிருந்தபோது, அவ் வீட் டம்மையார் வறுமையால்

தன்னிடம் கிடைத் துள்ள நெல்லிக் கனியைப் பக்தியோ டுதவியதைப் பெற்ற சங்கரர், அவ்விடம் தயையினால், ஸ்ரீலக்ஷ்மியைத் துதிக்க, வெளிப்பட்ட தேவியார், இவருக்கு வறுமை தொலையும்படியான பூர்வ கர்ம மில்லையென, அதற்குச் சங்கரர் இம்மையில், நெல்லிக் கனி ஈந்த, இப் பெரும் புண்யத்தின் பயனை யாவது, தரல் வேண்டுமென்று, "கநக தாரா ஸ்தவத்தால்", "காருண்யஸ்தவத்தால்" துதிக்க,லக்ஷ்மி தேவியார் அவ் வாறே,அம் மனையவர் வறுமை தொலையு மாறும், இம்மையிற் பெரும் புண்ணியஞ் செய்தவர், இம்மையிற் றானே, அதனை அடைவா ரென்பதனை வெளிப்படுத்து மாறும், அறு பது கலம் பொன்னெல்லிக் கனி நிரம்பும்படி, மழை பெய்வித்து,இச் சங்கரர், கருணையினையும் வெளிப்படுத்தி மறைந்தனர்.இவர் ஏழாண்டிற் றானே,பிரஹ்மசர்யத்தோடு வேதாதி சகல கலைகளையும் நிரம்பப் பெற்றவ ராய், எவராலும் துதிக்கப்படும் கல்வியொழுக்க மிக்கவ ரானார். "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச், சான்றோ னெனக்கேட்ட தாய்." (குறள் 79) என்றபடி, ஆரியாம்மை மிக்க சந்தோஷ முடையவ ராயினார். இச் சங்கரர் எல்லாங் கைவந்த பெரியரா யிருப்பினும், உலகில் சம்பிரதாயக் கிரமம் பரவ வேண்டித் துர்வாசர் தன் னம்ச மாகிய இவரிடம் வந்து, எல்லா வித்தையிலும் தலைமை யளித்து, அட்டாங்க யோக முபதேசித்து; தமது தவத் திறமுங் கொடுத்து வாழ்த்திச் சென்றனர், இச் சங்கரர், மிக வயது சென்றதனால் தளர்ந்த தன் அன்னை, ஆற்றில் நீ ராடச் சென்று பெருங் கோடையினால் வருந்துவதைக் கண்டு, ஆகர்ஷண பீஜாக்ஷரங்களோடு கூடிய, "மஹா மகாஸ்தவம்" என்பதனைப் பாடி, அந்நதியை, அவ் வக்கிராரத்தி னருகிற் பெருகியோடும்படி

செய்தனர். பின், அம் மலை நாட்டில், துன்ப வேதுக்க ளௌவையு மின்றி, எல்லா வளமும் மிகுந்து வருதல் காரண மாக, இவர் பெருமை யுணர்ந்த, அந் நாட் டரச னாகிய சத்திய வன்மன், தா, னழைக்க வராது மறுத்த சங்கரரிடம் தானே நேரிற் சென்று, தான் செய்த மூன்று நாடகத்தினை யும், பதி னாயிரம் பொன்னையும், காணிக்கை யாக வைத்து, வணங்கினான். அப் போது, சங்கரர் மகிழ்ந்து, "இந் நாட கம் இந் நா டொன்றின்கண்ணே வழங்குக, இப் பொன்னை யாகஞ் செய்யு மந்தணர்க்கே உதவுக" என்று கூறி, மக்கட் பே றுண்டாதற் குரிய, ஓர் யாகத் தினையும், உணர்த்தி யனுப்பினர். அதனால், அவன் புத்திரப் பே றுற்று, நல் லொழுக்கத்தோடு அர சாண்டு வந்தான்.

பின்பு உபமந்யு, ததீசி, கௌதமர், அகத்தியர், இந் நால்வரும், இவரிடம் வந்து, தம் தவ வலியை யளித்து, உலகியல் வேண்டிக் கருணையினால், தனித் தனி, அகஸ்தியர், சிதம்பர ரகசியம், மந்திர லய ஹட ராஜ யோகங்கள் உடனே சித்தி பெறு முபாய மென்பவற்றையும், உப மந்யு முனிவர், சிவ தத்துவத்தினையும், ததீசி சிவ மாந் மியத்தினையும, கௌதமர், தேவ கர்ம ரகசியங்களையும் உபதேசித்தனர். பின், தாம் சந்நியாசஞ் செய்து கொள்ள விருப்புற்றிருப்பதை, தம் மன்னையாருக் கறிவிக்க, அதனை யவர் மறுக்க, மாதாவின் ஆணையைக் கடக்க முடியாதவ ராய்ச் சும்மா விருந்தனர்.

பின் னொரு நாள் நாரதரும், தத்தாத்திரேயரும், வந்து வைஷ்ணவ சம்பிரதாயம் விளங்கும் பொருட்டு, விஷ்ணு தத்துவ ரகசியங்களைப் போதித்துச் சென்றனர். அன் றிரவே யம தர்ம ராஜன் வந்து துதித்துச் சென்றனன்.

நீயா யிருக்கின்றாய்'' எம தருள் வலியால் உபநிஷதங் களுக்கு உண்மை யுரை செய்வதோடு பிரஹ்ம சூத்திரக் கருத்தினை வெளிப் படுத்தி. வியாசரைக் கேட்பித்து, வாதி யரை வென் றுடன்படுத்தி, முமுக்ஷுக்களுக்கு ஞானோ பதேசஞ் செய்து, குரு பரம்பரையை உலகில் நிலை நிறுத்தி, எம்மை வந் தடைவாயாக என்று கூறி மறைந்தனர். உடனே, அங் கிருந்த யாவரும் ஆச்சரிய மடைந்தவர்க ளாய்ச், சங்கர முநிவரோடு விசுவேசுவர ராலயத்துட் சென்று தரிசித்து நிற்குங்கால், அச் சிவ லிங்கத்தினின்றும் "(சிவம் சத்தியம்), (சத்தியம் அத்வைதம்") என்று இரண்டு வாக்கியங்கள் எல்லோரும் கேட்க வெளிப்பட் டன, பின், அங் கிருந்து புறப்பட்டுப் பத்ரிகாச்சிரமம் சென்று, அங்கு மாணுக்கரை, நிறுத்தி, தா மொருவராகவே வியாசரைத் தேடிக் காணுது, நர நாராயணரைத் தெரிசித்த போது, அவர் நீர் பிரஹ்ம சூத்திரத்திற்கு வியாக்யானஞ் செய்த பின்னரே, வியாசர் வெளிப்படுவா ரென்று கூறி, "சந்நியாச தருமத்துப் பிரணவ ஜப மொன்றினாலேயே சுத்த சைவமாகாதபடி, ஹரி ஹர வபேதந் தோன்ற நும் மாணுக்கர் வழியில், நாராயண ஸ்மரணை செய்யும்படி நியமனஞ் செய்க" என்பன முதலிய பல விஷயங்களைக் கூறி, தம் தவ வலியையும் கொடுத்து, வாழ்த்தினர். பின், சங்கர முநிவர், பதரிகாசிரமத்தி லிருந்து திரும்பி வந்து, தமது பன் னிரண்டா மாண்டிற் றூனே, உப நிஷதம், பிரஹ்ம, சூத்திரம், பகவற் கீதை, முதலியவற்றிற்குப் பாஷ்யமும்,மற்றும் அநேக அத்வைத தனி நூல்களு மியற் றித், தம் மாணுக்கருக் குணர்த்தி, ஆசிரிய பீடத்திருந்து விளங்கி வந்தனர். பின், பதும பாதர் முதலிய மாணுக்க ரோடு, காசிக்கு வருங்கால், இடை க்ஷேத்திரங்களில்

எதிர்த்த அநேக மத வாதியரை வென்று, தம் மாணுக்க ராக்கினர். (அவ் வாதியர் பெயரும் ஊரும் விரிந்த நூலிற் காண்க.) அவ் வவர் மதங்களையும், வேத விரோத மின்றி யன வாக நிறுத்தினர். பின், காசிப் பதியில் வந்து, அங்கு வந்த அநேக வாதியரையும், அத்வைதிக ளாக்கி, யாவரா னும் பூஜிக்கப் பெற்று. தம் மாணுக்கர்க்குப் பாஷ்ய மோதுவித் திருக்கையில், ஒரு நாள் வியாச முநிவர் விருத்த வேதிய ராக வந்து, அவர் பாஷ்யத்தில், அநேக சங்கை களைச் செய்ய, அவற்றிற் கெல்லாம் விஸ்தார மாய், விடை கூறி வந்தனர். இவ் வாறு எட்டு நாள் வரையில், தர்க்கம் நடந்தும், முடிவு பெற்ற தில்லை. அப் போது, பத்ம பாதர் தமது தியாநத்தால் இவரை வியாச ரென் றுணர்ந்து, வாதி னுல் பராமுகமா யிருக்கும் தம் மாசிரியருக்குச் சூசிப்பிக்க, அவரு முணர்ந்து, வியாசரை வணங்கினர். உடனே வியா சர், நிஜ வடிவத்தால் வெளிப்பட்டு, அவர் பாஷ்ய முழுவ தனையும் உற்று நோக்கி, அதில், தம் கருத்திற்குச் சிறிதும் மாறுபாடின்மை கண்டு வியந்து, சங்கர முநிவரைப் புகழ்ந்துச் செல்ல எத்தனிக்கையில், அவரிடம் அச் சங்கர முநிவர், "ஐயா, தாம் இங்குச் சிறிது நேரம் தாழ்க்கின், தம் சந்நிதியிற் றுனே இவ் வநித்த வுடம்பினை விட்டுக் கவலை யற்றவ னுவேன்" என, அதனை யுணர்ந்த வியாசர், ஐயா!, நினது கருத்தை யா னுணர்வேன்; கவலை யில்லை, நினக்குப் பதி ன ருண்டு நிறைவு பெறினும், மற்று மோர் பதி ன ருண்டு, நீ இவ் வுலகி லிருந்து, திக் விஜயம் செய்து, மற்று முள்ள பல வாதியரையும் வென்று, அத்வைதத்தை நாட்டி, மற்றும், பல வைதிக மார்க்கங்களையும், நிலை நிறுத்தி, முப் பத் திரண்டு வய தான வுடனே, கைலைக்குச் சரீரத்தோடு சென்று சிவ சொருப னுகுக" வென்று, ஆசீர்

வதித்துச் சென்றனர். வியாக்கியாந சிம்மாசநாதீசுவரன் என்பன முதலிய நான்கு விருதுகளும், என்றும் விளங்கும் படி கொடுத்துச் சென்றனர். பின், சங்கரர், அங்கிருந்து பிரயாகை சென்று, நீராடித் தங்கியிருக்கையில், அங்குப் பட்டபாத ரானவர், லோகாயதர், பௌத்தர் முதலியோ ரைக் குரவராகப் பெற்று, அவரிடம் அவர் மதங்களின் ரகசியங்களை யெல்லாம் தெரிந்து, அவர்களை, வாதில் வென்ற தோஷம் நீங்க, வைதிக விதிப்படி மரணாந்தப் பிராயச்சித்தம் செய்து கொள்ளத் துஷாக்கிநியில் (உமித் தீயில்) பிரவேசிப்பதைக் கேட்டு, அத் தீயிற் படுத்திருக் கும் பட்ட பாதருக்கு வேண்டிய சமாதாநஞ் செய்தும், அவர் தம் பாதியுடம்பு வெந்தமை பற்றித், தமது பாஷ்யத் திற்கு விவரணஞ் செய்ய வேண்டுமென்றிருந்த, எனது அவா முற்றுப் பெற வில்லை. ஆனால், சர்வ வல்லமை யுள்ள பிரஹ்மாவின் அவதார மாகிய மண்டந பண்டிதரை யும், அவர் மனைவி யாகிய உபயபாரதியாரை (சரஸ்வதியை) யும், வென்று, அவரை மாணுக்க ராக்கிக் கொண்டால், உலகை வென்றது போலாம். அவர் இதற்கு விவரணஞ் செய்ய வல்லரென்று கூறித், தாம் அச் சங்கர முநிவரிடம் பிரஹ்மோபதேசம் பெற்று, அர்ச்சிராதி மார்க்க மாக சரீ ரத்தை விட்டனர். பின், அங்கிருந்து புறப்பட்டு, இரேவா நதிப் பக்கத் துள்ள மகிஷ பதி நகரின் உபவநத்தில், தம் மாணுக்கரை நிறுத்தித், தாம் தனியே விசுவரூப மண்டந பட்டர் கிருஹத்திற் சென்று, பார்க்குங்கால், கதவு மூடப் பட்டிருக்கத், தம் யோக வலியால், ஆகாய மார்க்க மாகப் அம் மனை முற்றத்தின்கண்ணே இழிந்த போது, அம் மண் டந பண்டிதர், வேத வியாசரையும், ஜைமிநி முநிவரையும், தன் தவ வலியால் வருவித்துக் கொண்டு, பிதிர் கருமத்

துக்கு அவர்களை நிமந்திரணஞ் செய்து, பூஜித்துக் கொண் டிருந்தமையால், இச் சங்கரரைக் கோபித்து நோக்கி, "குதோ முண்டி" மொட்டை எங்கிருந்து வந்தது என்று கேட்டார். அதற்குச் சங்கரர், "எதுவரையில் மொட்டை" என்று பொருள் செய்து கொண்டு, "ஆகளான் முண்டி, கழுத்து வரை மொட்டை" என்றனர். இவ் வாறே மண்டந பண்டிதர் கூறியவற்றிற் கெல்லாம், சங்கரர் விதண் டையாகவே விடை கூறிவர், மண்டன மிசிரர், மேலு மேலும் வெகுண்டு கூறினர். அவற்றைக் கேட்டுக் கொண் டிருந்த, வியாசரும், ஜைமிநியும், "ஐய! விசுவ ரூப! நியம மாக விருக்கத் தக்க கரும காலத்தில், வீண் உரையாட லாகாது. இச் சந்நியாச சிரேஷ்டரின் தகுதி யறியா யாகலின், அவரை பிக்ஷையின் பொருட்டு நிமிந்தர ணஞ் செய்" யெனத், தம் கோபத்தினை விட்டுச் சங்கரரைப் பூஜித்துப் பிக்ஷைக் கழைக்க, அவர் வாத பிக்ஷை கொடுக்க வேண்டு மென்றனர். அவ் வாறே, யுடன்பட்டு, அன்று பலி பிக்ஷை கொடுத்து, மறு நாள் முதல், உபய பாரதியாரை நடு வாக வைத்து, இருவருள் தோல்வி யடைந்த ஒருவர், மற் றொருவரின் ஆசிரமத்தை வகித்தலே, ஒட்ட (பந்தய) மாகக் கொண்டு, வாதம் செய்யப் புகுந்தனர். அப் போது, உபயபாரதியார், அவ் விருவர் கழுத்திலும் தோல்வி, வெற்றி, யறியு மாறு. பூ மாலை யொன்று போட்டு, எவர் பூ மாலை கருகிற்றோ, அவர் தோல்வி யடைந்தவ ராவ ரென்று கூறினர். அவ் வாறே, இருவரு மொப்பிச் சங்கரர், "பிரஹ்மமே நித்தியம், ஜகத் தநித்யம், ஜீவன் பிரஹ்மமே, வே றல்லன்" என்றும், பண்டிதர், "சுவர்க் கமே மோக்ஷம், கர்மமே மோக்ஷ ஸாதந" மென்றும், அநேக யுக்திப் பிரமாணங்களால், பதி னாறு நாள் வரையில்

மறு நாளுதயத்தில், அன்னேயோடு நீராடச் சென்ற போது, ஓர் முதலே இவர் காலேப்பற்றியது. அப் போது அன்னே யாரைக் கூவி, ''அம்மே இப் போது சந்நியாசத் திற் குத்திரவு கொடுத்தால் மறு பிறப்பு வருதலாற் பிழைப் பேன்'' என்ன, அன்னேயார் பயந்து, அவ் வாறே அநுமதி கொடுத்தனர். அது கேட்ட அப் பொழுதே, மநோ வாக்கு களால், விதிப்படி சந்நியாசஞ் செய்து கொள்ளவே, அம் முதலே இவர் காலே விட்டு, இவர் ஸ்பரிசத்தால் பூர்வ சாப விமோசநம் பெற்று, முன்னேய கந்தருவ உருவ மடைந்து, சில சுலோகங்களால் சங்கரரைத் துதித்துச் சே ணடைந்தது. பின், தனது பிரிவாற்ருமையால் வருந்தும் அன்னேயாரைத் தேற்றி, ''உமது மரண காலத்தில் நினேக் கில் வந்து உமது செய் கடன் முடித்துக் கதிபெறு விப்பேன்'' என் றுறுதி கூறித், தமது ஞாதியாரிடம் அவரை யொப்புவித்துத், தான் வைதிக விதிப்படி சந்நியா சம் பெற்று, பிரஹ்மசாரிக்குச் சந்நியாசங் கூடா தென்ற வர்களே மறுத்துச்,சந்நியாசப் பிரதிஷ்டாபநாசாரிய ரெனப் பேர் பெற்று விளங்கிஞர்.

பின், அங் கிருந்து காஷாயதாரியாய், தண்ட கமண்ட லங்களேக் கையிற் ருங்கி, நல்ல வாசிரமங்கள், நதிக் கரை, மலே, குகை முதலிய பல விடங்களில், நல் லாசிரியனேத் தேடி, மாலேப் பொழுதில், நருமதை யாற்றங் கரை யி லுள்ள, ஸ்ரீ கோவிந்த யோகீசுவரர் தபோ வநத்தினே யடைந்து, தியாந நிலேயிஞல், அம் மலேக், குகையில், ஆதி சேஷ ஞகிய கோவிந்தபாதர், ஞாநச் செல்வ ராய்ச், சமாதி யிருப்பது தெரிந்து, அவ ரிருக்கும் குகை யருகே சென்று,

விதிப்படி வலம் வந்து, அவரை ஆதிசேஷ வடிவ மாகவே துதி செய்து, தம்மைச் சர ணடைந்த, என்னை ரக்ஷிக்க வேண்டு மென்று பிரார்த்தித்தனர். அப் போது, அந்த யோகீசுவரர் சமாதியி னின்று விழித்து, குகையினின்று வெளி வந்து, நீர் யார் என்று வினவ, அதற் கிவர், "ஐயரே! யான் மண் நீர் தீ கால் வெளி யல்லேன், அவற் றின் குண மல்லேன், பொறி யல்லேன், எல்லா விலக்கண முடைய தாய்க் காட்சியை யொழித்து நின்ற, சச்சிதாநந்த வடிவ சுத்த வறி வாகிய நான் - சிவோகம்" என்றனர். அது கேட்ட கோவிந்த பாதர், ஐயா! நீ சங்கரனது வடிவ மென யா னறிந்தே வந்தனன். உண்மையில், யானே நீயா யிருக்க, யான் செய்பத் தக்க தொன்று மில்லை யெனினும் ஸ்ரீ சுகப் பிரஹ்மத்தின் மாணுக்க ராகிய ஸ்ரீ கௌடபாத முனிவர், எனக் கருளிய, பிரஹ்ம வித்தியா ரகசியத்தினை, மரபு விளங்குதற் பொருட்டு, நினக் கருளுகின்றேன் என்று கூறி, முறைப்படி எல்லா இரகசியங்களையும் உபதேசித்து ஆசீர்வதித்துத் தாம் குகையிற் சென்று சமாதியிலிருந்தார். பின், சங்கர முனிவர், சாதுர் மாச மாகிய விரதத்திற்கு அங் குத் தங்கி, சிரவணுதிகளைச் செய்திருக்குங்கால், அந் நரு மதைக் கரையி லுள்ள தபோநிஷ்டருக்கும், அவ் வநத்திற் கும், இடையூ றுக, ஓர் வெள்ளம் பெருகி வர, அதனைத் தமது கமண்டலத்தில் அடக்கிக் கொண்டனர். மற் றொரு நாள், தமது ஆசிரியர் நதியில் நீ ராடி நித்திய கரும முடித் துச் செல்லுகையில், உச்சி வெயில் ஆசிரியர் மீது விழா வண்ணம், தமது காவித் துண்டத்தினை ஆகாயத்தில் எறிய, அது குடை போல், நிழற்றி வந்தது. அதனை, ஆசிரியர் கண்டு, அவர் செய்யும் தொண்டினுக்குத் திரு வுளமு வந்து கூறுகின்றனர்:- ஐயா! யான் முன் னொரு கால்

வீயாஸ முநிவரிடம் தா மியற்றி யருளிய சூத்திரங்கட்குப் பிறவாதியர் கலக்காத வண்ணம், ஓர் பாஷிய வுரை யிருத்தல் வேண்டு மென்று பிரார்த்தித்த போது, அம் முநிவர், ஐயா! அவ் வா றியற்றுவது எவரா லும் இயலாத காரியம். ஆனால், எந்தப் பால சந்நியாசி உன்னிடம் பிரஹ்மோபதேசம் பெற்றுப், பெரு வெள்ளத்தினைத் தமது கமண்டலத் தடக்குவாரோ, அவரே இப் பிரஹ்ம சூத்திரங்கட்கும், வேத முடிபுகட்கும்,பாஷ்யம் செய்து, நமது பரம்பரையை விளக்கி, உலகத்தினை உத்தாரணஞ் செய்வ ரென்றனர். ஆதலால், நீர் அவரிடம் சென்று, அநுக்கிரகம் பெற்றுச் செய்யத் தகுவன செய்து, வெற்றி பெறுவீராக வென்று கட்டளையிட்டு வாழ்த்தினர். அப் போது, சங்கர முநிவர் அவர் திருப் பாதுகையைப் பன் முறை வணங்கி, ஆசிரிய ராணையைச் சிரமேற் கொண்டு, புறப்பட்டுக் காசி க்ஷேத் திரத்தை யடைந்து, விதிப்படி கங்கை யாடி க்ஷேத்திர யாத்திரை முடித்து, முறையே துண்டி விநாயகர், கால பைரவர் முதலிய தேவதைகளைக் குறித்த தோத்திரப் பாடல் கூறி, விசுவேசுவரரைத் தரிசித்து, வித்தை வல்லவ ராகிய பட்டாசார்யர்களின் சாத்திர சந்தேஹங்களை யொழித்து, அங்குச் சந்நியாச ஆச்ரமத்தினை நிலை பெறு வித்து, 12000 புலவரால் சூழப்பட்டுச் சிவ பெருமானது ஆநந்த வநத்தில் வீற்றிருந்து, அத்வைத சித்தாந்தத்தை விர்த்தி செய்து வருகையில், ஒரு நா ளிரவு, விந்து மாதவர் கனவில் வந்து, நமது அம்ச மாய்ப் பிறந்த ஓர் பிரஹ்மசாரி யொருவன் நாளை யுன்னிடம் மாணுக்க னாக வருகிறான் என்றுஅருளிய வண்ணம் மறு நாட் காலை, நீ ராடப் போகையில் தென் னாட்டிற் பிறந்த நந்த னென்னும் பிரஹ்மசாரி தனக்கு அகோபிலத் திருப்பதியி லுள்ள, ஸ்ரீ நரசிங்க

மூர்த்தி கட்டளையிட்டபடி, காசிப் பதியை யடைந்து. இப் பெரியார் தொளியில் விசுவநாதப் பெருமான் திருவுருக் கண்டு, இவரே நம் குருமணி யென்று கருதி, அவரைச் சரணுகதி யடைந்தனர். அச் சங்கரர் அவரை யாட் கொள்ளலும், அவர் சந்நியாசம் பெற்று, குரு பணியில் தற்பர ராய்ச், சிரவணுதிகளைச் செய்து வந்தனர். இவர், தமது மாணுக்கருட் சிறந்து விளங்குகின்றமையின், கோவிந்த பாதர் தமக் கருள் செய்திருந்த ஸ்ரீ கைலாசச் சந்திர மௌலீசுவர சிவ லிங்கம், ரத்ந கர்ப்ப கணபதி, ஸ்ரீ சக்கரம், நவக்கிரக யந்திரம், நரசிங்க ஸாளிக் கிராமம், என்பவற்றை இவரிடம் கொடுக்க, அவர் அதனை விதிப் படி பூஜை செய்து, பஞ்சாயதந பூஜா மார்க்கத்தை யாவ ருக்கு முபதேசித்து வந்தனர்.

பின்னா, ஒரு நாள் சங்கரர் கங்கை நீராடி வருகை யில் விசுவேசுவர் சண்டாள வேஷந் தரித்து, இவரை நெருங்கி வர, அவரை விலகு விலகு என்றார். அது கேட்ட விசுவேசர், அந்நமயத்தினின்றும் அந்நமயத்தினை விலகச் சொல்லுகின்றயா? அல்லது, சைதந்யத்தினின்றும், சைதந் யத்தினை விலகச் சொல்லுகின்றயா? மென்பன முதலிய வினுக்களை யுசாவ, சங்கரர் உள்ளத் தாநந்தபரித ராய், இத் தன்மைய ரகசியம் எவரிடத்தினின்றும் வெளிப்படுகின் றதோ, அவர் சண்டாள ராயினும் என் குரு என்னும் பல சமரச அபிப்பிராயங்க ளடங்கிய மநீஷா பஞ்சக மென் னும் செய்யுட்களைக் கூறி, அவ் விசுவேசர், தன் நிஜ வடி வத்தோடு காட்சிதரப், பல வாறு துதித்தனர். அப் போது, விசுவேசர் அவரை விடை மீதேற்றி உபநிஷதார்த்தங்களை யநுக்ரஹித்து, அஸ்தத்தினை சிரஸில் வைத்து, "யாமே

வாதித்தனர். கடைசியாக மண்டந பண்டிதர் பக்ஷம் தோல்வி யுண்டாகவே, அவர் மாலை கருகிற்று. உடனே உபய பாரதியார் சங்கரரைத் திநமும் பிக்ஷைக் கழைப்பது போல், பண்டிதரையும், தோல்வி சூசநமாகப் பிக்ஷைக் கழைத்தனர். பின்னும், மண்டந பண்டிதர் தமக்கிருந்த அநேக சந்தேகங்களைச் சங்கரர் முன்னிலையில் வினவி ஒழித்துக் கொண்டனர்.

பின், பாரதியார், தம்மோடு வாதஞ் செய்து, ஜயித்தால் முழு வெற்றி யுண்டாகு மெனவே, சங்கரர் அவ்வாறே, அப் பெண்மணியோடு வாதஞ் செய்து வரவே, இவரை எவ் வழியிலும் வெல்ல முடியாமை கண்டு, இவர் பிரஹ்மசாரியா யிருந்து சந்நியாசம் பெற்றவ ராகலின், இவரைக் காம நூலில் வாதித்தால் வெல்லலா மென்று அந்நூலில் வினவ, அதற்குச் சங்கரர், அம்மே! ஒரு திங்கள் வரையும் கால வெல்லை தரின், பின்னர் உமது வினவுக்கு விடை யுண்டா மென்று அவரிடம் அநுமதி பெற்று, யோகப் பயிற்சியால், தமது சரீரத்தை விட்டுப் பிரிந்து, அதற்கு மாணுக்கரைக் காவல் வைத்து, அங்கு மரித்திருந்த அமரக வரசன் சரீரத்துட் புகுந்து, மூர்ச்சித் தெழுந்தாற் போற் காட்டி, அவன் மனைவியர் நூற்றுவரோடுங் காம கலையிற் பயின்று தேர்ந்தனர். அவ் வரச வுடம்போடு அமரக மென்னும் நூலினையும் செய்தனர். இவ் வாறு, நிகழுங்கால், அவ் விராஜ்யத்தில், முன்னிலும் எல்லா வளங்களும் பொருந்தியிருத்தல் கண்டு, அரச பத்திநிகளும், மந்திரிமாரும், யாரோ, ஓர் மகா புருஷன், இவ் வரச சரீரத்தில் பிரவேசித்திருக்கலா மென்று கருதி, அந்த நாட்டினுள் எங்ஙாயினும் மூச் சற்ற வுடல் கிடந்தால், அதனை

யெரித்துவிடும்படி ஏவலாளர்களுக்குக் கட்டளை யிட்டார்கள். இதற்குள், சங்கர முனிவர் மாணுக்கர், தம் மாசிரியர், இது காறும் வராமையால், அவரை ஞாபகப் படுத்தி அழைத்து வர வேண்டு மென்று, இசைப் புலவர் வேடங் கொண்டு, அவரிடம் சென்று, தத்துவமஸிப் பொருளடங்கிய ஒரு செய்யுளைச் செய்து பாடவே, அதனைக் கேட்டுச் சங்கரர், இசைச் சுவையால் மயங்கி சோர்வுபட்டவர் போல், அவ் வரச யாக்கையை விட்டு வெளிவர, மாணுக்கரும் இசைப் புலவர் வேடம் விட்டு வெளி வந்தனர். இதற்குள், அரச னேவலாளர், அசைவற்றிருந்த அச் சங்கர யாக்கையைத் தீ மூட்டிச் சென்றனர் அவ் வளவில், சங்கரர் அதனுள் பிரவேசித்து, அஃது தெரியாத வண்ணம் லக்ஷ்மி நரசிங்க மூர்த்தியின் ஸ்தோத்திரம் செய்ய, அந் நர சிங்க மூர்த்தி பிரசந்ந ராய்த், தீயினின்று மெடுத்துத் தழுவிச் செல்லவே, இவர் திருமேனியும் திவ்ய ஸ்வரூப மாயிற்று. அத் தருணம், மாணுக்கரும் வந்து சேர்ந்தனர். அவர்களை யழைத்துக் கொண்டு மண்டந பண்டிதர் சபைக்கு வந்தனர். அப் போது தமது ஆகர்ஷ சக்தியால், அச் சபையின் நடுவில், அமரக மென்னும் நூலை விழச் செய்தனர். அதனைக் கண்டு உபயபாரதியார் சங்கரருக்கு முழு வெற்றியைக் கூறித், தாம் பிரஹ்ம லோகம் செல்ல முயலவே, சங்கரர் அம்மையாரைச் சுவாதீநஞ் செய்து, சிருங்க கிரியில், தம்மால் ஸ்தாபிக்கப்படும் இடத்தில், இலக்ஷ்மி, சரஸ்வதி, பார்வதி என்னுத் மூ வடிவத்தோடு வீற்றிருந்தருளல் வேண்டு மென்று பிரார்த்திக்க, அவ் வாறே, அம்மையார் வர மளித்துச் சென்றனர். பின், மண்டந மிசிரர் சந்யாசம் பெற்று, சங்கர ருபதேசத்தால், பிரஹ்மாநுபூதிச் செல்வ ராய் விளங்கி, ஆசிரியரால்

ஸுரேசுவராசாரிய ரென்னும் யோக பட்டப் பெயர் பெற்று, அவர் மாணுக்கருட் டலேவ ராயினர். பின், ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ சைலத்திற்குச் சென்று, அங்கு வந்த அநேக வாதியரை தம் மாணுக்கரைக் கொண்டே வெல்வித்து, அங் கிருக்கையில், காபாலிக மதத் தலேவ னுகிய உக்கிர வைரவ னென்பவன், இவரை எவ் வாற்ருனும் வெல்ல முடியா தெனக் கருதி, அவர் மாணுக்கருள் ளொருவரைப் போல் நடித்துச், சமயம் பார்த்திருந்தான். ஒரு நாள் தனித் திருக்கும் சங்கரரிடம் வந்து துதித்து, ஐயா! தாம் தேகாபி மாநம் முற்றும் விட்ட கருணு மூர்த்தி யாகலின், ஓர் வரம் கொடுத்தல் வேண்டும். அதாவது, யான் 12 வருஷம் வரைப் பைரவ பூஜை செய்தேன். அவர் என் முன் ருேன்றி உலகாளும் பே ரரசன் றலேயை யாவது, முற்று முணர்ந்த பிரஹ்ம ஞாநி தலேயை யாவது, நரபலி கொடுத் தால் உன்னிஷ்டத்தைப் பூர்த்தி செய்வே னென்ருர். அத் தகைய வரசன் கிடைக்க வில்லே. பிரஹ்ம ஞாநியும் தம்மைத் தவிர வேறு கிடைப்பது அரி தாகலின், இரந்தே னென, சங்கரரும் உலகம் பொய் யெனக் கண்டவ ராக லின், அதற் குடன் பட்டார். படவே காபாலிகன் வாள் சூலங் கொண்டு விரைந்து அருகே சென்ருன். அச் சமயம் அங்கு திடீ ரென்று வந்த சநந்தநாசாரியர், கடுங் கோபங் கொண்டு, ஹுங்கார சப்தஞ் செய்து, நரசிங்கா வென்ற வுடனே, உக்கிர நரசிங்க மூர்த்தி வெளிப்பட்டு, அவ் வைர வனேக் கிழித் தெறிந்தான். பின், கோகரண க்ஷேத்திரத்திற் சென்று, அங்கு வந் தெதிர்த்த, சைவ விசிஷ்டாத்வைத பாஷ்ய கர்த்தா வான நீல கண்டரை வாதில் வென்று, பின், மார்க்கத்தில் கொல் லூர் க்ஷேத்திரத்தில், இறந்து கிடந்த, பிராஹமணக் குழந்தையைக் கருணேயினுல் எழுப்பி, பின்,

ஸ்ரீவல்லிபுர மென்னும் அகரத்தில் 2000 வேதியர்க்குத் தலைவரான பிரபாகரபட்டர் தமது பிள்ளை பிறப்பு முதல் இப்போது எட்டாண்டு வரைப் பேசாது ஊமையா யிருத்தலை இம் மகானிடம் தெரிவிக்க, அச் சங்கரர், அம் மகவைக் கருணையால் நோக்கி நீ யார்? ஏன் ஜடன் போ லிருக்கின்ருய் என, அச் சிறுவன் யான் ஜட னல்லன், ஜடமும் என் சந்நிதியின் னடைபெறு மென்னும் தனது அத்வைத நிலையை யறிவிக்கும் 12 செய்யுட்களைக் கூறவே, சங்கரர் அவர் சிரத்திற் கையை வைத்து, ஹஸ்தாமலக ரென்று பெய ரிட்டனர். பிதா மகிழ்ந்து இவர் தமக்கே யுரியவ னென்று தம் புதல்வனை அவரிடம் விட்டு வணங்கிச் சென்றனர். பின், அம் மைந்தனை யழைத்துக் கொண்டு மாணுக்கரோடு சிருங்ககிரிக்குச் சென்று, அது, துங்கபத்ரா நதிக் கரையில், புண்ணிய க்ஷேத்திரமா யிருப்பது கண்டு, அங்கோ ராலயம் நிருமாணஞ் செய்து, அங்கு முன் தாம் கருதியபடி சரஸ்வதியை வர வழைத்து ஸ்தாபனஞ் செய்து, மடமொன்றியற்றி, அதில் "சாரதா பீடம்", "வியாக்யாந சிங்காசநம்", "பாரதீச ம்பிரதாயம்" என்பவற்றை ஸ்தாபித்து, அங்குத் தமது தலை மாணுக்க ராகிய, ஸுரேசுவராசாரியாரை, மரபு விளங்கும பொருட்டு,இவ் வுலகத்துட் சிறந்த ஆசார்யாபிஷேகஞ் செய்தனர். பின் மிகச் சாந்த ராய் ஓர் மாணுக்கர் சங்கரரை நிழல் போல் பற்றித் தொண்டு செய்து வந்தனர் எப்போதும் ஆநந்தத்தோடு யார் எது கூறினும் சலியாது மலை போன்ற பெருமையோ டிருந்தனர். அதனல், ஆசிரியர் அவரை, ஆநந்தகிரி யென்று பெயரிட் டழைத்தனர். ஒரு நாள் அவர் ஆசிரிய ராடையைச் சுத்தி செய்து வரப் போனவர், வரத் தாமதிக்கவே, அவர் வந்த பின் பாடம் நடத்துவோம் என்று சங்கரர்

கூற, மற்றையவர் அவர் தொண்டு செய்பவர், இப் பாடத் தா லவர்க் காவ தென் னென்று கூறினர். கூறவே, இவர் கட்கு குரு பக்தியின் பெருமை விளங்க வேண்டு மென்று கருதி, சங்கரர் தமது மநத்தால் வித்தியா தாநஞ் செய்யவே, ஆநந்தகிரியார், அங் கிருந்து வரும்போதே, ''தோடகம்'' என்னும் விருத்தத்தால், குரு ஸ்துதி செய்து கொண்டு வந் தனர். அது கேட்டு யெல்லோரும் ஆச்சரிய மடைடந்தனர். அது முதல் அவருக்கு தோடகாசாரிய ரென்று மற் றொரு பெய ராம். இவரும், ஓர் சிறந்த மாணுக்க ராயினர். அப் போது சங்கர முநிவர் சிஷ்யர் பல் லாயிரவருள், ஸுரேசு வரர், பத்ம பாதர், ஹஸ்தாமலகர், தோடகர் என்னும் நால்வருமே, நாற் றிசையினையும் வெல்லு மாற்ற லுடை யவ ராய் விளங்கினர். அவர்களுள், ஸுரேசுவரர், ஆசாரி யர் ஆஞ்ஞைப்படி சாரீரக பாஷ்யத்திற்கு வார்த்திக மென் னும ஒ ருரை எழுத ஆரம்பித்த போது, பலர் அசூயைப் பட்டமையால் நிறுத்தப்பட்டது.

பதும பாதரும் 5 பாதங்கட்கு உரை யெழுதி ஆசிரி யரிடம் படித்துக் காட்டினர். இவர் தாம் ஆசிரியர் ஆணையின்படி வார்த்திக வுரை யெழுதுவதில், அசூயை கொண்டிருக்கின்றார் என்பதை யுணர்ந்த சுரேசுவரர் அவ் வுரை முற்றுப் பெறு வண்ணம் சாபங் கொடுத்தனர். அது கேட்ட பதும பாதர், அச் சாபம் நீங்கு மாறு, ஆசிரி யர் உத்தரவு பெற்று, தீர்த்த யாத்திரை யாகப் புறப்பட்டு, பல க்ஷேத்திரங்களும் சென்று, ஸ்ரீ ரங்கம் வந்து அநேக மீமாஞ்சகர், வைஷ்ணவர்களை வாதத்திற் றோல்வி கண்டு பிரபாகரர் மாணுக்கரும், பல் லாயிரம் மாணுக்கர்க்காசிரி யரும், பூர்வ மீமாம்சாநூ லபிமாநியும், சிறந்த பண்டிதரு

மாகிய தமது அம்மானிடம் தமது பாஷிய வுரையைக் காட்ட, அவர் தம் மதத்திற்கு மறுப் புண்டானது கொண்டு, துன்புற்றவ ராயினும், வெளிக் காட்டாது நூலைப் புகழ்ந்தார். பின், பதும பாதர், தமது நூல்களை யெல்லாம் அவர் மனையில் வைத்து, இராமேசுவர யாத்திரை சென்று திரும்பி வருவதற்குள் தமது மனையோடு, அவர் நூல்களும், பற்றி யெரியும்படி நெருப்பு வைத்து விட்டனர். இராமேசுவர யாத்திரையினின்று திரும்பி வந்த பத்ம பாதர், நூல்கள் எரிந்தமை கேட்டு, மிக வருத்த முற்று, ஆசாரியரிடஞ் சென்று, தெரிவித்த காலத்து, அவர் தாம் முன்னே கேட்டிருந்த வண்ணமே பஞ்ச பாதிகை யென்னும் நூலினைக் கூறி யெழுதுவித்தனர். பின் ஸுரேசுவரரும் ஆசாரியர் கட்டளைப்படி சில பாஷியங் கட்கு வார்த்திகமும், ஸ்வதந்திர மாகச் சில நூல்களும், செய்து, ஆசாரியருக் கர்ப்பித்தனர். ஆநந்தகிரியார் முதலி யோர், பாஷியத்திற்கு உரை முதலியவற்றைச் செய்தனர். பத்ம பாதர் விஜய டிண்டிமம் என்னும் மற்றோர் உரையும் எழுதி குரு தக்ஷிணை யாகக் கொடுத்தார். அவற்றை யெல் லாம் ஆசிரியர் அங்கீகரியாது, "பஞ்சபாதிகை யொன்றே போதும்" என்று கட்டளையிட்டனர்.

பின், சங்கரர் திக் விஜயத்திற்குச் சென்று, அங்கங் குள்ள பல மத வாதியையும் வாதில் வென்று, எங்குங் மதச் சண்டை ஒழியச் செய்து, அத்வைதத்தை நிலைநிறுத்தி ஞர். (அவர் ஆங் காங்கு சென்று மதவாதியரோடு வாதஞ் செய்த விஷயங்களைக் காண விரும்புவோர் ஆநந்தகிரியினாற் செய்யப்பட்ட சங்கர திக் விஜய முதலிய நூல்களிற் காண்க.) சங்கரர் கங்கைக் கரையில், விசாரஞ் செய்து

கொண்டிருக்கையில், அபிநவதுப்த னென்னும் மந்திர சித்தி யுடையவன், தான் வாதில் தோல்வி யடைந்தமையால் சங்கரர் மேல் ஏவற் கருமஞ் செய்ய, அது, அவர் ஆசநத்தைப் பற்றி, மூல ரோகத்தை யுண்டுபண்ணியது. அது தெரிந்த பதும பாதர், அவ் வேவலைத் திருப்பிவிட, அத் தேவதை அபிநவ குப்தனது உடம்பைப் பற்றி விரைவிற் கொன்றுவிட்டது. இதுவும் அவருக் கோர் லீலையே. மற் றொரு நாள், சங்கரர் யோகப் பயிற்சியால் உத்தர குரு, சித்த புர முதலிய நாட்டிற்குச் சென்று, ஆங் காங்குப் பிரஹ்ம வித்தையை நாட்டி, ஸ்ரீ கைலாசம் சென்று ஸ்ரீ சந்திரமௌலீசுவர லிங்க முதலியவற்றைப் பெற்றுக் கொண்டு வந்து, கிம்புருட வருஷத்தில் காத்திருந்த பிரஹ்ம ராக்ஷதனது பிரஹ்ம ஹத்தியை யொழிப்பித்து, அப் பெரும் பூதத்தினைச் சீடர் மடங்களைக் காக்கும்படி கலி யுகம் நான்கு லக்ஷ வருடம் வரையில், பணிவிடையி லிருத்தி, பின், சுவாலா முகி முதலிய ஸ்தலங்களி லிருந்தவர்கட் கநுக்ரஹஞ் செய்து, அநேகரை சன்மார்க்கத்திற் செலுத்திக், கங்கைக் கரை யடைந்தார். பின் னொரு நாள் பூகோள உண்மைகளை வினவிய பதும பாதரையும், அழைத்துக் கொண்டு வான் வழிச் சென்று, மேரு சிகரம் துருவ நிலை முதலியவற்றைத் தெரிவித்து, பூ கோள, க கோள சாஸ்திர ரகசிய முற்று மறிவித்து, மீட்டும் கங்கைக் கரை சேர்ந்தார்.

மற் றொரு நாள், சங்கரர் பரமாசிரிய ராகிய கௌட பாதர், இவரிடம் வந்து மாண்டூக்ய வுபநிஷத பாஷ்யத்தினையும், தமது காரிகைக் கெழுதிய பாஷ்யத்தினையும், கேட்டு, இவரை வியந்து ஆசீர்வதித்துச் சென்றார். மற் றொரு நாள்,

சங்கரர் காசுமீர மண்டலத்து, ஸ்ரீ நகர நாட்டின்கண்ணுள்ள சரஸ்வதியின் சர்வஜ்ஞ பீடத்தி லேற முயற்சித்தார். தேவ ரிஷிகளால் அமைக்கப்பட்ட அப் பீடத்திற்கு, நான்கு வாயில்க ளுண்டு. அந் நான்கு வாயில்களிலும் வித்தியாபிமானி தேவதைகள் காவல் செய்திருப்பர். எல்லா முணர்ந்தவன், அக் கதவைத் திறந்து உள்ளே சென்று, ஸர்வஜ்ஞ சிங்காசநத் துட்கார்ந்தால், அவன் எல்லாக் கல்வி நலமும் பெறுவன். அத் தன்மைய பீடத்தின் மூன்று வாயில்கள் முன்னரே திறக்கப்பட்டன. தெற்கு வாயில் மாத்திரம் சர்வஜ்ஞர் ஒருவரும் வராமையினுல், மூடப்பட்டிருந்தது. சங்கரர் அவ் வாயிலின் அபிமானி தேவதைகளின் வினுக்கட்கு விடை கூறி, கதவும் திறந்து, சர்வஜ்ஞ பீடத் திருந்தனர். அப் போது, சர்வ மண்டலாசாரியனென்னும் விரு துடையவ ரானுர். பின், அங் கிருந்து கேதாரத்தை யடைந்து, அங் கிருந்தவர் யாவருக்கும் பிரஹ்மோபதேசஞ் செய்து, அங் குள்ள குளிர் வாதை நீங்க, லோகோபகார மாகப் பரமேசுவர கிருபையால், அந்த, வெந் நீர் யாற்றினைத் தோற்றுவித்தனர். அஃ தின்றும் பிரசித்தமா யுளது. பின், அத்வைத வித்யா மரபு காக்கும்படி பதரிகாச்சிரமம், துவாரகை, ஜகந் நாதம் என்னும் மூன்று தலங்களிலும், மட மமைத்து, அங்கு முறையே, ஆநந்த கிரி, பதும பாதர், ஹஸ்தாமலகர் இவர்களை அபிடேகஞ் செய்து, உலக குரவ ராக்கினுர். அப் போது 32 வயதும் நிரம்பியது. சங்கரர் தத்தாத்திரேயர் குகை வாயிலில் மாணுக்க ரனைவருக்கும் விடை கொடுத்துத், தாம் அக் குகையிற் சிவ யோக சமாதியி லிருந்து, ஞாநாநந்த திவ்ய லிங்க சரீரத்தை யோக சக்தியால், சிதாகாசத்துட் கலக்கச்

செய்து, ஆகாயத் தெழும்பி, ரிஷபாருட ராய்த் தேவ ரெல்லாம் புகழக் கைலாயத்திற்கு விஜயஞ் செய்தார்.

இப் புண்ய வடிவ மான குரு சரித்திரத்தைப் படிப்பவர், கேட்பவர், பூஜிப்பவர். சிவ கிருபையால், இம்மையில், இஷ்ட சித்தியும், மறுமையில் மோக்ஷமும், எய்துவர்.

எல்லாம் வல்ல குரவன் வாழ்க.

ஸ்ரீ ஜகத் குரு

ஆதி சங்கராசாரிய ஸ்வாமிகள் சரித்திரம்

முற்றுப் பெற்றது.

---

*ஸ்ரீ சங்கராச்சாரியார் இயற்றிய நூல்களாவன:-*

1. பிரஹ்ம ஸூத்ர பாஷ்யம்.
2. பகவத் கீதா பாஷ்யம்.
3. ஈஸாவாஸ்யோபநிஷத் பாஷ்யம்.
4. கேநோபநிஷத் பாஷ்யம்.
5. கடோபநிஷத் பாஷ்யம்.
6. பிரசிந உபநிஷத் பாஷ்யம்.
7. முண்டகோபநிஷத் பாஷ்யம்.
8. ஐதரேய உபநிஷத் பாஷ்யம்.
9. தைத்திரீயோபநிஷத் பாஷ்யம்.
10: மாண்டூக்யோபநிஷத் பாஷ்யம்,
11. சாந்தோக்யோபநிஷத் பாஷ்யம்,
12. பிரஹதாரண்யகோபநிஷத் பாஷ்யம்.
13. நரசிம்ம பூர்வதாபநீய, உத்தராதாபநீய, உபநிஷத் [பாஷ்யம்.
14. விஷ்ணு ஸஹஸ்ர நாம பாஷ்யம்.





15. ஜநத்சுஜாதிய பாஷ்யம் (சு 149)
16. லலிதா திரி சதி பாஷ்யம்
17. அஸ்தாமலக பாஷ்யம் (சு 12)
1. உபதேச ஸஹஸ்ரீ (சு. 671) வசநம்.
2. ஸர்வ வேதாந்த சித்தாந்த சார சங்கிரகம் (சு 1006).
3. ஆத்ம போதம் (சு. 68)
4, அபரோக்ஷாநுபூதி (சு 144)
5. விவேக சூடாமணி (சு 581)
6. வாக்ய விருத்தி (சு 53)
7. ஸ்வாத்ம நிரூபணம் (சு 154)
8. சத சுலோகி (சு 101)
9. தச சுலோகி (சு 10)
10. பிரபோத சுதாகரம் (சு 257)
11. ஸ்வாத்ம பிரகாசிகா (சு 68)
12. மநிஷா பஞ்சகம் (சு 5.)
13. அத்வைத பஞ்ச ரத்நம் (சு 5)
14. நிர்வாண ஷட்கம் (சு 6)
15. அத்வைத அநுபூதி (சு 84)
16. பிரஹ்ம அநுசிந்தநம் (சு 29) மகாவாக்ய சித்தாந்த
17. பிரசிந உத்தர ரத்நமாலிகா (சு 67) ஸ்தோத்ரம்)
18, சதாசார அநுசந்தாநம் (சு 55)
19. யோக தாராவளி (சு 29)
20. உபதேச பஞ்சகம் (சு 5)
21. தந்யாஷ்டகம் (சு 8)
22. ஜீவன் முக்தாநந்த லஹரி (சு 17)
23. அநாத்ம ஸ்ரீ விஹர்ஹணப் பிரகரணம் (சு 18)
24. ஸ்வரூபாநுசந்தாநாஷ்டகம் (சு 9)
(விக்ஞாநநௌகா)
25. யதி பஞ்சகம (கௌபீந பஞ்சகம்) (சு 5)

26. பஞ்சீகரணம்-வசநம்
27. தத்வ உபதேசம் (சு 87)
28. ஏக சுலோகி (சு I)
29. மாயா பஞ்சகம் (சு 5)
30. பிரௌடாநுபூதி (சு 17)
31. பிரஹ்ம நாமாவலி மாலா (சு 21)
32 லகு வாக்கிய விருத்தி (சு 18)
33. நிர்வாண மஞ்சரி (சு 12)
34. கணேச பஞ்ச ரத்நம் (சு 6)
35. கணேச புஜங்கம் (சு 9)
36. சுப்பிரமணிய புஜங்கம் (சு 33)
37. சிவ புஜங்கம் (சு 40)
38. சிவாநந்த லஹரி (சு 100)
39. சிவ பாதாதி கேசாந்த வர்ணந ஸ்தோத்ரம் (சு 41)
40. சிவ கேசாதி பாதாந்த வர்ணந ஸ்தோத்ரம் (சு 29)
41 வேத சார சிவ ஸ்தோத்ரம் (சு 11)
42. சிவ அபராத க்ஷமாபண ஸ்தோத்ரம் (சு 15)
43. ஸ்வர்ண மாலா ஸ்துதி (சு 50)
44. தச ஸ்லோகி ஸ்துதி (சு 10)
45. தக்ஷிணா மூர்த்தி வர்ண மாலா ஸ்தோத்ரம் (சு 25)
46. தக்ஷிணா மூர்த்தி அஷ்டகம் (சு 10)
47. மிருத்யுஞ் ஜெய மாநசிக பூஜா ஸ்தோத்ரம் (சு 46)
48. சிவ நாமாவலி அஷ்டகம் (சு 9)
49. சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்ரம் (சு. 5)
50. உமா மகேசுவர ஸ்தோத்ரம் (சு 13)
51. சௌந்தரிய லஹரி (சு 100)
52. தேவி புஜங்க ஸ்தோத்ரம் (சு 28)
53. ஆநந்த லஹரி (சு 20)

81. தக்ஷிணு மூர்த்தி ஸ்தோத்ரம் (சு 19)
82. கால பைரவாஷ்டகம் (சு 9)
83. நர்மதாஷ்டகம் (சு 9)
84. யமுநாஷ்டகம் (சு 8)
85. யமுநாஷ்டகம் (சு 9)
86. கங்காஷ்டகம் (சு 9)
87. மணி கர்ணிகாஷ்டகம் (சு 9)
88. நிர்க்குண மாநஸ பூஜா (சு 33) (பரா பூஜா, ஆத்ம பூஜா)
89. பிராத ஸ்மரண ஸ்தோத்ரம் (சு 4)
90. ஜகந் நாத அஷ்டகம் (சு 8)
91. ஷட் பதி ஸ்தோத்ரம் (சு 7)
92. பிரமர அம்பா அஷ்டகம் (சு 9)
93. சிவ பஞ்சாக்ஷர நக்ஷத்திர மாலா ஸ்தோத்ரம் (சு 28)
94. த்வா தச லிங்க ஸ்தோத்ரம் (சு 13)
95. அர்த்த நாரீசுவர ஸ்தோத்ரம் (சு 9)
96. சாரதா புஜங்கப் பிரயாதாஷ்டகம் (சு 8)
97. குரு அஷ்டகம் (சு 9)
98. காசி பஞ்சகம் (சு 5)
99. பிரபஞ்ச சாரம் 33 படலம் (சு 2402)

சுலோகம் 6700ம், வசந நூல்களும், செய்தனர்.

*வேறு நூல் செய்த தாகக் கூறுவர்.*

1. சுவேதாசுவதர உபரிஷத் பாஷ்யம்
2. ஆபத்ஸ்தம்பீய அத்யாத்ம படலம் சூத்ரம் (சு 14)
3. ஆத்மாநாத்ம விவேசநம் (விவேகம்) வசநம்
4. பால போதிசி வசநம்.
5. அக்ஷர மாலிகா ஸ்தோத்ரம் (சு)
6. தத்வ போதம் வசநம்.

7. வாக்ய சுதா
8. அத்யாத்ம வித்யா உபதேச விதி
9. பஞ்ச ரத்ந காரிகா
10. சர்வ சித்தாந்த சங்கிரகம்.

1. பாஷ்யம் 17, 2. வேதாந்தம் 34, 3. சிவ ஸ்தோத்ரம் 14, 4. விஷ்ணு ஸ்தோத்ரம் 11, 5. தேவி ஸ்தோத்ரம் 21, 6. நதி ஸ்தோத்ரம் 5, 7. கணேசர் ஸ்தோத்ரம் 2, 8. சுப்ரமணியர் ஸ்தோத்ரம் 1, 9. ஹநுமார் ஸ்தோத்ரம் 1, 10. குரு ஸ்தோத்ரம் 1, 11. ஊர் ஸ்தோத்ரம் 1, 12. கால பைரவர் ஸ்தோத்ரம் 1 ஆக 109.

---

## 2. *ஸ்ரீ சுரேசுவராசாரியரது சரிதம்.*

கருவலி களையும் இபமுகன் தன்னைக்
கதிர்வடி வேலனை அடுத்தோர்,
இருமல ஆரி ஈசுரன் தன்னை
இணையில்கா மாக்ஷியைச் சிறந்த,
திருஉரு துங்க பத்திரை புரக்கும்
சிருங்கைவாழ் செகத்குரு மடத்துப்,
பரன்உரு வான சுரேசுவரா சானற்
பாததா மரையிணைப் பணிவாம்.

நர்மதை யென்னும் நதத்தின் தீரத்தில், மாகிஷ் மதி என்னும் நகர மொன் றுண்டு. அதில் ஹிம மித்ர ரென்னும் பிராஹ்மணர் ஒருவ ரிருந்தார். அவருக்குக் குண நலமமைந்த ஒரு சத் புத்ரன் ஜநந மாயினன். அச் சுபுத்ரனுக்கு விசுவ ரூப ரென்னுந் திரு நாமஞ் சூட்டி, இளமைப் பருவத்திலேயே அந்தண நெறி வழுவாது சர்வ

சமஸ்காரங்களையும் பிதாச் செய்வித்தார். விசுவ ரூபரும் அதி பால்யத்திலேயே, சுருதி ஸ்மிருதி, இதிகாச முதலிய சர்வ சாஸ்திரங்களிலும், பாண்டித்ய முடையவ ராகித், தமது புகழ் பாரெலாம் பரவி வரு மாறு பிரகாசித்து வந்தார். இவர், புவிக்கு மண்டனமா யிருந்ததனுல், இவருக்கு மண்டன மிசிரர் என்னும் காரணப் பெயர் வந்தது. விசுவ ரூபர் யௌவனப் பருவ மடைந்த காலே, அவ ருடைய தகப்பனுர், அவருக்கு விவாகம் செய்விக்கக் கருதி, சோண பத்திரை யென்னும் நதி தீரத்தின் கண் வாசஞ் செய்யும் விஷ்ணு மித்ர ரென்னும் பிராஹ்மண ருடைய, ரூப லாவண்யமும், நற் குண நற் செய்கையும், கல்வித் திறமையும், வாய்ந்த சரச வாணி என்னும் பெண் ணணங்கை விவாஹத்திற்கு நிச்சயஞ் செய்தனர். அவ் வாறே, விசுவ ரூபருக்கும், சரச வாணிக்கும், சுப தினத்தில், வதுவை முடிந்தது. பின்னர், தம்பதிகள் மாகிஷ்மதி நகரஞ் சென்று, கிருஹஸ்தாசிரம தர்மத்தை நெறி தவரு து நடாத்தி வந்தனர். விசுவ ரூபர், இல் லற நெறி வழாது நடந்து வருங்கால், அவ ருடைய பெற்ருேர்கள் கால கதி யடைந்தனர். மண்டன மிசிரர், ஒருகால், தமது பெற்ருேருக்குச் சிராார்த்தம் கொடுக்க நேர்ந்த போது, பூர்வ மீமாஞ்சையின் கர்த்தா வாகிய ஜைமினி மகரிஷியையும், உத்தர மீமாம்சையின் கர்த்தா வாகிய வேத வியாச பகவானையும், முறையே, விசுவே தேவர் ஸ்தானத்திலும், பிதிரு ஸ்தானத்திலும்; நிமந்தரணத்திற்கு வரித்தார். அந்தத் தினத்தில், அவர் தமது வீட்டின் வாயிற் கதவைத் தா ளிட்டு, அதி சிரத்தையுடன் சிரார்த்தத்தை நடத்தி வந்தார்.

மண்டன மிசிரர், கல்வியிலும், ஒழுக்கத்திலும், மேம்பட்டவ ரென்று ஸ்ரீ பட்ட பாதாச்சாரியர், ஸ்ரீ சங்கர

பூஜ்ய பகவத் பாதாசாரியருக்குச் சொல்லுதலும், அவர், மண்டநமிசிரரை வாதில் வென்று, அவரைத் தமது சிஷ்யராக்கக் கருதி, மாகிஷ்மதி நகரத்தில், மண்டந மிசிரரின் கிருகத்தை நாடிச் சென்றார். அங்குக் கிருகத்தின் வாயில் மூடப்பட்டிருப்பதைக் கண்டு, யோக மகிமையால், கிருகத்தின் மேன் மாடி வாயிலாக உள்ளே சென்றார். அப்போது, மண்டந மிசிரர், விசுவே தேவர்களேயும், பிதிருக்களேயும், பாத்யாதிகளால் நல் வரவு கூர்ந்து, பிரத்யக்ஷ மகா விஷ்ணு ஸ்தாநத்தில், தர்ப்பையை வைத்து, அதில் பாத்யத்தைச் சமர்ப்பிக்குந் தருணத்தில், அவ் விடத்தில், இரண்டு பாதங்க ளிருக்கக் கண்டு, நிமிர்ந்து பார்த்தார், சிராத்த காலத்தில், சந்நியாசிகளேக் காண்பது கூடா தென்று கர்ம காண்டத்திற் கூறியிருப்பதனுல், அங்குத் தோன்றிய சந்நியாசியின் மீது மிகு கோபங் கொண்டு, அவரைப் பல வாருகத் தூஷித்தனர். இவற்றிற் கெல்லாம் ஸ்ரீ சங்கரர் சாவதாந மாகச் சாந்த மொழிகளால், விடை பகர்ந்தனர், இவரது சாந்த மொழிகள், மண்டந மிசுரருக்கு, அதிக த்வேஷத்தை யுண்டாக்கின. இவ் விருவருக்கும் நடக்கும் வாக்கு வாதங்களே ஜைமிநி பகவான், கேட்டுச் சிரித்துக் கொண்டிருந்தனர். ஆனுல், வியாச பகவான், ஸ்ரீ சங்கரரது மகிமையையும், அவரது அபார சக்தியையும், எடுத்துக் கூறி, அவரை ஸ்ரீ மகா விஷ்ணுவே பிரத்தியக்ஷ மாக வந்தன ரென்று கருதிப், பிரத்யக்ஷ மகாவிஷ்ணு ஸ்தாநத்தில், நிமந்தரணத்திற்கு வரிக்கு மாறு மண்டந மிசிரருக்கு ஆக்ஞாபித்தனர். அதனுல், மண்டந மிசிரர் சாந்தி பெற்று, ஸ்ரீ சங்கரரை நிமந்தரணத்திற் கழைத்தனர். ஸ்ரீ சங்கரர், தமக்கு வாத பிக்ஷை வேண்டு மென்று கேட்டனர், சிராத்தம் முடிந்த பிறகு வாதஞ் செய்யச் சம்மதித்தனர்.

சிராத்தம் முடிந்த பின்னர் மண்டநாசாரியர் வாதத் திற்கு மத்யஸ்த ராக, ஸ்ரீ வேத வியாசரையும், ஜைமினி பகவானையு மிருக்க வேண்டிக் கொண்டனர். அவர்கள் மண்டந மிசிரரின் பத்நியும், சர்வ கலா வல்லியு மாகிய, சரச வாணியை மத்யஸ்த மாக வைத்து வாதத்தை நடத்த லாம் என்று கூறி விடை பெற்றுப் போயினர்.

சிராத்தம் முடிந்த மறு தினம், ஸ்ரீ மண்டநாசாரியரும், ஸ்ரீ சங்கராசாரியரும், காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, வாதத்திற்கு தயா ராயினர் சரச வாணி மத்திய ஸ்த மாக வந்திருக்க முடியாதது கருதி, இருவர் கழுத்தி லும், இரண்டு பூ மாலைகளை மந்திரித்துச் சூட்டி, "இப் பூ மாலைகள் வாடும் இயல் புடையன வல்ல, அதனால், யார் கழுத்திற் சூட்டப்பட்ட பூ மாலை, வதங்கி உலர்ந்துவிடு கின்றதோ, அப் போது அவருக்குத் தோல்வி யுண்டான தென் றுணர லாம்" என்று கூறித், தமக் குரிய மனைத் தொழிலைக் கவனித்து வந்தனர். இவ் வாதத்தில், யார் தோல்வி யடைந்தாலும், தோல்வி யடைந்தவர், வெற்றி பெற்றோருடைய ஆசிரமத்தை மேற் கொள்வது, வாத நியமமா மென்று தீர்மானித்து, வாதம் ஆரம்பிக்கப்பட் டது. சிவாவதார ரான ஸ்ரீ சங்கரரும், பிரஹ்மாவதார மான மண்டநாசாரியரும், வாதிப் பிரதிவாதிக ளாகவும், சரஸ் வதி தேவியே, வாதத்திற்கு மத்தியஸ்த மாகவும், அமர்ந் துள்ள தருக்க வேள்வி, சத்திய லோகத் துள்ள பிரஹ்ம சபையே போன் றிருந்தது, இச் சபைக்கண், ஸ்ரீ சங்கரா சாரியரும், ஸ்ரீ மண்டநாசாரியரும், தருக்கஞ் செய்ய ஆரம் பஞ் செய்தனர். முதற்கண் ஸ்ரீ சங்கராசாரியர், ஜீவேசு வரர்க ளொன்றே யென்னும் அத்வைத சித்தாந்தத்தைப்

பிரதிஞ்ஞை செய்தனர். ஸ்ரீ மண்டனாசாரியர், கருமத் தானே மோக்ஷஞ் சித்தியாகின்ற தென்றும், மக்களாயுள்ளார் யாவரும்,தமது ஜீவிய தசையில்,கருமத்தையே கடைபோகச் செய்ய வேண்டுமென்றும், பிரதிஞ்ஞை செய்தார். இப் பிரதிஞ்ஞைகளைச் சாதிக்கும் நிமித்தம் இருவரும் தமக்குச் சாதகமான யுக்திகளையும், சுருதிகளையுங் கொண்டு நெடுநாள் வாதித்து வந்தனர். இங்ஙனம், நிகழ்ந்து வருங்கால், ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ மண்டனமிசிரர் தொடுத்த ஒவ்வொரு கட்சியையும் பூர்வ பட்சஞ் செய்து, தமது சித்தாந்தத்தை நிலைநாட்டி வந்தனர். நித்திய கர்மாநுஷ்டான காலங்கள் தவிர,ஏனைய காலங்களில் ஒய்வு இல்லாமல்,அபூர்வமான தருக்கம் இருவருக்கும் நடைபெற்று வந்தது. பூர்வ மீமாம்ஸா கர்த்தரான ஜெமினி பகவானே வியப்பெய்து மாறு பூர்வ மீமாம்ஸைக்கு அபூர்வமான அர்த்தங்களை ஸ்ரீ சங்கரர் விளக்கி வந்தார். இவ்வாறு, இருவருக்கும் நடைபெற்ற வாதம், பன்னீராயிரங் கிரந்தங்களாயின. இவ் வற்புத வாதத்தைக் கேட்டிருந்த புல்வர்கட்கு அறிதற்கரிய சுருதிகளின் உட்பொருள்கள் பலவும் அதிக சுலபமாக வெளியாயின. இங்ஙனம், வாதம் நடந்து வருங்கால், ஒரு நாள், ஸ்ரீ மண்டனாசாரியர் கழுத்திலிருந்த பூமாலை வாடியது. அப்போது அங்குக் குழுவியிருந்த சபையோரனைவருக்கும், ஸ்ரீ சங்கரர் வெற்றி பெற்றன ரென்று விளக்கமாயிற்று. சபைக்குச் சாட்சியாயிருந்த சகல கலா வல்லியாகிய சரசவாணி,நியாயத்தை நிலைநிறுத்துதற் பொருட்டு, சபைக்கண் வந்து உபய வாதியரையும், பிக்ஷைக் கழைத்தனள். அப்போது, தேவர்கள் புஷ்ப மாரி பொழிந்தனர். இச் சம்பவங்களைப் பார்த்திருந்த ஸ்ரீ மண்டனமிசிரர் தாம்

தோல்வி யடைந்தோ மென்று கருதி, வாதத்தின் ஆரம்பத்திற் செய்து கொண்ட பிரதிஞ்ஞையின் பிரகாரம், சந்நியாச ஆசிரமத்தை மேற்கொள்ள விரும்பி, ஸ்ரீ சங்கரரை நமஸ்கரித்துத், தமக்கு உபதேஞ் செய்து, கிரம மாகச் சந்நியாச ஆசிரமம் தரு மாறு பணிவுடன் பிரார்த்தித்தனர்.

ஆயினும், மண்டந மிசிரர், நீண்ட நாள் பழகி வந்த கரும காண்ட நூ லாராய்ச்சியின் வன்மையால், அத்வைத சித்தாந்தமே உண்மை யென்ற ஸ்திர புத்தி உண்டாகியும், அவ ருள்ளத்தில், ஆசிரியர் ஜைமிநியார் கரும காண்டமே முக்கிய மென்று கூறியுள்ள சூத்திரங்கள் பய னற்றன வாமோ? அங்ஙன மிரா வாதலின், அவர் கருத் தியாதோ? என்னும் சம்சயங்கள் ஜநித்தன, இவை விளக்க மாகும் வரையில், ஒன்றினிடத்தும் நம்பிக்கையும், வைராக்கியமு முண்டாகாது என்று கூறினர்,

ஆசிரியார் ஜைமிநியார், பிரஹ்மத்தினிடத்துக் கருத்துடையவ ராயினும், அநாதிகாலந் தொடங்கி, ஜீவ ராசிகள் விஷய வாசையிலேயே செல்லும் மநத்தினை யுடையவ ராக விருத்தலின், அன்னோர்களைக் கடைத் தேற்றும் பொருட்டு, ஞாநத்திற்குக் காரண மாகிய கருமத்தையே சிறந்த தென்று கூறின ரென்று பற் பல நியாயங்களை ஸ்ரீ சங்கரர், மண்டநாசாரியருக்கு எடுத்துக் காட்டினர். அங்ஙனங் காட்டியு வழியும், மண்டந மிசிரருக்கு ஐயம் நீங்காது, மநக் கலக்க மடைந்து, தமது குருவைத் தியாநித்தார். வாழ் நாட்கள் முழுமையும், தமது நூலையே நம்பியிருந்த மண்டநாசிரியரைக் கடைத் தேற்றும் பொருட்டு, ஜைமிநி மகரிஷியார், சிஷ்யன் முன்னர்ப் பிரசந்ந ராகி, நீ இது காறும் கருமத்தைக் கடைபோகச் செய்து வந்தமை

யின், ஞாந மார்க்கத்தை மேற்கொள்ள அதிகாரியாய் விட்டாய், ஸ்ரீ சங்கராசாரியர் கூறிய கருத்துக்களே, என்னுடைய கருத்தும், எனது ஆசிரியர் ஸ்ரீ வேத வியாசர் கருத்து மாம். ஸ்ரீ வேத வியாசர் கருத்திறக்கு மாருக, யானென்றும் கூற வில்லை. இது காறும் யான் உனக்குக் குருவா யிருந்தேன், இனிமேல், ஸ்ரீ சங்கரரே உனக்குக் குரவ ஞவர். இவர் என் னுள்ளக் கருத் தொன்றனையே யன்றி, எல்லா உயிர்களின் கருத்தினையும், வேத முதலிய எல்லாக் கலைகளின் கருத்தினையும், உணர்ந்த பேரறிவாளராவர். அப் போது, ஸ்ரீ சங்கரர் தக்ஷிணு மூர்த்தி வடிவமாகத் தோற்றினர். ஜைமினி மகாரிஷியார் ஞாநக் கண்ணுல் அவரைத் தரிசித்து, மண்டந பண்டிதரைப் பார்த்து, இச் சந்நியாசியை, மானுடனே என்ருவது, எம் போலிய ரென்ருவது கருதுவது கூடாது. இவர் உலகம் உஜ்ஜீவிக்கும் பொருட்டு அவதரித்த பரமேசுவரனே யாவர், நீயும், பிரஹ்மாவின் அம்சத்திறற் ருேன்றியவன், நீ இந்த ஜகத் குருவின் பாத பங்கயத்தைச் சேவித்துக் கிருதார்த்த ஞவாய் என்று ஆசீர்வாதஞ் செய்து, ஞாந நோக்கத்தையு மருளி மறைந்தனர். மண்டந மிசிரர் ஞாந நோக்கத்திஞல், ஸ்ரீ சங்கரரைப் பார்த்தனர்.

அப் போது, ஸ்ரீ சங்கரர் அறிவாநந்த வடிவின ராகிய ஸ்ரீ தக்ஷிணு மூர்த்தி கோல மாகத் தோன்றினர். அங்ஙனம் தரிசித்தலும், மண்டந மிசிரரின் ஐய மெல்லாம் அகன்றன, அவரும் தமது மாணுக்கர் முதலியோருக்குச் சதுர்முகப் பிரஹ்மா வாகத் தோன்றினர். அப் பிரஹ்ம ரூப தரிசநத்திஞல், சபையோ ரெல்லாம் அதிக வியப்பினையும், ஆநந்தத்தினையு மடைந்தனர். பின்னர் மண்டந மிசிரர்

தமது மாணுக்கட்கு, மனை, பொருள் முதலியன மிகுதியுங் கொடுத்துத், தாம் தேடிய ஏனைய பொருள்க ளனைத்தினை யும், தானஞ் செய்து, வைராக்ய சீல ராய், ஸ்ரீ சங்கரரைத் தோத்திரஞ் செய்து, தம்மைச் சந்நியாச ஆசிரமத்திற் சேர்ப்பித்து, ஆட்கொள்ளு மாறு பிரார்த்தித்தனர். ஸ்ரீ சங் கரர், அவர் மீது கிருபை கூர்ந்து, விதிப்படி அவரைச் சந்நியாசி யாக்கி, வேதாந்தத்தின் உண்மைப் பொருளை யுபதேசித்தருளி, அவருக்கு, சுரேசுவராசாரிய ரென்னும் பெய ரிட்டு, அவரைத் தம் மாணுக்கருட் டலைவ ராக்கினர்.

பின், சுரேசுவராசாரியர், தமது ஆசிரியருடன் பல தலங்களுஞ் சென்று, ஆங் காங்கு அத்வைத சித்தாந்தத் தைப் பரவச் செய்து வந்தார். ஒரு கால் ஸ்ரீ சைலத்திற் றங்கியிருந்த போது. அங்கு வந்த ஆயிரத் திரு நூறு புற மத வாதியர்களை வென்று, சத்தியம், அத்வைதம் என் பதை நிலைநாட்டினர். பின்னர், ஸ்ரீ சங்கராசாரியருடன் சிருங்க கிரி யடைந்தனர். அங்கு, ஸ்ரீ சங்கரர், மட மொன் றமைத்து, சுரேசுவராசாரியருக்கு ஆசார்யாபிஷேகஞ் செய்து, அதற்கு அவரை அதிபதியாக்கினர்.

ஒரு கால், சுரேசுவராசாரியர், ஸ்ரீ சங்கரரை வணங் கிக் குரு தக்ஷிணை யாக யான் யாது செய்யத் தக்கது என்று பணி வாய்க் கேட்டார். அதற் கவர், யான் செய் துள்ள சாரீரக பாஷ்யத்திற்கு, நீர் வார்த்திகம் செய்யு மென்று கட்டளை செய்தார். சிற்சுகாசாரியர் முதலிய மாணுக்கர்கள், சுரேசுவராசாரியர் மீது பொருமை கொண்டு, கரும காண்டி யாகிய அவர், வார்த்திகம் எழுது வதற்கு அதிகாரி யல்ல ரென்று ஸ்ரீ சங்கராசாரியரிடத்து முறையிட்டனர், அதற் கவர், யான் சுரேசுவராசாரிய

ரோடு வாது செய்தவ ஞதலின், அவ ருடைய சாமர்த்தி யத்தை யான் நன் ருக அறிவேன். மேலும், அவர் சாதா ரண ரல்லர், பிரஹ்ம தேவனே யாவர். அவ ரன்றி, என பாஷ்யத்திற்குத் தக்க வார்த்திகம் செய்ய வல்லார் வே ெருருவர் காணப்படவில்லை யென்று ஸ்ரீ சங்கரர் கூறி ஞர். ஆயினும், இவ் விஷயத்திற் பல விராதிக ளேற்பட்டி ருக்கின்றமையின், யாவருக்கும் விரோத மானதை யான் செய்ய மாட்டேன் என்று கூறி, சுரேசுவராசாரியரை யழைத்து, உன் மீது யாவரும் பொருமை கொண்டிருக் கின்றனர். ஆதலின், நீ வார்த்திகம் செய்ய வேண்டாம், வேறு நூல் செய் யென்று கட்டளை செய் தருளினர், குரவ ருணையைச் சிரமேற் கொண்டு, சுரேசுவராசாரியர் நைஷ்கர்மிய சித்தி முதலிய நூற்களை யியற்றிக் குரு சந்நி தாநத்தில் சமர்ப்பித்தனர். இந் நூல்களால் சுரேசுவராசாரி யர் மீது பொருமை கொண்ட பதும பாதாச்சாரியர் முத லா ேனார் பொருமை நீங்கினவ ராயினர். பின்னர்ச், சுரேசுவராச்சாரியர் தாம் சாரீரக பாஷ்யத்திற்கு வார்த்தி கம் இயற்றுவதைத் தடை செய்த, பதும பாதர் முதலி யோர் மீது வெகுளி மேற்கொண்டவ ராய், குரவ ருணைப் படி யான் செய்ய விருந்த பணிவிடைக்கு விரோதஞ் செய் தவர், என்னைப் போற் செய்யும் நூல்க ளியாவும் அவர்கள் கருத்தின் பிரகாரம் நிறைவேருமற் போகக் கடவன வென்று கமண்டல நீரைக் கையிற் கொண்டு சபித்தனர், அவ் வாறே, பதும பாதர் செய்த வார்த்திகம் பூர்த்தியாகா மற் போயிற்று. அங்ஙன மாயினும், குரவ ருணைக்குத் தடை நேரிட்டதே என்னும் கலக்கம் சுரேசுவராசாரி யரை வாதியாநின்றது. இதனை அறிந்த ஸ்ரீ சங்கரர், கிருஷ்ண யஜுஸ் சாகைக்கும், சுக்ல யஜுஸ் சாகைக்கும்,

யான் இயற்றி யுள்ள பாஷியங்களுக்கு, நீர் வார்த்திக மெழுது மென்று சுரேஸ்வராசாரியருக்குக் கட்டளை செய் தருளினர். அவ் வாறே, அவர் அவ்விரண்டு நூற்களையும் செய்து, குரு தக்ஷிணை யாகக் குரவன் பாதத்திற் சமர்ப்பித் தனர்.

பின்னரும். சுரேசுவராசாரியர் தமக்கு சூத்திர பாஷ் யத்திற்கு விபாக்கியானஞ் செய்யும் பாக்கியம் லபிக்கா மைக்கு மிகவும் வருந்தி சிற்பா ராயினர். அதற்கு, ஸ்ரீ சங் கரர்; நீர் இன்னும் 800 வருடம் தவஞ் செய்திருந்து, அடுத்த ஜந்மத்தில் வாசஸ்பதி என்னும் பெயரோடு விளங்கி, ஆறு, ஆஸ்திக பாஷ்யங்களுக்கும், ஆறு, நாஸ் திக பாஷ்யங்களுக்கும், நீரே உரை செய்வீர். பின், எல்லா வற்றிற்குஞ் சித்தாந்த மாக என் பாஷ்யத்திற்குப் பெரி யதோ ருரை யெழுதி, அழிவற்ற கீர்த்தியைப் பெறுவீர். அப் போது உம்மிடத்தி லுள்ள பிரகஸ்பதியின் கூறு, வாசஸ்பதிப் பிறப்பில் செய்யத் தக்க காரியங்களைச் செய்து முடிக்கும், அதனால், நீர் ஒன்றிற்கும் வருந்த வேண்டாம் என்று வரங் கொடுத் தருளினர். சுரேசுவராசாரியர் குரு வருள் பெற்றுத் திருப்தி யடைந்திருந்தனர்.

சுரேசுவராசாரியர் சரிதம் முற்றும்.

---

## 3. ஸ்ரீ தோடகாசாரியர் சரிதம்.

கருவலி களையும் இபமுகன் தன்னைக்
கதிர்வடி வேலனை அடுத்தோர்,
இருமல ஆகி ஈசுரன் தன்னை
இணையில்கா மாக்ஷியைச் சிறந்த,
திருஉரு துங்க பத்திரை புரக்கும்
சிருங்கைவாழ் செகத்குரு மடத்துப்,

பரன்உரு வான தோடக ஆசான்
பாததா மரையிணைப் பணிவாம்.

அநந்த கல்யாண குணங்கள் நிறைந்த மகா தேவரது அநுக்கிரக லீலா விக்கிரக மாகிய ஸ்ரீ சங்கர பூஜ்ய பகவத் பாத ஆசாரிய சுவாமிகள், அஸ்தாமலகர் என்னும் நாமம் வாய்ந்த சீடனைத் தமக் கடிமை யாக்கிய பின், பதும பாதாதி சீடத் திருக் கூட்டங்களோடு, ஒரு கால், சிருங்க கிரி என்னும் புரியில் ஸ்ரீ சாரதாம்பிகையைப் பூஜித்துக் கொண்டிருக்குங் காலத்தில், தமது தருமத்தில் வழுவாது நடப்பவரும், ஜீவ காருண்யமே உரு வானவரும், அதி விநயரும், தேசிக சேவையிற் றற்பரரும், மிகுந்த சமாஹித சித்தரு மாகிய, ஆநந்த கிரி யென்னும் நாமம் வாய்ந்த ஒருவர், அத்வைத ஸ்தாபநாசிரிய ராகிய, ஸ்ரீ ஜகத் குரு சந்நிதியைச் சரணாகதியா யடைந்து, ஊசி செல் வழி, நூற் செல்வது போலவும், கட் கிமை போலவும், உயிர்க் குயிர் போலவும், அநவரதம், ஆத்தம், அங்கம், தாநம், சற்பாவம் என்னும் நான்கு விதப் பணிவிடைகளையும், அள வில்லாத அன்போடு செய்து வந்தனர். அக் கால், சாஸ்திரங்களிற் பிரவிருத்தி சிறிது மின்றிக் கேவலம் சேவையிலேயே அன்பு பூண்ட அவ் வன்பரைத் தயாநிதி யாய், மான் மழு வொழித்து, மறை முதற் பொருளை யுணர்த்தி வந்த விறைவர், தமது திரு வுளத் தடைத்துப், பதும பாதாதி முநிவர்கள் சாந்தி பாட மாகிய சிரவணஞ் செய்யும் பொழுது, தமது திரு வார்த்தையைச் சிரவணித் துய்யு மாறு கருணை புரிந்தனர். இங்ஙனம் நடந்துவரு ஞான்று அவ் வன்பர்,

ஓரோர்காற் றமது தேசிகேந்திரர் சேவை முடியா திருப்பிற் சிறிது பொறுத்து வருவார். அவ் வக்கால், உலக

நாயக ருகிய குரவர் பெருமான், சாந்தி பாடஞ் செய் பவரை நோக்கிச், சிறிது பொறுங்கள், கிரி சிறிது போதில் வந்து விடுவன், பின்னர்ச் சிரவணஞ் செய்யலா மென்று திரு வாய் மலர்ந்தருளுவார். அது குறித்துச், சர்வ வித்யா சம்பந்ந ராகிய, பதும பாதாதி முநிவர் மநங்கள் தபித்துக் கொண்டே வந்தன. சிறிது நாட் கழித்து, ஒரு நாள், அவர், தேசிகர் பெருமான் பரிவட்டம் சுத்தஞ் செய்ய நதிக்குச் சென்றிருக்குங் கால், சாந்தி பாடஞ் செய்யச் சகஸ்திரக் கணக் காகச் சீடர் கூடியிருக்கச், சாந்தி பாடம் நடக்க ஆக்ஞை புரிய வேண்டு மென்று குரவர் பெருமானைப் பதும பாத முநிவர் பிரார்த்தித்த பொழுது, அவர், வாராம லிருக்கச் சிறிது பொறுங்கள், கிரியும் கணப் பொழுதில் வந்து விடுவன் என்று தேசிகேந்திரர் திரு வாய் மலர்ந் தருளினர். அதைச் செவி யுற்ற, பதும பாத முநிவர், சகி யாதவ ராகிச், சாஸ்திரத்தி லநதிகாரி யாய்க் குட்டியம் போலச் சட மாய்ப், புத்தி யீநனுயைத் தன் வேலையைச் செய்துகொண்டிருக்கும் அவனுக் காக ஏன் எதிர்பார்க்க வேண்டு மென்று பீதியோடுந் தெரிவிக்க, அதைத் திருச் செவி யுற்ற, தயா சமுத்திர மாகிய தேசிகர் பெருமான், பதும பாதரது மிகுந்த கர்வம் நீங்கும் பொருட்டும், பக்தர் கள்பால், அநுக்கிரகத்தை வெளியிடும் பொருட்டும், தமது அன்ப ருகிய கிரியின்பால், சதுர்த் தச வித்தைகளும் உளவா மாறு, திரு வுளத்தி லக்கணமே கருணை புரிந்தருளி னர். குரு பரன் திரு வருளால், அவ் வித்தைகளைப் பூரண மாகப் பெற்ற, அவ் வன்பர், பாதங்க டோறும் நான்கு சகணங்கள் வாய்ந்த தோடக சந்தத்தால், மறை முடி யாவையுந் தொகுத்துச் "சுருதி சார சமுத்தரணம்" என

6

நாமஞ் சூட்டி, இந் நூலைச் சகந் நாயக ஞகிய தேசிகர் பெருமான் றிரு வடியிற் சமர்ப்பித்தனர். அதன் சொற் பொரு ளமைதியையும், தேசிகன் சேவையின் வலியால் விரைவில் இவ் வாறு இயற்றியதையும், பதும பாதர் கண் ணுற்றுத், தமது கர்வத்தை விடுத்துப், பொறுத் தருளு மாறு, ஸ்ரீ சங்கர முனிவர் திரு வடித் தாமரையில் விழுந்து அநேகங் கோடி நமஸ்காரஞ் செய்தனர் கருணையே திரு வுருவமாய் எம துயிர்க் கிறைவர், அதனை அவ் வாறே, பொறுத்தருளினர் என்பது, சங்கர திக் விஜயத்தின்கண் ணுள்ள இந் நூ லவதரித்த சரித்திரத்தின் சங்கிரக மாம்.

தோடகாச்சாரியர் சரிதம் முற்றுப்பெற்றது.

---

## 4. *ஸ்ரீ வித்தியாரண்ய ஸ்வாமிகளின் சரித்திரம்*

கருவலி களையும் இபமுகன் தன்னைக்
கதிர்வடி வேலனை அடுத்தோர்,
இருமல ஆணி ஈசுரன் தன்னை
இணையில்கா மாக்ஷியைச் சிறந்த,
திருஉரு துங்க பத்திரை புரக்கும்
சிருங்கைவாழ் செகத்குரு மடத்துப்,
பரன்உரு வான வித்யாரண்யர்
பாததா மரையிணைப் பணிவாம்.

### பூர்வாசிரம விருத்தாந்தம்.

தக்ஷிண திசையில், கர்ணாடக தேசத்திலே, துங்க பத்ரா நதிக் கரையில் பம்பை யென்று ஒரு க்ஷேத்திர முண்டு. அதில் விஜய மென்னும் நகர மிருந்தது. அதனை முன் கிஷ்கிந்தா புரி யென்று சொல்லிக் கொண்டிருந்தனர். இப்

போது, கோல் கொண்டா என்கின்றனர். எங்கு, விருபாக்ஷர் என்னும் மகா தேவருடைய ஆலய மிருக்கின்றதோ, அங்கு ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகளின் ஜந்மமும், பூர்வாசிரமத்தின் ஸ்திதியும், நிகழ்ந்திருக்கின்றது.

அவர்களுக்கு (1) மாதவர், (2) மாதவாரியர், (3) மாதவாசாரியர், (4) மாதவாமாத்தியர், (5) மாதவ பட்டர் என்னும் பெயர்களிருந்தன. பின் உத்தராசிரமத்தில், ஸ்ரீ வித்தியாரண்ய ரென்னும் பெயர் இருந்தது.

1. இவருக்குப் பிறப்பினுல் மாதவர் என்னும் பெயருண்டாயிற்று.

2, 3. மிகுந்த வித்துவத் தன்மையாலும், இவர் இராஜாவின் குல குருவா யிருந்ததனுனும், மாதவாரியர், மாதவாசாரியர், மாதவ பட்டரீ என்னும் பெய ருண்டாயிற்று.

4. ஸ்ரீ வசிஷ்ட முனிவரைப் போல, இராஜாவின் பிரதாந மந்திரியா யிருந்தமையால், மாதவாமாத்தியர் என்னும் பெயரால், அக் காலத் தியற்றி யருளிய நூல்களிற் பிரசித்தஞ் செய்திருக்கின்றனர்.

5. வித்தைக்கு வநம் போன் றிருந்தமையால் வித்தியாரண்யர் என்னும் பெயர் உண்டாயிற்று.

ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள், மகா யோகப் பிரஷ்டராய், உத்தம சம்ஸ்கார முடையவரா யிருந்தனர். வித்தை, ஐசுவர்யம், இலக்ஷ்மி, தேஜசோடு கூடிய தன்மை முதலிய விபூதியினுல், ஜகத்தை உத்தாரணஞ் செய்தற்

பொருட்டு, ஈசுவரனது கலை வடிவ மாகப் பிரகட மானு ரென்று கொள்ளல் வேண்டும். அதனுல், இராஜ சபையில், இவருக்கு யாவரும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து கொண்டிருந்தனர்.

ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள், பராசர ஸ்மிருதியினது வியாக்கியாநத்தின் உபோற்காதத்தில், இவ் விரண்டு சுலோகங்களை எழுதியிருக்கின்றனர்:-

1. ஸ்ரீமதி எவனுக்கு மாதாவோ,

2. அழகிய கீர்த்தி வாய்ந்த மாயணர், எவனுக்குப் பிதாவோ,

3. சாயணர், சோம நாதர், என்னும் இருவரும், எவனுக்குச் சகோதரர்களோ,

4. பௌத்தாயநம், எவனுக்குச் சூத்திரமோ,

5. கிருஷ்ண யஜுர் வேதத்தினுள் ளிருக்கும் போதாயநீ, எவனுக்குச் சாகையோ,

6. பாரத்வாஜம் எவனுக்குக் கோத்திரமோ, அவனே, சர்வஜ்ஞ ஞகிய மாதவன்.

இவ் வாறு, தமது குல கோத்ராதிகளை யறிவித்திருக் கின்றனர்.

வித்தியாரண்ய சுவாமிகள், ஜந்மம் சாலி வாகந சகம் 1300ல் உண்டாயிற்று என்று மகா ராஷ்டிர கவி சரித்திர கிரந்தம் கூறுகின்றது.

ஓர் தாம்பிர பட்டயத்தில், ''சாலிவாகநம் 1313வதில், பிரஜோற்பத்தி என்னும் வருஷத்தில், வைசாக மாதத்தின் கிருஷ்ண பக்ஷத்தில், சூரியக் கிரகண சமயத்தில், மகா மந்திரீசுவர ரான, உபநிஷத மார்க்கப் பிரவர்த்தக ராகிய ஸ்ரீமத் மாதவ ராஜா வானவர், மாதவ புர மென்னும் பெய ரைப் போட்டுக் கசர மென்னும் பெயரால் பிரசித்த மான கிராமத்தை, இரு பத்து நான்கு பிராஹ்மணர்களுக்குத் தாநஞ் செய்தார்'' என்று எழுதப்பட்டிருக்கின்றது. அத ஞல், சகம் 1200க்கு மேல், வித்தியாரண்ய சுவாமிகளின் ஜந்மம் உண்டாயிருக்க வேண்டும். ஸ்ரீ சிருங்க கிரி குரு பத்ததியின்படி, ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளுக்கு, 1300 வருஷங்களுக்குப் பின் வித்தியாரண்ய சுவாமிகள் இருந் திருக்கின்ருர்கள். இதன்படி 650 வருஷங்க ளான தாகத் தெரிய வருகிறது. சித்தாந்த கௌமுதி என்னும் வியா கரண நூலைச் செய்த பட்டோஜீ தீக்ஷிதர் காலம் சற் றேறக் குறைய 500 வருஷ மிருக்க லாம். அவர் ஸ்ரீ வித்தி ரண்ய சுவாமிகளது மாதவ விருத்தி யென்னும் நூலினைத் தமது நூலில் பிரமாணங் கொடுத்திருக்கின்ருர். இதனு லும், 500 வருஷங்களுக்கு முன்னே ஜந்ம முண்டாயிருக்க வேண்டு மென்று தெரியவருகிறது.

மஹம்மது டோகுலாக் காலத்தில், கி. பி. 1334-ல் மாலிக்காப்பூர் என்பவனுல், ஆனை குந்தி நகரம் அழிக்கப் பட்ட தென்றும், அப்போது ஆனை குந்தி நகரத் தரசனுகிய பூப ராயலு தீயிற் குதித் திறந்து போகவே, அவன் சேநாதி பதிகள் ஹரிஹர னும், புக்கனும், துலுக்கர்களுக்குப் பயந்து பம்பா வநத்தில், ஒளியப் போன போது, ஓர் பர்ண சாலையில் தவஞ் செய்து கொண்டிருந்த, ஸ்ரீ வித்தியாரண்ய

ரிடம் தெரிவித்துக்கொள்ள, அவர் தம் தபோ வலியால் அவர்களுக்கு உதவி செய்து, தம் பெயரால் வித்தியாரண்ய நகர மென்று ஒரு பட்டணமுங் கட்டுவித்து, அதனை ஹரிஹர ராயலு ஆண்டு வரும்படி செய்தார். அவனுக்குப் பிறகு அவன் சகோதரன் புக்க ராயலும் ஆண்டு வந்தான். இவ் விருவருக்கும் ஸ்ரீ வித்தியாரண்யர் மந்திரி யாகவும், புரோகிதராயு மிருந்திருக்கிறார். இவ் விருவரும் கி. பி. 1336 முதல் 1379 வரையில், அரசாக்ஷி செய்திருக்கிறார்கள். அதன் பின், புக்க ராயலுவின் புத்திர னுன ஹரிஹர ராயலு, அரசாக்ஷி செய்த காலத்தும், மந்திரி யாக விருந்து வேத பாஷியம் முடித்த தாகத் தெரிய வருகிறது. இதனுல், ஸ்ரீ வித்தியாரண்யர் ஜந்ம காலம் கி. பி. 1300-ல் உண்டா யிருக்கலா மென்று ஊகிக்கப்படுகிறது.

வித்தியாரண்ய சுவாமிகள், மகா துரந்தர பண்டிதரா யிருந்தனர். இவர், சொற்ப காலத்திலேயே சகல வித்தைகளையும் அத்யயநம் செய்திருந்தனர் வெகுவாய்ச் சொல்லுவதி லென்? அநேக மேன்மை யான பண்டிதர்களால் அங்கீகரிக்கப்பட்ட சர்வ சிரோமணி யாகிய ஸ்ரீ சங்கர மதத்தில் ஆசாரியர்களை விட ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகளைப் போன்ற வித்வான்கள் ஒருவரும் இருந்த தில்லை. இவர் அபூர்வ வித்வானு யிருந்தனர் என்பது வித்வான்களது முகத்தாலும், அவர்களினது நூலினுலும், தெரியவருகின்றது.

ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள், வைத்திய சாஸ்திரம், ஜோதிஷ சாஸ்திரம், வியாகரண சாஸ்திரம், வேதாந்த சாஸ்திர மென்பவற்றின் பேரில், அநேக நூல்களைச் செய்

திருக்கின்றனர். அவற்றுள், பிரதாந மான சிலவற்றை இங்கு, எடுத்துக் காட்டு வாம்;-

1. வித்தியாரண்ய சுவாமிகள், நான்கு வேதங்களின் பேரிலும் பாஷ்யஞ் செய்திருக்கின்றனர். அவற்றுள், ருக் வேத பாஷ்யம், யஜுர் வேத பாஷ்யம், சாம வேத பாஷ்யம், அதர்வ வேத பாஷ்யம், நான்கு வேதங்களின் ஐதரேயம், தைத்திரீயம், தாண்டியம், சதபதம், என்னும் இவை முதலிய பிராஹ்மணங்களின் பாஷ்ய முதலியன அச்சிடப்பட்டிருக்கின்றன.

2. சர்வ தர்சந சங்கிரகம் செய்திருக்கின்றனர். அதில், வேதாந்தத்திற்கு வேறுகிய சில பிராசீந மதங்களைக் காட்டியிருக்கின்றனர்,

3. அநுபூதிப் பிரகாச மென்னும் 3000, சுலோக சங்கை யுள்ள நூலைச் செய்திருக்கின்றனர். அதில், வேதாந்தத்தின் சர்வ உபநிஷதங்களின் சாரார்த்தத்தினையும் சுருக்கமாகச் சர்வ ஆக்கியாயிகை (கதை)களுடன் காட்டியிருக்கின்றனர்.

4. பிரஹ்ம கீதை யென்னும் நூல் செய்திருக்கின்றனர். அதில், மாத்துவ ராமாநுஜ மதங்களையும், சங்கர மதத்தினையும், எடுத்துக் காட்டிச் சுருதி சம்மத மான அத்வைத சித்தாந்தத்தினை நாட்டியிருக்கின்றனர்.

அதன் பேரில், பிரகாசிகை யென்னும் உரை யுளது.

5. பஞ்ச தசி என்னும் நூலைச் செய்திருக்கின்றனர். அதன் வர்ணநம், பஞ்சதசி நூலின் முக வுரையில் பிரசித்தம்.

6. ஜீவன் முக்தி விவேகம் செய்திருக்கின்றனர். இதிற் சந்நியாசத்தின் விபாக பூர்வக மான ஜீவந் முக்தி விலக்ஷண சுகத்தின் தன்மை காட்டப்பட்டுளது.

7. திருக்குத் திருசிய விவேக மென்னும் நூலும், ஸ்ரீமத் சங்க ராசாரிய சுவாமிகளாற் செய்யப்பட்ட, அப ரோக்ஷா நுபூதிக்கு உரையும்,' செய்திருக்கின்றனர்.

8. மாதவ விருத்தி யென்னும் வியாகரண நூல் இயற்றி யிருக்கின்றனர். இதில் கிரியா பதங்களின் மூல தாதுக்க ளாகிய 2200 வினைப் பகுதிகளோடு, வேறு வேறு பிரத்தியயங்களாகிய விகுதிகளைச் சேர்த்து, சொல் லமையும் வண்ண மாகப் பாணினி சூத்திர பாஷ்ய வார்த்திக வசநங் களைக் கொண்டு, முறையே உதாரணங்கள் காட்டப்பட் டிருக்கின்றன. இதிற் பெரும்பாலும் எல்லாச் சொற் களும் கொள்ளப்பட்டிருக்கின்றன. இந் நூல் 25000 சுலோக சங்கை யுளது.

9. நிதாந மாதவம்;- இது 1500 சுலோக சங்கை யுள்ள வைத்திய நூல்.

10. கால மாதவம்:. இது எல்லாக் காலங்களையும் நிர்ணயஞ் செய்வது.

11. சதப் பிரசிந கல்ப லதிகா:- இதில் ஒவ்வொரு வினாவிற்கும் விடை வடிவ பப் பத்துச் சுலோகங்கள் செய் யப்பட்டிருக்கின்றன. அப் பிரகரணங்களுக்குத் தசக மென்று பெயர் வைக்கப்பட்டிருக்கின்றது. இவ் வாறு, நூறு வினாக்களுக்கு விடை யாக நூறு தசகங்க ளிருக்கின்

றன. அதில், பஞ்சத் திராவிட, பஞ்ச கௌடர்க ளுள் ளடங்கிய பிராஹ்மணர்களின் பேதங் காட்டப்பட்டுளது.

12. பராசர ஸ்மிருதியின் வியாக்கியானம்;- இதற்குப் பராசர மாதவ மென்று பெயர்:

13. கால மாதவம்:. இது கால நிர்ணயத்திற்குச் சுவதந்திர மாகச் செய்த நூல். இதில், பஞ்சாங்கம் வர் ணிக்கப்பட்டிருக்கின்றது.

14. ஜைமினீய நியாய மாலா விஸ்தாரம்;- இது ஜைமினி சூத்திரத்தின் பேரில் செய்யப்பட்டது-

15. ஆசார மாதவம்:- இதில் பிராஹ்மணர்களது கிரமம் காட்டப்பட்டிருக்கின்றது.

16. வியவஹார மாதவம்:. இது வியவஹாரத்தின் நியாயத்தைப் பற்றிய நூல்.

17. வித்தியாரண்ய கால ஞானம்;- இதில், தெலுங்கு தேசத்து இராஜாக்களின் மரியாதையும், இராஜ்ஜியம் செய் யும் புருஷர்களின் செய்கையு மாகிய வருங் கால வார்த்தை கூறப்பட்டுள்ளது

18: ஸ்ரீ சங்கர திக் விஜயம்:- இதில், சங்கராசாரியர் களது சரித்திரம் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. இந் நூற் கவிதை வெகு மநோகரமும், மேன்மை யுள்ளதும், ஆழ முடைது மாம். இந் நூலின் முதல் சர்க்கத்தில், வித்தியா ரண்யர் தமக்கு நவீந காளிதாசன் என்னும் பெயர் கொடுத் திருக்கின்றனர். அஃது, உசிதமே யாம். அவ ருடைய

எழுத்துக்கள் வெது சரளமும், மநோகரமூம், கம்பீரமும், இரகசியார்த்த முடையனவு மாம்.

19. சூத சங்கிதையின் வியாக்யாநம்:- இவ் வுரையி ஞல், அவர் சைவாகமத் தேர்ச்சியின ரென்பது விளங்கு கின்றது,

20, சங்கர விலாஸம்.- இதில், சிவ பாரம்யம் கூறும் எல்லாப் புராணங்களின் வசநமும் திரட்டப்பட் டுள்ளது. இதனுல்; இவர் சிவோபாஸக ரெனக் காணப்படு கின்றது.

21. விவரணப் பிரமேய சங்கிரஹம்:- இது பிரஹ்ம சூத்திர டீகை.

22. உபநிஷத் தீபிகா வென்னும் பெயரால் அநேக வுபநிஷதங்களுக்கு வியாக்யாநஞ் செய்யப்பட்டு இருக் கின்றது.

23. பிரஹ்மவிதாசி:- இஃது, சகல உபநிஷதங் களின் சார பூத மான சிறிய அத்வைத நூல், வசந ரூப மாய், சகல சித்தாந்த ரகசியத்தினையும் சூத்திரம் போல், அடக்கிக் கூறப்பட்டுளது. இது, மந்தப் பிரஞ்ஞை யுள்ள வர்களிடத்து அவர் காட்டிய கருணையை விளக்குகின் றது

கர்ம விபாக மாதவீயம், பாட்ட சாரம், பாட்ட சார வியாக்கியாநம், வேதாந்த விஜயம், பஞ்ச சார வியாக்கி யாநம், சங்கர பாஷ்ய டீகா, கீதா தாத்பரியம், ஸ்மிருதி சங்கிரக முதலிய அநேக நூல்களைச் செய்திருக்கின்றனர் எனத் தெரியவருகின்றது.

ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள் பூர்வாசிரமத்தில், விஜய நகரத்தின் யது வம்சி யான புக்க தேவ ராஜாவின் குல குரு வாகவும், பிரதாந மந்திரி யாகவும், இருந்தனர். என் பது அதிகரண ரத்ந மாலை முதலிய நூல்களில் விளக்க மாய் எழுதப்பட்டிருக்கின்றது. இவரது பிரதாபத்தால் அவ் வரசனது ராஜ்யமும், அவ் விராஜ்யத்தில், தர்மத்தின் அபிவிருத்தியும் உண்டாயிற்று.

கோவா நகரத்தி லிருந்த துலுக்கர்களை, விலக்கி, இவ் வரசனது ஆணையைச் செலுத்துவித்தார். சப்த நாத ரென் னும் மகா தேவரது விக்கிரகத்தை ஸ்தாபநம் செய்தார். கசர மென்னும் கிராமத்திற்கு, மாதவ புர மென்று பெயர் கொடுத்துப், பிராஹ்மணர்களுக்குத் தாநம் செய்தார். தமது மாதாவின் பெயரால், பூமியைத் தாநஞ் செய்த போது பிராஹ்மணர்களுக்குப் பூமியைப் பிரித்துத் தம் மாதா வினது பெயரின் அநுசார மாகக் கிராமத்தினை ஆக்கினர். அங்கு ஓடுகின்ற நதிக்கு இவரது பழக்கத்தால், மாதவ தீர்த்த மென்னும் பெயர் உண்டாயிற்று. வித்தியா சாலை களும், அந்ந சத்திரங்களும், தேவாலயங்களும், அள விறந் தன செய்திருக்கின்றனர்.

தம்மாற் செய்யப்பட்ட அநேக நூல்களை, வெகு சுத்தப்படுத்திப், பனை யோலை முதலியவற்றில் எழுதுவித் துச், சிலவற்றை மடங்களிலும், க்ஷேத்திரங்களிலு மாகப் பிரித்துக் கொடுத்தார். சிலவற்றை, மலைக் குகையில், வைத் தார். சில விடங்களில் பூமியிலும், பல புதைத்து வைத் திருக்கின்றார். அவற்றுள், சிலவற்றை ஆங்கிலேயர் பூமியை வெட்டி யெடுத்திருக்கின்றார்கள். இது நடந்து சுமார் 70 வருஷ மாயிற்று.

இவர், கிரகஸ்தாசிரமத்திலும், அத்வைதத்தில் நிஷ்டை யுள்ளவர். விவேக வைராக்யாதி சகல சற்குணங் களாலும் நிறைந்தவர். இப் படிப்பட்ட சற் புருஷர் பூத. பவிஷ்யத் வர்த்த மாந காலத்திலும் கிடைத்த லரிது, இவ் வாறு, ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமி யானவர், கிரகஸ்தாசிரமத் தில், காலக்ஷேபம் செய்திருக்கின்றனர். பின், ஒரு சமயத் தில் காயத்திரி தேவியை அபரோக்ஷ மாக்க இச்சை யுண்டா யிற்று, அதன் பொருட்டுச் சகல தேசத்துப் பிராஹ்மணர் களையும் அழைப்பித்துக் காயத்திரியின் புரச்சரணம் செய் தார். கடைசி அநுஷ்டாந வடிவ பல மாகிய காயத்திரி அப ரோக்ஷ மாக வில்லை. அப் போது காயத்திரி ஜபத்தின் பெருமையினலோ, அல்லது, பூர்வ புண்யக் கூட்டத்தின் பரிபாகத்தினலோ, அவருக்குத் தீவிர வைராக்கிய முண்டா யிற்று. "எந்தத் திநத்தில் வைராக்கிய முண்டாகின்றதோ, அந்தத் திநத்திலேயே சந்நியாசத்தைக் கொள்ள வேண்டும்" என்றல், முதலிய சுருதி வாக்கியங்களை யநுசரித்து, அப் பொழுதே வித்வத் சந்நியாசம் செய்து கொண்டனர். பின், காயத்திரி வந்து வரங் கொடுக்கத் தொடங்கினள். அப் போது வரத்தை ஏற்றுக் கொள்ளவில்லை யாயினும், அமோக தரிசந முடைய தேவி யானவள், வலிய வரங் கொடுக்கத் தொடங்கி மிகப் பின் தொடர்ந்தாள். அப் போது அவர், "என் இச்சைப்படி இக் கர்நாடக தேச முழுவதிலும் சகல ஜநங்களின் வறுமையும் தொலையு மாறு பொன் நாணயம் வருஷிக்க வேண்டும்" என்று வரங் கேட்டனர். அதற்கு, "அப்படியே ஆகுக" வென்று கூறித் தேவி மறைந்தாள். பின், அத் தேசத் தரசனை, ஜநங்கள், அந் நாணயத்தினை யடையும் விஷய மாகக் கேட்ட போது, அரசன், "ஜநங்களினது வீட்டின் பேரி

லும், ஒன்றே கால் முழ பரியந்தம் வீட்டைச் சுற்றிலும், விழும் நாணயம் அந்தந்த ஜநங்களைச் சேர்ந்தது. மிஞ்சிய வழி முதலிய பூமியில் விழும் நாணயம் என்னைச் சேர்ந்தது'' என்று சொன்னான். அப்போது, அவரது ஆணையால் ஒன்றே கால் சாம பரியந்தம் நாணய மழை பெய்தது. அந்த நாணயத்தினை ஜநங்கள் வராகன் என்கிறார்கள். பின், அத் தேசத் தரசன், அதனைப் போல, மற்றும் நாணயங்களைச் செய்வித்து, அத் தேசத்தில், வியவகாரம் நடத்தினான் என்னும் வார்த்தை உலகத்திற் பிரசித்தம்.

## பிந்திய ஆசிரம விருத்தாந்தம்.

பிந்திய ஆசிரமத்தில், ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள் யாஜ்ஞவல்கியரைப் போல, வெகு உபரதி யுண்டாய்ப் பிரஹ்ம விசாரத்திலேயே தற்பரா யிருந்தார். ஒரு முறை சுவாமிகள்,வெளிப் பூமிக்குப் போயிருந்தனர். அப்போது, ஓர் துலுக்க அரசனது பொற் செங்கல், காட்டில் விழுந்து கிடந்தது. அங்கு, அதனோடு மற்றோர் கல்லினைச் சேர்த்து, அதன் பேரி லுட்கார்ந்து,மல விசர்சநம் செய்து போயினர். அப்போது, அவ் வரசன், இவ் வாறு சோதித்து, வெகு சந்தோஷ மடைந்து,இவருக்குக் கிராமாதிகளைக் கொடுக்க, அதனை அங்கீகரிக்க வில்லை. இவ் வாறிருந்தது, இவரது விரக்தி யென்னும் வார்த்தை உலகத்தில் கேட்கப்படுகின்றது.

காசியில், ஓர் வகை முயற்சியினால், ஸ்ரீ வேத வியாசரைச் சந்தித்துத், தான் செய்த வேத பாஷ்யத்தைப் பரிசோதிக்கு மாறு காட்ட, அதில் ஓரிடத்தும் தோஷ மின்மையைக் கண்டு வியாசாசாரியர்,இவருக்கு வித்தியாரண்யர் எனப் பெயர் கொடுத்தார் என்று கேட்கப்படுகின்றது.

பிந்திய அவஸ்தையில், யாத்திரைக்குச் சக்தியில்லாதிருந்தமையால், தமது குருவின் ஆணையால், ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளால் ஸ்தாபிக்கப்பட்ட சிருங்க கிரி மடாலயத்தில், ஆதிபத்தியத்தை யடைந்து, சங்கராசார்ய பதவியால், பிரசித்த ராய், அநேக மதங்களின் கண்டநத்தோடு, தனது சுருதி சம்மத மான அத்வைத மதத்தை உயர்த்தினர்.

தம்மாற் செய்யப்பட்ட, சர்வ தரிசந சங்கிரகத்தின் ஆதியில், "தமது உசித மான அர்த்தத்தோடு கூடிய ஆசரிதத்தினுல் அர்த்த முடையவர்க ளாக எல்லோரையும் எவர் செய்திருக்கின்றனரோ, அப்படிப்பட்ட ஸ்ரீ சாரங்க பாணி தநயரும், சகலாகம முணர்ந்தவரு மான சர்வஜ்ஞ விஷ்ணு குருவை, யான் நிரந்தரம் ஆசிரயிப்பே னுக," என்று மங்கலஞ் செய்திருத்தலால், சர்வஜ்ஞ விஷ்ணு வென்னும் பண்டிதர், இவருக்குக் குருவா யிருந்திருக்கின்றனர். ஆனுல், அவர் வித்தியா குருவா யிருந்திருக்கலா மென்று தெரிகிறது. பஞ்ச தசியின் ஆரம்பத்தில், "ஸ்ரீ சங்கராநந்த குருபதாம்பு ஜந்மங்களுக்கு நமஸ்கார" மென்று மங்கலஞ் செய்திருத்தலால், ஸ்ரீ சங்கராநந்த சுவாமியும், இவருக்குக் குருவா யிருக்கின்றனர். ஆனுல், அவர், பிரஹ்ம தத்வோபதேச குருவா யிருக்கலா மென்று காணப்படுகின்றது. சங்கர விஜயம், ஜீவந் முக்தி விவேகம் முதலிய கிரந்தங்களிலும், ஸ்ரீ வித்தியாதீர்த்த குருவின் மங்கலஞ் செய்திருக்கின்றனர். அதனுல், ஸ்ரீ வித்தியா தீர்த்தரும் இவருக்குக் குருவா யிருக்கின்றனர். ஆனுல், பால்யாவஸ்தையில், மந்திர தீக்ஷைக்கும், உத்தராவஸ்தையில், சந்நியாச தீக்ஷைக்கும் குருவா யிருந்திருக்கலா மென்பது தர்க்கத்தினு லறியப்படுகின்றது. இவரும் இவருக்கு முன்

பட்டத் திருந்த, ஸ்ரீ பாரதி கிருஷ்ண தீர்த்தரும், இப் பரம்பரையின் 10-வது பட்டத் திருந்த வித்தியா தீர்த்தர், அல்லது, வித்தியா சங்கரரது மாணுக்க ரென்று, சிலர் எழுதியிருக்கின்றனர். பின் வரும் குருபரம்பரையிலும், வேலாயுத முதலியார் செய்த, சங்கர விஜய முகப்பி லுள்ள குரு பரம்பரையிலும், வித்தியா தீர்த்தருக்குப் பின் பாரதி கிருஷ்ண தீர்த்தர், அவருக்குப் பின், வித்தியாரண்யர் என்று தெளி வாய்க் காணப்படுகின்றது.

குரு பரம்பரை

ஸ்ரீ குருப்யோ நம:

## ஸ்ரீ ஜகத்குரு பரம்பரா பிராரம்ப:

1 மகாதேவோ மஹாவிஷ்ணுஸ் திரிதியக் சதுராநந:
வசிஷ்டசக்தி யோகீந்திர, பராசர மகாமுநி,

2 வியாசஸ்சுகோ கௌடபாதோ கோவிந்த பகவாந்முநி
குரு: ஸ்ரீ சங்கராசார்யஷ் ஷண்மத ஸ்தாபநப் பிரபு:

3 சுரேச்வராசார்ய யோகீ நித்ய போத கநாபித:
ததோ ஞாநகநாச்சார்யோ க்ஞாநோத்தம மகாமுநி:

4 ஞாந கிர்யாசார்ய வர்யஸ்ததா சிஹ்ம கிரீச்வர:
ததச்சேஸ்வர தீர்த்தாக்யோ ந்ருசிஹ்மமா காபித தீர்த் [தக:

5 வித்யா சங்கர தீர்த்தாக்யோ லம்பிகா யோக தத்பர:
பாரதீ கிருஷ்ண தீர்த்தாக்யோ வித்யாரண்ய மகாமுநி:

6 வித்யா நகர நிர்மாதா வேதபாஷ்யாதிகிருத் குரு:
ஸ்ரீ சந்திரசேகராக்ய பாரதீச தத: பரம்

7 நிருசிஹ்ம பாரதீவர்யோ ந்ருசிம்மகோபாசகஸ் தத:
பக்த சங்கர நாமாக்யா புருஷோத்தம பாரதீ

8 ஸ்ரீ சந்திர சேகராபிக்ய பாரதீததந்தரதி
நிருசிஹ்ம பாரதீசைவ புருஷோத்தம பாரதீ

9 பாரதீ ராமசந்த்ராக்யோ ந்ருசிம்ஹாக்ய பாரதீ
நருசிஹ்ம பாரதீ பூயோ ந்ருசிஹ்மோபி நவஸ்தத:

10 சச்சிதாநந்த யோகீந்த்ர: ஸ்தம்பே ஹேரம்பதர்சக:
ஸ்ரீந்ரு சிம்ஹாக்யயோகீந்திர; சச்சிதாநந்த பாரதீ

11 ததச்சாபிநவாக்ய சச்சிதாநந்த பாரதீ
ததோபிநவ பூர்வ ஸ்ரீந்ருசிம்ஹாபித பாரதீ

12 சச்சிதர்நந்த யோகீச: தபச்சர்யா பராயண:
புநச்சாபிநவாக்ய சச்சிதாநந்த பாரதீ

13 ஸ்ரீ சிருங்கே புராதீச: ஸ்ரீ வித்யா மந்தர போதக:
ஸ்ரீ மதாசார்ய சதிர்ச: ஸ்ரீ நிருசிஹ்மாக்ய யதீஸ்வர:

14 பாரதீ நாம வித்யோத: தபச்சீலோ ஜகத் குரு:
ராஜாதிராஜ சம்பூஜ்யோ ஜகத் கியாதோ விராஜதே.

15 ஸ்ரீ சாமுண்டாக்ர பாபூர்ண ஸ்ரீ கிருஷ்ணேந்திரேண கீர்திதா
ஜீயாத் சதா ஸ்ரீ சிருங்கேரி ஜகத்ருரு பரம்பரா
இதி ஜகத் குரு பரம்பரா

(1) சதாசிவம், (2) நாராயணர் (விஷ்ணு), (3) பிரஹ்மா, (4) வசிஷ்ட மகர்ஷி, (5) சக்தி மகர்ஷி, (6) பராச மகர்ஷி, (7) வேத வியாசர், (8) ஸ்ரீ சுகாச்சாரியர், (9) கௌடபாதாச்சாரியர், (10) கோவிந்த பகவத் பாதாச்சாரியர்.

(1) ஸ்ரீ சங்கராச்சாரியர், (2) சுரேசுவராசாரியர், (3) நித்ய போத கந ஆசாரியர், (4)ஞாந கந ஆசாரியர்: (5) ஞாந உத்தம ஆசாரியர், (6)ஞாந கிரி ஆசாரியர், (7) சிஹ்ம கிரி ஆசாரியர், (8) ஈசுவர தீர்த்தர், (9) நிருசிஹ்ம தீர்த்தர், (10) வித்யா சங்கர தீர்த்தர், (11) பாரதீ கிருஷ்ண தீர்த்தர், (12) வித்தியாரண்யர், (13) சந்திர சேகர பாரதி, 14. நிருசிஹ்ம பாரதீ,(15) சந்திர சேகர பாரதீ ,(16) புருஷோத்தம பாரதி, (17) சங்கராநந்த பாரதி, (18) சந்திர சேகர பாரதீ, (19) நிருசிஹ்ம பாரதி. (20) புருஷோத்தம பாரதி, (21) ராம சந்திர பாரதீ, (22) நிருசிஹ்ம பாரதீ, (23) நிருசிஹ்ம பாரதீ, (24) அபிநவ நிருசிஹ்ம பாரதி, (25) சச்சிதாநந்த பாரதி, (26) நிருசிஹ்ம பாரதீ, (27) சச்சிதாநந்த பாரதி, (28) அபி நவ சச்சிதாநந்த பாரதி, (29) அபிநவ நிருசிஹ்ம பாரதி, (30)சச்சிதாநந்த பாரதி, (31) அபி நவ சச்சிதா நந்த பாரதி, (32) நிருசிஹ்ம பாரதி, (33) சச்சிதாநந்த சிவ அபி நவ நிருசிஹ்ம பாரதி, (34) சந்திர சேகர பாரதீ, (35) அபி நவ வித்தியா தீர்த்த பாரதி, என்பவர்கள் ஆவார்கள்,

இவ் விதத்தால்,ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின் 12வது பதவியில்; ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிக ளிருந்திருக்கின்றனர். இதனுலும், இப் போது, ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகளுக்கு 500 வருஷங்களுக்கு மே லாயின என்று நிச்சயிக்கப்படுகின்றது. ஸ்ரீ பாரதி தீர்த்தர், வித்யாரண்யருக்கு நேரே பரம்பரைக் குருவா யிருத்தலால், அவர், செய்த பிரஹ்மாநந்த மென்னும் நூலையும், அவராலேயே செய்யப்பட்ட தான விஷயாநந்தம் 39-வது சுலோகத்தின் "உபயம் திருப்தி தீபேஹி ஸம்யகஸ்மாபிரீரிதம்" இரண்டும் திருப்தி

தீபத்தில் நம்மால் செவ்வை யாகச் சொல்லப்பட்டிருக்கின் றது.'' என்னும் வாக்கியத்தாற் றுணியப்படும். திருப்தி தீப முதலிய 4 பிரகரணங்களையும் சேர்த்து, ஸ்ரீ பஞ்ச தசி யென் னும் ஒரு நூ லாக வித்தியாரண்யர் செய்திருக்கலா மென்று ஊகிக்கப்படுகின்றது. ஜீவந் முக்தி விவேகத்தில், "துக்க நாச சுகாவிர்ப்பாவ வடிவ நான் காவது, ஐந் தாவது, பிரயோஜநங்கள் பிரஹ்மாநந்தத்தி லுள்ள, நான் காவது அத்தியாயத்தினுல் நிருபிக்கப்பட்டிருக்கின்றன. அவ் விரண்டும் இங்குச் சுருக்கிச் சொல்லப்படுகின்றன'' என்று வித்தியாரண்யரே, தமது முகத்தால், கூறியிருத்தலால், அவ ருக்குப் பிந்திய காலத்தில், ஆநந்த பஞ்சகம் செய்யப்பட் டிருக்கலா மென்பது கூடாத தாம்:

இவ் வாசிரியர், இவ் வாறு, சிருங்க கிரியில், சிறிது காலம் இருந்து, பின் வயதில், ஸ்ரீ பஞ்ச தசி முதலியவற்றி னைச் செய்து, தாம் பிரஹ்ம சமரச பாவத்தினை யடைந் தனர், காயத்திரி யானவள், தனது சாக்ஷாத்கார சமயத்தில், "உத்தராவஸ்தையில் நீ ஓர் நூலைச் செய்வாய். அதை எவன் செவ்வையாய்ப் படிப்பானே, அவனுக்குச் சகல நூல்களையும் படித்தலிலும், கேட்டலிலும், சாமர்த்திய முண்டாகுக'' என்று வரம் கொடுத்தாள் என்று கேள்விப் படுகின்ருேம். அஃது, இதுவே யெனப்படுதலின், இது வரப் பிரசாத கிரந்த மாம். ஆதலால், சதுர் வேத பாஷ்ய கர்த்ருத்வ முதலிய சர்வக்ஞத்வ விசிஷ்ட மகா னுகிய, வித்தியாரண்யரும், பாரதி தீர்த்தரும் சேர்ந்து செய்ததும், வரம் பெற்றது மான. இப் பஞ்ச தசிக் கிரந்தம், எல்லா நூல் களிலும் மே லான தாம. இதனைப் படித்து, முமுக்ஷுக்கள் வேதாந்தப் பிரகிரியையில், சமர்த்தர்க ளாய்ப், பிரஹ்மாத்ம ஏகத்வத்தை அபரோக்ஷ மாக்கி, ஜீவந் முக்தி, விதேக முக்திகளுக்குப் டங் குடையவர்க ளாகுக.

ஜீவந் முக்தி விவேகம், சங்கர திக் விஜயம், மாதவ நிதானம், ஜைமிநீய அதிகரண மாலை, பஞ்ச தசி, நான்கு வேத பாஷ்யம், ஸ்ரீ பாரதி தீர்த்தர், வியாசாதிகரண மாலை முதலியவற்றைக் செய்திருப்ப தாகத் தெரிய வருகிறது. ஆனால், அவரது சரித்திரம் விசத மாகத் தெரிய வில்லை யாகலின், இங்கு எழுதப்பட வில்லை.

4. ஸ்ரீ வித்தியாரண்ய ஸ்வாமிகளின் சரித்திரம் முடிந்தது.

## 5. ஸ்ரீ சதா சிவப் பிரஹ்மேந்திரர் சரித்திரம்.

உருவமார் யானை முகன்தனை உலகோர்
உணருருச் சண்முகன் றன்னைத்,
திருவளர் ஈசன் நற்றிரு வடியை
திவ்விய அம்பிகை அடியைக்,
கருவினில் வராம லிருக்குமத் தொய்தக்
கரைதனில் வாழுநற் பதியாம்,
நெரூரி னில்வாழ் சதாசிவப் பிரஹ்ம
நெடுங்கழல் நினைந்துவாழ்த் திருவாம்.

சதாசிவப் பிரஹ்ம மென்று பிரசித்தி பெற்ற சதா சிவேந்திர சரஸ்வதி சுவாமிகள், ஓர் அரிய ஜீவந் முக்தர், தென் னிந்தியாவில், இராஜ யோக பரம்பரையிற், கடைசி யாகத் தோன்றியவர். கரூர்ப் பட்டணத் தருகில், ஏறக் குறைய 150 வருடங்கட்கு முன்னர், வாசஞ் செய்தவர். அத்தியயந காலத்திலேயே, மிக நுண்ணிய அறிவுடையவரா யிருந்தவர், காவேரி நதி தீரத் துள்ள, திரு விசை நல்லூ

ரென்னுங் கிராமத்தில், கல்வி பயின்றவர். அப்போது, அக் கிராமத்தில் இராம பத்திர தீக்ஷதரும், ''அய்யாவாள்'' என்று பிரசித்தி பெற்ற,ஸ்ரீவேங்கடேசரும், மகா பாஷ்யம் கோபால கிருஷ்ண சாஸ்திரியாரும், வித்தியார்த்திகளா யிருந்தனர். இயற்கையிலேயே நிரம்ப அறி வாற்றலமைந் துள்ள இவர்களினும், சதா சிவப் பிரஹ்மேந்திரர் மிகு சூட்சும அறி வுடையவராக விளங்கி வந்தனர். அவர் தமது வித்தியா குருவுடன் பல விஷயங்களைக் குறித்து வாதஞ் செய்பவரா யிருந்தனர். அவ் வமயங்களில் அவர் தமது குருவினும் மேம்பட்ட யுக்தி யுடையவ ராக விளங் கினர். அவரது வித்தியாப்பியாச முடியுங் காலத்தில், அவர் பத்தினி பருவ மடைந்த தாகக் கேள்விப்பட்ட அவ ரது தாயார், அன்று விசேஷ போஜநம் சமைப்ப தாயினர்.

சதாசிவப் பிரஹ்மம் வழக்கம் போல் வீட்டிற்கு வந்த காலத்தில், போஜந காலம் மேற் சொன்ன காரணத் தால் தாழ்த்தது. தாழ்த்தது கொண்டு, அவர் அடியில் வரு மாறு யோசிக்க லாயினர்:-

சம்சார முளை கிளம்புவதற்கு முன்னரே போஜந காலந் தாழ்த்தது, அது முளைத்தா லுண்டாந் துன்பத் திற்கோ அளவு கிடையாத தாகும்,என் றிவ் வாறு திர்க்கா லோசனை செய்து, சம்சார துக்கம் மிகப் பொல்லாத தென்று அதை விடுத் துடனே ஞாந குருவை யடைய பிரயாணப்பட்டனர். அன்று முதற் கொண்டு உலகத்திற் சிறிது மின்பமின் றென்று அதனை வெறுத்து உலகிற் றுன்பா நுபவிகளா யுள்ள ஜீவர்களுக் கிரக்கங் கொள்வா ராயினர். ஜாதி, மத, வித்தியாச மின்றி, ஜீவ கோடிகளைச், சம பாவனை யாகப் பாவிப்பதும், யாவர், யாது கொடுப்

பினும், அதனை வாங்கி யுண்பதுமா யிருந்தனர். ஒருவரும் அன்னங் கொடாத காலத்தில், வீதியி லெறிந்து கிடக்கும் எச்சி இலைகளி லுள்ளவற்றை யுண்பர். இவ் வா றொழுகு மிவரைக் கண்ட ஜனங்கள் இவ ருடைய அதிதீவர பக்குவத்தை யறியாது, இவரைப் பயித்தியம் பிடித்தவ ரென்று தீர்மானித் திருந்தார்கள். இவர், அதிவிரை வாகப் பரம சிவேந்திர சரஸ்வதி யென்னுங் குருவை யடுத்து, அவரிடத்து யோகாப்யியாசம் பயிலுவ தாயினர். விரை வாக வித்தையிலும். யோகத்திலும், தேர்ச்சி யடைந்தனர். இக் காலத்திற்றான் அவர் கிரந்தங்களும், கீர்த்தனங்களும்,இயற்றி யிருத்தல் வேண்டும். இக் கிரந்தங்களும், கீர்த்தனங்களும், அவருடைய கொள்கை யின்ன தென்பதை நன்கு விளக்கும். ஆத்மாநுபவத்தை யடைந்த யோகியின் கீர்த்தியை விளக்கிக் காட்டும் 62 சுலோகங்க ளடங்கிய ஆத்ம வித்தியா விலாச மென்னுங் கிரந்தமும், அவற்று ளொன் றும். இவர் தமது குருவினிடத்து வருபவரை யெல்லாம் பற் பல கேள்விகள் கேட்டு அவமானப்படுத்திக் கொண்டு வருவர், அவ் வாறு வருங்கால், ஒரு கால், குருவானவ ரிவரை, அதற்காக வெகுண்டு, எப்போது வாய் மூடுமோ வென்று கூறியவளவில், அவர் தமது விவேக மின்மையை யுற்று நோக்கி, அன்று முதல் மௌன விரதம் மேற்கொள்பவராய்த் தமது குருவை வணங்கித் தமது குற்றத்தை மன்னிக்கும்படி வேண்டி, அவரது உத்திரவு பெற்றுப் பரதேசி யாகித் தமது ஜனனப் பிரதேசத்தை விட்டு அமராவதியின் காவேரி நதி தீரத்திற் சஞ்சரிப்பா ராயினர். ஆங்கு ஆத்மாநுபவமீக்குறச் சமாதி புரிந்து வருவதும், விஷயமொன்று மின்றியே உன்மத்தரைப் போற் றிரிபவருமா யிருந்தனர். ஆண் டுள்ள காடுகளிற் சென்று ஜனங்கட்குப்

புலப்படாமல் பல நாள் வெளி வராமல் சமாதி கூடியிருப் பர்; பல கால் நதியின் மணல் மேடுகளில், அரிதுயில் கொண்டிருப்பர். ஒரு கா லவ ரவ்வா றிருக்கும் போது காவேரி நதியிற் திடீ ரென்று பெரு வெள்ளம் வந்து, அவரை அடித்துக் கொண்டு போய் மணலிற் புதைத்து விட்டது. இதைக் கரையின் மீதிருந்த ஜநங்கள் கண்ணுற் றுத் தமது பூஜ்ய ரான யோகீசுவரருக்கு அபாயம் வந்து விட்ட தென்று கிலேசப்பட்டு அவரை மீட்கக் கூடாமல் வீட்டிற்குப் போயினர். மூன்று மாத காலங் கழித்த பின் னர், மழைக் கால முடிவாக, நதியில் ஜலம் வடிய, இரா ஜாங்க வேலை யாட்கள் மணலை வாரத் தொடங்கினர். அவர்களுள் ஒருவன் தன் மண் வெட்டியை மணலிற் பாய்ச்சும் போது அது தடைப்பட்டது; அவ னதனைப் பிடுங்கிப் பார்க்கும் போது அதில் இரத்தம் பட்டிருப் பதைக் கண்டு, யாவரும் பயமும், அதிசயமுங் கொண்டு, அவ் விடத்திற் சுற்றிலும் பெரும் பள்ளந் தோண்டினர்; தோண்டிய போது ஆண்டு சதாசிவப் பிரஹ்மேந்திரர் சமாதியி லிருக்கக் கண்டு, பய பத்தியுடன் ஆச்சரியமுங் கொண்டு, அவரைச் சமாதியினின்றும் பகிர் முகப் படுத்தி னர். அவர் துயிலினின்றும் விழித்தவர் போல எழுந்து, தமக்கு யா தொன்றும் நேராதது போலத் தம் வழியே சென்றனர்.

பின் னொரு கால், கரூரை யடுத் துள்ள ஒரு கிராமத் தில், ஒரு குடியானவன் தன் வயலி லுள்ள நெல்லை யறுத்து நேர மாய் விட்டமையின், அவ் விடத்திலேயே அம்பாரம் போட்டு, இரவிற் காவல் வைத்து விட்டுப் போயினன். அன் றிராத்திரி சதாசிவப் பிரஹ்மேந்திரர் அவ் வழியே

வர, இரவு மிகவுங் கறுக்க லாக இருந்தமையின், நெல் லம்பாரம் தடுத்ததை பற்றி யிடறி விழுந்து விட்டனர். இதனைக் கண் ணுற்ற காவற்காரர், நெல்லைத் திருட வந்த திருட னென் றிவரைக் கருதித் தடி கொண் டடிக்கக் கைகளை நோக்கவும், நோக்கிய கைக ளிறங்காமல் நின்ற இடத்திலேயே விடியற் கால பரியந்தம் நின்று கொண் டிருந்தனர். விடிந்த பிறகு யஜமானன் வந்தபோது அவ ரிடத்து வேலையாட்கள் நடந்த விருத்தாந்தத்தைச் சொல் லிய போது, சதாசிவப் பிரஹ்மம் அவ் விடத்தைவிட் டகன் றனர்; அகன்ற போது வேலையாட்கள் தமது கைகள் கீழே யிறங்கத் துன்பத்தினின்றும் நீங்கி யுய்ந்தனர்.

மற் றொரு கால், இராஜாங்க உத்தியோகஸ்தர்க ளவ்வூர் வந் திறங்கினார்கள். அப் போது தலையாரிகள் சமையலுக் காக அவர்களுக்கு விறகு கொண்டுவரக் காட் டிற்குப் போய், விறகு வெட்டிச் சுமைக ளாக்கித் தங்கள் தலைமேற் றூக்கிக் கொண்டு, ஒரு சுமை யெடுப்பதற்கா ளில்லாமையை நோக்குஞ் சமயத்தில், சதாசிவப் பிரஹ் மம் தற் செயலா யவ் வழி போவா ராயினர். அவரைத் தலையாரிக ளிழுத்துக் கொண்டு வந்து, விறகுச் சுமையை அவர் தலைமீது வைத்து, அவரைத் தம்மோடு கூட யிழுத் துப் போயினர். தலையாரிகள் தங்கள் சுமைகளைக் குறித்த விடத்திற் போட்டனர். கடைசியில் சதாசிவப் பிரஹ் மமும் தமது சுமையை யவற்றின்மேல் போட்டனர்; அங்ஙனம் செய்த உடன், அங் கிருந்தவ ரியாவரும் அதி சயிக்கு மாறு, அச் சுமைகள் தீப்பற்றி யெறிந் தொழிந்தன. இத் தகைய அற்புத மூர்த்தியாய் விளங்கும் இம் மகா சித்த புருஷரைச் சாதாரண ஜநங்கள் பயித்தியக்கார ரென்று மதித்திருந்தனர், சிறு பிள்ளைகள், அவரைப் பரிகாசஞ்

செய்வதும், அவரைச் சுற்றி நின்று ஆடுவதும், பாடுவதுமா யிருந்தனர். அவரும், தமக்குக் கிடைப்பனவற்றை எவர்கட்கும் பகுத்துக் கொடுப்பர். இவ் வாறிருக்கும் போ தொரு நாள், அச் சிறு பிள்ளைகள், மதுரையில், நடக்கும் ரிஷப வாகந மஹோற்சவத்தின் மகிமையைத் தமது தந்தைமார் சொல்லக் கேட்டு, அத் திருவிழாவைக் காண ஆசை கொண்டு, அதி விநயத்துடன் சதாசிவப் பிரஹ்மத்தை மதுரைக் கழைத்துக் கொண்டு போய்த் தங்கட்கு அவ் வுற்சவத்தைத் தரிசிப்பிக்கு மாறு செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். இக் காரியம் அசாத்திய மான தென் றவர்கட்குத் தெரிந்திருந்தும், பரிகாசமாய்க் கேட்டனர். அவர் அச் சிறுவர்களைத் தமது தலையிலும், தோளிலும், முதுகிலு மேற்றிக் கொண்டு, கணப்போது கண்களை மூடிக் கொள்ளும்படி சொல்லினர். மறுகணத்தில், அச் சிறுவர்கள் கண்களைத் திறந்த போது, அவர்கள் மதுரையி லிருந்து ரிஷப வாகந மகோற்சவத்தைத் தரிசித்துக்கொண்டிருப்பதாகக் கண்டனர். அச் சிறு பிள்ளைகள் விரும்புஞ் சிற்றுண்டி முதலியனவற்றை அவர்களுக்கு வேண்டுமான வரையில் கொடுத்து அவர்களைக் களிக்கச் செய்து, பொழுது விடியுமுன் அவர்களை அவர் தம் இருப்பிடங் கொண்டு வந்து சேர்த்தனர். விடிந்தவுடன் சிறுவர்கள் தமது தந்தைமார்களிடஞ் சென்று நடந்த விர்த்தாந்தங்களைச் சொல்லிச் சிற் றுண்டிகளையுங் காண்பித்தனர்.

இம் மகா நுபாவர், மகா சிவராத்திரி, கோகுலாஷ்டமி முதலிய புண்ணிய தினங்களில் ஒரே காலத்தில் பல க்ஷேத்திரங்களி லிருப்பதாகவுங் காணப்பட்டனர். அக் காலங்

களில், அவர் தம திருப்பீடத்தி லிருக்கக், காசி, இராமேசுவர முதலிய க்ஷேத்திரங்களி லிருந்து வந்தவர்கள் அத் திவ்ய தினங்களி லவர் அவ் விடத்திலிருந்த தாகவும், கூறுவாராயினர்.

படிப்பின் வாசனை சிறிது மின்றிய, ஒரு பிரஹ்மசாரி பிரஹ்மேந்திர ருடைய கிருபையைப் பெருமாறு, அவர் செல்லு மிடங்களி லெல்லாம் அவரைப் பின் தொடர்ந்து செல்லுவா ராயினர். கடைசியாக அப் பிரஹ்மசாரி மீது இரக்கங் கொண்டு, சைகையினால் அவர் வரவில் திருப்தி காட்டி வந்தனர். ஒரு நாள் பிரஹ்மேந்திரரை நோக்கித் தமக்கு ஸ்ரீரங்கத்தி லுள்ள ரங்கநாதரைத் தரிசிப்பிக்கு மாறு செய்ய வேண்டு மென்று வேண்டிக் கொண்டனர். அங்ஙனமே பிரஹ்மசாரியைக் கண்ணை மூடிக் கொள்ளச் சொன்னார். அவர் கண் விழித்தவுடன், ரங்கநாதர் சந்நிதியி லிருந்து ரங்க நாதரைத் தரிசிப்பா ராயினர். சதாசிவப் பிரஹ்மம் அந்தக் க்ஷணமே, அவ் விடம் விட்டு மறைந்து விட்டனர், பிரஹ்மசாரி அவரை யெங்குந் தேடிக் காணாமல், மெல்ல மெல்ல தமூருக்கு வரவும், சதாசிவப் பிரஹ்மம் அங்குச் சமாதியி லிருக்கக் கண்டனர். சில காலத்திற்குப் பின்னர், சதாசிவப் பிரஹ்மேந்திரர், அவர் மீது கருணை கூர்ந்து, சில மந்திரங்க ளுபதேசித்தனர். அவற்றின், அநுஷ்டாந பலத்தினால், அப் பிரஹ்மசாரி சமஸ்த புராணங் களிலும் விற்பத்தி யுண்டாய் புத்திமான்கள் நிறைந்த சபையில் வியாக்கியானஞ் செய்வா ராயினர், அதற் காகக் கரூரில், அநேக இராஜாக்கள் பல வெகுமதிகளும், மானியங் களும் தந்தனர். அந் நிலங்களை யவருடைய சந்ததியாரிப்போதும் அநுபவித்து வருகின்றனர்.

பின் ஒரு காலத்தில், பிரஹ்மேந்திரர், யதேச்சை யாகப் போகுங் கால், மகமதிபத் தலைவ னொருவ னிறங்கி யிருந்த மார்க்க மாகப் போவா ராயினர் அவன் தன்னு டைய பத்தினிகள் சகிதம் தனது அறையி லிருக்கும் போது, இவர் நிர்வாணியாய் அவ் வழியிற் செல்லுவதைப் பார்த்து, மிகவுங் கோபங் கொண்டு, தனது கத்தியால் அவ ரது ஒரு கையை வெட்டிவிட்டனன். பிரஹ்மேந்திரர் இதைக் கவனியாமலே, தமது வழியே போனார். அதனைக் கண்ணுற்ற மகமதியத் தலைவன், ஆச்சரிய முற்று அவர் மகாநுபாவ ரென மதித்துத், தான் செய்த தீமைக் கஞ்சி அவர் பின் சென்றனன். அவர் நெடு நாளைக்குப் பின் னர்த் திரும்பிப் பார்ர்க்கவும், மகமதியத் தலைவன், தம் மைத் தொடர்ந்து வருவதைப் பார்த்து, அவனை நோக்கி, அவன் வருங் காரணத்தைக் கேட்டனர். அவன் தான் செய்த குற்றத்தை மன்னிக்கு மாறு அவரை மிகுதி யாகப் பிரார்த்தித்தனன். அவருக்கு நடந்த தீமை யின்ன தென்று தெரியாமையின், அவன் சொல்லிய அப் போது தான், அவருக்குக் கை போனது தெரிந்தது; தெரிந்தவுடன் தமது மற்றோர் கையால் முட மாகிய கையைத் தடவ, அது வளர்ந்து விட்டது, மகமதியத் தலைவன் அளவு கடந்த ஆச்சரிய மடைந்து, அவரது ஆசிர்வாதம் பெற்றுப் போயினன். இவ் விர்த்தாந்தம் சதாசிவேந்திர ஸ்துதியில் கூறப்பட்டிருக்கின்றது.

சதாசிவப் பிரம்மம் கோயில்களுக்குப் போவது முண்டு; மூர்த்தியை நோக்கி அர்ச்சநா மந்திரங்களை யுச் சரிப்பது முண்டு. அக் கால், ஒவ்வொரு மந்திரத்திற்கும்

ஒவ் வொரு புஷ்பம் மூர்த்தியின் சிரசின் மீது அவாந்தர மாய் விழுவ துண்டாம்.

சதாசிவப் பிரஹ்மேந்திரர், இயற்றிய அற்புதங்கள் பல வுள. அவற்றில், சில இங்குக் கூறப்பட்டன. இவற்றை நபபுவது அசாத்திய மாயினும், அவற்றை ஜநங்கள் மறந்து விடுவ தில்லை. அவை கர்ண பரம்பரை யாய் வந்து கொண்டிருக்கின்றன.

ஒரு சித்த புருஷருக்கு, இவ் வற்புதங்கள் மிகு சுலப மாம். சதாசிவப் பிரஹ்மேந்திரரோ, பரம சித்த மூர்த்தி: அவர் மநம் எப் போதும் ஆத்மாகார மாகவே யிருக்கும். அவர் உலக விஷயத்திற் சிறிதேனு மிச்சைசையில்லாதவர். அவர் தமது சரீரத்தில் மண்ணும், சாம்பலுமே பூசிக் கொண்டு, இவ் வுலகம் தாம் பூசிக் கொண்டிருக்கும் மண்ணினுஞ் சாம்பலினுந் துச்ச மான தென்னு மெண்ண முடையவர். அவர் அடைந்த சொரூப ஸ்திதியை நோக்கி அவரது குரு அவரைத் துதி செய்திருக்கின்றனர். அவர் கருத்து எப் போதும் பிரபஞ்சாதீத மாய் ஆநந்த மாகவே யிருக்கும். அவருக்கு உணவு முதலியவற்றைப், பற்றிச் சிறிதுங் கவலையே கிடையாது. அவர் உலகத்தி லிருந்த போதிலும், புளி கரு பழமு மோடும் போலப் புரை தீர்ந்த நெஞ் சுடையவரா யிருந்தனர்.

இவர் 1738-ம் வருஷத்தில், புதுக் கோட்டையைச் சார்ந்த திரு வரங் குளத்திற் கடுத்த காநகத்தில் திரிந்து கொண்டிருக்குங்கால், புதுக் கோட்டை யரச ரான விஜய ரகுநாத தொண்டைமான் சக்ரவர்த்தி இவரைக் கண்டனர். தொண்டைமான் சக்ரவத்தியும் அதிக விரக்தி யுள்ளவ

ராய்த் தமது காலத்தைப் பெரும்பான்மையும் அக் கான கத்தில், சமாதி புரிவ தாகக் கழித்து வந்தனர். இச் சக்ர வர்த்தி பிரஹ்மேந்திரரை எட்டு வருட காலம் விடாது தொடர்ந்து வந்தனர். அதைப் பிரஹ்மேந்திரர் நோக்கி, அவர் மீது பிரீதியுற்று, மணலில் சில உபதேச மொழிகளை யெழுதிக் காட்டித், திரிசிர புரத்தைச் சார்ந்த பிக்ஷாண்டார் கோவிலில் வசிக்கும் தமது சகபாடி யாகிய கோபால கிருஷ்ண சாஸ்திரி யவர்களிடம், மேல் நடக்க வேண்டிய விஷயங்களைத் தெரிந்து கொள்ளுமா றுஞ்ஞாபித்தனர். அவர் அங்ஙனமே, சாஸ்திரியாரைத் தமது சமஸ்தானத் திற்கு வர வழைத்து, அவருக்கும், அவருடன் வந்த பிராஹ் மணர்களுக்கும், மானியங்கள் விட்டனர். அக்கா லேற் பட்ட செப்புச் சாசந மின்னு மிருக்கின்றது தசரா பண்டிகையும், தக்ஷிணாமூர்த்தித் திரு விழாவும், சதாசிவப் பிரஹ்மேந்திரர் கட்டளைப்படி நடத்தப்பட்டன. சதா சிவப் பிரஹ்மேந்திரர் எழுதிக் காண்பித்த விடத்திலுள்ள மணலை, அரசர் கொண்டு போய்த் தேவ ஸ்தானத்தில் வைத் துப் பூஜித்து வருவா ராயினர். அஃ திப்போதும் பூஜிக்கப் பெற்று வருகின்றது. சதா சிவப் பிரஹமேந்திரர் புதுக் கோட்டைக்கு வந்த நாள் முதல், தேசம் செழிப் படைந்த துடன் தொண்டை மான் சக்ர வர்த்திகளும், கீர்த்தியும், பெருமையு மடைந்தனர். இக் கானகத்தில்,இவர் நெடுங் கால மிருக்க வில்லை, ஆனல், யதேச்சை யாகத் திரிந்து கொண் டிருந்தனர். அப்படித் திரியுங் காலத்தில், ஐரோப்பாவி லுள்ள துருக்கி தேசம் வரைக்குஞ் சென்றனர். பிறகு அவர் நெடுங் காலம் சமாதியி லிருந்தனர். அப்பா லொரு நாள், அவர் யான் மிதுந ரவி ஜேஷ்ட சுத்த தசமி யன்று பரிபூரண மடைவே னென்றும்; அன்று காசியி லிருந்து,

ஒரு பிராமணன் பாண லிங்க மொன்று கொண்டு வருவா னென்றும், நெரூரி லுள்ள பிராமணர்களிடத்துச் சொல் லினர். மேலும், அந்தப் பாண லிங்கத்தைத் தமது சமாதிப் பக்கத்தில் பிரதிஷ்டை செய்து, கோயி லொன்று கட்டும் படியும் ஆக்ஞா பித்தனர். குறிப்பித்த நாளில், காசியி லிருந்து ஒரு பிராஹ்மணன் பாண லிங்கத்தைக் கொண்டு வந்தனன்; அன்று சதாசிவப் பிரம்மேந்திரர் தமக்குத் தோண்டிவைத்த சமாதியில் தாமே யிறங்கிப் பரிபூரண மடைந்தனர்.

அவ் வூரி லுள்ளார், சமாதி கட்டி, அதன் பக்கத்தில் கோயிலையுங் கட்டிச் செய்ய வேண்டிய கிரியை யெல்லா வற்றையுஞ் செய்து முடித்தனர். இவர், அதே காலத்தில், மூன்றிடத்திற் சமாதி யாயினர் என்று சொல்லப்படுகின் றது; ஆனால், நெரூரி லுள்ள சமாதி தான் தென் னிந்தியா விற் பிரசித்தி பெற்று விளங்குகின்றது. அந்தச் சமாதிக் கும், கோயிலுக்கும், வேண்டிய செலவிற் காகத் தொண் டைமான் சக்கரவர்த்தி விஸ்தார மாக மானியம் விட்டிருக் கின்றனர் இப் போதும், சதாசிவப் பிரஹ்மேந்திரர் குரு பூஜை வருடந் தோறும் ராஜாங்கத்தாரால் நடத்தப்பட்டு வருகின்றது.

தொண்டை நன் நாடு சான்றோ ருடைத் தென்றபடி இவ் வரிய மகாத்மா தொண்டை நன் நாட்டில் வாசஞ் செய்து, தம் முடைய ஞான சீல மிகுதியால் விளங்கி யிருந் தனர். யாவரும் அவரை அப்போ தன்றி, இப் போதும் பூஜித்து வருகின்றனர். பூஜ்யராய் சிருங்க கிரியி லெழுந் தருளியிருந்த ஜகத் குரு சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிக ளவர்களும் சதாசிவப் பிரஹ்மேந்திர ரைப் பூஜித்திருக்கின்றனர்.

இப் பிரஹ்மேந்திரரை ஜகத் குருவே துதித்தா ரெனின், நாம் அவரது பெருமையை யெடுத்துச் சொல்லுத லமையுமோ?

சதாசிவப்பிரஹ்மேந்திரர் திரு வாய் மலர்ந்தருளிய கிரந்தங்கள்:—

1. பிரஹ்ம சூத்திர விருத்தி.
2. பன்னிரண்டு உபநிஷத்துக்களுக்குத் தீபிகைகள்
3, ஆத்ம வித்யா விலாசம்.
4. அத்வைத ரச மஞ்சரி.
5. வேதாந்த சித்தாந்த கல்பாவல்லி.
6. யோக சுதாகரம்,

ஸ்ரீ சதாசிவப் பிரஹ்மேந்திரர் சரித்திரச் சுருக்கம்.

முற்றிற்று.

6. கோவில் ஊர் முக்தி ராம லிங்க ஞான தேசிகர் சரிதம் முத லாவது.

கோவில் ஊர்

ஸ்ரீ ஆண்டவர் திரு வவதாரஞ் செய்தல்.

நாவலர் பேற்றும் சமிசிழல் அமரும்
நாயகன் நளிநநன் மலரை,
மாஎழில் ஆறு முகன்தனைக் கொற்ற
வாள்இறை திருநெல்லை அம்மை,
ஆவல்நல் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞாநம தளித்துக்,
கோவிலூ ரினில்வாழ் முக்திரா மேச
குருபரன் தாள்நிதம் பணிவாம்.

திருப் பெருந் துறைக்கு மேல்பால், கண்ட தேவிக்கு வடபால், திருப் புத் தூருக்குக் கீழ்பால், திரு மெய்யத்திற் குத் தென்பால், இன் ஞன்கு க்ஷேத்திரங்களுக்கும்,நாப்பண் மாதவ முடைய மதுப் பிரிய ரிஷியின் வேண்டுகோளின் படி, ஸ்ரீ சாலிவாடீசுவரி என்னும் அம்மையோடு ஸ்ரீ இராச கட்க பரமேசுவரர் எழுந்தருளியிருக்குஞ் சமிவந க்ஷேத்திர மென்னுங் கோவி லூருக்குக் கிழக்குத் திக்கி லுள்ள, காரைக் குடி என்னுந் திரு நகரத்தில், தந வைசிய குலத்தில், அவதரித்த, குமரன் செட்டியார், குமார ராகிய மெய்யப்ப செட்டியாரும், அவரது அருமை மனைவியா ராகிய வள்ளி யம்மையும், முற்பவங்களிற் செய்து வந்த நற் றவங்களாலும், தென் றிசையி லுள்ளோர் நெடு நா ளாகப் புரிந் துள்ள' புண்ணிய புஞ்ச பரிபாகத்தாலும், அவ் வள்ளி யம்மையின் றிரு வயிற்றில், பிரம விஷ்ணு முதலிய தேவர்களாற் காண்டற் கரிய சச்சிதாநந்த பே ரொளிப் பிழம் பாகிய சிவமே, தற் காருண்ணியத்தினலே, நீ ராலி யாய்த் தடித்தது போலவும், உலக ரக்ஷக ரான பகவான் தேவகி திரு வயிற் றுதித்தது போலவும், ஸ்ரீ சங்கரர் ஆரி யாம்பாள் திரு வயிற் றுதித்தது போலவும், ஸ்ரீ முக்தி ராம லிங்க தேசிக ரென்னுந் திரு நாமத்துடன் றிரு வவதாரஞ் செய்தருளினர். அக் காலத்தில், உலகத்தில் நன் னிமித்தம், நன் மழை, நல் லொழுக்கம், நன் னடை, நன் னினைவு, நற் கரும முதலிய பல வளங்களும் உண்டாயின. சிவா லயம், விஷ்ணுவாலயம், பிர்ம்மாலயம் முதலியனவும் சிறப்புற் றோங்கின.

இரண் டாவது.

## ஸ்ரீ ஆண்டவர் பால லீலை.

அப்படித் திரு வவதாரஞ் செய் துள்ள ஆண்டவர், பால்ய வயதிற் றுனே. சகல கலைகளையும் அப்பியாசஞ்

செய்து தேர்ச்சி யுற்று, கிரகத்திற்கு வந்து விவேக வைராக்கியாதி சாதநங்களாற் சிறந்து விளங்கிச், சில காலம் ஊருக்கு ஆக்கினேய திசையி லுள்ள, திரு வாசல் மடத்தில், தமது நண்ப ரான நல்லான் செட்டியுடன் ஞாந நூற் பயிற்சி செய்து, பிரபஞ்சம் உண்மை என்னும் மயக்கம் இன்மையின், அதில், அலக்ஷிய மாகக், கெம்பீர மாகிய அநேக வார்த்தைகளைக் கேட்பவ ரதிசயிக்கும்படி வசநித்துக் கொண்டு, குருவை யடைந்து, குரு சம்பிரதாயத்தை விளக்த மெண்ண முடையராய், அக் காலத்தை எதிர்பார்த்துச் சில நா ளிருந்தனர். அக் காலத்தில், ஒரு நாள், தமது திரு மேனி நிறைய விபூதியை உத்தூளித்துக் கொண்டு தமது உண்மை நிலையில் வழக்கப்படிக்கு அக நோக்குற் றிருக்கையில், அக் கருத்தை யறியாத அவரது மாதா பிதாக்கள்,ஏதோ குழந்தை,தேவதா சல்லியத்திஞல், திக்குப் பிரமை கொண்டது போல, வொன்றும் வசநியாது அடிக் கடி இவ் வாறு இருக்கின்றதே என்று மன வருத்த முற்றுத் தேவி கோட்டையில்,சுவாமியை அழைப்பித்துக் கேட்டுப் பரிகாரஞ் செய்யக் கருதி, ஆண்டவரை அழைத்துக் கொண்டு போய் வைத்திருந்த காலத்தில், அந்தச் சுவாமி யாடியின் சமீபத் திருந்த ஆண்டவரை அங்குள்ளவர்கள், சுவாமி யாடிக்குத் தாம்பூலம் மடித்துக் கொடுக்கும்படி சொன்ஞர்கள், அப் பொழுது, ஆண்டவர் சுவாமி யாடியைப் பரீக்ஷித்தற் கெண்ணிப் பாக்கை, வெட்டிக் கொடுத்து, வெற்றிலையிற் சுண்ணைக் கா யளவுள்ள மூன்று சுண்ண வுண்டைகளை வைத்து மடித்துக் கொடுக்க, உடனே சுவாமி யாடிக்கு, வா யழற்சி உண்டாக, அதஞல் வருத்த முற்று வெளியில் வந்து,வாய் நீரை

உமிழ்ந்து யாரப்பா இப் பாலகனைச் சுண்ணம் தடவி வெற்றிலை மடித்துக் கொடுக்கச் சொன்னவ ரென்று கேட்க, அப் பொழுது, ஆண்டவர் சுவாமி யாடியை நோக்கி, நம் போலிகட்குப் போலச் சுவாமிக்குக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொடுக்கலாமா வென்று, அதிக மாக வைத்துத் தந்தேன், தாங்களே சுவாமி யாடின தாக இருந்தாற் கொஞ்சங் கொஞ்ச மாக வைத்துத் தருவேன் என்று பரிகாசஞ் செய்ய, உடனே சுவாமி யாட்டமும் நின்றுவிட்டது. அதன் பின்னர், ஆண்டவரை மாதா பிதாக்க ளிருவரும் நகரத்திற்கு அழைத்துக் கொண்டு வந்து விட்டனர். மற்றொரு நாள், தமது நகரத்தில், சில வீடுகளோடு, தமது வீடும் நெருப்புப் பற்றி எரியும் பொழுது, தம் வீட்டி லுள்ளவர்கள்; அங் குள்ள பதார்த்தங்களையும், அன்னத்தையும், ஒரு விடத்தில் எடுத்துக் கொண்டு வந்து வைத்து, குழந்தைகளோடு ஆண்டவரையும், கூட வைத்துவிட்டு, மற்றைய பதார்த்தங்களை எடுத்தற் பொருட்டு மீண்டுங் கிரகத்திற்குப் போயினர். அப் பொழுது ஆண்டவர், பாத்திரங்களிலிருந்த அன்னத்தை அக் குழந்தைகளோடு தாமும் நிரம்ப உண்டு, சமீபத்தி லிருந்த குட்டிச் சுவற்றில், வஸ்திரத்தை மடித்துப் போட்டு, ஏறி உட்கார்ந்து, கையிற் கோ லேந்தி, சிவலைக் காளை ஊரை மேய்கின்றது, நீ செவ்வை யாக நட வென்று அதட்டி அடிக்க, அச் சமயத்திற் றமையனார் பத்தினி பார்த்துப், பாத்திரத் துள்ள அன்ன முழுமையும் குழந்தைகளோ டுண்டது மல்லாமல், குட்டிச் சுவற்றையும் குதிரை யாக நடத்தினால், நடக்குமோ வெனக் கேட்க, அதற் குத்தர மாக நீ மகிழ்ந னன்றி மக்கட் பெறுவையாயின், இக் குட்டிச் சுவருங் குதிரை யாக

நடக்கு மெனப் பரிகாசஞ் செய்தருளிக், கெம்பீர மாக விருந்தனர், இவ் வாறு, செகத்தில் அப்பிரமாண புத்தி யுடனே சின் னுட் கழித்தனர்-

மூன் ருவது.

## ஸ்ரீ ஆண்டவர் சிக்கலுக் கெழுந்தருளல்.

ஒரு நாட் டமது பிதா வானவர், வட திசையின் கண் ணுள்ள திரு நாகைக் கா ரோணத்திற்கு அடுத்த சிக்க லென் னுந் தலத்திற்கு வியாபார நிமித்தம் பிரயாணப்பட்ட பொழுது,யா னும் உடன் வருகின்றே னென் று ஆண்டவர் பிதா வைப் பார்த்துத் திரு வாய் மலரப், பிதாவும் அதற் குடன்பட்டு உனது கருத்தின்படியே வா வென் று அழைத்துக் கொண்டு போய்த் தமது வியாபாரத்தி லிருந் தனர், ஆண்டவரும் சிக்கலில் பிதாவோடு கூட எழுந் தருளி யிருக்குங் காலத்தில், அச் சிக்கலைச் சார்ந்த பொருள் வைத்த சேரியில்,பிரம்ம நிஷ்ட ராகிய உகந்த குரு சுவாமிக ளென் னுந் திரு நாம முடைய ஒரு மகான் இல் லறத் திருந் தனர்.

நான் காவது.

## ஸ்ரீ ஆண்டவர் குரு பரம்பரை.

சச்சிதாநந்த சொரூப மான ஸ்ரீ தெக்ஷிணு மூர்த்தி ஆதி ஜகத் குரு, அவர் மாணுக்கர், விண்டு, அவர் மாணுக்கர், பிரமன், அவர் மாணுக்கர், வசிட்டர், அவர் மாணுக்கர், சத்தி, அவர் மாணுக்கர், பராசரர், அவர் மாணுக்கர், வியாசர்: அவர் மாணுக்கர், சுகர், அவர் வழி வந்த மாணுக்கர், கௌட பாதர், அவர் மாணுக்கர், கோவிந்த யோகி, அவர் மாணுக்கர், சங்கராசாரியர், அவர் மாணுக்கர்,பத்ம பாதர்,

அத்தாமலகர், தோடகர், வார்த்திகர், ஆகிய நால்வர் அவர் வழி வந்த மாணுக்கர், வித்தியாரண்ணியர், அவர் வழி வந்த மாணுக்கர் சுப்பிரமணிப தேவன், அவர் மாணுக்கர், நயிந ஈசன், அவர் மாணுக்கர் அழகப்ப வாரியன், அவர் மாணுக்கர், வீர பத்திர குரு, அவர் மாணுக்கர், திரு நாகைக் காரோணம், வெற் றிலைக் கடை முத்தைய சுவாமிகள், அவர் மாணுக்கர், உகந்த குரு சுவாமிகள்.

ஐந் தாவது

## *ஸ்ரீ ஆண்டவர் குரு மூர்த்தி யாகிய உகந்த குரு சுவாமிகள் சரித்திரம்..*

இப் பரம்பரையி லுள்ள உகந்த குரு சுவாமிகள், திரு வள்ளுவ நாயனுர் போலவும், கபீர் தாசர் போலவும், பரதிருஷ்டிக்கு நெய்யுந் தொழி லுடையவர் போன் றிருந்து, அதனுல் வரும் ஆதாயத்தை மூன் று விபாக மாக்கி, மறு நாட் டொழிற்கு, நூல் வாங்குதற் பொருட்டு, ஒரு பாகமும், குடும்பச் செலவிற்கு ஒரு பாகமும், அடி யார்கட்கு அன்ன தாநத்தின் பொருட்டு ஒரு பாகமு மாக விநியோகித்து, இவ் விதம் நா டோறும் நடத்திக் கொண்டு, முமுட்சுத் தன்மை யுடைய ராய்த் தம்மை வந்து சர ணடையாநிற்பவரைச் சோதித்து, ஞானோபதேஞ் செய்து வந்தனர். அக் காலத்தில், இராய வேலூர், கந்தப்ப சுவாமிக ளென்னும் ஒரு மகா முனவர், உகந்த குரு சுவாமிகள், தம்மை வந்து சர ணடைந்த முமுட்சுகளுக்கு ஞானா நுக்கிரகஞ் செய்தலைக் கேள்வியுற்றுச், சில சாதுக்க ளோடு பொருள் வைத்த சேரியை அடைந்து, ஸ்ரீ உகந்த குரு சுவாமிகளைப் பத்திர புட்ப பலாதிகளால், ஆராதித்து

நமஸ்கரித் தெழுந்து, இரு கரங்களையும் சிரமேற் குவித்து, நின்று, சனன மரண சம்சார துன்பத்தில் வருந்தும் அடியேங்க ளுய்யும் பொருட்டு, ஞாநா நுக்கிரகஞ் செய்தருளல் வேண்டு மென்று பிரார்த்திக்க, அவ் விண்ணப்பத்தைத் திருச் செவி யேற் றருளிய உகந்த குரு சுவாமிகளும், பரீக்ஷித்து அநுக்கிரகம் செய்யத் திரு வுள்ளங் கொண்டு, அவ் விடத்துக் குரு குல வாசஞ் செய்யும்படி உத்தரவு செய்து, மறு நாட் டொழிற்கு வடி கஞ்சியில் முதனாள் நனைத்து வைத்திருந்த பா வுண்டை நூலைப் பிழிந்து, அக் கஞ்சியைப் பருகும்படி கட்டளையிட்டருள, அதைப் பார்த்து வைராக்கியாதி சாதந மின்றிய மற்றைச் சாதுக்கள் அப் பா வுண்டை நூற் கஞ்சியைப் பருகுதற்கு மநஞ் சகியாது, தெருவிற் பிக்ஷைக்குச் சென்றனர். அக் கந்தப்ப சுவாமிகள், ஒருவருமே, அக் கஞ்சியை மநச் சகிப்போடு முகங் கோணாது வாங்கிப் பருகி, திருப்தி யடைந்திருந்த மையைக் கண்டு, இவரே பக்குவி யெனத் தெரிந்து, சில காலம் அவ் விடத்திருக்கும்படி ஆக்ஞாபித்து, அத்தியாங் மீக சாத்திரத்துவார மாகப் பரமாத்துவித ஞாநத்தை அநுக் கிரகித்தருள, அக் கந்தப்ப சுவாமிகளும், அவ் வநுக்கிரகத்தி னாற் சுவாநுபூதியை அடைந்து, குரு மூர்த்தியினிடத்து விடை பெற்றுக் கொண்டு, திரு வண்ணாமலை என்னுந் தலத்தினை யடைந்து, ஈசாநியத்தில், ஆரணிய வாச மாக, நிர்ச்சநப் பிரதேச மான விருக்ஷத் தடியில், சமாதி யுற்றுச், சின் னாட் போக்கிய பின், அவ் வண்ணாமலையார் அங் குள்ள அடியார்களுக்குச் சொற்பநத்திற் றோன்றி, திரு மட மியற்றுவிக்கும்படி அநுக்கிரகித் தருள, அவ் வநுக்கிரக பலத்தாற், பக்தர்கள் அவ் வீசாநியத்தில், திரு மட மொன் றியற்றுவிக்க, அதி லெழுந்தருளி இருந்தமை பற்றி, ஈசாநிய

சுவாமிக ளென்றும், தேசிக ரென்றும், திரு நாமம் பெற்று விளங்கி வந்தனர். பின் ஒரு நாள், மலையினின்றும் ஒரு பெரும் புலி இறங்கி அவ் வீசாங்கிய சுவாமிக ளிருக்கு மிடம் நோக்கி, நேரே வந்தது. அவ் வீசாங்கிய மூர்த்திகளும் தற் செயலாற் சமாதியை விட்டு விழித்துப் பார்த்துப், புலி வருவது தெரிந்து, அண்ணுமலை யப்பா வந்தனையா வென்று தடவிக் கொடுக்க, அவ் வேங்கையும், சற்று நேரம் முன்னர்ப்படுத் திருந்து, எழுந்து மலையை நோக்கிச் சென்றுவிட்டது. அவ் வாறு, அவ் வீசாங்கிய மடத்தில் எழுந்தருளி யிருந்து, பக்குவத்தோடு கூடித் தம்மைச் சரணடைந்த, சிவ குரு சுவாமி, பரசு ராம சாமி முதலிய மகான்களுக்கு ஞானாநுக்கிரகஞ் செய்து கொண்டிருந் தனர். இது நிற்க,

ஆறுவது

## ஸ்ரீ ஆண்டவர் குரு மூர்த்தியைச் சரணடைதல்.

ஆண்டவர் தமது தந்தையாருடன் சிக்கலில், தமது கடையில் எழுந்தருளியிருக்கையில்; தங்களிடத்துக் கணக்கு வேலையி லிருந்த, மதுரைச் சொக்க லிங்கம் பிள்ளை என்பவர், இரேகை சாஸ்திரத்திநும், சோதிட சாஸ்திரத் தினும், வைத்திய சாஸ்திரத்தினும், இலக்கியங்களினும், பூரண விற்பத்தியுடையராயும், நல் லொழுக்கம், நற் குணங் களிற் சிறந்தவராயும், புத்திமானுயு மிருந்தனர். அவர் ஆண்டவரது திருக் கரத்தைப் பற்றி, அவ் வஸ்தத்தி லுள்ள இரேகைகளை ஆராய்ந்து பார்த்து, ஆச்சரியத்தை யடைந்தவ ராய், இக் குழந்தை தெக்ஷிண மூர்த்தி அவதார மாக விருத்தலால், இக் குழந்தையினுல் உலகம் அதிக க்ஷேமத்தை அடையத் தக்கதா யிருக்கு மென்று நினைத்து

ஆருத அன்பு மேலீட்டினுல் அக் குழந்தையை அழைத்துக் கொண்டு உகந்த குரு சுவாமிகள், ஞானானுக்கிரகம் பண்ணிக் கொண்டிருக்கும் கிரகத்திற்குப் போய், அருளே திரு வுரு வான அவ் வாசிரியரைத் தரிசிக்கும்படி செய்து, தாமும் நமஸ்கரித்து நின்றனர். அப் போது, உகந்த குரு சுவாமிகள், சொக்க லிங்கம் பிள்ளையைப் பார்த்து, இக் குழந்தை யா ரென வினவ. அது கேட்ட சொக்க லிங்கம் பிள்ளை எனது முத லாளி யாகிய மெய்யப்ப செட்டியார் குமாரன் என்று சொல்லிப், பின்னும், இக் குழந்தை கல்வியினும், கேள்வியினும், குணத்தினும், புத்தியினும், விவேகாதி சாதநங்களினும், மிகச் சிறந்த தாகத் தெரிகின்றது. ஆதலால், அவ் விடத்தில் அநுக்கிரகஞ் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க, அதனைத் திருச் செவி யேற் றருளிய, உகந்த குரு சுவாமிகள், ஆண்டவரைப் பார்த்துத் தரியின் மீது அவிழ்த்து வைத்திருந்த ஞாந வாசிட்ட கிரந்தத்தைக் கொடுத்து, இதனைப் படி என்று கட்டளையிட்டருள. அதை அன்புடன் வாங்கி, அதி லுள்ள இக்குவாகு கதையைத் தமது கெம்பீர வாக்காற் படிக்க, அது கேட்ட உகந்த குரு சுவாமிகள், மிக வியப்புற்று, அதிபாலியத்தில் இப்படிப்பட்ட குணங்களை யுடைத்தாதல் அரி தாகலின், இவன் காரணம் பற்றி வந்தவனே, குரு சம்பிரதாயம் விளக்குதற் பொருட்டு இங்ஙனம், நடிக்கின்றனன் எனத் திரு வுளத்தின்கண் மகிழ்ந்து, சொக்க லிங்கம் பிள்ளையை பார்த்து, உமது கருத்தின்படியே ஞானானுக்கிரகஞ் செய்குதும், நீவிர் போமின் என விடை கொடுத்து அனுப்பிவிட்டு, அன்று முதல் சாஸ்திரங்களைக் கிரம மாகச் சைசவத்திற் றெருட்டு மிந் நூ லென்னும் வாசிட்டத்திற் கிலக்கிய மாகப் போதித்து வந்தனர். அக் காலத்தில், ஆண்டவருக்குப் பதின் மூன் றுண்டுகள் நிறைந்தன.

ஏழாவது

## ஸ்ரீ ஆண்டவருக்கு விவாக முடித்தல்.

இப்படிச் சின்னுட் போய, பின்னர், ஆண்டவருடைய தந்தையானவர் குழந்தைக்கு விவாக முடித்தற்பொருட்டு, உகந்த குரு சுவாமிகள் சந்நிதியிற் பிரார்த்தித்து உத்திரவு பெற்றுக்கொண்டு, குழந்தையோடு தன்னகரடைந்து விவாக எத்தநஞ் செய்து, தேவி கோட்டையில், நன் மனையில், நன் முகூர்த்தத்தில், மீனாம்பிகை என்னும் நாம முடைய ஒரு கன்னிகையை மணஞ் செய்வித்து மணமகனையும், மணமகளையும், தம தூருக்கு அழைத்து வந்து மிகக் களிப்புற்றிருந்தனர்.

எட்டாவது

## ஸ்ரீ ஆண்டவர் எதிர் கால மகிமையை யோகீசுவரர் வெளியிடல்.

இவ் வாறு, ஆண்டவர் விவாகஞ் செய்து கொண்டு தமது திரு நகரத்தி லெழுந்தருளி இருக்கும்போது, வட திசையின்கண்ணின்றும் இராமேசுவரயாத்திரையின் பொருட்டுக் காரைக் குடிக்கு வந்த ஓர் பிராமண யோகீசுவரர், அங் குள்ள அன்பர்கள் வேண்ட அந் நகரத்திற் சில நாள் வசித்திருந்தனர். ஒரு நாள் தம்மை யாதரித்து வரும் வைசியரை அவ் யோகீசுவரர் பார்த்து, இந் நகரில் யாரேனும் விவேகிக ளுளரோ வென்று வினவினர், அது கேட்ட அவ் வைசியர்கள், எங்கள் வருணத்தில் உதித்த ஓர் பிள்ளை, கல்வி அன்றி யொழுக்கங்களிற் சிறந் துள தென்றனர். ஆனல், எனது சல்லாபத்தின் பொருட்டு அப் பிள்ளையை அழைத்து வம்மி னென்றூர். அவ் வைசியர்களும் ஆண்ட

வரிடத்துச் சென்று, அவ் யோகீசுவரர் கருத்தை அறிவித் தனர். அது கேட்ட ஆண்டவர், நல்லது வருவ லென்று பழங் கற்கண்டு முதலிய கையுறைகளைக் கொடு சென்று, அவ் யோகீசுவரர் முன் வைத்து வணங்கி நிற்கையில், அவ் யோகீசுவரர் ஆண்டவர் திரு வுருவின்கண் ணிகழும் திருக் குறிப்பைக் கண்டு, பொருக் கென எழுந்து, ஆண்டவரைக் காடாலிங்கநஞ் செய்து, கணப் பொழுது, ஆநந்தக் கடலி லமிழ்ந்திப் பரவசராய் நகரத்தாரைப் பார்த்து, வாரீர் வைசி யர்களே, இவர் நும் பிள்ளை யல்லர், தெக்ஷிண மூர்த்தியின் கலை யென் றறியுங்கள், அநேகரைக் கிருதார்த்த ராகப் பண் ணவும், வேதாகமோக்த சிவ தருமம் முதலியவற்றைத் தம் மொழுக்கத்தால் உலகத்திற் குபதேசித்தற் பொருட் டும். முமுட்சுகளுக்கு ஞாநா நுக்கிரகஞ் செய்தற் பொருட் டும், ஆவிர்ப்பவித்திருக்கின்றனர். இங்ஙனங் கூறிய எனது மாற்றத்தின் பொருளைச் சில நாளில் நீவிர் கண் கூடாக அறிவீர்க ளென அருளிச் செய்தனர். அன்று தொடங்கிப் புண்ணிய சீலர்களான வைசியர்க ளநேகர் ஆண்டவரைச் சிவ மே எனக் கண்டு வழிபட்டு வந்தனர்.

ஒன் பதாவது

## ஸ்ரீ ஆண்டவர் பொருள் வைத்த சேரிக் கெழுந்தருளல்.

ஆண்டவர் சில நாட்கழித்த பின்னர், குருவைத் தரி சிக்குங் கருத்தினராய், அன்ப ராகிய நல்லான் செட்டியாரு டன் தமது நகரத்தினின்றும், பிரயாணப்பட்டுச் சிக்கலைச் சார்ந்த பொருள் வைத்த சேரிக்குச் சென்று, குருவைத் தரிசித்து வணங்கிக் கொண்டு, தமது கடைக்குச் சென்று

வியாபாரஞ் செய்யத் தொடங்கி, அதில் வரும் ஆதாயத்தைத் தம தன்பர்களுடைய குடும்ப சம்ரக்ஷணையின் பொருட் டுதவியும், குரு சுவாமிகளுடைய திரு மனைக்கு வேண்டுவனவற்றை யுபகரித்தும, தமது குடும்பத்தாருக்கும் வேண்டுவனவற்றை நல்கியும், இவ் விதமாகச் சில காலம் சம்ரக்ஷணை செய்துவந்து, தொழிற் செய்யுங் காலந் தவிர ஏனைய கால மெல்லாங் குரு சந்நிதியில் நிரந்தரம் சிரவண மநநாதிகளைச் செய்து வந்தனர்.

பத்தாவது

## ஸ்ரீ ஆண்டவருக்குக் கொப் புடை யம்மை யநுக்கிரகித்தல்.

இவ் வாறு, சிக்கலில் எழுந்தருளியிருக்குங் காலத்தில், ஒரு நாள் ஆண்டவரது அருமைத் திரு மேனியிற், சுர உபாதி உண்டாகித், தங்கள் கடையிற் சயநித்திருக்கும் போது, ஆண்டவருக் கருகில், ஒரு பிராமணக் கந்நிகை யிருந்தனள், ஆண்டவர் நித்திரை விழித்த காலத்திற் சமீபத் திருந்த அக் கந்நிகையைப் பார்த்து, அம்மா நீயார் என்று வினவினர், அதற்கு அக் கந்நிகை நாம் வசிப்பது காரை மா நகரம், தமக்குச் சுரம் கண்டிருப்ப தாகக் கேள்வியுற்று அச் சுர நிவிர்த்தியின் பொருட்டு, ஜலம் கொண்டு வந்தேன் என்று சொல்ல, அவ் வார்த்தையைக் கேட்டுள்ள, ஆண்டவர், சற் றுலோசித்திருக்க, அச் சமயம், அப் பிராமணக் கந்நிகை வடிவங் கொண்டிருக்குங் கொப்புடை யம்மை, இந்தச் சலத்தை அருந்தக் கடவை என்று கொடுக்கருள, ஆண்டவர் சுரத்தினது தாபத்தால், அந்தச் சலத்தை வாங்கி

உட் கொண்டு நிமிர்ந்து பார்த்த மாத்திரத்தில், அப் பிரா மணக் கந்நிகையின் றிரு வுருவத்தைக் காண்கிலர். உடனே சுரம் நின்று விட்டது, சூரியன் உதய மான பின் னர், ஆண்டவர் குரு மூர்த்தியின் கிரகத்திற் கெழுந்தருளிச் சந்நிதியில் நடந்த வாறு விண்ணப்பிக்க, அதனை வினவிய குரு மூர்த்தியும், மகிழ்வுற்றனர். ஆண்டவர் கொப் புடை யம்மை தான் இப் பிரசாதஞ் செய்தருளியது என்று நினைத் துக், குரு மூர்த்தியினது சந்நிதியில் அவ் வம்மை பேறிற் றுதியாய்,

(அறு சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்.)

ஆலோ னிறந்து முமைபாகத்
தண்ண லிறந்துங் கமலமுறை,
நாலா நநத்தோன் முடிந்திறந்து
நார தாதி யோரிறந்துங்,
காலா திகளு மொழிந்திறந்துங்
ககன மாதி யழிந்திறந்து,
மாலோ கங்க ளிறந்துநின்ற
யம்மே கொப்பை யுடையாளே.

என்ற கவியைத் திரு வாய் மலர்ந் தருளினர்.

பதினொன்றுவது

## ஸ்ரீ ஆண்டவர் வாசிட்ட பாடாரம்பஞ் செய்தல்

இவ்வண்ண மாக, ஆண்டவர் பொருள் வைத்த சேரியிற், குரு குல வாசஞ் செய்து, சாதந மாகிய மா தநத் தைச் சம்பாதநஞ் செய்து, சாஸ்திர சோதநம் பண்ண எண் ணித், தமது குரு மூர்த்தி ஆதநத் திருந்து போதநஞ் செய்ய, வேதாந்த சூடாமணி, கைவல்லியம், பஞ்சதசப் பிரகரணம்,

வாசுதேவ மநநம் முதலிய சற் சாத்திரங்களைச் சிரவணம் பண்ணிப், பின்னும், மகா காவிய மான ஸ்ரீ ஞாந வாசிட்ட மென்னுங் கிரந்தத்தையும் சிரவணஞ் செய்ய வேண்டு மென்னும். இரு வுள்ள முடையவ ராய்த், தமது குரு மூர்த்தி யாகிய உகந்த குரு சுவாமிகளை நமஸ்கரித்து, அன்புடன் ஆராதித்துத் துதித்து, நன் முகூர்த்தத்தில் பாடாரம்பஞ் செய்து, அதிவிநய பக்தி விசுவாசத்துடன், ஐயந் திரிபறப் பொருள் கேட்டுக் கொண்டு வந்தனர்.

பன்னிரண்டாவது

## ஸ்ரீ ஆண்டவர் அருணாசல சுவாமிகளைச் சந்தித்தல்.

அக் காலையில், குரு வாரந் தோறுந் தியாகப் பணி சாத்தப் பெற்று சோடசோபசாரத்துடன், அநேகம் அடியார்களால் ஆராதிக்கப்பட்டவராயும், ஞாநாநுபூதியினை யுடைவராயும், வீரசைவாகம விதிப்படி சிவ பூசை சிவ சின்ன முடையவராயும், தமக்கு அதிப்பிரியராயும், திருநாகைக் காரோணத்தில் வசிப்பவராயு மிருக்கின்ற, அருணாசல சுவாமிகளை உகந்த குரு சுவாமிகள் புத்தூரைச் சமீபித்திருக்கும் அக்கரைக் குளம் என்னும் தடாகத்தின் கரையில் சந்தித்த காலத்தில், அவ் வருணாசல சுவாமிகள் தங்களிடம் ஞாந வாசிட்டம் வாசித்து வரும் குழந்தையைப் பார்க்க வேண்டு மென்று எனக்கு மிக விருப்பமுண்டாயிருக்கிறது. ஆகையால், தாங்கள் அனுப்ப வேண்டு மென்று சொல்ல, அதைச் செவியுற்ற, உகந்த குரு சுவாமிகள், ஆண்டவரை அழைத்துத் திரு நாகைக் காரோணம் அருணாசல சுவாமிகளைத் தரிசித்து வா வென்று ஆஞ்ஞாபித்தனர். அவ் வாஞ்ஞையைச் சிரமேற் கொண்டு,

அநேக பலாதிகளையும், கற்கண்டு முதலிய ரச வர்க்கங்களை யும், எடுப்பித்துக் கொண்டு, சாதுக்களோடு திரு நாகைக் காரோணஞ் சென்று, அருணுசல சுவாமிகளின் திரு மனை வாயிலை அடைந்து, அங்குள்ள சீடர்களால், தமது வரவை சுவாமிகளுக்குத் தெரிவித்தனர். அச் சமயம் ஆத்மார்த்த பூஜை செய்து கொண்டிருந்த சுவாமிகள், அதனை விரை வின் முடித்துக் கொண்டு உடனே வெளியில் வந்து திண் ணையி லெழுந்தருளி யிருந்தனர். ஆண்டவர் தாம் கொண்டு சென்ற பலாதிகளைச் சந்நிதியில் வைத்து, அடியார்களோடு நமஸ்கரித் தெழுந்து நிற்க, அருணுசல சுவாமிகள், ஆண்ட வரைப் பார்த்து, அப்பா குழந்தாய் இப் பொழுது என்ன சாஸ்திரம் அப்பியாசிக்கின்றனை என்று வினவ, அது கேட்ட ஆண்டவர், சுவாமின்! அடியேன், ஞாந வாசிட்டம் அப்யாசிக்கின்றேனென்று விண்ணப்பஞ் செய்ய, அருணு சல சுவாமிகள், எவ் வளவு கவி ஆயின வென்று வினவ, இட்சுவாகு கதையில் கவிகள் 60 வரையிற் பாடங் கேட் டாகி யிருக்கிற தென்று சொல்ல, இது வரை கதை எத் தனை என்று வினவ, கதை 41, கவி ஆயிரத்துத் தொளா யிரத் தைம்பத் தாறு என்று விரைவிற் சொல்ல, (சோனை தன்னுல்) என்னுந் தொடர் வருங் கவியைச் சொல் லென்று சொல்லு முன்னே.

திங்களினு மிகக்குளிர்ந்து செவ்விதாய்
நோயெல்லாந் தீர்க்கப் பட்ட,
வங்கணுற வருஞேக்கஞ் செய்தானை
வணக்கத்தா லருக்கி யத்தாற்,
றுங்கவுப சாரத்தான் மந்தார நன்மலரின்
சோனை தன்னுற்,

சங்கரனை யேத்தினே னுமையையும்ப்
படியேத்தித் தாளில் வீழ்ந்தேன்.

என்று அதி விரைவிற் சொல்லிய வாக்கியத்தைக் கேட்டு, உன் வாய்க் கல்லவோ சர்க்கரை போடவேண்டு மென்று சொல்லி, எழுந் துள்ளே சென்று, ஆராதநத்திற்கு வைத் திருந்த சர்க்கரையை அள்ளிவந்து வாயைத் திற வென்று வாயி லிட்டருளிக், கட்டித் தழுவிக் கொண்டு, பேரா நந்த முற்று விடை கொடுத் தனுப்பினர். பின்னர், ஆண்ட வர் விடை பெற்றுக் கொண்டு, மீண்டு சாதுக்களோடுங் குருவின் றிரு மனை வந்து சேர்ந்தனர்.

பதின் மூன் றுவது

## ஸ்ரீ ஆண்டவர் குரு மூர்த்தி சந்நிதியிற் கவி விண்ணப்பித்தல்.

பின் னொரு காலத்தில், ஆண்டவர் தமது ஆசிரியரு டனே இரவில் நித்திரை செய்து, விழித்துத் தம தாசிரிய ராகிய உகந்த குரு சுவாமிகளின் திரு வடியை வருடிக் கொண்டிருக்குங் காலத்தில், அக் குரு மூர்த்திகள் ஆண்ட வரைப் பார்த்து, அப்பா ஒரு கவி சொல் லென்று திரு வாய் மலரு முன்னே.

உள்ளுமுணர் வுக்குணர் வாயெனக் குண்மைதந்தாய்
மன்னுஞ்சுரு திப்பொரு ளாய்வழி காட்டிநின்றாய்
பின்னுங்குரு வாயடைந் துன்னருள் பேணவைத்தாய்
என்னென்றுரைப் பேனின்க ருணையி ருந்தவாறே.

என்னும் வைராக்கிய சதகத்தி லுள்ள கவியை அன்பு மேலீட்டினாற் கண்களில் ஆநந்த பாஷ்பம் பெருகக்

சொல்லினர். உகந்த குரு சுவாமிகள் உடனே எழுந்திருந்து, வாரி யணைத்துக் காடாலிங்கநஞ் செய்து கொண்டு, எவ் விடத் திருந்து இப் புதையலை எடுத்தா யென்று வியந்து ஆராமையுற்றனர்;

பதி ஞன் காவது

## ஸ்ரீ ஆண்டவர் வாசிட்ட சமாப்தி செய்தல்.

இவ் வித மாக, ஆப்தாதி சதுர் விதப் பணிவிடைகளாற், குரு மூர்த்திகளைச் சந்தோஷிப்பித்து விநயத்துடன் வாசிட்ட சிரவணஞ் செய்து வருங் கால், ஆண்டவருக்கு இராகவரைப் போன்று, ஊந சோடச வருடங்க ளாயின. அக் காலத்தில், ஆண்டவ ருடைய பிதாவானவர், தன் னகரத்திற்குப் பிரயா ணமாகி வரும் சமயத்திற் றமது வியாபார நிமித்தம் நியமித்து வைத்த கூட்டாளி யிடத்தில், நமது குழந்தை உகந்த குரு சுவாமிகளிடம் பாடங் கேட்டு வருவதாற், பெட்டித் திறவு கோல் முதலியவைகளைக் கொடுத்தாற் றிரவியத்தை மிகச் செலவு செய்து போடுவான், ஆகலின், அங்ஙனங் கொடாது, செவ்வையாகப் பார்த்துக் கொள்ளுக வென்று சொல்லி, மீண்டு தமது நக ரடைந்தனர். அஃதை அறிந் துள்ள ஆண்டவர், நன் முகூர்த்தத்தில், வாசிட்ட சமாப்தி செய்வதற்குச் சோதிடர்களைக் கொண்டு ஆராய்ந்து, சுபதிந மேற்படுத்தி, அதற் குரிய சாதநங்களைச் சம்பாதநஞ் செய்து கொண்டு வந்தனர். அப்போது, வாசிட்ட சமாப்தி நியமன காலம் நெருங்கியது, அக் காலையில், ஒரு நாள் ஆண்டவர் தடாகக் கரையில் தந்த சுத்தி செய்து கொண்டிருக்கையில், அம் மார்க்கமாகத் தமது நகரத்தி லிருந்து கூலியாள் ஒருவன் எல்லாக் கடைக்காரருக்கும் ஓலைகள் கொண்டு வந்தான். ஆண்ட

வர் அவனை விளித்துத் தமது கடைக்கும் ஓலை இருக்கின்றதா வென்று பார்த்து, இல்லாததினால், றமது கடையிலிருக்கின்ற கூட்டாளியினுடைய மாதா இறந்து விட்டதாகவும், தம்பியிடத்திற் பெட்டிச் சாவியைக் கொடுத்து விட்டு, வந்து சேரவேண்டிய தென்றும், ஊரிலிருந்து தமது தமையனார் எழுதியது போன்று, ஒரு ஓலை எழுதி, அவ் வோலைகளோடு கட்டிக் கொடுத்தனுப்பிவிட்டுக், குரு மனைக்குச் சென்று விட்டனர். கூட்டாளியான மெய்யப்ப செட்டியாரும், ஓலை வந்தவுடன் படித்துப் பார்த்து மனக் கலக்க முற்று, ஆண்டவரிடம் ஓடி வந்து அழுது, ஓலையைக் காட்டிப் பெட்டித் திறவு கோலைக் கொடுத்துவிட்டுத்,தம தூருக்குப் பிரயாண மாயினர். அதன் பின்னர் வாசிட்ட சமாப்திக்கு நியமித்த முகூர்த்தத்திற் றமது இஷ்டம் போல் வேண்டிய திரவியங்களைச் செலவு செய்து, திரு வண்ணமலை ஈசாநிய சுவாமிகள் முதலிய அளவிறந்த சாதுக்களை அங் கங்கு திருமுக மனுப்பி வரவழைத்துத், தமது குரு மூர்த்திக ளாகிய உகந்த குரு சுவாமிகளை உயர்ந்த ஆசநத்தின்கண் எழுந்தருளும்படி செய்து, பால், தயிர், சந்தநம், பன்னீர் முதலிய திரவியங்களாலும், கங்கை முதலிய அநேக புண்ணிய தீர்த்தங்களாலும், அபிஷேகஞ் செய்து, திவ்விய மான உயர்ந்த பீதாம்பரத்தால் அலங்கரித்துத், திரிபுண்டர தாரணஞ் செய்து, சந்தநம், புநுகு சவ்வாது களப கஸ்தூரி முதலிய வாசனைத் திரவியங்களைச் சாத்தி, அற்புத மான சரப்பளி. கண்டி, மாலை, கடுக்கன், மோதிரம், வலயம் முதலிய அநேக ஆபரணங்களாலும், மல்லிகை, முல்லை, சண்பகம், செங்கழுநீர், மரு, மருக் கொழுந்து முதலிய அநேக புட்பங்க

ளாலும், அலங்காரஞ் செய்து, அறு சுவைகளமைந்த நால் வகை உண்டிகளையும், அதி மதுர மான அநேக பழ வர்க்கங்களையும், நிவேதநஞ் செய்து, சோடசோபசாரங் களால் அன்பு முதிர்ந்து, உள்ளங் கனிந்து, ஆராதித்து யாவருங் கண்டு பிரமிக்கும்படி அதிக சிறப் பாக முப் பத் திராயிரங் கிரந்தத்தோடுகூடிய ஆதி கவி வாந்மீகி பகவான் வாக்கினின்று முண்டாகிய மகா காவிய மான பிரகத் வாசிட்டத்திற் சொல்லிய வண்ணம் நடாத்தி, ஆநந்த சமுத்திரத்தில், அமிழ்ந்தி இருந்தனர், இஃதிவ்வா றிருக்க, ஆண்டவர் கடைக் கூட்டாளி, மெய்யப்ப செட்டியா ரென்பவர் ஊருக்கு வந்து, முதலாளி வீட்டிற்குச் சென்ற பொழுது, அவரைக் கண்ட ஆண்டவ ருடைய தமையனு ரான மாயாண்டி செட்டியார், நீவி ரேன் வந்து விட்டீ ரென்று கேட்டனர். அது கேட்ட மெய்யப்ப செட்டியார் எனது மாதா இறந்து விட்டதாகத் தாங்கள் ஓலை எழுதி யிருந்தீர்களே அதற்காகவே வந்தே னென்று கூற, அப் பொழுது மாயாண்டி செட்டியார் இது வென்ன ஆச்சரி யம், நான் எப் பொழுது ஓலை எழுதினேன், உனது தாய் முந்தாநாட் டானே முப்பத் தைந்து ரூபாய் நெல் வாங்கு தற் பொருட்டு வாங்கிச் சென்றனள் என்று சொல்லி, ஆண்டவர் வாசிட்ட முடிப்பதற் கெத்தனை நா ளிருக்கின் றது செலவுக்கு ரூபாய் கேட்டனரோ, வென்று வினவி னர், அது கேட்ட மெய்யப்ப செட்டியார், நான் புறப்படும் பொழுது வாசிட்ட முடிக்க ஆறு நாளிருந்தன. என்னிடம் செலவுக்கு ரூபாய் கேட்கவில்லை. ஓலை வந்தபடியால் நான் அவசர மாகப் புறப்பட்டு வந்துவிட்டே னென்று சொல்ல, அஃது துணர்ந்த மாயாண்டி செட்டியார், சரி ஆண்டவர் தான், அவ் வோலை எழுதியது, இனி நாம் இவ் விடத்தி

லிருந்து போனாலும், வாசிட்டம் முடிந்து இரண்டு நாளாகி விடும். எவ்வளவு ரூபாய் செலவாகி இருக்குமோ வென்று சொல்லிச் சற்றுலோசித்து நடந்த யாவும் நடந்ததே இனி என்ன செய்யலாம், நல்ல விஷயந் தானென்று சந்தோஷித்து, மீண்டு அக் கூட்டாளியைப் பிரயாணம்பண்ணி அநுப்பி வைத்தனர்.

பதினைந்தாவது

## ஸ்ரீ ஆண்டவர் காரைக்குடிக்கெழுந்தருளல்.

ஆண்டவரும், ஸ்ரீ வாசிட்ட சமாப்தி செய்து, ஆசிரியரிடத்திற் றமது நகரத்திற் கேகவிடைபெற்றுக் கொண்டு, குரு பத்தினியாரிடத்தும் விடைபெற்றுக் கொள்ளுங் கால், அக் குரு பத்தினியார், ஆண்டவரின் றிரு முக மண்டலத்தைப் பார்த்து, ஊருக்குச் சென்ற வுடன், நமது மனையில் வளர்த்தற் பொருட்டு இரண்டு மயில் குஞ்சுகள் வாங்கி இவ் விடத்துக் கனுப்ப வேண்டுமென்று உத்தரவு செய்தனர். அவ் வுத்தரவைச் சிரமேற் கொண்டு, தமது நகரத்திற்கு நல்லான் செட்டியார் முதலிய அன்பர்களுடன் எழுந்தருளினர்.

பதினாறுவது

## ஸ்ரீ ஆண்டவரைச் சீடர்கள் சரணடைதல்.

ஆண்டவர் தமது ஊருக்கு வந்து ஆக்கினேய திசையி லுள்ள, திரு வாசல் மடத்தில் வசித்திருக்குங் காலையில், பாலிய முதற் சினேக முள்ள சாத்தப்ப செட்டியார்

நல்லான் செட்டியா ரென்னும் இருவரும் தம்மைச் சர ணடைய, அவ் விருவருக்கு ஞாந சாஸ்திரோபதேசஞ் செய்து கொண்டு, அக நோக்குற் றிருந்தனர். அவ் விரு வரும் ஆண்டவருடைய குணாதிசயங்களை உள்ளபடி யறிந்து, அதிப்பிரேமையோடு ஆத்தம் அங்கம் தாநம் சற் பாவ மென்னும் நான்கு வகைப் பணி விடைகளையுந் திரிகரண சுத்தியாய்ச் செய்துகொண்டு வந்தனர். அக் காலை யில், அரிய துறவோடு கூடிய மகாதபசியான பாலச் சுவாமி கள் என்னும் ஒரு மகான் மதுரையி லிருந்து காரைக் குடிக்கு வந்து, ஆண்டவரைச் சரணடைந்து, ஞாந சாஸ் திராப்பியாசம் பண்ணிக்கொண்டு கூடவே வசித்தனர். அதன்பின், பள்ளத்தூரி லிருந்து,முத்து வீரப்பய்யா வென் னுந் திரு நாம முடைய, ஒரு முமூட்சுவும், அந்தரங்க பத்தியோடு ஆண்டவரது பிரபாவத்தைக் கேள்வியுற்று மெய்யன்புடன் வந்து அம் மூர்த்தியைச் சரணடைந்து ஞாந சாஸ்திராப்பியாசஞ் செய்து வந்தனர், பின்னர்ச் சில காலஞ் சென்று, கல்லல் என்னும் ஊரி லிருந்து வெள்ளை யப்பய்யா வென்னும் நாம முடைய ஒரு முமூட்சுவும் அந்தரங்க பக்தியோடு ஆண்டவரது மகிமைகளைக் கேட் டுணர்ந்து அன்போடு வந்து சரணடைந்து வேதாந்த சிர வணாதிகளைச் செய்து வந்தனர். இன்னும், இவர்களைப் போலவே, அநேகம் அடியார்கள் ஆண்டவரது அற்புதத் திரு விளையாடல்களைக் கேள்வி யுற்று, அதிக விருப்பத் தோடும் அடைக்கலம் புகுந்தனர். ஆண்டவர் அவ் வடி யா ரனைவர்களையுந் தமது கிரகத்தில் அன்ன முதலியவற்று லாதரித்து, அவர்களோடு ஞாந நூற் கதைகளாற் போது போக்கி வந்தனர்.

பதினேழாவது

## ஸ்ரீ ஆண்டவர் கொப்புடையம்மையைத் துதி செய்தல்

இவ்வாறு, ஆண்டவர் தமது நகரத்தில் வசித்திருக்குங் காலத்தில், அந் நகரத்தி லுள்ள கொப்புடையம்மை என்னும் பிடாரியைத் திநந்தோறும் அன்புடனே அடியார்களோடு தரிசித்து வணங்கி மடாலயத்திற் கெழுந்தருளி, ஞாந சாஸ்திராப்பியாசங்களைச் செய்து கொண்டு எதிர்ச்சாலாப சந்துஷ்டியுடன் கூடி இருந்து, அவ் வம்மை பேரிலும் (ஆரு ரகன்ற பரசிவமா என்ற விநாயகர் வணக்க முதல் (அப்பாய் நிலமா யநலாய் வளியாகி) என்ற வெண்பா வீருக வுள்ள செய்யுட்களைத் திரு வாய் மலர்ந்தருளினர்.

பதினெட்டாவது

## ஸ்ரீ ஆண்டவர் அரியக்குடி விஷ்ணு மூர்த்தியை துதி செய்தல்.

பின் ஞெரு நாள், அரியக்குடியிற் றங்கள் குடும்பத்தாரால் வழிபட்டு வராநின்ற குல தெய்வமாகிய இராமசுவாமி ஆலயத்திற்குத் தரிசநத்தின் பொருட்டு ஆண்டவரை அழைத்துக் கொண்டு போன காலத்தில், அவ் வூராலயத் துள்ள ஸ்ரீமந் நாராயணனை வந்தித்து, அவ் வாலய கும்பாபிடேக சமயத்தில் (நடந்து விடுங்கா ணிருவினைகள்) என்ற கவி முதல் அநேக பாசுரங்களால் தோத்திரஞ் செய்து, தமது நகரத்திற் கெழுந்தருளினர்.

பத்தொன்பதாவது

## ஸ்ரீ ஆண்டவர் மயிற் குஞ்சுக்காக கோவிலூருக் கெழுந்தருளல்.

ஒரு நாள், ஆண்டவர் தமது குரு பன்னியின் வாக்கியத்தை நினைத்துத், தம தன்பரான நல்லான் செட்டியாருடன் கோவிலூருக்குச் சென்று, அங்குள்ள கிராதர்களை அழைத்து, இரண்டு மயிற் குஞ்சுகள் வேண்டும் சீக்கிரங் கொண்டுவாருங்கள் என்று உத்தரவு செய்தனர். அங்ஙனமே, அவர்கள் மயிற் குஞ்சு கொண்டு வருவதற்கு அவ்வாரண்ணியத்துட் சென்றவுடன், ஆண்டவரும், நல்லான் செட்டியாரும், அங்குள்ள வன்னிவந க்ஷேத்திர மாகிய கொற்றவாளீச ராலயத்தைக் கண்டு விரைவாகச் சென்று கொற்றவாளீசுவரரையுந், திருநெல்லையம்மையாரையும், தரிசித்துப் பேரானந்த முற்று, இவ் வாலயம் மிகவும் ரமணீயமாயிருக்கின்றது நாம் தனித் திருத்தற் குரிய ஸ்தாந மாகவு மிருக்கின்றது. புராதந ஆலய மாகவுந் தோன்றுகின்றது, இவ் வாரண்யத்துள் மகான்கள் வசிப்பது போலவுந் தெரிகின்றது; ஆகையால், நாம் சோமவாரம், சுக்கிர வாரந் தோன்றும் வந்து தரிசித்துக்கொண்டு போவோ மென நல்லான் செட்டியாரிடம் ஆண்டவர் திருவாய் மலர்ந்து, பின்னர் ஊருக்கு வந்து, அன்று முதல் அவ் வாறே தரிசித்து வந்தனர். ஆண்டவர் தன் னகரத்திற்கு வந்த பின்னர் கிராதர்கள் கோவிலூரினின்றும் இரண்டு மயிற் குஞ்சுகள் கொண்டுவர அவைகளைத் தமது குரு மனைக்கு அனுப்பி வைத்தனர்.

## இருபதாவது

## ஸ்ரீ ஆண்டவர் சிக்கலுக் கெழுந்தருளிக் குருவின் றிரு மனை யியற்றல்.

பின்னர், ஒரு தினம் தமது குருவைத் தரிசிக்குங் கருத்தின ராய், சில அடியார்களுடன் தமது பிதாவும் உடன்வர அவர்களை யழைத்துக் கொண்டு, பொருள் வைத்த சேரிக்குச் சென்று, குரு மனை யடைந்து, குரு மூர்த்திகளை நமஸ்கரித் தெழுந்து வந்து, தமது கடையிற் களிப்புற் றிருக்குங் காலத்தில், ஒரு நாட் டமது பிதாவிடத் திற் குருவிற்கும், குரு புத்திரிமா ரிருவருக்கும், குரு மனை இயற்றற் பொருட்டுத் திரவிய சகாயஞ் செய்ய வேண்டு மெனத் திரு வாய் மலர்ந்தருள, அதற் கவர்கள், ஒன்றும் வசநியாது, மௌனமா யிருந்தனர். அது கண்ட ஆண்டவர், காது செவிடாய் விட்டதோ வென்று திரு வாய் மலர்ந்து, மீண்டுங் குரு மூர்த்தியின் றிரு மனை யடைந்து, உள்ள வாறு முடியு மென் றிருந்தனர். உடனே ஆண்டவரின் பிதா விற்குக் காதுக ளிரண்டும் ஓசை யுணர்ச்சி யின்றி செவி டாய் விட்டன. பின்னர், ஆண்டவரிடத்து அச்சமும், அன்பும், மேலிட்டுக் "கெட்டோம் நமது உலோப குண மல்லவா இங்ஙனஞ் செய்வித்த" தென்று அதனை வெறுத்து, இனித் தீர்தற்கு ஆண்டவரது திரு வரு ளன்றி வே றோ ருபாய மில்லை என்று நிச்சயித்துப் பிதா வானவர் குருவின் றிரு மனையை யடைந்து, நடந்த வாறு சந்நிதியில் விண்ணப் பஞ் செய்து, வாய்விட் டழுது, ஆண்டவர் திருக் கரத்தால் விபூதி யளிப்பித்தல் வேண்டு மென்று குருவின் றிருவடி யில் வீழ்ந்து அடியற்ற மரம் போற் கிடக்க, குரு மூர்த்தி யாகிய உகந்த குரு சுவாமிகள், "மநமிரங்கி நின்று அங்ங

னஞ் செய்தும் நீர் அஞ்சற்க'' வென்று அநுக்கிரகித்து ஆண்டவரை அழைத்து, உனது பிதாவிற் குள தாகிய வருத்தந்தீர விபூதி கொடு, வென்ருக்ஞாபித்தருள ஆண்டவர் குருவின் றிருவருளின்படியே தமது பிதாவிற்கு விபூதி கொடுத்தருள, உடனே பிதாவிற்கு மூடிய செவிகளைத் திறந்தாற் போன்று ஓசை யுணர்ச்சி யுண்டாயிற்று. உண்டாகவே, புத்திர பாவத்தால் ஆண்டவரைத் தழுவிக் கொண்டு உனது மகிமையைச் சிறிதும் யா னறியாது புத்திர னென்று கருதினமையானும், திரவிய உலோபத் தானும், உனது அருமைத் திரு வார்த்தையை நன்கு மதியாமல் உதாசீநனுயினன். இனி "உனது கருத்தின்படி நடக்கவல்லே'' னென்று சொல்லிப் போயினர். ஆண்டவர் அன்று தொடங்கிக் குருவிற்கு ஒரு திரு மனையும், குரு புத்திரிமா ரிருவர்களுக்கும், இரண்டு திரு மனைகளும், சிறப்பாக முடித்துக் கொடுத்துக், குரு சுவாமி குடும்பத்தையும், குரு சுவாமியைச் சார்ந்த ஏனைய குடும்பங்களையும், தாமே வகித்து வேண்டியவைகளை நடத்தி வந்தனர்.

## இருபத்தொன்ருவது

## ஸ்ரீ ஆண்டவரை நல்லான் செட்டியார் கருட னுகப் பாவித்துத் தரிசித்தல்.

ஒரு தினமாதித்திய வாரத் தன்று காலையில், நல்லான் செட்டியா ரென்னுந் தம தன்பர் கருட தரிசநஞ் செய்யக் கருதி வெளியிற் போகும்போது, அது கண்ட ஆண்டவர் ஓ நல்லான் நீ எவ் விடத்திற்குச் செல்கின் றனை என்று வினவ, நல்லான் செட்டியார் நான் கருட தரிசந நிமித்தம் செல்கின்றே னென்று விண்ணப்பிக்க, "இன்று கருட னகப்

படான் நானே கருட வடிவனு யிருத்தலா லென்னையே அங்ஙனந் தரிசித்துக் கொண்டு போசநஞ் செய்து கொள்ளக் கடவை''என் றுத்தரவு செய்ய,அது கேட்ட நல்லான் செட்டியார் பதில் மொழி கூறுது சென்று, அக் கருடன் இருத்தற் குரிய தடாகக் கரை, நதிக் கரை கழனி முதலிய விடங்களிலெல்லாந் தேடியும் அன் று சாயங் கால பரியந் தங் கருட னகப்படாமல் மீண்டு வந்து ஆண்டவரை நமஸ்கரித்த மாத்திரத்தில் எனக் கன்னிய மாய்க் கருட னிருப் பதாய்க் கருதிச் சென் றனையே, அங்ஙனங் கருடனைக் கண்டனையா இரண்டு கோணக் கால்களும் இருந்தா லல்லவா நீ என்னைக் கருட னுகக் கருதுவை, சேதந ரூப மாகிய நான் சர்வாத்மகமா யிருக்கின்றதை நீ யறிய வல்லையோ, குமரன் செட்டி மெய்யப்பன் மக னெனத் தானே என்னை மதித்தனை, இனி யாகினு மென்னைக் கருட னுகப் பாவித் துனது விரதத்தை முடித்துக்கொண்டு போசநஞ் செய்து கொள்ளக் கடவை எனத் திரு வாய் மலர்ந்தருளினர். அது கேட்ட நல்லான் செட்டியார் எத்தனை அற்புதங்களைத் தெரிவித்தும் நமது மதி இப்படித் தானே மயங்கி விடுகின்ற தென்று, மனதோ டிரங்கி வணங்கி ஆண்டவர் உத்தரவின்படி யுணவை யுண்டிருந் தனர்.

இரு பத் திரண் டாவது

## ஸ்ரீ ஆண்டவா குரு மனைக்கு அரிசி மூட்டை அனுப்புதல்.

ஆண்டவர் ஒரு நாள் வியாபார நிமித்தம் திரு நாகைக் காரோணத்துக்குச் சென் றிருந்த பொழுது, தனது குரு மூர்த்தியின் கிரதத்துக்கு அரிசி மூட்டை இரு பத் தைந்து

அனுப்பியருளினர். அது தெரிந்த ஆண்டவரது சேஷ்டராகிய மாயாண்டி செட்டியார், இஃது தென்னை வியாபாரத்திற்கு வந்த அரிசியைச் செலவிட்டால், முதலெப்படியாகுமென்று மன வருத்தத்துடன் தம் இனத்தவரிடத்துச் சொல்லிய சங்கதி முற்றும் ஆண்டவர் தெரிந்து,

"பரிந்தொரு கோடி மறையோர்க்குப்
பூமிபொன் பண்புடனே,
வருந்து மிடிகெட வைப்பது
தன்னின்ம றைமுடிவு,
தெரிந்தமெஞ் ஞானிக்கொ ருபிடி
பிச்சைசி றப்புடனே,
பொருந்தவ மைப்பதற் கொவ்வா
தெனமறை போற்றியதே"

என் றிந்தப் பிரகாரஞ் சிவப்பிரகாச சுவாமிகள் பாடியிருக்கின்றன ரெனத் தமது கடைக் குறிப்பி லெழுதி வைத்தருளினர். அதை மாயாண்டி செட்டியார் பார்த்துச் சந்தோஷித்திருந்தனர்.

## இருபத்து மூன்றுவது

## ஸ்ரீ ஆண்டவர் குரு மூர்த்தி யாகிய உகந்த குரு சுவாமிகள் பரிபூரண மடைதல்.

இவ் வாறு, ஆண்டவர் குரு பணிவிடையில், முயற்சித்துக் குருவினது பூரண வநுக்கிரகத்தை யடைந்து, பொருள் வைத்த சேரியில் எழுந்தருளியிருக்குங்கால், குருமூர்த்தி யாகிய உகந்த குரு சுவாமிகள் ஆண்டவரிடத்தன்பு முதிர்ந்து நிரந்தரம் அநுபூதி ஞானங்களை அநுக்கிரகித்

துக் கொண்டு பிரம நிஷ்டார யிருந்து கலியப்தம் 4919 சாலி வாகந சகாப்தம் (1740) வெகு தாநிய வருடம் பங்குனி மாசம் 20௳ மங்கள வாரம் ஏகா தசி திதி, மக நட்சத்திரம், சுப்பிர நாம யோகம், பத்திரவா கரணம் ஆகிய இவைகள் கூடிய சுப திநத்தில், பரப் பிரம சமரச சுபாவ மடைந்தனர். அதன், பின்னர் ஆண்டவர் திரு வண்ணு மலையி லெழுந்தருளி யிருக்கின்ற ஈசாநிய சுவாமிகள்,அவர் மாணுக்கர்க ளாகிய,சிவ குரு சுவாமிகள்,பரசு ராம சுவாமி கள், திரு நாகைக் காரோணம்,அருணுசல சுவாமிகள், திரு வாரூர், தெக்ஷிணு மூர்த்தி சுவாமிகள் முதலிய பெரியோர் களுக்கும்,தமது திரு நகரத்தி லிருக்கின்ற,இல் லறத்து அடி யார்களுக்கும், அங் கங்கு திரு முக மனுப்பி வர வழைத்து வைத்துக்கொண்டு,மண்டலாபிடேக பரியந்த மான கருந விதிகளையுங்,குரு பூசை மாகேசுவர பூசைகளையும், சாஸ்திர விதிப்படி சிறப பாகச் செய்து முடித்து, அக் குரு சுவாமி யின் மீது ஒரு பாசுரமும், திரு வாய் மலர்ந்தருளினர். அஃ திது வாம்.

*எழு சீ ராசிரிய விருத்தம்.*

''தடமுயர் கடல்சூழ் பொருள்வைநன் னகரந்
    தனின்மநுத் தேகமாய் விளங்கித்,
திடமுடன் சுருதி சாஸ்திரவே தாந்தஞ்
    சிந்தையி லநுபவந் தெளிந்து,
படிதனிற் றனைவந் தடுத்தவர்க் கிரங்கிப்
    பரமசற் குருவதா யுணர்த்தி,
அடியவ ரடிகட் கேயுகந் தாட்சி
    யரன்பதி கயிலைவாழ்ந் தனனே.'' என

இருபத்து நான்காவது

## ஸ்ரீ ஆண்டவர், வீர பத்திர சுவாமிகளை அவ் வாதீநத்துத் தாபித்துக் காரை மா நகரத்திற் கெழுந்தருளல்.

குரு மூர்த்தி யாகிய உகந்த குரு சுவாமிகள் பரிபூரண தசை யடைந்த பின்னர், ஆண்டவர் அன்புமே லீட்டாற் பத்தி விசுவாசத்துடன், அங் கெழுந்தருளிவந்த பெரியோர்க ளனைவரையும் தக்கபடி பூசித்து, அநேக திரவியங்கள் கொடுத்து, உபசரித்துத், தத் தம் இடங்களுக்கு அனுப்பி வைத்த உடனே, குரு மூர்த்தியின் அதிஷ்டாநத்திற்கும், ஆநந்தத்தோடு அநந்தம் பொருள் செலவிட் டாலய மெடுப்பித்து, அவ் வாலய சம்ரக்ஷணையின் பொருட்டு மநோக்கிய மாக மடாலய மொன் றியற்றிச், சிதம்பரம் கேணி மடத்தி லிருந்து எழுந்தருளிய வேளாள குல திலகரும், புராணுகம காவிய பிரசங்கங்களிற் சிறந்து விளங்கிச், சற் சாஸ்திர பயிற்சி யுற்று, விவேக முடையவருமா யுள்ள, ஸ்ரீ வீர பத்திர சுவாமிகளை, எக் காலமுங் குரு மூர்த்திகளி னது ஆராதந நிமித்தம் அத் தாநத்தி லெழுந்தருளியிருக்கச் செய்து, குரு பூசை, மகேசுவர பூசைக்கும், திநந் தோறும், அபிடேக நிவேதநங்களாற் குரு மூர்த்தியை ஆராதித்தற் பொருட்டும், அநேக திரவியங்களு முதவி, நிலங்களும், வாங்கிக் கொடுத்துப், பரம்பரையாகவே அடியர் குழாங்க ளிருந்து ஆராதித்து வரும்படி நியமித்துச் சில கால மிருந்து, மீண்டு, காரைக் குடிக்கு எழுந்தருளி அடியார் களுக்கு அநுக்கிரகஞ் செய்து கொண்டிருந்தனர்.

இருபத்தைந் தாவது

## ஸ்ரீ ஆண்டவர், கோயி லூரிற் றிருப் பணி செய்யத் தொடங்கல்.

ஆண்டவர் இவ் வண்ணம், தமது திரு நகரத்தி லெழுந் தருளியிருக்கும் போது, ஒரு நாள், தம் மிடத்திற் அத்தியந் தப் பிரேம பக்தி யுடைய, நல்லான் செட்டியாரை உடன் வர வழைத்துக் கொண்டு, சோம வாரம், சுக்கிர வாரந் தோறும், தரிசநம் பண்ணி வரும் வழக்கப்படி. கோவி லூருக் கெழுந்தருளி, இராச கட்க பரமேசுவரரையும், சாலிவாடீசுவரியையும், தரிசநஞ் செய்து கொண்டு, தமது நகர்க்கு வரப் பிரயத்தநப்படுங் கால், மழை யானது மிகுந்து விடாது பெய்தமையால், தமது நகரத்திற்கு வர இசை யாமல், அவ் விரவில், அவ் வம்மையின் திருச் சந்நிதியி லிருந்த கூரைக் கொட்டகையில், நித்திரை செய்யத் தொடங்க, அக் கொட்டகை எங்கு மொழுகித் தரை நனைந்து இருத்தற்குக் கூட இட மில்லாமற் சேருகிவிட்ட மையின், அவ் விரவு முழுதும் நித்திரை யில்லாமல், யோக நித்திரையி லிருந்து, சூரியோதய மான பின்னர், நல்லான் செட்டியாரை ஏவித் தொழிலாளரை அழைத்துவரச் செய்து, அக் கொட்டகையைப் பிரித்து, முன் போலவே பனை ஓலையினுற் கட்டுவிக்கும்படி உத்தரவு செய்ய, உடனே அத் தொழிலாளரும் பழைய ஓலைகளைப் பிரித்து அப்புறப்படுத்தும் பொருட்டு, அக் கொட்டகையின் மீ தேறினர். ஏறினவுடனே அக் கொட்டகையின் கால்கள் அடியற்றிருந்தமையாலோ, அல்லது, திரு நெல்லை யம்மை யார், இம் மூர்த்தியைக் கொண்டு கற் பணி யாக்கிக் கொள்

ளத் திரு வுள்ளங் கொண்டமையாலோ, அடியோடே சாய்ந்தது. ஆண்டவரும், இவ் வாச்சரியத்தைக் கண்டு, திரு நெல்லை யம்மையின் றிரு வுள்ளக் குறிப்பை யுட்கொண்டு, நல்லான் செட்டியாரைப் பார்த்து இதனை கற் பணி யாக்கு வித்தல் வேண்டும். அதற்குத் தக்க திரவியஞ் சேகரித்துச் செய்விப்பாம் இப் போது வாணம் வெட்டுவித்து நகர்க்குப் போவோம் என் றுத்தரவு கொடுத்து, அங்ஙனம் வாணம் வெட்டுவித்துக், கோவி லூரில் நின்றும் மீண்டு தமது திரு நக ரடைந்து, சில நாட் டாமதித் திருந்து விட்டனர்.

இரு பத் தா றுவது.

## ஸ்ரீ ஆண்டவர் திரு மனைக்குத் திரு நெல்லை யம்மை யெழுந்தருளி யநுக்கிரகித்தல்.

இவ் வாறு, ஆண்டவர் திரு நெல்லை யம்பாள் சந்நிதி யிற் கொட்டகையைப் பிரித்து வாணம் வெட்டுவித்து, அவ் விஷயத்திற் குரிய முயற்சி ஒன்று மின்றித் தமது திரு நகரத்தில், அடியார்களுக்கு ஞானா நுக்கிரகஞ் செய்து கொண்டு, தாமதித் திருக்குங்கால், ஓர் நாள் ஆண்டவர், வீட்டில் நின்றும் வெளியிற் போயிருந்த சமயத்தில், திரு நெல்லை யம்மை தொண்டு பூண்டு தம தண்டையி லிருக் கும் இத் தொண்டரைக் கொண்டே பண் டுள்ள திருப் பணி யனைத்தையும் பார்ப்பவர் கண் டுள்ளங் களிக்கும்படி புதுப்பித்து முடித்துக் கொள்ளுங் கருத் துடைய ளாய், ஓர் பிராமண கன்னிகை வடி வெடுத்து ஆண்டவ ருடைய கிரகத்திற் கெழுந்தருளி, ஆண்டவரது மாதாவைக் கண்டு, உமது மைந்தன் எங்கே என்று வினவ, அது கேட்ட ஆண்டவரது

தாயாரும், வெளியே போயின னென்று இனிமை யாய்ச் சொல்லித், திருநெல்லை யம்மையின் றிரு வுரு வான பிராமணக் கன்னிகையின் றிவ்விய வுருவத்தைக் கண்டு புளக முற்றுப் பரவச மாய் நிற்க, அத் திரு நெல்லை யம்மை யார் ஆண்டவரின் மாதாவைப் பார்த்து, உமது மைந்தன் கோவி லூருக்குச் சுவாமி தரிசநத்துக்கு வந்த பொழுது, வெய்யில் மழை இவைகட்கு யாவருக்கு முதவியா யிருந்த கொட்டகையைப் பிரித்து, அப்பாற்படுத்திவிட்டுக் கற் பணி யாகச் செய்விப்பே னென்று வாணத்தை வெட்டு வித்து,ஊருக்கு வந்தனன், அதற்கு வேண்டிய பிரயத்தநஞ் செய்யாம லிருப்பது உசித மல்ல, இனிச் சீக்கிரங் கோவி லூருக்கு வந்து, அத் திருப்பணியைத் தொடங்கச் சொல் லுதி யென்று, திரு வாய் மலர்ந்தருளி, அந்தர்த்தாந மாயி னள். உடனே ஆண்டவர் தமது கிரகத்திற்கு வரத்,தமது மாதா வானவள், நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லினள். அது கேட்ட ஆண்டவர்,மயிற்கூச் செறிந்து,கண்ணீர்வார, ஆநந்த பரவச ராய்ப் பிரமாதிகளாற்கநவினுங் காண்டற் கரிய ஞாந சொரூபி யாகிய அம்மையை நனவிற் கண்ட நீயே மகா பாக்கியவதி என்று, தாயாரை வியந்து கொண் டாடி "நன்க டம்பனைப் பெற்றவள் பங்கினன், றென்க டம்பைத்தி ருக்கரக் கோயிலான், றன்க டன்னடி யேனையுந் தாங்குத, லென்க டன்பணி செய்துகி டப்பதே", என்று திரு நாவுக் கரசு நாயனு ரொழுகிய வாறே, தாமு மொழுகி உலகத்திற் குபதேசிப்பா மெனத் திரு வுளங் கொண்டு, தம்மாற் பிரிக்கப்பட்ட அம்மையின் சந்நிதியி லிருந்த கூரைக் கொட்டகையை முன் எண்ணியபடி கற் பணி பணி யாய்ச் செய்வித்தற்கும், மற்று முள்ள திருப் பணி

யனைத்தையும், முடிப்பித்தற்கு மெண்ணங் கொண்டு, திரு நெல்லை யம்மையிடத் தன்பு பூண்டவ ராகிய ஆண்டவர், உடனே தமது திரு மனையினின்று மீண்டவ ராகி வேண்டிய திரவியஞ் சேகரித்தற் பொருட்டு பிரயத்தநப்பட்டனர்.

## இருபத்தே ழாவது

## ஸ்ரீ ஆண்டவர் இராம நாதன் செட்டியாரிடம் திருப் பணிக் காகத் திரவியம் வாங்க எழுந்தருளல்.

ஆண்டவர், சின்னாட் கழிந்து தேவிகோட்டை, வீரப்ப செட்டியார் குமாரர், இராம நாதன் செட்டியாரிடத்திற் றிரு நெல்லை யம்மையாரின் சந்நிதி மண்டபம் முதலிய திருப் பணி விஷய மாய்ப் பொருள் வாங்கும் நிமித்தம், அவ்வாலயத்தில் நெடு நா ளாகப் பன்ன சாலை கட்டிக் கொண்டு வசிக்கும் பிரம நிஷ்டாபர ரான நெய்க் கோணத்துச் சுவாமிகள் என்னுந் திரு நாம முடைய மகாநுபாவரைச் சகாய மாக அழைத்துக் கொண்டு சென்ற பொழுது, தாணுவய லென்னுங் கிராமத்தி லிருக்கின்ற ஏரிக் கரையி லுள்ள விருக்ஷத்தி னிழலிற் றங்கி யிருந்த சமயத்தில், நெய்க் கோணத்துச் சுவாமிகள், ஆண்டவரை நோக்கி, பேத மான விஷயங்களைக் குறிப்பித்துச் சுட்டி, இவை யாவும் உனக்கு எவ் வாறு தோன்றுகின்ற தென்று வினவ அது கேட்ட ஆண்டவர்,

*எண் சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்.*

சுவருறைபு மோவியங்கள் சுவரே யென்றல்
சுபாவமதி போற்பரத்திற் றோன்றுகின்ற,

பவமுதலாஞ் சங்கற்ப விகற்ப மெல்லாம்
பரவடிவாய்க் கண்டுபர வடிவ மான,
தவருறையுங் கழனிநகர்க் கொற்ற நாதன்
றனதருளாற் பேதமதி நாயி னேனுக்,
கிவனவனு னதுவென்னும் பேத மின்றி
யெவ்வுருவுஞ் சின்மயமா விருந்த வாறே.

என்று, தமது சுவாநுபூதியைச் சொல்லியருளினர். உடனே நெய்க்கோணத்துச் சுவாமிகள், அநுபூதி ரூப மான இக் கவியினைக் கேட்டு, அடங்கா மகிழ்ச்சி யடைந்தருளினர். ஆண்டவர் அங் கிருந்து அச் சுவாமிகளுடன் தேவி கோட்டைக்குச் சென்று, இராம நாதன் செட்டியாரிடம் வந்த விஷயத்தைச் சொல்ல, அவரும் அடி பணிந்து துதித்து அதிக அன்புடன் உபசரித்து, வேண்டிய திரவியங் கொடுக்க, அதனைப் பெற்றுக் கொண்டு, மீண்டுங் கோவிலூரை யடைந்து, மண்டப முதலிய திருப் பணியை ஆரம்பித்து நடத்தி வந்தனர்.

## இருபத் தெட் டாவது.

## ஸ்ரீ ஆண்டவர் குரு பூசை செய்தல்.

ஆண்டவர் அதன் பின்னர் தம தாசிரியருக்குப் பிரதம குரு பூசை செய்ய எத்தனித்து, அநேகம் பெரியோர் களை வர வழைத்து, மடாலயத்தில் அமிர்தமும் கைக்கும் படி, அறு சுவைக ளமைந்த அன்ன வர்க்கம், பாயசம், பக்ஷணம் முதலியவைகளை அபரிமித மாகப் பாகஞ் செய்து, முக் கனி தேன் பால் முதலியவைகளையுஞ் சேகரித்துக், கொற்றவா ளீசர்க்கும், திரு நெல்லை யம்மைக்கும், அபிடேகம் அலங்காரம் நிவேதநம் ஆராதநம் முதலியவைகளை

யுஞ், சிறப் பாகச் செய்வித்துத், தம்மிடத்து மிக்க அன்புடைய ராயும், முக்கிய சீட ராயு மிருக்கின்ற, பள்ளத் தூர் முத்து வீரப்பய்யா அவர்கள் சிரசின் மீது, ஒரு பெரிய தாம் பாளத்தில், மடத்திற் பாகஞ் செய்துள்ள அறு சுவை யுண்டிகளையும், கனி வர்க்கம் பக்ஷண வர்க்கங்களையும், எடுப்பித்துக் கொண்டு, அநேக வாத்திய கோஷங்களோடும் நர்த்தநங்களோடும், கொற்றவா ளீச ராலயப் பிரதக்ஷணஞ் செய்து, சந்நிதியை யடைந்து, தமது திருக் கரத்தால், ஒவ்வொரு பிடி அன்ன மாக, அடியார் குழாங்க ளனைவருக்கு மளித்து, மடத்துக் கெழுந்தருளி, யாவருக்குந் திருப்தி யாகப் போசந மளித்துக், களிப் படைந்து, இவ் வாறே, தமது திரு மேனி உள்ள காலம் வரை, குரு பூசையைச் சிறப் பாக நடத்தி வந்தனர்.

இரு பத் தொன்ப தாவது

## ஸ்ரீ ஆண்டவர் பஞ்சாக்கர குருவைத் துதித்தல்.

ஆண்டவர், இவ் விதம் பிரதம குரு பூசை நடத்திய காலத்துப், பூர்வந் தமக்கு வாலிபத்தில், பஞ்சாக்ஷர தீக்ஷை செய் தருளிய திருப் புனல் வாசல் சேநாதிபதி சுவாமிகள், கோவி லூருக்குச் சமீபத்தி லுள்ள பாதரக் குடியில் மடாலய மேற்படுத்திக் கொண்டிருந்தமையாற், குரு பூசை நடத்திய சமாசாரந் தெரிந்து, தேவி கோட்டை, இராம நாதன் செட்டியார் முதலிய நகரத்தாரை வர வழைத்து, ஆண்டவர் கோவி லூரிற், குரு பூசை நடாத்தியதைச் சொல்லிக், குரு வாகிய நா னிருக்கும் போது, இவ் வாறு, குரு பூசை செய்ய லாமா வென்று வினவ, அது கேட்ட, இராம நாதன் செட்டியார், ஆண்டவரிடம் வந்து, தெரிவிக்க, உடனே ஆண்டவர் பாதரக் குடிச் சுவாமிகள் மீது.

"அஞ்சக்க ரந்தன்னை யெஞ்சாது சிந்திக்கு மவர்கட்கோ ரல்ல லில்லை—யயனும்ப டைக்கரியை யான்மறலி கிட்டுகில னடையவேண் டுவது மில்லை, விஞ்சத்த நம்பூமி மைந்த ரொடு சுற்றமகல் வீடுதுணை யென்ன வேண்டார்—வீணன வாருறு மெண்ணார்கள் சொன்னாலும் மேலென்று சித்தம் வையார், மிஞ்சுற்ற விந்தவுப தேசந்த னைப்பெற்றோர் வெகுகாலம் வாழ்ந்தி ருப்பர்— மெய்யனே துய்யனே யையனே யப்பனே வேதாந்த மோந குருவே, மஞ்சுபதி ககனமென நிறையுஞ்சி தாகாச வடிவமே யெமது குருவே— வணிகர்குல வோஷதிக டழைய வுப தேசமழை மாருது பொழியு முகிலே" என

இவை முதலிய பத்துச் செய்யுட்களை, வணிகர் குல வோஷதிகள் தழைய வுபதேச மழை மாருது பொழியு முகிலே என மகுடஞ் சூட்டிப் பாடியருளி, அச் செய்யுட்கள் வரைந்த ஓலையின்கண், யான் செய்த குரு பூசை பொருள் வைத்த சேரியி லெழுந் தருளிய, எனது ஞானா சாரிய ராகிய உகந்த குரு சுவாமிகளுக் கென வரைந்து, ஓர் அந்தணர் கையிற் கொடுத்து, பாதரக்குடிச் சமய தீக்ஷா குரு வான ஸ்ரீ சேநாபதி சுவாமிகளிடத்தில் வாசித் துக் காட்டி வரும்படி அனுப்பியருளினர். அக் கவியைச் சேநாபதி சுவாமிகள் கேட்டு, அடங்காத மகிழ்ச்சி யோடும், அதி லுள்ள மகுடத்தை இன்னு மொருதரஞ் சொல் இன்னும் ஒரு தரம் சொல் எனக் கேட்டு. ஆநந்தக் கடலி லமிழ்ந்தி விபூதி கொடுத்தனுப்ப, அதை ஆண்டவர் அன்போடுந் தரித்துக் கொண்டருளினர்.

### முப்பதாவது

## ஸ்ரீ ஆண்டவர், வீர பத்திர சுவாமிகளை எதிர் கொளல்.

ஆண்டவர், இவ் வாறு, பிரதம குரு பூசை செய்து முடித்த பின்னர், பொருள் வைத்த சேரியில் ஆசாரிய ஸ்தாநத்தி லெழுந்தருளியிருக்கும் வீர பத்திர சுவாமிகள் உகந்த குரு சுவாமிகளின் அதிட்டாநத்திற் குரிய நித்திய நைமித்திய பூசைக்கும், மாகேசுவர பூசை, குரு பூசை முதலிய இன்னும் அநந்த விசேடங்களுக்கும், எக் காலமும், ஆண்டவரும், ஆண்டவரது சிட வர்க்கங்க ளனைவரும், அபிமாநத்துடன் வேண்டும் பொரு ளுதவ, அப் பொருளால் தமக் கேற்பட்ட மடாலயத்திற்கும், அதிஷ்டாநத்திற்கும், ஆண்டவருடைய அபிப்பிராயப் பிரகாரம் வேண்டிய செலவுகளை நடாத்தியும், மடாலயத் திருப் பணிகளைப் புதுப்பித்தும், பூமி முதலியவை சேகரித்தும், இந்தப் பிரகார மாக நாளுக்கு நாள் மிகச் சிறப் பாக, மற்று முள்ள கைங்கரியங்களையும், மனக் களிப்போடு நடாத்திவந்து, குரு மூர்த்தி யாகிய உகந்த குரு சுவாமிகட்கும், பிரதம குரு பூசையை வெகு விமரிசை யாகச் செய்து முடித்து, ஒரு காலத்தில் ஆண்டவரைப் பார்க்க வேண்டு மென்னுந் திருவுள்ளங் கொண்டு, தமது நகரத்தினின்று மெழுந்தருளிக், கோவி லூருக் கருகில், ஐயுளி அம்மை ஆலயத்து வீற்றிருந்து, தமது வரவை ஆண்டவருக்குப் புலப்படுத்த, உடனே ஆண்டவர், பழங் கற்கண்டு முதலிய பதார்த்தங்களைத் தாம்பாளத்தி லெடுத்துக் கொண்டு, நடந கீத வாத்தியங்களுடன் எதிர் சென்று,

"ஆக நற்கநக மேனி பெற்றுடைய
ராவி சற்றுமொரு பாவிக,
ளால மொத்தவிழி மேரு வொத்ததன
மாசை யொத்தவிலை கூறுவார்,
மூக விர்த்திகொடு மூட ரத்நமெனு
மூட னுனவனை வெல்லுவார்,
மோக மற்றவுனை நினையு மன்பரையு
மூழ்கு மாறுசெய வல்லரோ,
வேக போகசுக ரூப னுனவுனை
யானு நம்பினவ னுதலா,
வின்ன மங்கையர்கண் மையல் கொண்டுழல்வ
தென்ன பாவமிது வென்னவோ,
வேக முற்றுவரு கோப னேவுகணை
வெட்டி யட்டதொரு வீரனே
வேத ஆகமபு ராண ரூபமெனும்
வீர பத்திரசு வாமியே."

என்னு மிது முதலிய கவிகளையும், பாடித் துதித்து வணங்கி எழுந்து நிற்க, வீர பத்திர சுவாமிகள், ஆண்டவரை வாரி யணைத்துக், காடாலிங்கநஞ் செய்து கொண்டு, கிருஷ்ண பகவான் தரும ராசனை நமஸ்கரித்தது போன் றிருக்கிற தென் றுரைத்து, ஆசீர்வதித்து இருக்கும்படி ஆக்ஞாபிக்க, ஆண்டவர், அவ் வுத்திரவின்படி யிருந்து, பின்பு சகல மங்களத்தோடும், அவ் வீர பத்திர சுவாமிகளை அழைத்துக் கொண்டு வந்து, மடாலயத்தி லெழுந்தருளப்பண்ணி, நமஸ்கரித் தெழுந்து நிற்கையில, அவ் வீர பத்திர சுவாமி கள், விபூதி யளிக்கப் பெற்றுத் தரித்துக் கொண் டருளினர். பின்னர், வீர பத்திர சுவாமிகளும், சின்னுள் அவ் விடத்தில் வீற்றிருந்தருளி, மீண்டும் பொருள் வைத்த சேரிக்கு எழுந்

தருள வேண்டு மென்னும் திரு வுள்ளங் கொண்டதை, ஆண்டவ ருணர்ந்து, குரு தக்ஷிணை யாக, அள விரந்த திரவி யங்களைப் பே ரன்போடு கொடுத்து, அழைத்து வந்த முறையே, சில தூரம் அடியார்களுடன் சென்று, பன் முறை நமஸ்கரித்து, வழியனுப்பிவிட்டு, மீண்டும் மடா லயத்திற் கெழுந்தருளி, இவ் விதமாக வே, அநந்த முறை, வீர பத்திர சுவாமிகள், கோவி லூருக் கெழுந்தருளும் போ தெல்லாம், இம் முறையே உபசரித்து, அச் சுவாமி களைத், தம தாசாரிய ராகவே பாவித்து,இதைச் சிஷ்டாசார மாகக் கொண் டொழுகினர்.

முப் பத் தொன் றுவது

## ஸ்ரீ ஆண்டவரிடம், நல்லான் செட்டியார் பாடங் கேட்கப் போதல்,

மற்றொரு காலத்தில், ஆண்டவர், தமது சீட ராகிய நல்லான் செட்டியாரைப் பார்த்து, வேதாந்த சூடாமணி என்னும் சாஸ்திரத்தைப் பாடங்கேட்கும்படி உத்தரவு செய்ய, அது முதல், நல்லான் செட்டியார், ஆண்டவ ருத்தரவின்படியே,காரைக்குடியி லிருந்து, கோவி லூருக்கு வந்து,நா ளொன் றுக்கு, இரண்டு கவிக ளாக, ஆண்டவ ரிடத்திற் பாடங் கேட்டுக் கொள்வதும், மீண்டும் அன் றிரவே தமது நக ரடைவது மாகப் பிரதி தினமும் பாடங் கேட்டு வரு நாளில்,ஒரு நாள், கோவி லூருக்குப் பாடங் கேட்கப் போகும் போது, சித்திரை வெள்ளத்தில், மது நதிப் பெருக் கால் மார்க்கம் தடைபடக், கழனியின் வழி யாகச் சென்று, பாடம் தடைப்படக் கூடா தென்னுங் கருத்தின ராய், ஐயுளி யம்மையின் கோயிற் கருகுள்ள கோ ேனறிக் கண்மாய்க் கரை உடைப்பில் அஞ்சா திறங்

கினர். அவ் வெள்ளம் நல்லான் செட்டியாரை ஈர்த்துத்,
திரு நெல்லை யம்மையின் றிரு வருளால்,மது புஷ்கரணியின்
ஈசாநிய பாகத்தில், பிராணாபாய மின்றி ஒதுக்கிற்று. அச்
சமயத்தில், ஆண்டவரும், இவ் வெள்ளத்தினால் தென்னம்
பிள்ளைகளுக்கு கெடுதி நேரிட்டிருக்குமோ வென்று நோக்
குமா றெழுந்தருளி, அப்பிர வாகத்தில் சிரமத்தோ டொது
ங்கி வந்தவரைக் கண் ணுற்று, ஓர் ஏவலாளனை விளித்து,
வெள்ளத்தினின் றும் கடத்தச் செய்த பின் னர்,
அவர் நல்லான் செட்டியா ரெனத் தெரிந்து, சிரமபரிகாரஞ்
செய்வித்து, அடா நல்லான் இவ் வெள்ளத்தில் எங்கு வந்
தனை யென்று வினவ, பாடங் கேட்க வந்தே னென்னும்
அவரது மறு மொழியைத் திருச் செவி யேற்றருளி, அவ
ரது திட பக்திக்கு மிக வியப் படைந்து, இனிப் பாடங்
கேட்க வேண்டாம், என்னை நினைத்திருக்கக் கடவை
யென்று, நல்லான் செட்டியாருக்கு, அநுக்கிரகஞ் செய்
தருளினர். அவரும் சரீர முள்ள வரையில், அவ் வாக்கின்
யின் பிரகாரம் ஆண்டவரையே தியானித்து நற் கதி யடைந்
தனர்.

முப் பத் திரண் டாவது

## ஸ்ரீ ஆண்டவர், திரவியம் ஆர்ச்சித்து திருப் பணியை முடித்தல்.

ஆண்டவர், அதன் பின்னர், தமது இனத்தவர்க
ளாகிய நக வைசியர்களிடத்தினும், மாணாக்கர்களிடத்தி
னும், ஸ்ரீ கொற்ற வா ளீசர்,திரு நெல்லை யம்பாள் ஆலயத்
திருப் பணி விஷய மாய், வேண்டிய திரவிய மார்ச்சித்துக்
கொண்டு, கோவி லூருக் கெழுந்தருளி, அம்மையின் சந்
நிதி, மண்டபம் முதலிய அநேக மண்டபங்கள் இராச

கோபுரம் விமாநம், வாவீ, கூப, தடாகங்கள் நந்தவநம், தென்னஞ் சோலைகளால், நிறைந்த இராச வீதி, இரதம், சத்திரம், மடாலயம், பிரமாலயம், வன்னி விநாயக ராலயம், சிதம்பர விநாயக ராலயம் முதலிய அநேகந் திருப் பணிகளை, இத் தன்மைய தென உலகி லுள்ளோர்களாற் கணிக்கப்படாத சிறப்பினை யுடைய தாய்த் தொழிலாளர் மநங் களிப்பத் திரவியங்களைக் கொடுத்துச் செய்து முடித்தனர். பின்னுங், கல்லல், கானாடு காத்தான், சாக்கை முதலிய ஊர்களிலும், அள வின்றிய திருப் பணிகளை, அன்போடுஞ் செய்வித்துத் தம்மை யடைந்த அடியார்களை அன்ன முதலியவற்றா லாதரித்து, அவர்களுக்கு ஞாநாநுக்கிரகஞ் செய்துகொண்டு, சுவாநுபவத்தி லமிழ்ந்தி விநோதித்திருந்தனர்.

முப் பத்து மூன் றாவது.

## ஸ்ரீ ஆண்டவரை இராம நாதன் செட்டியார் முதலிய சீடர்கள் சரணடைதல்.

இவ் வித மாக ஆண்டவர், கொற்ற வா ளீச ராலயத் திருப் பணிகளைச் செய்தும், தம்மை வந்து சர ணடைந்த அடியவர்களுக் கெல்லாம் அன்னம் முதலியன யளித்தும், ஞாநாநுக்கிரகஞ் செய்தும், சுவாநுபூதி யுடன் விநோதித்திருக்குங் கால், ஆண்டவ ருடைய மகிமை யானது உலக முற்றும் பரவுதலால், ஆங் காங் குள்ள சாதந நிறைந்த சற் குண சம்பன்ன ரான முமுட்சுக்கள், அள விறந்தோர்கள் வந்து சர ணடைந்து,சிர வணாதிகள் செய்து கொண்டு வந்தனர். அக் காலையில்,தேவி கோட்டை வீரப்ப செட்டியார் குமாரர்,இராம நாதன் செட்டியார் சீவகாருண்யத்திற் சிறந்தவ ராயும், உதார குண முடையவ ராயும், மிகுந்த

தசிகராயும், குரு பக்தி, சிவ பக்தி அடியார் பத்திகளிற் சிறந்தவ ராயும், ஏனைய சற் குணங்க ளெல்லாம் நிறைந்த வ ராயும். இருந்தமைபால், ஆண்டவரைச் சர ணடைந்து, சற் சாஸ்திரம் பயின்று, அடிமைத் திறத் தொழுகிவந்த னர். பின் னொரு கால், தேவி கோட்டை, சுப்பிரமணியஞ் செட்டியார், குமாரர், அண்ணுமலை அய்யா வென்னும் நாம முள்ள குணக் கட லான ஒரு முமுட்சுவும், ஞானிச் சின்னுன் செட்டியா ரென்னும் நாம முடைய, சாதந நிறைந்த ஒரு முமுட்சுவும், அதிவிரக்தியோடும், ஆண்ட வரைச் சர ணடைந்து வழிபட்டு வந்தனர். பின்னர், நேமத்தான் பட்டிப் பெரிய கருப்பன் செட்டியார், குமார ராகிய பழ யப்பய்யா அவர்களும், கோட்டை யூர் இலட்சு மணன் செட்டியார், குமா ரராகிய அண்ணுமலை அய்யா அவர்களும், சிறு வயதிலே சாதந சதுட்டய சம்பத் துடை யவர் களாய், ஆண்ட வரைச் சர ணடைந்து விவேக வைராக் கியங்களிற் சிறந்து, சற் சாஸ்திரம் பயின்று, சமாதி நிஷ்டர் க ளாய், வெகு காலம் ஆண்டவ ருடைய பூரண கிருபை யைப் பெற்றுச், சந்நிதாநத்தை விட்டகலாது விளங்கினர். பிறகு, சின்னுட் கழித்து, இராய புரம், வெ. மு. முத்துக் கருப்பன் செட்டியார், குமாரர்க ளாகிய, இராம நாதன் செட்டியார் முதலிய அறுவர்களும், உதாரம் பக்தி முத லிய சற் குணங்களாற் சிறந்து விளங்கி, ஆண்டவ ருடைய மகிமையை உள்ளபடி யறிந்து, மெய் யன்போடும், ஆண்ட வரைச் சர ணடைந்து, தொண்டு செய்து வந்தனர். அப் பால், கண்ட னூர் கருத் தய்யா அவர்களும், அரிமளம் சுப்பிரமணிய அய்யா அவர்களும், இன்னும் அள விறந்த அடியார்களும், பன் னுளில் ஆண்டவரைச் சர ணடைந்து, சற் சாஸ்திரம் பயின்று வந்தனர். மேற் சொல்லிய, தேவி

கோட்டை வீரப்ப செட்டியார் குமாரரும், இராய புரம் முத்துச் கருப்பன் செட்டியார் குமாரர்களும், ஆகிய இரு திறத்தாரும், உபய நேத்திரம் போன்று, ஆண்டவருடைய திரு மடாலயத்தின்கண் வசிக்குஞ் சாதுக்களுக்கு அன்ன வஸ்திரம் முதலிய சம்ரக்ஷணையின் பொருட்டு, வேண்டுந் திரவியம் முதலியவற்றை யுதவி, ஆண்டவர், திரு நோக்கப் படி நடந்து அபிமானித்து வந்தனர்.

முப் பத்து நான் காவது

## ஸ்ரீ ஆண்டவர், திரு முக மறுப்பி மரத்தைக் கொணர்தல்.

மற்றொரு காலத்தில், ஆண்டவர் கொற்றவா ளீசர் சந்நிதானத்தின், குட வரை வாயிலுக்குக் கபாட மமைக்க வேண்டு மென்னுங் கருத் துடைய ராய், எவ் விடங்களி னும் பார்த்துப் பலகைக் கேற்ற மரம் அகப்படாமையின், பரியாலோசனை யோடிருக்குங் கால், திருக் கோஷ்டி யூருக்கு அடுத்த ஏரிக் கரையில், சடாமுசி வசித்துக் கொண்டிருக்கும் பெரிதான இலுப்பை மரம் ஒன் றிருப்ப தாகக் கேள்வியுற்று, அவ் வூரவரை அழைத்து மரத்தைத் தரும்படி கேட்க, அவ் வூரவர்கள், இம் மரத்தில் ஒரு சடா முசி வசிக்கின்றது, தங்களால் முடிந்தால், வெட்டிப் போய்ப் பலகைக் குபயோகிக்கலா மென்று சொல்ல, அவ் வார்த்தையைக் கேட்டருளிய ஆண்டவர், பணியாளரை அழைப்பித்து, அம் மரத்தை வெட்டிக் கோவி லூருக்கு எடுத்து வருவீர்க ளாயின், உங்களுக்குத் தக்க பரிசு கொடுப் போ மென் றுக்ஞாபிக்க, அதனைக் கேட்ட தொழிலாளர்கள், அம் மரத்தடியில், நாங்கள் செல்வோமாயின், அதி லுள்ள

சடா முனியால் எங்கள் குடி கெடுவது மல்லாமல், ஏழு தலை முறை பரியந்தம் உள்ளாரனைவரையும் தொடர்ந் தலைக்கு மெனச் சொல்ல, அதனைக் கேட்ட ஆண்டவர், ஏவலாளர்களை நோக்கி, நீங்கள் யாதொன்றுக்கும் அஞ்சா தீர்கள். யாந் திரு முக மொன்று கொடுக்கின்றோம். அதனை அவ் விலுப்பை மரத்திற் கட்டிவிட்டு, உடனே அம் மரத்தை வெட்டி வாருங்க ளென்று உத்தரவு கொடுக்க, அப் பணியாளர்கள், அக் கருத்திற் குடன்பட்டு நிற்றலும், ஆண்டவர், திருக் கரத்தால் ஓலையை வாரித் துண்டாக நறுக்கி, அதில் அவ் விலுப்பை மரம் எமது சிவ பிரா னுகிய கொற்றவா ளீச ராலயக் குடவரைக் கதவிற்கு வேண்டி யிருப்பதால், நீ அம் மரத்தை விட்டு வேறோர் மரத் திருக் கக் கடவை யென வரைந்து கொடுத்தனர். அத் தொழி லாளர்கள், ஆண்டவரது கட்டளைப்படி, அத் திரு முகத் தைக் கொடு சென்று, அச் சடா முநி யிருக்கும் அவ் விலுப்பை மரத்திற் கட்டிவிட்டு, உடனே அதனை வெட்டி வண்டியி லேற்றிக் கோவி லூருக்குக் கொண்டு வந்து சேர்க்க, அம் மரத்தைப் பலகையாக அறுத்துக் குடவறை கதவு செய்வித்தருளினர்.

முப் பத் தைந் தாவது

### *ஸ்ரீ ஆண்டவர், மட முதலியவை யியற்றும்படி அடியார்களுக்கு அநுக்கிரகித்தல்.*

ஆண்டவர் மற்றொரு போது, இல் லறத்திருக்கும் தமது மெய் யன்பர்க ளான அநேகம் அடியார்களைப் பார்த்துத் தங்கள் தங்கள் கிராமங்களில், ஏகாந்த மாய் வசித்தற்கும், செப தப மியற்றற்கும், தேவாராதநஞ் செய்

தற்கும், சிரவண மநநாதிகள் புரிதற்கும், சாதுக்கள் வசித் தற்கும், புட்பப் பணி நடாத்துதற்கும், மனோக்கிய மாக மடாலயங்களையும், நந்தந வநங்களையும், மற்றும், வாவி கூப தடாகாதிகளையும், சிவ விஷ்ணு பிரமாலயங்களையும், சத்திரம், பாட சாலை முதலிய சிவ புண்ணியங்களையும், ஏற்படுத்திக் கொண்டு, சற் சாஸ்திரத் துவார மாகச் சதா சாரங்களை யநுஷ்டித்து வரும்படி அநுக்கிரகிக்க, அவ் வாக்கியப் பிரகாரமே மடாலய முதலிய அனைத்தையு மியற்றி வருவது, இப் போதுங் கண்கூடாகவே இருக்கின் றது. இவ் வற்புதங்களைக் கண்ணுற்ற வரகவிச் சேந்தனிப் பழனி யப்பய்யா என்பவர்.

## விருத்தம்.

"மடமுண்டோ சிவாலயங்கள் மிகுதி யுண்டோ
வாசிட்டம் படிப்ப துண்டோ மனத்துண் ஞானத், திட
முண்டோ நால்வர்தமிழ் படிப்பா ருண்டே திவ்வியமா
முதாரமுதற் குணங்க ளுண்டோ, விடமுண்டோ னடியர்
குழா மிகுதி யுண்டோ மெய்யறஞ்சத் திரம்விரைப்பூங்
காவு முண்டோ, வடகைலைக் கிறைவனெனு முத்து ராம
வள்ளறிருக் கழனிநகர் வாரா முன்னம்."

என்னு மோர் செய்யுள் இயற்றினர்.

முப் பத் தா றுவது

## ஸ்ரீ ஆண்டவர், திரு மடாலயத்திற்குக் கிராமம் வாங்குதல்.

இப்படிச் சின் னுட் கழித்த பின், மேற் சொல்லிய தேவி கோட்டை, இராம நாதன் செட்டியாரும், இராய

புரம், முத்துக் கருப்பன் செட்டியார் குமாரர்களு மாகிய இரு திறத்தவரும், இல் லறத்தினை யுடைய ஏனைய அடியார் குழாங்களும், ஒருங்கு சேர்ந்து, பொரு ளுதவி செய்ய, அதனால் ஆண்டவர் களத்தூ ரென்னுங் கிராமத்தையும், அதற் குட் கடை யாக அநேக கிராமங்களையும் வாங்கி,இல் லறத்தும், துற வறத்து மொழுகுகின்ற தமது அடியார் குழாங்க ளனைவருக்கும், அன்ன வஸ்திர முதலியவை யளித்து ஞாநா நுக்கிரகஞ் செய்து வந்தனர்.

முப் பத் தே ழாவது

## *ஸ்ரீ ஆண்டவர், இராம நாதன் செட்டியார் ஐய மகற்றல்.*

மற் ெறாரு காலத்தில் மேற் சொல்லிய தேவி கோட்டை இராம நாதன் செட்டியார், மதுரையி லிருந்து கோவி லூருக்கு வந்த போது, ஆண்டவரைத் தரிசித்துச் சுவாமி தெய்வத்தைத் தெரிந்து ஆராதிப்பதற்குத் தபசு, அல்லது யோகம் அல்லது குருவி னுபதேச மாகிய இம் மூன்று மன்றிக் கூடுமா வென்று, பிரசிநஞ் செய்ய, அக் காலையில் ஆண்டவர் அதற் குத்தர மாக.

*வெண்பா*

செய்யுந் தவமுந் திரயோக நிட்டைகளுஞ் ,
செய்யு முபதேசந் திரபூசை—யையமறச்,
சொல்வேன் சுதந்தரனை யன்றியுல கென்ப,
தில்லென்று ணருமி தே.
தெய்வ வடிவறிந்தத் தேவதையைப் பூசைபண்ணத்,
தெய்வ வடிவாந் திறங்கேளீ—ரையமினால்,

சற்குருவாற் ருனுணர்தல் சந்ததமுஞ் சிந்தித்த,
னிற்குமது வானதி லே.

என்னும் வெண்பாக்களைத் திரு வாய்மலர்ந்தருளினர். வேறோர் சமயத்தில், அவ் விராம நாதன் செட்டியார் இலக்கணமும், குறளும், வாசிக்கின்ருரென்று ஆண்டவர் திருச் செவியிற் கேள்வியுற்று, அப் பொழுது,

வெண்பா

ஈயக்க திராமி லக்கணமு மின்குறளு,
மாயப்பொ ருளாவ றைந்தா லு—நோயகலா,
துன்னைம றந்தவொரு துரியபூ மியிலே
மன்னியி ருக்கம தி.

என்னும் வெண்பாவைத் திரு வாக்கினல் அருளிச் செய்து எழுதி அநுப்பினர்.

முப் பத் தெ ட்டாவது

## ஸ்ரீ ஆண்டவரைத் துறவு சுவாமிகள் சரணடைதல்.

வேறொர் தருணத்தில், தேவி கோட்டை வினை தீர்த்தான் செட்டியார், குமார ராகிய, அருணசல சுவாமிகளும், கண்டனூர், பெரிய கருப்பன் செட்டியார், குமார ராகிய அருணசல சுவாமிகளு மாகிய இவ் விரண்டு மகான்களும், சகல சற் குணங்களு மமர்ந்து, சாதநங்கணிறைந்து, பக்குவிக ளாய்க், கோவிலூ ரடைந்து ஆண்டவர் திரு வடிகளைப் பணிந்து, அடைக்கலம் புகுந்து, ஆப்தாதி பணிவிடைகளைப் புரிந்து, குருவின் றிருவருளைப் பெற்று, சதா சத் சாஸ்திரம் பயின்று வந்தனர்.

## 6. கோவிலூர் ஆண்டவர்

முப் பத் தொன்ப தாவது

### ஸ்ரீ ஆண்டவர், கைலாய நாதரையும், நித்திய கல்யாணி யம்மையையும், கொணர்தல்.

ஒரு நாள், ஆண்டவர், குட்டைய ஞசாரியை யழைத்துக் கொண்டு போய் அதளக் கண்மாயிற் பூசை, நைவேத்திய மின்றி வெய்யிலி லிருந்த அகத்தீசுவர ரென் னும், மகா லிங்கத்தை எடுத்து வரச் செய்து கொற்றவா ளீச ராலயத்தில், ஓர் புரத்தில் தாபிக்குந் திரு வுள்ள முடை யராய்க், கிழக்கு நோக்கிச் சென்ற பொழுது, பூர்வம் ஒரு காலத்தில் பஞ்சாக்கர நாயகி ஆலயத்திற்கு, வடபா லுள்ள குப்புச்சி, ஊருணிக் கருகில், மறவன் கோட்டை யென் னும் ஒரு பெரிய கிராம மிருந்து அழிந்து போக, அங் கெழுந்தருளியிருந்த கைலாய நாதர் ஆலயமும், நித்திய கல்யாணி யம்மை ஆலயமும், அழியாதிருந்தமையாற் கொற்றவா ளீச ராலயக் குருக்களையே அவ் வாலயத்திற் குச் சென்று, திநம் ஒரு காலம் மட்டும் பூசித்து வரும்படி ஆண்டவர், நியமித்திருந்தமையின், அவ் வாலயத்தி லெழுந்தருளியிருக்கும், நித்திய கல்யாணி யம்மையார், ஒரு பனை யுயரத்திற்கு மேற்பட்டு அந்தரத்தில் வெண்பட் டாடை யுடுத்து, அந்தணர் கன்னிகையைப் போன்று திவ்விய ரூபத்துடன் நேரில் பிரசந்ந மாகி, ஆண்டவரை நோக்கி, அப்பா வென்று, விளித்து, ஓர் கும்ப சலத்திற் கும், ஓர் உண்டை யந்நத்திற்கும், ஈண் டிருவருங் காத் திருக்கின்றோ மென்று, சொல்லி, அந்தர்த் தாந மாயினள். உடனே, ஆண்டவர், வடக்கு நோக்கிச் சென்று, பணி யாளர்களை ஏவிக் கும்ப ஸ்தாபந முதலிய வொன்று மின்றி, கைலாச நாதரையும், நித்திய கல்யாணி யம்மையாரையும்,

எழுந்தருளப் பண்ணிக், கொற்றவா ளீச ராலயத்திற்குக் கொண்டு வந்து திரு நெல்லை யம்மையா ராலயத்திற்கும், கொற்றவா ளீச ராலயத்திற்கும், மத்தியிற் ருபிக்கத் திருவுள்ளங் கொண்டனர். அக் கொற்றவா ளீசுவர ராலயத்திற்கும், திரு நெல்லை யம்பா ளலயத்திற்கும், மத்தியில், அவ் வூரவர்கள் நீண்ட கால மாய் ஒரு துஷ்ட தேவதையை ஓர் சிலையில் எந்திர மமைத்து, அதிற் ருபித்து, வருடத்துக் கொரு எருமைக் கடாப் பலி கொடுத்து, வழிபட்டு வந்தனர். அச் சிலையைச் சிவாலயத்தை விட்டு, அப்புறப்படுத்துங் கருத்து, ஆண்டவருக்கு, வெகு நாட்டொடங்கி இருந்தமையின், பணியாளர்களைப் பார்த்து, இத் துஷ்ட தேவதை சிவாலயத் திருப்பது முறையல்ல இப் பீடத்தைப் பெயர்த்துக் கண்மாயிற் போட்டுவிடுமென் ருக்ஞாபித்தனர். இங்ஙனங் கூறிய, ஆண்டவர், திரு வார்த்தை, அத் தொழிலாளர்கள் செவிப்படவே, அவர்கள், மனம் பதறி, யுடல் நடுங்கி, வெயர்த்து, ஓ கோ ஆண்டவரே, இப் பீடத்தைப் பெயர்க்க மனந் துணிந்து, கடப் பாரையைக் கையாற் றீண்டுவோ மாயின், நிச்சயமாக எங்கள் குடி முழுவதுங் கெடும் என்பதற்குச் சந்தேக மில்லை. ஆகலின், யாங்க ளதற்குடன்படோ மென்று அகன்று, நிற்க. அது கண்ட ஆண்டவர், ஆனல் நீங்கள் போங்க ளென்றவர்களை யகற்றித், தாமே தமது திருக் கரத்தாற், கட்டப்பாரையை எடுத்து, அப் பீடத்தை யிடித்துப் பெயர்த்து விட்டனர். அது கண்ட, தொழிலாளர்கள் ஆண்டவரே! இனி யாங்க ளஞ்சோம் தேவரீர் கிருபாபலங் கொண்டு, இப் பீடத்தைக் கண்மாயிற் போட்டுவிடுகின்ருே மென்று, எடுத்துக் கொண்டு போய்க், கண்மாயிற் போட்டுவிட்டார்கள். அது முதல், அத் துட்ட

தேவதை, அவ் வூரி லுள்ள இளம் பெண்க ளனைவரையும் பற்றி யலைத்து வந்தது, ஆண்டவர் ஒரு நாள், வீதியிற் போம் பொழுது, ஓர் விருத்தை, இதோ போகிற இவ ரல்லவா உன்னைப் பேர்த் தெறிந்தவர். வாளா விருந்த எங் கள் பெண்களை இவ் வா றலைப்பது நினக்கு நீதியா வென்று சொல்லினள். அப் போது, அத் தேவதை, அவ ளைப் பார்த்து, அடி! அதுவோ, வெட்ட வெளி, அதனிடத் தெனதாற்றல் செல்லா தென்று சொல் லிப், பின்னும் சின்னு ளளவும், அவ் வூரவரை யலைக்க, அவ் வூரவர் யாவரும் ஒருங்கு சேர்ந்து, ஆலோசித்துக் கண்மாய்ப் புறக் கரையில் அப் பீடத்தைத தாபித்து, அத் தேவதையை முன் போல வழிபட்டு வந்தனர் ஆண்டவர், முன் றிரு வுள்ளங் கொண்டபடி, அவ் வாலயத்தில் அப் பீட மிருந்த விடத்திற் கைலாச நாதருக்கும், நித்திய கல்யாணி யம்மையாருக்கும், சிறப் பாக வாலய மெடுப் பித்து ஸ்தாபித்து, அபிடேக நைவேத்தியம் ஆராதந முத லிய பல சிறப்புங், கொற்றவா ளீசற்குந், திரு நெல்லை யம்மைக்குந் நடந்து வருவது போன்று, எந் நாளும் நடந்து வரும்படி செய்வித்தனர்.

நாற் ப தாவது

## ஸ்ரீ ஆண்டவர், பஞ்சாக்கர நாயகி ஆலயத் திருப் பணி முடித்தல்.

முன்னர், கைலாய நாதரையும், நித்திய கல்யாணி யம்மையா ரையும், மறவன் கோட்டையி லிருந்து, ஆண்ட வர் கொணர்ந்த பொழுது, அங் கிருந்த பஞ்சாக்கர நாயகி யம்மையார், ஆண்டவரைப் பார்த்து, நான் மாத்திர மிவ்

எழுந்தருளப் பண்ணிக், கொற்றவா ளீச ராலயத்திற்குக் கொண்டு வந்து திரு நெல்லை யம்மையா ராலயத்திற்கும், கொற்றவா ளீச ராலயத்திற்கும், மத்தியிற் ரூபிக்கத் திரு வுள்ளங் கொண்டனர். அக் கொற்ற வா ளீசுவர ராலயத் திற்கும், திரு நெல்லை யம்பா ளலயத்திற்கும், மத்தியில், அவ் வூரவர்கள் நீண்ட கால மாய் ஒரு துஷ்ட தேவ தையை ஓர் சிலையில் எந்திர மமைத்து, அதிற் ரூபித்து, வருடத்துக் கொரு எருமைக் கடாப் பலி கொடுத்து, வழி பட்டு வந்தனர். அச் சிலையைச் சிவாலயத்தை விட்டு, அப்புறப்படுத்துங் கருத்து, ஆண்டவருக்கு, வெகு நாட் டொடங்கி இருந்தமையின், பணியாளர்களைப் பார்த்து, இத் துஷ்ட தேவதை சிவாலயத் திருப்பது முறையல்ல இப் பீடத்தைப் பெயர்த்துக் கண்மாயிற் போட்டுவிடு மென் ருக்ஞாபித்தனர். இங்ஙனங் கூறிய, ஆண்டவர், திரு வார்த்தை,அத் தொழிலாளர்கள் செவிப்படவே,அவர் கள், மனம் பதறி, யுடல் நடுங்கி, வெயர்த்து, ஓ கோ ஆண்டவரே, இப் பீடத்தைப் பெயர்க்க மனந் துணிந்து, கடப் பாரையைக் கையாற் றீண்டு வோ மாயின், நிச்சய மாக எங்கள் குடி முழுவதுங் கெடும் என்பதற்குச் சந் தேக மில்லை. ஆகலின், யாங்க ளதற்குடன்படோ மென்று அகன்று, நிற்க. அது கண்ட ஆண்டவர், ஆனால் நீங்கள் போங்க ளென்றவர்களை யகற்றித்,தாமே தமது திருக் கரத் தாற், கட்டப்பாரையை எடுத்து, அப் பீடத்தை யிடித் துப் பெயர்த்து விட்டனர். அது கண்ட, தொழிலாளர்கள் ஆண்டவரே! இனி யாங்க ளஞ்சோம் தேவரீர் கிருபாபலங் கொண்டு, இப் பீடத்தைக் கண்மாயிற் போட்டுவிடு கின்றோ மென்று, எடுத்துக் கொண்டு போய்க், கண்மா யிற் போட்டுவிட்டார்கள். அது முதல், அத் துட்ட

தேவதை, அவ் வூரி லுள்ள இளம் பெண்க ளனைவரையும் பற்றி யலைத்து வந்தது, ஆண்டவர் ஒரு நாள், வீதியிற் போம் பொழுது, ஓர் விருத்தை, இதோ போகிற இவ ரல்லவா உன்னைப் பேர்த் தெறிந்தவர். வாளா விருந்த எங் கள் பெண்களை இவ் வா றலைப்பது நினக்கு நீதியா வென்று சொல்லினள். அப் போது, அத் தேவதை, அவ ளைப் பார்த்து, அடி! அதுவோ, வெட்ட வெளி, அதனிடத் தெ னதாற்றல் செல்லா தென்று சொல் லிப், பின்னும் சின்னா ளளவும், அவ் வூரவரை யலைக்க, அவ் வூரவர் யாவரும் ஒருங்கு சேர்ந்து, ஆலோசித்துக் கண்மாய்ப் புறக் கரையில் அப் பீடத்தைத தாபித்து, அத் தேவதையை முன் போல வழிபட்டு வந்தனர் ஆண்டவர், முன் றிரு வுள்ளங் கொண்டபடி, அவ் வாலயத்தில் அப் பீட மிருந்த விடத்திற் கைலாச நாதருக்கும், நித்திய கல்யாணி யம்மையாருக்கும், சிறப் பாக வாலய மெடுப் பித்து ஸ்தாபித்து, அபிடேக நைவேத்தியம் ஆராதந முத லிய பல சிறப்புங், கொற்றவா ளீசற்குந், திரு நெல்லை யம்மைக்குந் நடந்து வருவது போன்று, எந் நாளும் நடந்து வரும்படி செய்வித்தனர்.

நாற் ப தாவது

## ஸ்ரீ ஆண்டவர், பஞ்சாக்கர நாயகி ஆலயத் திருப் பணி முடித்தல்.

முன்னர், கைலாய நாதரையும், நித்திய கல்யாணி யம்மையாரையும், மறவன் கோட்டையி லிருந்து, ஆண்ட வர் கொணர்ந்த பொழுது, அங் கிருந்த பஞ்சாக்கர நாயகி யம்மையார், ஆண்டவரைப் பார்த்து, நான் மாத்திர மிவ்

விடத்துத் தனித் திருப்பது உமக்கு நீதியோ வென்று சொன்ன அசரீரி வாக்கை ஆண்டவர் முன்னும், குட்டை யனுசாரி பின்னு மாக வரும் பொழுது செவியுற்று நின்று, உடனே அவ் வம்மையாரையும், எடுத்து வந்து, ஏரிப் புறக்கரையில் ஆலய மெடுப்பித்துத் தாபிக்குங் கருத்தோடு, அவ் வாலயத் திருப் பணி செய்து வருங் காலையில், ஒரு நாள் ஆண்டவரைத் தரிசிக்க வந்த தமது பிரதம சிஷ்ய ராகிய நல்லான் செட்டியார், திரு நெல்லை யம்மையார் திருப் பணிக்கு ஆர்ச்சித்த திரவியத்தைப் பிடாரிக்குச் செல விடுதல் நியாயமா, இஃ தென்னை யென்று பிடாரியைத் தாழ்த்திச் சொல்ல, அதனைத் திருச் செவி ஏற்றருளிய ஆண் டவர்.

*நேரிசைக் கட்டளைக் கலித் துறை.*

கண்ட பொருளல்ல காணுப் பொருளல்ல
கண்டபொருண்,
மண்டு மிருளல்ல மாயு மொளியல்ல
மன்னுமொளி,
பண்டென் பதுமல்ல வின்றென்பதல்ல
பராபரமா,
மண்டம டங்கவ டங்காப்பெ ருவெளி
யையுளியே.

என்னும் கவியைத் திரு வாய் மலர்ந்து, இத் தன்மை யான ஐயுளி யம்மையாரை அடா நல்லான் நீ தாழ்வாகக் கருது வது, உன் அறியாமை என்று நகைத்து, அவருக்கு விடை கொடுத்தனுப்பிய பின்னர், அத் திருப் பணியை முடித்து, அவ் வம்மையாரை ஆலயத்தி லெழுந்தருளப் பண்ணிக் கும்பாபிடேகஞ் செய்வித்துக், கொற்ற வாளீச ராலயத்

திருந்து, ஒரு கால பூசை எப் பொழுதும் நடத்தி வரும் படி நியமித்தனர். அது போலவே இன்றும் நடந்துவரு கின்றது.

நாற்பத் தொன்றுவது

## ஸ்ரீ ஆண்டவர், அகஸ்தீசுவரரைக் கொணர்தல்.

பின் னொரு நாள் ஆண்டவர், முன் திரு வுளங் கொண்ட பிரகாரம் தொழிலாளர்களைக் கொண்டு, அதளக் கண்மாயி லிருந்த அகத்திசுவரரையு மெடுப்பித்து வந்து ஆலயத்துட் பிரதிஷ்டை செய்து, பூசை, நிவேதனங்களுந் தினந் தோறுஞ் சிறப்பாக நடத்திப் பிற்காலத்தும் பரம் பரையாக அடியார் குழாங்க ளிருந்து அவ்வாறே, நடத்தி வரும்படி உத்தரவு செய்தருளினர்.

நாற் பத் திரண் டாவது

## ஸ்ரீ ஆண்டவர், இராய புரம், அப்புக் குட்டிச் செட்டியாருக்குத் திரு முகம் அனுப்புதல்.

மற் றொரு காலத்தில், ஆண்டவர் இராய புரம் அப்புக் குட்டிச் செட்டியாருக்கு

*அகவற்பா*

பாருந் திசையும் படரொளியா லேநிறைந்தான்
றாருந் தலையுமிலாத் தோன்றலான்—வேராகி,
வித்தாகி வித்தின் முளையாய் விளங்குதனிச்
சத்தாகிப் பூதங்க டானாகிச் சத்த
வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பா ழுக்கப்பா
லுறுபொரு ளாய்நின்ற வொருவன்

16

றிருவருளால் அநேகவித அஷ்ட ஐசுவரியமும், சாது சங்கச் சிரத்தையும், பகவற் பத்தியும், நிரந்தர முண்டாக வேண்டு மென்று சிந்திக்கின்றேன். இக் காலம் பத்துப் பொதி நெல் அனுப்பினால், மிகச் சகாயமா யிருக்கு மென்று வரைந்து, அத் திருமுகத்தை யனுப்பியருள, அதனைப் பெற்ற அப்புக் குட்டிச் செட்டியார் பே ராநந்த முற்று, அத் திருமுகத்தில், ஆக்ஞாபித்த வண்ணம், நெல் அனுப்பி, ஆண்டவர் திரு வருளைப் பெற்றனர். பின் னொரு காலத்தில், அவ் வப்புக் குட்டிச் செட்டியாருக்குப் புத்திர சோக நீங்க.

கனவிற் குழவி மலடி பெற் றுளுட் களித்தவள்தா
னனவிற் கருதப் பொய்யா னதுபோ னனவினுற்ற,
தனமிக்க மக்களும பெண்டீருஞ் சுற்றமுந் தன்னுடம்பும்,
இனமுற்ற வென்னை யறியப்பொய் யாகியி ருந்ததுவே.

என்னுங் கவியைத் திரு வாய் மலர்ந்து எழுதியனுப்பினர். அதன்பின் (இதைய சிந்தாமணி வாட்டஞ் சிதையாப் பரம சுகம் உண் ணுட்டம் பெற்று லெந்நாளு மின்பம்) என்னும் இப்படிப்பட்ட அற்புத வாக்கியங்களையும், பன்முறை அப்புக்குட்டிச் செட்டியாருக்கு அநுக்கிரகித்திருக் கின்றனர்.

நாற்பத்து மூன்று வது

## ஸ்ரீ ஆண்டவர் நல்லான் செட்டியார் முன்னிலையிற் றமது பிரபாவத்தை வெளியிடல்.

ஒரு நாள் தேவாலயத்திற்கு நேரி லுள்ள கழனியில், நெற் கதி ரறுக்குங் காலத்தில், ஆண்டவர் விநோத மாகச் சென்று வரப்பி லெழுந் தருளியிருந்தனர், அக் காலையிற் றமதன்ப ரான நல்லான் செட்டியார், ஒரு காரியார்த்த

மாசத் திரு நெல்லை யம்பாள் சந்நிதியில் நன் னிமித்தங் கேட்கும் பொருட்டு, காரைக் குடியி னின்று, அம் மார்க்க மாக வந்து, ஆண்டவரைத் தரிசித்து வணங்கி நிற்க, அப் பொழுது ஆண்டவர், இங்கு வந்த காரியம் என்ன வென்று வினவினர். அது கேட்ட நல்லான் செட்டியார், ஒரு காரியத்தை முன்னிட்டுத் திரு நெல்லையம்பாள் சந்நிதி யில் நிமித்தங் கேட்கும் பொருட்டு வந்தே னென்று கூறிய வளவில், நன் னிமித்த மாகாது மீண்டும் வீட்டுக்குச் செல லக் கடவை என்று ஆண்டவர் உத்தரவு செய்தருளினர். நல்லான் செட்டியார் அவ் வாக்கியத்திற் சிரத்தையுள்ளவ ராயினும், நன் னிமித்தம் கேட்கும் வேட்கையால் திரு நெல்லையம்மையின் சன்னிதியிற் சென்று நமஸ்கரித்து, நிற்க, அங்கு உத்தர கெவுளி சொல்லிற்று, அதைக் கேட்டு ஆண்டவ ருத்தரவு செய்திருக்கவும், அதை மதியாமல் இங்கு வந்தோமே, நமது மதி எப்போதும் இப்படி மயக்க முற்றிருக்கின்றதே என்று மனக் கவலையோடு மீண்டும் நல்லான் செட்டியார் ஆண்டவரிடம் வந்து, ஒதுங்கி நிற் கும் போது, ஆண்டவர் பார்த்து நான் கோவிலுக்குள்ளே யிருந்து பல்லி யாய்க் கூப்பிட்டால் தானே நீ நம்புவாய் அங்கு யாது உத்தரவாயிற்று என்று வினவ, அம்பாள் இங்கிருந்து முன்னமே உத்தர வளித்தும் அறியாமை யினால், மயக்க முற்றுச் சென்றே னென்று சொல்லி நமஸ் கரித் தெழுந்து காரைக் குடிக்குச் சென்றனர்.

நாற் பத்து நான் காவது

## ஸ்ரீ ஆண்டவர் பேத திருஷ்டி நீங்கும்படி அநுக்கிரகித்தல

ஒரு நாள் முக்கிய சிஷிய ராகிய பள்ளத் தூர் சிங்கய்யா அவர்கள், ஆண்டவரது திரு முகம் நோக்கி, சுவாமி பேத

திருஷ்டி எப் பொழுது நீங்கு மென வினவ, அப் பொழுது ஆண்டவர்.

## எண் சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்

விண்ணுதி பூதமெலாஞ் சிவமே யாகு
மெய்யுருவும் பொய்யுருவுஞ் சிவமே யாகுங்,
கண்ணுன வேதமெலாஞ் சிவமே யாகுங்
கருதுகின்ற நினைவெல்லாஞ் சிவமே யாகு,
மெண்ணிறந்த பேதமெலாஞ் சிவமே யாகு
மிப்படியே தினந்தோறுங் காண்பா னுகிற்,
பெண்ணுணு மலியாகும் பேத மின்றிப்
பிரமமய மாதறிண்ணம் பேத மின்றே.

என்னுங் கவியைத் திரு வாய் மலர்ந்தருளினர்.

நாற் பத் தைந் தாவது

## ஸ்ரீ ஆண்டவரை மெய்யப்ப செட்டியார் உபதேசிக்கும்படி பிரார்த்தித்தல்.

பின் னெருநாள், ஆண்டவர், காரைக் குடிக் கெழுந்தருளிய காலையில், அழகன் செட்டியார் குமாரர் மெய்யப்ப செட்டியா ரென்பவர் ஆண்டவரிடம் வந்து எனக் கொருபதேசஞ் செய்தருள வேண்டு மெனப் பிரார்த்திக்க, அதற்கு ஆண்டவர், மெய்யப்ப செட்டியாரை நோக்கி, அமாவாசை யிரு ளல்லவா, உப தேசிக்க ஒன்றும் விளங்காதே யென உத்தர வளித்தனர். சின்னுட் போயபின், ஆண்டவர் கோயிலூரி லெழுந் தருளியிருக்கும் பொழுது, அம் மெய்யப்ப செட்டியார் காரைக் குடியில் தங்கள் குளக் கரையி லிருக்குங் கல் மண்

டபத்தில் வந்திருந்த ஓர் உத்திர தேசத்துச் சந்நியாசியிடஞ் சென்று, நமஸ்கரித்து நின்று, யா தேனு முபதேசித்தருளல் வேண்டு மென்று, பிரார்த்திக்க, அப் பிராமண சந்நியாசியார் எல்லா விஷயங்களையும் மண்மய மாய்ப் பா ரென்று அநுக்கிரகிக்க, அம் மொழியைக் கேட்டுக் கொண்டு, உடனே கோவி லூருக்குச் சென்று, திரு நெல்லை யம்பாள் சந்நிதியில், ஆண்டவரைத் தரிசித்து, வணங்கி சுவாமின், காரைக்குடி மேலக் குளத்துக் கீழ்க்கரையி லுள்ள கல் மண்டபத்தில், உத்தர தேசத்தி லிருந்து, ஓர் பிராமணச் சந்நியாசி வந்திருக்கின்றனர், அவரை உபதேசிக்கும்படி அடியேன் பிரார்த்தித்த போது, அதற்கு, அவர் எல்லாம் மண்மய மெனப் பார்க்கும்படி உபதேசித்தருளினர். அது சரிதானு வென்று தெரிந்து கொள்ளும் பொருட்டு வந்தேன், அநுக்கிரகஞ் செய்ய வேண்டு மென்று பிரார்த்தித்தனர், ஆண்டவர், அது கேட்டு, அச் சந்நியாசி யருளியதும் மண் மயந் தான், வேத சாஸ்திரங்கள் பிரதிபாதிப்பதும் மண் மயந் தான், வசிட்ட வியாசாதிகள் அநுக்கிரகஞ் செய்தருளியதும், மண் மயந் தான், ஈசுராதிகள் அநுக்கிரகித்ததும் மண் மயந் தான். இந்தத் திரு நெல்லையம்மை யறிய, எனது சம்மதமும் மண் மயந் தான் என்று உறுதியாக உத்தர வளித்தனர். அது கேட்ட மெய்யப்ப செட்டியார், சந்தோஷ மாய் நமஸ்கரித்து, உத்தரவு பெற்றுக் கொண்டு, தமது நகரத்துக்குச் சென்று, அவ் வுபதேசத்தைச் சிரத்தையுடன் வெகு காலம் அநுஷ்டித்து வந்து நன்மை யடைந்தனர்.

நாற்பத்தாறுவது

## ஸ்ரீ ஆண்டவர் அகங்கார மகலும்படி அநுக்கிரகித்தல்.

ஒரு நாள் ஆண்டவர், கொற்றவாளீசராலயத்திருக்கும் பொழுது தமது முக்கிய சிஷ்யரான பள்ளத்தூரய்யா

திருஷ்டி எப் பொழுது நீங்கு மென வினவ, அப் பொழுது ஆண்டவர்.

*எண் சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்*

விண்ணாதி பூதமெலாஞ் சிவமே யாகு
மெய்யுருவும் பொய்யுருவுஞ் சிவமே யாகுங்,
கண்ணான வேதமெலாஞ் சிவமே யாகுங்
கருதுகின்ற நினைவெல்லாஞ் சிவமே யாகு,
மெண்ணிறந்த பேதமெலாஞ் சிவமே யாகு
மிப்படியே தினந்தோறுங் காண்பா னாகிற்,
பெண்ணாண மலியாகும் பேத மின்றிப்
பிரமமய மாதறிண்ணம் பேத மின்றே.

என்னுங் கவியைத் திரு வாய் மலர்ந்தருளினர்.

நாற்பத் தைந் தாவது

## *ஸ்ரீ ஆண்டவரை மெய்யப்ப செட்டியார் உபதேசிக்கும்படி பிரார்த்தித்தல்.*

பின் னொரு நாள், ஆண்டவர், காரைக் குடிக் கெழுந்தருளிய காலையில், அழகன் செட்டியார் குமாரர் மெய்யப்ப செட்டியா ரென்பவர் ஆண்டவரிடம் வந்து எனக் கொருபதேசஞ் செய்தருள வேண்டு மெனப் பிரார்த்திக்க, அதற்கு ஆண்டவர், மெய்யப்ப செட்டியாரை நோக்கி, அமாவாசை யிரு ளல்லவா, உப தேசிக்க ஒன்றும் விளங்காதே யென உத்தர வளித்தனர். சின் னாட் போய பின், ஆண்டவர் கோயிலூரி லெழுந் தருளியிருக்கும் பொழுது, அம் மெய்யப்ப செட்டியார் காரைக் குடியில் தங்கள் குளக் கரையி லிருக்குங் கல் மண்

டபத்தில் வந்திருந்த ஓர் உத்திர தேசத்துச் சந்நியாசியிடஞ் சென்று, நமஸ்கரித்து நின்று, யாதேனு முபதேசித்தருளல் வேண்டு மென்று, பிரார்த்திக்க, அப் பிராமண சந்நியாசி யார் எல்லா விஷயங்களையும் மண்மய மாய்ப் பாரென்று அநுக்கிரகிக்க, அம் மொழியைக் கேட்டுக் கொண்டு, உடனே கோவி லூருக்குச் சென்று, திரு நெல்லை யம்பாள் சந்நிதியில், ஆண்டவரைத் தரிசித்து, வணங்கி சுவாமின், காரைக்குடி மேலக் குளத்துக் கீழ்க்கரையி லுள்ள கல் மண்டபத்தில், உத்தர தேசத்தி லிருந்து, ஓர் பிராமணச் சந்நியாசி வந்திருக்கின்றனர், அவரை உபதேசிக்கும்படி அடியேன் பிரார்த்தித்த போது, அதற்கு, அவர் எல்லாம் மண்மய மெனப் பார்க்கும்படி உபதேசித்தருளினர். அது சரிதானு வென்று தெரிந்து கொள்ளும் பொருட்டு வந் தேன், அநுக்கிரகஞ் செய்ய வேண்டு மென்று பிரார்த்தித் தனர், ஆண்டவர், அது கேட்டு, அச் சந்நியாசி யருளி யதும் மண் மயந் தான், வேத சாஸ்திரங்கள் பிரதிபாதிப் பதும் மண் மயந் தான், வசிட்ட வியாசாதிகள் அநுக் கிரகஞ் செய்தருளியதும், மண் மயந் தான், ஈசுராதிகள் அநுக்கிரகித்ததும் மண் மயந் தான். இந்தத் திரு நெல்லை யம்மை யறிய, எனது சம்மதமும் மண் மயந் தான் என்று உறுதியாக உத்தர வளித்தனர். அது கேட்ட மெய்யப்ப செட்டியார், சந்தோஷ மாய் நமஸ்கரித்து, உத்தரவு பெற் றுக் கொண்டு, தமது நகரத்துக்குச் சென்று, அவ் வுப தேசத்தைச் சிரத்தையுடன் வெகு காலம் அநுஷ்டித்து வந்து நன்மை யடைந்தனர்.

நாற்பத் தாறுவது

## ஸ்ரீ ஆண்டவர் அகங்கார மகலும்படி அநுக்கிரகித்தல்.

ஒரு நாள் ஆண்டவர், கொற்றவா ளீசராலயத்திருக் கும் பொழுது தமது முக்கிய சிஷ்யரான பள்ளத்தூரய்யா

அவர்களைப் பார்த்துச், சிங்கய்யா வென்று விளித்து, யான் எனது என்னும் அகங்கார மமகாரங்கள் போனால் முத்தி சித்திக்கு மென்று திரு வாக் களிக்க, அது கேட்ட, பள்ளத் தூரய்யா அவர்கள் யா னெனது எவ் வாறு நீங்கு மெனப் பிரசிங்ஞ் செய்ய அதற் குத்தர மாக

நேரிசை வெண்பா.

தன்மயமாஞ் சத்தி தானினைக்க நாமவுரு
மின்மயம்போற் றோன்றி விளிந்திடுமே—யென்மயமே.
யாமே யவையெல்லா மானல்யா னுமெனதும்
போமே சிவமயமாய்ப் போம்''
என்னும் வெண்பாவைத் திரு வாய் மலர்ந்தருளினர்.

நாற் பத் தே ழாவது

## ஸ்ரீ ஆண்டவர் அகங்கார சொரூபத்தைத் தெரிவித்தல்.

ஒரு தினம் மடத்து முகப்பில் ஆண்டவர் எழுந் தருளிய போது, ஒரு சுவான மானது உள்ளே நுழைந்தது, அதைப் பார்த்து, ஏ! சுவானமே நீ உள்ளே நுழையாதே அங்கு நான் நீ என்பவை நிரம்பி யிருக்கின்றன. ஆதலால், உன்னை அங்கு வரவிடார்கள் எனத் திருவாய் மலர்ந்தருளி னர். இவ் வார்த்தையைக் கூட விருந்த, அடியார்கள், செவியுற்று நிற்கையில், அந் நாய் உள்ளே நுழைந்து செல்ல, அது கண்டு, அங் குள்ளவர்கள் அடித்துத் துறத்தி விட்டனர். அடிபட்ட சுவான மானது கூச்சலிட்டுக் கொண் டோடிவருவதை ஆண்டவர் பார்த்து, நான் முன்னமே, நான் நீ என்பவை அவ்விடத்தில், நிறைந்

திருக்கின்றன வென்று, சொல்லியுங் கேளாது சென்றனையே, அந்த நான் நீ என்னும் அகங்காரத்தால் வந்துற்ற துன்பந் தெரிந்ததா? இனி மேலாயினும் நான் நீ என்றவை உள்ள விடங்களிற் செல்லாதே, எனச் சுவாநத்தை முன்னிலை யாக்கிக் கூறியது போலத் தமது அடியார்களிடத்துள்ள அகங்காரம் ஒழியும்படி கூறிப் புன்னகையுற்றுச் சுவாநுபூதியி லிருந்தனர்.

## நாற் பத் தெட் டாவது

## ஸ்ரீ ஆண்டவர் கற்பக விநாயகரைத் துதி செய்தல்.

ஒரு காலத்தில் ஆண்டவர், கருங் காலக் குடிக்குச் சென்று வரும் பொழுது, பிள்ளையார் பட்டி நகரத்தார் மிக விருப்புடன் சுவாமி தரிசந நிமித்தம் அங் கெழுந்தருளும்படி, ஆண்டவரை வேண்ட, ஆண்டவரும், அக்கருத்திற் கிசைந்து, பல்லக்கைத் திருப்பிப் பிள்ளையார் பட்டியில் அன்று வசித்து, அங் குள்ள கற்பக விநாயகரைத் தரிசித்து,

### அறு சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்.

முற்பவத்தி லியான்புரிந்த தீவினைகண் முழுதகற்று
முகத்தி றனே,
யற்பசுகத் தெனைபழுத்தா வைங்கரனைப் பிற்பவமு
மகற்றுங் கோவைச்,
சொற்பழுது புரியரத வணிகர்குலந் தினம்பணியுந்
துணைத்தா ளானைக்,

கற்பகத்தின் மிடியகற்றுங் கற்பகமா விநாயகனைக்
கருத்தில் வைப்பாம்.

என்னுங் கவியைத் திரு வாய் மலர்ந்து, மீண்டுங் கோவிலூ ரடைந்தருளினர்.

நாற் பத் தொன்ப தாவது

## ஸ்ரீ ஆண்டவர் கல்ல லய்யாவுக்கு எதிர் கால விஷயத்தைத் தெரிவித்தல்.

மற் றொரு காலத்தில், கல்ல லய்யா கோவி லூருக்கு வந்து, ஆண்டவரைத் தரிசித்த வளவில், வெள்ளையப்பா இதுவரை எங்கு வசித்தனை, இங்கு வராததற்குக் காரணம் யா தென்று திரு வாய் மலர்ந்தருள, சுவாமின் கல்லலிற் கட்டிய மடத்திற்கு நேர் கிழக்கில், ஒரு கிணறு வெட்டி னேன், அதற்குக் கல்லுங் கட்டினேன், அதனால் வருவதற்கு இயலாமற் சில திங்கள் சென்று விட்டன வென்று வாய் பொத்திப் பக்தியோடு நின்று சொல்ல, அப் போது, ஆண் டவர் அது என்று மிடி கிணறு தானே, அதற்கே னித்தனை பிரயாச மென்று, திரு வாய் மலர்ந்தருளினர்: அவ் வசநத் தைக் கேட் டுள்ள கல்ல லய்யா, அச்ச முற்றுச் சென்று, ஆலோசனையோடு தெற்குக் குளக்கரையில் நிற்குஞ் சமயத் திற், கல்லலி லிருந்து ஒரு கூலியா ளோடி வந்து, சுவாமி, தாங்கள் வெட்டிய கிணறு இன்று பகற் பத்து நாழிகை யளவிற் சுற்றிலு மிடிந்து உள்ளே விழுந்துவிட்ட தென்று கூறினான், அது கேட்ட கல்ல லய்யாவு மிது சங்கதியை முன்னமே ஆண்டவர் திரு வாக்கினாற் கேட்டுக் கொண் டேன். அதை எத்தனை தரம் எடுத்துக் கட்டினாலும் இடி கிணறுகுமே ஒழிய வே றில்லை மடத்திற்குத் தெற்கில் ஒரு கிணறு வெட்டிக் கொள்ளுங்க ளென் றெழுதியனுப்ப,

அங் கிருந்த வேலைக்காரர்கள் அவ் விதமே நடந்து கொண் டார்கள்.

ஐம்ப தாவது

## ஸ்ரீ ஆண்டவர் இராய புரம் சிதம்பரஞ் செட்டியாருக்குத் திரு முக மனுப்புதல்

மற்றோர் சமயத்திற் பஞ்சம் நேர்ந்தமையின், ஆண்டவர் இராய புரம், சிதம்பரஞ் செட்டியாருக்கு, தம்பி சிதம்பரஞ் செட்டியாருக்குப் பஞ்ச கிருத் திய காரண சருவ சாக்ஷித்துவ முடைய அகண்டாகாச போத தேவதை கிருபையால் சகல நன்மையும் உண்டாக வேண்டு மெனச் சிந்திக்கின்றேன். இப் போது பிரார்த்தம் நாநாவா யிருக்கின்றது, மழையைக் காணேன். இக் காலங் தெய்வ கதி இப்படியிருக்கின்றது. ஆனதால், எவ் விதத் தினும் மன வருத்த மன்றியிற், பத்துப் பொதி நெல் லனுப்பி வைத்தால், இந்தச் சரீரத்திற்கு உள்ள காலம் எவ் வளவேனும் பின் னிட்ட மட்டுஞ் சகாயந் தான். அப் பால் வருகின்றவினை வாராதிருக்கப் போகின்றதும் இல்லை. உள்ளபடி நடக்கின்றது. என் போலி களுக்கு வேறே சகாயம் கிடையாது, ஆனதால், இப்படியிருக்கின்றவனுக்குச் சகாயஞ் செய்வதைத் தவிர வேறு சற் காரிய மென்ன விருக்கின்றது. சுபாவ தசையில் எனக்குச் சமுசார சங்கற்பமே யில்லை. விவகாரத் தில் சித்தத்திற்கு கொஞ்சம் தயை யிருப்பதனால், அன்னி யர்களுக்கு வெகு குடும்பியாகவும் தோன்றுகின்றேன். என்னமோ ஏதோ எப்படியோ நடக்கின்றது என்று வரைந்து, ஒரு திரு முகம் அனுப்பியருள, அத் திரு முகத்

தைப் பார்த்துச் சிதம்பரஞ் செட்டியார் ஆநந்தக்களிப் புற்றுக் கண்களிற் சேர்த்து, உத்தரவுப் பிரகாரம் நெல் லனுப்பி ஆண்டவர் பரிபூரண அநுக்கிரகத்தை யடைந் தனர்.

ஐம் பத் தொன் ருவது

## *ஸ்ரீ ஆண்டவரை அப்பாப் போலீசு சர ணடைதல்.*

ஒரு காலத்தில், ஆண்டவர் காரைக் குடியில், தமது சிரகத்தி லெழுந்தருளியிருக்கும் பொழுது, பாரதப் பிரசங் கம் நடந்து வந்தது. அத் தருணத்தில், அவ் வூரில், அப்பாப் போலீஸ் என்பவன் போலீஸ் வேலேயின் அதிகாரத்தி னுலே அவ் வூர்ச் சநங்களே மிகவும் இம்சித்துக் கொண் டிருந்தான். அவன் தனது பூர்வ புண்ணிய புஞ்ச பரிபா கத்தால், ஆண்டவரது தமையனு ராகிய மாயாண்டி செட் டியாரிடம் வந்து, அவரது சகோதர ரான ஆண்டவர்; பிரதிநமும் வீட்டிற் பிரசங்கித்து வருகின்ருரெனக் கேள்வியுற்று, அதனேச் சிரவணஞ் செய்ய விருப்பங் கொண்டு, இரவிற் பிரசங்கம் நடக்குஞ் சமயத்தில் வந்து, வணக்க மின்றிச் சட்டை தலப்பா அங்கவஸ்திரத்தோ டிருந்து ஆண்டவர் பிரசங்கத்தைக் கேட்டுப் பிரமித் தெழுந்து, போய் மறு நாள் சட்டை தலப்பா வின்றி அங்க வஸ்திரத்தோடு வந்து கேட்டுக் கொண்டிருந்து, மூன்ரு நாள் பய பக்தி விசுவாசத்துடன் வந்து சாஷ் டாங்க மாக வணங்கி எழுந்து, உட்கார்ந்து. அன்புடன் ஆண்டவர் பிரசங்கத்தைக் கேட்டு விடய விரக்தி முதலிய சற் குணங்க ளுண்டாகி, அன்றே வேலேயை இராசி நாமாக் கொடுத்து விட்டுத், தனது குமாஸ்தா முத்தய்யா

பிள்ளையோடும் சேவகன் சூச னென்பவனோடும் அடி மைத் திறம் பூண்டு, இடை விடாது ஆண்டவர் சந்நிதியி லிருந்து, சற் சாஸ்திரம் பயின்று, கைங்கரியஞ் செய்து வந்தனன்.

ஐம்பத் திரண் டாவது

## ஸ்ரீ ஆண்டவர் யாசகங் கொடுத்தல்.

ஒரு நாள் ஆண்டவர், தமது கிரகத்தி லெழுந்தருளி யிருக்கும் போது, சிவ பத்தியிற் சிறந் துற்ற ஓர் மறை யவர் ஆண்டவரிடம் வந்து, விவாகநிமித்தம் யாசித்த பொழுது ஆண்டவர் அவரை உபசரித்துப் பெட்டியைத் திறந்து ரொக்கப் பையி லிருந்த ருபாயைத் தங்கள் அதிர்ஷ் டம் எப்படியோ அப்படி யிருக்கு மெனச் சொல்லிக் குப்புறக் கொட்டியருள, அதனை அவர் மிகக் களிப்போடு பெற்றுக் கொண்டு போயினர். அது கண்ட ஆண்டவர் கனிஷ்ட ராகிய வேங்கடாசலஞ் செட்டியார், எங்க ளுக்கு இது சரிப்படா தெனச் சொல்ல, உடனே ஆண்ட வர் எங்களுக்கும் நீங்கள் சரிப்படீர்க ளெனச் சொல்லித் திருக் கோவி லூருக்கு அடியார்களுடன் எழுந்தருளினர். அவ் வாறு, எழுந்தருளிய பின்னர், வேங்கடாசலஞ் செட்டியார், தமது சுற்றத்தாரிடத்தில் ஆண்டவர், பணப் பையைத் தலைகீழாகக் கொட்டிய முறையைச் சொல்லி, இப் பிள்ளை இருப்பதைக் காட்டி லும், இறப்பது நன் றென் றுரைத்தனர். அதைச் சுற்றத்தார் வழியாக ஆண்ட வர் செவியுற்று,

நேரிசை வெண்பா

சுற்றத்தா ரின்னஞ்தொ லைந்தானி லையெனவே
பற்றற்றே நைந்திருத்தல் பண்பாமோ—கொற்றனுடல்,

பாதிப றித்திருக்கும் பண்ணவியே யுன்னையடைந்
திதிருக்க ஞாயமிலை யே.

என்னும் இவ் வெண்பாவைத் திரு வாய் மலர்ந்தருளினர்.

ஐம் பத்து மூன் றுவது

## ஸ்ரீ ஆண்டவருக்குக் கொற்ற வா ளீசர் பிரசந்ந மாதல்.

ஒரு திநம் கோவி லூரில் ஆண்டவர், மது புஷ்கரணி யின் கீழ் கரையில், ஈசாந்நிய திக்கில், நள் ளிரவி லெழுந் தருளியிருந்த பொழுது, அகண்டேகரசச் சச்சிதாநந்த பரி பூரண பரமாத்வித ஆநந்தகனீபூத மகாதே வராகிய கொற்ற வாளீசர் கோடி சந்திரப் பிரகாச ராய்ச், சந்திர சூட ராய்க் கங்காதர ராய்க், காள கண்ட ராய்த், திரி நேத்திர ராய், உமாசகித ராய்த், திவ்விய மங்கள விக்கிரக ராய், இடபா ரூட ராய், எழுந்தருளிப் பிரசந்நமாயினர். அப் பொழு தாண்டவ ரெழுந்து, மிகுந்த பக்தி விநயத்தோடு வணங் கித் துதித்து நிற்க, உடனே கொற்ற வாளீசர், அந்தர்த் தாந மாயினர். அதன் பின்னர், ஆண்டவர், அதிக அன் புடனே, ஆராமையுற்று, காலையிற் றமது முக்கிய சீட ராகிய பள்ளத் தூர், முத்து வீரப்பய்யாவை அழைத்து, அப்பா குழந்தாய். நேற்றிரவிற் பதி னைந்து நாழிகை யள வில், மது புஷ்கரணி கரையில் ஈசாந்நிய திக்கில், நான் ஏகாந்தமா யிருந்தபொழுது "வெண்ணிரத்த முகில்கோடி வெண்மடிங்கள் கோடியென விளங்குந் தேசைக் கண்ண கத்து நோக்கலுமே, நந்திமுதல் வரவுமையாள் கைமேற் கைவைத், தெண்ணறச்சங் கரன்வரலு மாணுக்க ருடன்,

விரைவி லெழுந்து பூசை, பண்ணுதற்கா னவைகொடு
போய்ப் பன்மலர் தூய்த் தூரத்திற் பணிந்து போற்றி''

என வசிட்ட சுவாமிகளுக்குத் தேவன் பிரசன்ன மானதற் கெண் மடங் கதிகப் பிரகாசத்தோடு, எமக்குக் கொற்ற வா ளீசர் பிரசந்ந மாயினர் என்று திரு வாய் மலர்ந்தருளினர்.

ஐம் பத்து நான் காவது.

## ஸ்ரீ ஆண்டவர், சின்னுன் செட்டியார் மன வருத்தம் நீங்கத் திரு முக மநுப்புதல்

ஒரு பொழுது இராய புரம், வெ. மு. சின்னுன் செட்டியார், வியாபார நிமித்தத்தால், வந்த நஷ்டத்தை உத்தேசித்து வருத்த முற்றிருக்கையில், ஆண்டவர், அச் சின்னுன் செட்டியாருக்கு மன வருத்தம் நீங்கும் பொருட்டு,

''பொல்லா தவர்நன்மை பொருந்துவது
நல்லோர் மிகவன் றுயர் நண்ணுவதுந்
தொல்லார் வினையால் வரினுந் தொடர்பாய்
நில்லா தெனும்வாய் மொழிநிச் சயமே''
என ஆன்றோர்க ளியற்றிய கவியையும்,
''அர வச் சட்டை யகலு முறைபோற்,
றிரமா நிலையாத் தேகபாச
முரமாய் நீக்கி யும்ப ரடையாய்
பரம வாரி படியத் துணிந்த
சின்னுன் வணிகன் சித்தந் தெளிய
வென்று லெழுது மியல்பை முழுதும்

யாமா ரென்றெணி யிசைந்தா லுலகுந்
தாமாய் நிற்றல் தகுந்தகு மின்றே,

எனத் தாம் திரு வாய் மலர்ந் தருளிய அகவற் பாவை யும், எழுதி யநுப்பியருளினர்.

ஐம் பத் தைந் தாவது

## ஸ்ரீ ஆண்டவர் அஞ்சாத பெருமா ளாலயஞ் சீர் திருத்தல்.

ஒரு தினம் மடாலயத்திற்குத் தெற்கே யுள்ள மது நதிக் கரையிற் செய்திருந்த பரண்மீது விநோத மாக ஒவ் வொருக்கால் நித்திரை செய்து வரும் வழக்கப்படி ஆண்டவர் நித்திரை செய்தருளுகையில், கோவி லூருக்கு மேற்கே, சற் றேறக் குறையக் கால் யோசனை தூரத்தி லுள்ள சாளி என்னுங் கிராமத்தி லெழுந்தருளி யிருக்கின்ற அஞ்சாத பெருமா ளென்னும் ஐயனுர் ஆண்டவருக்குச் சொற்பநம் போல, ஒரு தோற்ற முண்டாக்கித் தன் முது கிற் புற்று வளர்ந்திருப்பதைக் காண்பித்து, இவ் வாறு, சித லரிக்க யா னிருப்பது நீதியோ, இதனை நீவிர் விசாரித்து, என்னைச் சீர்திருத்தல் வேண்டு மென்று சொல்ல, அது கேட்ட ஆண்டவர், நீவிர் யாவ ரென்று வினவலும், யான் அஞ்சாத பெருமா ளென்று சொல்லி, ஐயனுர் அந் தர்த்தாந மாயினர். உடனே ஆண்டவர் துயி னீங்கி, எழுந்து, கீழே படுத்திருந்த வலயனை விளித்து, நல்லான் செட்டியாரை விரைவிற் சென் றழைத்து வா வென அரு ளித், தமது சுவா நுபூதியி லிருந்தனர். நல்லான் செட்டி யார் வந்து, ஆண்டவரைப் பணிந் தெழுந்து அடியேனை யழைத்த காரண மென்ன வென்று கேட்க, உன் குல

தெய்வ மாகிய அஞ்சாத பெருமா ளாலயத்திற்கு வா வென்று அழைத்துக்கொண்டு, பாத ரக்ஷை யணிந்து, ஆண்டவர் முன்னும் நல்லான் செட்டியார், பின்னு மாகச் சென்று, சூரியோதய மாகுஞ் சமயத்தில் அஞ்சாத பெருமா ளாலயத்தை யடைந்தனர். அப்போது, நல்லான் செட்டியாரை ஆண்டவர் பார்த்து, வாலயத்துட் புகுந்து, ஐயனுரைப் பார்த்து வா வென்று உத்தரவு செய்தருளி னர். அவர் ஸ்நாநம் முதலியவை செய்யாமையால் ஆல யத்திற் புகுதற் கஞ்சி நின்றனர். அஃ தறிந்த ஆண்டவர் அடா நல்லான் இங்கே வா வென்று வாலாலயத்திற்குப் பிறகே, அழைத்து வந்து, அவ் வா லாலயச் சுவரைப் பாதரக்ஷையோடே யுதைத்து, வீழ்த்திச் சுவாமி முதுகிற் புற்று வளர்ந்திருப்பதைப் பா ரென்று காட்டி, இப்படி வருவானேனென்று கேட்க, அது கேட்ட நல்லான் செட் டியார், இவ் வாலயஞ் செய்து முடித்தற்கு இத்தனை தொகை யென்று குத்தகை யாகப் பேசித் தச்சனிடம் மொத்த மாகக் கொடுத்துவிட்டோம். அவனுடைய அசாக்கிரத்தையினுல் இப்படி வந்த தென்று சொல்ல, ஆண்டவர் அத் தச்சனை யழைத்துவரச் சொல்லி அவனைக் கண்டித்து சீக்கிரத்தில் ஆலயஞ் செய்து முடிக்கக் கடவா யென் ருக்ஞாபித்து, பூசை வைத்து வரும் குயவனையுங் கண்டித்துச் செவ்வை யாகப் பூசை, நைவேத்தியஞ் செய்து, வரும்படி கட்டளையிட்டுக், கோவி லூருக் கெழுந்தருளினர். அத் தச்சன் பின்னரும் ஆலயங் கட்டத் தொடங்காதிருந்தனன். ஆதலால், அவனுடைய மனைவி யின் கெற்பம் உதிரமா யொழுகத் தொடங்கிற்று. அத னைக் கண்ட தச்சன் பயந்து, பெரியோர் வார்த்தைப்படி நடவாமையால் இப்படிப்பட்ட வருத்தம் நேரிட்ட

தென்று மனங் கலங்கி, ஓடிவந்து ஆண்டவர், பாதத்தில் வீழ்ந்து, நிகழ்ந்ததைச் சொல்லி யழுது, அடியேன் அபராதத்தைப் பொருத்தருளல் வேண்டும் இனிக் கணமுந் தாமசியாமல் ஆலயஞ் செய்து முடித்து விடுகின்றேன். ஐயனே என் மனைவியின் கருவானது அழிந்து போகாமல், பிரசவிக்கும்படி விபூதி யளித்தருளல் வேண்டு மெனப் பிரார்த்தித்தனன். ஆண்டவர் கருணை மா கட லாகலின், விபூதி யளித்தருளி, இதனை அவள் சிரசிற் றரித்தால் வெந்து போவள், உன் வீட்டுக் கூரையி லிடு இடவே அவட் குற்ற இடையூ றொழிந்து கருவின் முதிர்ந்து ஆண் குழந்தை பிரசவிப்பாள், அக் குழந்தைக்கு அஞ்சாத பெருமா ளென்று நாம மிட்டு நல்ல புத்தியோடு கூடிப் பிழைதிருத்தி யென்று அவனை யனுப்ப, அவன் ஆண்டவர் அருமைத் திருக் கரத்தா லளித்த விபூதியைப் பெற்றுக் கொண்டு விரைவாக ஓடித் தன் வீட்டுக் கூரையிலிட அது பற்றி எரியத் தொடங்கிற்று. அது கண்ட தச்சன் அதனை யணைத்து விட்டு வீட்டிற் புகுந்து தன் பெண் சாதியை நோக்க, உடனே அவளுக்கு இரத்தப் போக்கு நின்று சின் னுட் கழிந்து ஆண்டவ ருத்தரவின்படியே ஆண் குழந்தை ஜநிக்க, அக் குழந்தைக்கு ஆண்டவர் திருவாக்கின்படியே அஞ்சாத பெருமா ளென்று, நாமமிட்டு அவரதாலயத்தையும் விரைவிற் செய்து முடித்தனன்.

ஐம் பத் தா ருவது

*ஸ்ரீ ஆண்டவர் திருப் பெருந் துறைக் கெழுந்தருளி ஆத்ம நாதனைத் துதித்தல்.*

மற்றொரு காலத்தில், தேவி கோட்டை ஆவுடையார் கோவில் அண்ணுமலைச் செட்டியா ரென்பவர் கோவிலு

ருக்கு வந்து, ஆண்டவரை மடாலயக் கிரகப் பிரவேசத்
திற் காகத் திருப் பெருந் துறைக்குப் பல்லக்கி லெழுந்தரு
ளப் பண்ணி அழைத்துச் சென்றனர். அக் காலையில் செப்
பாவய லென்னும் கிராமத்தி னேரிக் கரையினிற் போகுங்கள்
பல்லக்கைக் கட்டினர். ஆண்டவர் பல்லக்கை விட்டிறங்
கிப் பசிக்கின்றது, இவ் வூரினிற் பழையது அகப்படுமோ
வென் றுத்தரவாகியது. இவ் வாக்கியத்தைக் கேட்டு நின்ற
செப்பாவயல் சின்னயச் செட்டியா ரென்பவர் துரிதமாய்க்
கிரகத்திற் சென்று, அவ் விடத் திருந்த பழையதை ஓர்
பாத்திரத் தெடுத்து ஊறுகாய், துவையல், உப்புடன்
கொணர்ந்து, ஆண்டவ ருடைய சந்நிதியில் வைத்த
மாத்திரத்தில், ஆண்ட வரு மப் புராதந வந்நத்தைப் புசித்
துக் கை கால் சுத்தி செய்து கொண்டு, தாம்பூலந் தரித்து,
நிமிர்ந்து பார்த்து, சின்னய்யா வென விளித்து, நீ பின்னர்
மரண காலத்தில், அநாயாச மரணத்தை அடைகுவை
யென்று அநுக்கிரகஞ் செய்தனர். அதன் பின்னர் வெகு
காலஞ் சென்று, புது வய லென்னுங் கிராமத்தில், தமது
குடும்பத்தாரோடுங் குடி யேறி வந்து அங்கு வசிக்குங்கால்,
ஓர் நாள் சின்னயச் செட்டி யென்பவர் ஸ்நாநஞ் செய்து,
பஞ்சாக்ஷர மந்திர செபஞ் செய்து கொண்டிருந்
தவர், இருந்தபடியே அநாயாச மாகச் சிவ பத மடைந்
தனர். ஆண்டவ ருத்தரவாகியிருந்ததை முன்னரே
அச் சின்னயச் செட்டியா ரென்பவர் வெகு பெயர்க
ளிடத்திற் றெரிவித்திருந்தனர். அந்த அடியவர்க ளெல்லாம்
ஆண்டவர் வாக்கியத்திற்கு மிக வியந்து சந்தோஷ மடைந்
தனர்கள். ஆண்டவருந் திருப் பெருந் துறைக்கிச் சென்று
அந்த க்ஷேத்திரத் துள்ள ஆலயத்திற்குச் சென்று தெரிசனஞ்
செய்து கொண்டு,

தொந்தமூங் கடந்த தூயோர் துதித்திடற் குரிய பாத
மந்தமு நடுவு மின்றி யமர்ந்திடு மற்பொற் பாதஞ்
சந்ததஞ் சுகசிற் சத்தாய்ச் சதோதித மான பாதஞ்
சிந்தனைப் படியே தோன்றுந் திருப்பெருந்
துறையான் பாதம்

என்னுங் கவியைத் திரு வாய்மலர்ந்து ஆத்ம நாதனைத் துதி செய்தருளினர்.

ஐம்பத் தேழாவது.

## ஸ்ரீ ஆண்டவர் ஐஞ் ஞூற் றீசரைத் துதித்தல்.

ஆண்டவர் அங்கிருந்து கோவி லூருக் கெழுந்தருளும் போது, இராம நாதன் செட்டியார் தமது மாத்தூர் கோவிலுக்கு அழைத்துக் கொண்டு போய் சுவாமி தரிசநம் பண்ணி வைத்த காலத்தில்,

நேரிசை வெண்பா.

ஐந்நூற்று வீச ரடியிணையைச் சேர்ந்தவுனக்
கெஞ்ஞான்று நெஞ்சே யிடருண்டோ—பைஞ்ஞாகந்,
தாங்கும் புவிவிளங்கச் சஞ்சரிக்கும் பாநுகண்ட
தூங்கிமம்போ காதோ சொல்.

என்னும் வெண்பாவை அருளிச் செய்து, கோவி லூ ரடைந்தனர்.

ஐம்பத் தெட் டாவது

## ஸ்ரீ ஆண்டவர் வசித்த மடாலயங்கள்.

ஸ்ரீ ஆண்டவ( தம தன்ப ஞன நல்லான் செட்டியாருடன் கோவிலூரில் நாகு மகன் சுப்பாப் பிள்ளை கிரகத்திற்

சில காலமும், அதளக் கண்மாயின் புறக் கரையிற் றென்னம் பிள்ளை வைத்தற் பொருட்டுப் பனை யோலையா லியற்றப்பட்ட கொட்டகையின்கண் சில காலமும், சேகரத்திக் கண்மாய்த் தென் கடையி லுள்ள புள் ளூருணிக் கரையிற் கட்டியிருந்த கொட்டகையிற் சில காலமும், மேற் கூறிய சேகரத்திக் கண்மாய்க் கரை மத்தியிற் கட்டப்பட்ட கொட்டகையிற் சில காலமும், தெக் கூருணி மேல் கரையிற் கட்டப்பட்ட கூரைக் கொட்டகையிற் சிலகாலமும், கொற்றவா ளீச ராலயத்திற்கு மேல வீதியில் ஓட்டா லியற்றப்பட்ட பாதரக் குடிச் சுவாமிகள் மடாலயத்திற் சில காலமும், தே னுற்றின் வட கரையிற் கூரையா லியற்றப்பட்ட சவுக்கையிற் போடப்பட்ட பரண் மீது சில காலமும், தெற்கு வீதிக்குத் தென்பாற் கீழ்ப் பக்கம் ஒரு கட்டும், மேல் பக்க மொரு கட்டு மாக வோட்டா லியற்றப்பட்ட திரு மடாலயத்திற் சில காலமு மாக, கோவிலூருக் கெழுந்தருளிய இரு பத் தோரா வது வயது முதல் முப் பத்து நான் காவது வயது வரையிற் கூடிய பதினுன்கு வருடங்களினு மிவ் வாறே பல விடங்களிலும் வசித்து ஞா ந நூற் கதைகளாற் போது போக்கி வந்தனர்.

ஐம் பத் தொன்ப தாவது

## ஸ்ரீ ஆண்டவர் கலினல் திரு மடாலயம் நிருமித்தல.

ஒரு நாள் ஆண்டவர் திரு வீதிக்குத் தேற்கே ஓட்டா லிரண்டு கட்டடங்க ளாக இயற்றப்பட்ட திரு மடத்திற்கு வடக்கே கல்லினல் ஒரு திருமடாலய மமைக்கத் திரு வுள் ளங் கொண்டு முகூர்த்தஞ் செய்வதற்குத் தேங்காய் வாங்

வதற் காகத் திருப் புத் தூருக்கும், குன்ருக் குடிக்கும்,ஆள னுப்புவித்தும், அவ் விரண்டாட்களும் அச் சமயம் வரா திருந்தமை பற்றி ஆண்டவரும் முகூர்த்தஞ் செய்வதற்கு நியமித்த நாழிகை நெருங்கியதே என்று திரு வுள்ளத்தின் கண் நினைந்து ஆலயத்தை திரும்பிப் பார்த்தனர். அப்போதே அவ் வாலயத்தினின்றும், ஒரு சிறிய அந்தணர் கன்னிகை தனது கையில் ஓர் கமலத்தில் வெற்றிலை, பாக்கும்,இரண்டு தேங்காயுங் கொண்டு வந்தனள், ஆண்டவரும் பொருக் கென வெழுந்து, அக் கமலத்தைத் தமது அஸ்தத்திற் பெற்றுக் கொண்டு, கல் மண்டபம் செய்ய உத்தேசித்த விடத்தில் சென்று நின்றதைக் குட்டைய ஞசாரி பார்த்து, அவ் வந்தனர் கன்னிகையை, அம்மா,நீ யா ரென்று வினவ, அந்தக் கன்னிகை அந்தர்த்தாந மாயினள். ஆண்ட வருந் தமது திருக் கரத்தால் தேங்காயை எடுத்துப் பரதே வதே என்றும் மாருத அந்ந தாநம் நடக்க வேண்டு மென்று சொல்லித் தேங்காயை உடைத்தருளினர். அன்று முதல் அமோக மாக அந்ந தாநம் நடந்து வருவதை இன் றுங் கண்கூடாகப் பார்க்க லாம்.

அறு ப தாவது

## ஸ்ரீ ஆண்டவர் சீடர்களுக்குச் சாஸ்திர பாட மநுக் கிரகித்தல்.

அவ் வண்ணம் முகூர்த்தஞ் செய்து மடாலயத் திருப் பணியையுஞ் சீக்கிர மாக முடிப்பித்துப் பகற் போ தெல் லாந் தென்னஞ் சோலை, நந்தவநம் ஆரணிய முதலிய ஏகாந் தப் பிரதேசத்தை யடைந்து தனித்து அக நோக் கொழி யாது பிரம நிஷ்டையி லிருந்து அத்தமன சமயத்தில் ஆல

யத்திற் கெழுந்தருளி பிரதக்ஷிணம் பண்ணிச் சுவாமி தரிச நஞ் செய்து கொண்டு அம்மையாருக்குத் தீபாராதன மாகு மளவுஞ் சந்நிதியில் சொருபத்தில் விழிப்பும் பிரபஞ்சத்து லுறக்கமுகமா யிருக்கும், நிஷ்டையுட னிருந்து, தீபாரா தன மான பின்னர், விழிக்குஞ் சமயம் பார்த்து நின்று, குருக்கள் விபூதி யளிக்கப் பெற்றுத் தரித்துக்கொண்டு, அம்மையாரை நமஸ்கரித்து நின்று மீண்டும் மடாலயத் திற்கு வந்து, அடியார்க ளிட்டிருந்த, ஆசநத்தி லெழுந் தருளிச் சாதநங்கண் முதலிய சற் குணங்க ணிறைந்த அடியர் குழாங்கள் துதித்துப் பணிந்து எழுந்து, இரு கரங் குவித்து நின்று அடியேங்க ளுய்யும் பொருட்டுத் திரு வாக் களித்தருளல் வேண்டு மென்று விண்ணப்பஞ் செய்ய, அப்போது ஆண்டவர் அவ் வடியார்கள் மீ தருள் சுரந்து அரிய பிரமாநுபூதியைத் தமது கெம்பீர வாக்கினல் அரு ளிச் செய்து அநேகரைத் கிருதார்த்த ராகச் செய்தருளினர்.

"சகத்தி லே புறத்தொழிலி லாரம் பித்துத் தனியிதயத் தாரம்பஞ் சற்று மின்றி, யகத்திலே செயாதோனுய்ப் புறத் தே செய்வோ ளுகியே யுலகில் விளையாடுவீரா"

என்று வாசிட்டத்திற் கூறிய வாறே விநோதித்திருந்தனர்.

அறு பத் தொன் ருவது:

## ஸ்ரீ ஆண்டவர் பூர்வ ஜந்மாநுபவத்தை வெளியிடல்.

ஓர் திநம் அடியார்கண்மீது கருணை சுரந்து சாஸ்திர முக மாய்த் தமது சுவாநுபூதியை வெளியிட்டுக் கொண்டு வருஞ் சமயத்தில் சிக்கலி லிருந் தெழுந்தருளிய வீர பத்திர

சுவாமிகளினது வதநத்தை நோக்கி, சுவாமின்! இவ் வாங்மா பூர்வ ஜங்மத்திற் பிராமணச் சந்நியாசியாயும், பிரதிபந்த ஞாநியாயும், அற்ப யிச்சையை யுடையதாயு மிருந்தமையின், இங்ஙனம், கர்ம சேஷத்தால் சூத்திர செங்மத்தை யடைந்து, சருவ காமத்தையும் அநுபவித்து, வருகின்றது. இச் செங்மம் முடிந்த சென்ம மென்று, காணப்படுகிறது எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

அறு பத் திரண்டாவது

## ஸ்ரீ ஆண்டவர் மோதிரங் கொடுத்தல்

மற்றோர் திநம் ஆண்டவர், கல் மண்டப முகப்பில் ஒரு கல்லி லெழுந்தருளியிருந்த சமயத்தில், ஒரு புலவன் வந்து சுவாமி எனக் கேதாயினுங் கொடுக்க வேண்டு மென்று கேட்க. அப் போது யான் பரதேசி என்னிடத் தொன்று மில்லையே என்று உத்தர வளித்தனர். அது கேட்ட புலவன், சுவாமின்! தேவரீர் திருக் கரத்தில் மோதிர மிருக்கின்றதே என்று சொல்ல நான் மறந்து விட்டதை நீ ஞாபகஞ் செய்தது நமக்கு மிக நன்கே எனச் சொல்லிக் கரத்தி லணியப் பெற்றிருந்த மோதிரத்தைக் கழற்றிக் கொடுத்தனுப்பி விட்டனர். அவ் வாறு, கொடுத் தனுப்பிய பின்னர், ஒரு கடிகை சென்று, இலக்குமணச் செட்டியார், ஆண்டவரைத் தரிசித்துச் செல்லுங் கருத் துடையராய்க் காரைக்குடியி லிருந்து வந்து தரிசித்து, ஆண்டவர், திருக் கரத்தில் தம்மா லுபயோகிக்கப்பட்ட மோதிரத்தைக் காணுமையால் வருத்த முற்று ஆண்டவ ரைப் பார்த்துப் பயபக்தியோடும், திருக் கரத்தில் மோதி ரத்தைக் காணேமே என்று வினவ, நம்மை வந்து யாசித்த

ஓர் புலவனுக்கு அளித்தோமென்று திருவாய் மலர்ந்தருளி னர். அப்புலவன் எங்குற்ருனென்று மீண்டும் வினவின போது, அந்தப் புலவன் மேற்கு நோக்கிச் சென்றனனாதலால், அவனை நீ போய் அடித்துத் தொந்திரவு செய்யாதே எனச் சொல்லியருளினர். அது கேட்ட இலட்சுமணச் செட்டியார், மேற்றிசை நோக்கிச் சென்று கண்டு, அம் மோதிரம் பெரும் விலையைக் கொடுத்து வாங்கி வந்து சுவாமிகள் சந்நிதானத்தில் வைத்து நமஸ்கரித்து அடியேன் இம்மோதிரம் பெறுந் திரவியங் கொடுத்து வாங்கி வந்தேனென்று விண்ணப்பஞ் செய்து, மீண்டும் ஆண்டவர் அருமைத் திருக் கரத்திற் சேர்ப்பித்து விடைபெற்றுச் சென்றனர்.

அறுபத்து மூன்ருவது

## ஸ்ரீ ஆண்டவர் கல்லலய்யா மந வருத்த நீக்குதல்.

மற்ெருரு சமயத்தில், கல்லலுக்கு ஆண்டவர் விஜய மாகிச் சிவாலய சீரணோத்தாரணஞ் செய்தற் பொருட்டு வாலாலயப் பிரதிஷ்டை செய்த காலத்துச் சநங்களுடைய நெருக்கத்திற் கல்லய்யா வுடைய சரீரம் ஆண்டவர் திருமேனியிற் றீண்டினது பற்றிக் கல்லலய்யா மந வருத்த முற்று நிற்பதைத் திருவுள்ளத் துணர்ந்து,

"நானெனவு நீயெனவு நாடலுடலைக்குறித்தே
ஞாநமய மொன்றெனவே நாடாத தென்னமதி"

என்னும் பாடலைத் திருவாய் மலர்ந்தருளினர்.

அறு பத்து நான் காவது

## ஸ்ரீ ஆண்டவர் மீது பிள்ளைத் தமிழ்ப் பாடிக் கொணர்தல்.

மற்றொரு நாள் கல் மண்டப முகப்பில் ஆண்டவ ரெழுந்தருளியிருக்குங் காலத்தில், ஒரு புலவர் வந்து, சுவாமி நான் தங்கள் மீது பிள்ளைப் பிரபந்தம் பாடிக் கொண்டு வந்திருக்கின்றேனென்று விண்ணப்பிக்க, அவ் வார்த்தையைக் கேட்ட ஆண்டவர், துதியைக் காதினுற் கேட்க மன மில்லாத நிரகங்கார மூர்த்தியாதலால், நீர் என் பேரிற் ருறு பிள்ளைப் பெற வேண்டும், காடு, செடி, வீடு, வாசல், உமக் கில்லையா எனத் திரு வாய் மலர்ந்து, நகைத்துச் சுவாநுபூதியி லிருந்து விட்டனர். புலவர் ஒன்றும் விளங் காது மயங்கி நிற்கச் சற்று நேரஞ் சென்று, சில திரவியங் கொடுக்கச் செய்து நீ பாடியதைப் படிக்க வேண்டா மென் றருளி அனுப்பி விட்டனர்.

அறு பத் தைந் தாவது

## ஸ்ரீ ஆண்டவர் துலுக்கப் பரதேசியை நிக்கிரகித்தல்.

மற் ரொரு போது, சிதம்பர மிருந்து ஓர் துலுக்கப் பரதேசி, சில சாஸ்திரங்களை வாசித்துக் கொண்டு ஆண்டவ ருடைய மகிமையைக் கேள்வியுற்று, அவரைத் தரிசிக்குங் கருத்துடைய ருகப் பிரயாணப்பட்டு வந்து, மட முதலிய ஸ்தாநங்களிற் றேடிக் காணுமல் சந்நிதிக் கழனியில் நிற் கும் ஆண்டவரைப் பார்த்து, ஆண்டவர் எங் கிருப்பா

ரென்று வினவ, ஆண்டவர் நிமிர்ந்து பார்த்து அக நோக்குற்றுக் குனிந்து, அக் கழனியிற் சிதறிக் கிடக்கும் நெற் கதிரைப் பொறுக்கினர். அப்போது இவர் தான் ஆண்டவ ரெனக் குறிப்பா லறிந்து பெரியோர்கள் மகிமையைச் சிறிது மறியாதவ னாதலின், அசிரத்தை யடைந்து, ஆண்டவரை நோக்கி, "புணர்ந்த பாவமெ லாம்பரி பூரண முணர்ந்த ஞாநிவி ழிபட வோடுமே" என ஆன்றோர்கள் சொல்லி யிருக்கின்றார்களே, தங்களைத் தரிசித்த எனக்கு, "அங்ஙனங் காணப்பட வில்லையே" என்று வினவ, அது கேட்ட ஆண் டவர், பரிசங் வேதி மற்ற வுலோகங்களையும் பொன் னாகச் செய்யு மாயினும், குட்டிச் சுவற்றை ஒன்றுஞ் செய்யாதது போன்று, நா னாகிய பரிசங வேதி, நீ யாகிய குட்டிச் சுவற்றை யென்ன செய்யு மெனத் திரு வாய் மலர, அப் பரதேசி அச்ச மூற்று நமஸ்கரித்துச் சென்று, பின்னர் சில காலத்தில் ஆதி வியாதிகளாற் றுன்புற் றிறந்தனன்.

அறுபத் தாறுவது

## ஸ்ரீ ஆண்டவருக்கு அண்ணாமலை யய்யா புதுமை செய்தல்.

காரைக் குடி அண்ணாமலை அய்யா அவர்கள், ஆண்ட வரைச் சர ணடைந்து ஆப்தாதி பணிவிடைகளை நன் றாகச் செய்து வரும் பொழுது, ஓர் தினம் அண்ணாமலை அய்யா அவர்களுக்குக் குடும்பத்தி லுள்ள யாவரும் புத்திர சுவீகாரம் பண்ண வேண்டு மென்னும் அபிப்பிரா யத்தைத் தெரிவித்தனர் அண்ணாமலை அய்யா அவர் களும் ஆண்டவரிடம் வந்து, நமஸ்கரித் தெழுந்து நின்று,

அறு பத்து நான் காவது

## ஸ்ரீ ஆண்டவர் மீது பிள்ளைத் தமிழ்ப் பாடிக் கொணர்தல்.

மற்றொரு நாள் கல் மண்டப முகப்பில் ஆண்டவரெழுந்தருளியிருக்குங் காலத்தில், ஒரு புலவர் வந்து, சுவாமி நான் தங்கள் மீது பிள்ளைப் பிரபந்தம் பாடிக் கொண்டு வந்திருக்கின்றேனென்று விண்ணப்பிக்க, அவ் வார்த்தையைக் கேட்ட ஆண்டவர், துதியைக் காதினாற் கேட்கமன மில்லாத நிரகங்கார மூர்த்தியாதலால், நீர் என் பேரிற் ருறு பிள்ளைப் பெற வேண்டும், காடு, செடி, வீடு, வாசல், உமக் கில்லையா எனத் திரு வாய் மலர்ந்து, நகைத்துச் சுவாநுபூதியி லிருந்து விட்டனர். புலவர் ஒன்றும் விளங்காது மயங்கி நிற்கச் சற்று நேரஞ் சென்று, சில திரவியங் கொடுக்கச் செய்து நீ பாடியதைப் படிக்க வேண்டாமென் றருளி அனுப்பி விட்டனர்.

அறு பத் தைந் தாவது

## ஸ்ரீ ஆண்டவர் துலுக்கப் பரதேசியை நிக்கிரகித்தல்.

மற் றொரு போது, சிதம்பர மிருந்து ஓர் துலுக்கப் பரதேசி, சில சாஸ்திரங்களை வாசித்துக் கொண்டு ஆண்டவருடைய மகிமையைக் கேள்வியுற்று, அவரைத் தரிசிக்குங் கருத்துடைய ராகப் பிரயாணப்பட்டு வந்து, மட முதலிய ஸ்தானங்களிற் றேடிக் காணுமல் சந்நிதிக் கழனியில் நிற்கும் ஆண்டவரைப் பார்த்து, ஆண்டவர் எங் கிருப்பா

ரென்று வினவ, ஆண்டவர் நிமிர்ந்து பார்த்து அக நோக்குற்றுக் குனிந்து, அக் கழனியிற் சிதறிக் கிடக்கும் நெற்கதிரைப் பொறுக்கினர். அப்போது இவர் தான் ஆண்டவரெனக் குறிப்பா லறிந்து பெரியோர்கள் மகிமையைச் சிறிது மறியாதவ னாதலின், அசிரத்தை யடைந்து, ஆண்டவரை நோக்கி, "புணர்ந்த பாவமெ லாம்பரி பூரண முணர்ந்த ஞானிவி ழிபட வோடுமே" என ஆன்றோர்கள் சொல்லி யிருக்கின்றார்களே, தங்களைத் தரிசித்த எனக்கு, "அங்ஙனங் காணப்பட வில்லையே" என்று வினவ, அது கேட்ட ஆண்டவர், பரிசங் வேதி மற்ற வுலோகங்களையும் பொன் னாகச் செய்யு மானாலும், குட்டிச் சுவற்றை ஒன்றுஞ் செய்யாதது போன்று, நா னாகிய பரிசவேதி, நீ யாகிய குட்டிச் சுவற்றை யென்ன செய்யு மெனத் திரு வாய் மலர, அப் பரதேசி அச்ச மூற்று நமஸ்கரித்துச் சென்று, பின்னர் சில காலத்தில் ஆதி வியாதிகளாற் றுன்புற் றிறந்தனன்.

அறுபத் தாருவது

## ஸ்ரீ ஆண்டவருக்கு அண்ணாமலை யய்யா புதுமை செய்தல்.

காரைக் குடி அண்ணாமலை அய்யா அவர்கள், ஆண்டவரைச் சர ணடைந்து ஆப்தாதி பணிவிடைகளை நன்றாகச் செய்து வரும் பொழுது, ஓர் தினம் அண்ணாமலை அய்யா அவர்களுக்குக் குடும்பத்தி லுள்ள யாவரும் புத்திர சுவீகாரம் பண்ண வேண்டு மென்னும் அபிப்பிராயத்தைத் தெரிவித்தனர் அண்ணாமலை அய்யா அவர்களும் ஆண்டவரிடம் வந்து, நமஸ்கரித் தெழுந்து நின்று,

சுவாமின்! அடியேனுக்கு எனது குடும்பத்தி லுள்ளோர் யாவரும் பிள்ளை எடுத்துப் புதுமை செய்ய வேண்டு மென்று சொல்லுகின்றனர். அவ் விஷயம் திருச் செவியி லேற்றுவித்தல் வேண்டு மென்று யான் விண்ணப்பித்துக் கொண்டே னென, அது கேட்ட ஆண்டவர் "யா னுனக் குப் பிள்ளையா யிருக்கின்றேன் நீ எனக்குப் புதுமையைச் செய்து முடிக்கக் கடவை, உனது பங்குக் குள்ள திரவிய முழுமையும் பிதிர் ஆர்ச்சித சொத் தாக எனக்குக் கொடுத்து. அத் திரவியத்தால் கொற்றவா ளீச ராலத் திருப் புணியை முடித்துச் சந்தோஷிக்கத் தக்க" தென் ருக் ஞாபிக்க, அவ் வண்ணுமலை அய்யா அவர்களும், அத் திரு வார்த்தைக் கெதிர் வார்த்தை யின்றிக் குடும்பத்தி லுள்ள பந்து வர்க்கங்களுக் கெல்லாம் ஆ ளனுப்பி வர வழைத்துப் புதுமை செய்வதற் குரிய பதார்த்தங்களை யெல்லாம் சம்பாதித்து, வரும்படி ஆண்டவ ருடைய திரு மேனியைப் புண்ணிய தீர்த்தங்களால் ஸ்நாநஞ் செய் வித்துக், கடுக்கன், மோதிரம், மகர கண்டி, கௌரி சங்கரம், பட்டுப் பீதாம்பரம் முதலியவைகளால் அலங்கரித்து, வெல் லப் பாகினுற் கப்பி யரிசி செய்வித்துப் பந்துக்களுக் கெல் லாம், கொடுப்பித்து, அறு சுவை உண்டிகளால் உபசரித் தனர். பந்துக்க ளனைவரும் நான்கு திநம் வந்திருந்து மொய்ப் பண மிட்டுப் புதுமையை முடித்துத் தங்கள் தங்கள் கிரகத்திற்குச் செல்லுங் கருத்தின ராய் ஆண்டவர் சந்நிதியை யடைந்து, உத்தரவு பெற்றுக் கொள்ள, அச் சமயம் ஆண்டவர் அவர்களைப் பார்த்து, அண்ணுமலை உடல், ஆவி இரண்டையும் முன்னமே எனக்குத் தந்த னன். இப் போது யாவரும் காணும்படி பொருளையும் தந்து, என்னைப் பிள்ளை யாக ஏற்றுக் கொண்டனன், இப்

பிள்ளை யாவரும் நன்கு மதிக்கத் தக்கதா வென்று, மந்த காசத்தோடுந் திரு வாய் மலர்ந்தருளினர், அதைக் கேட்ட, அப் பந்துக்கள் அனைவரும் அடங்காத சந்தோஷ முடைய ராய் உத்தரவு பெற்றுக்கொண்டு சென்றூர்கள்.

அறு பத் தே ழாவது

## ஸ்ரீ ஆண்டவர் சர்வமுஞ் சிவ அவதார மென வெளியிடல்.

ஒரு நாள் ஆண்டவர் கல் மண்டபத்தின் வடக்கு முகப்பி லிருக்கையில், பழசிக் கோவிலுக்குப் போன ஜநங்கள் வந்து, ஆண்டவரைத் தரிசித்து, நமஸ்கரித்த பொழுது, கல்லலய்யா அவர்களிடத்திலும், பள்ளத்தூ ரய்யா அவர்களிடத்திலும்

### நேரிசை வெண்பா.

கும்பிடவோ மேலில்லைக் கும்பிடவோ கீழில்லைக்
கும்பிட்டு நீங்கக் குறையில்லை—கும்பிடும்பே
ராரோவ றியேன்யா ளுகாக; வோகோகோ
சீரே து மில்லைச்சி வம்.

என்னும் வெண்பாவைத் திரு வாய் மலர்ந்தருளினர்.

அறு பத் தெட் டாவது

## ஸ்ரீ ஆண்டவரைக் கருணை நிதியும், மதிரை அய்யா அவர்களும், சர ணடைதல்.

இவ் வாறு, துறவு சுவாமிக ளிருவரும் ஆண்டவ ருத்தரவைச் சிரமேற் கொண்டு கோவிலூ ரடைந்ததைக்

கேள்வியுற்று, அவர்கள் சுற்றத்தா ரியாவரும் தரிசிக்கவந்த பொழுது, தேவிகோட்டையிற் புண்ணிய சாலி யாகிய வினை தீர்த்தான் செட்டியாரும், அவரது தரும பத்தினி யாகிய முத்தம்மாளும், ஈட்டிய அரிய தவத்தினாலும், உலகத்தி லுள்ள சீவ கோடிக ளியற்றிய புண்ணிய பலத்தி னாலும், முத் தம்மாள் திரு வயற் றுதித்த அருணாசல சுவாமிக ளென்னுந் திரு நாம முடைய அத் துறவு சுவாமி களுக்குக் கனிஷ்ட ராகிய கருணா நிதி யென்றும் கோவி லூ ரய்யா வென்றும், பெயர் விளங்கிய, ஸ்ரீ சிதம்பர சுவாமி களும், பாலிய முதல் அன்பரா யுள்ள மதுரை அய்யா அவர்களோடு தமது சேஷ்ட ராகிய அத் துறவு சுவாமிகளைத் தரிசிக்கும் நிமித்தம் கோவி லூருக்கு வந்து தரிசித்து, அவ் விருவரும் ஆண்டவரையுந் தரிசிக்குங் கருத்தினராய் பழம், கற்கண்டு கைக் கொண்டு சென்று, கண்டு வணங்கி நிற்க, ஆண்டவருஞ் சந்நிதானத்தி லிருக்கும்படி உத்தரவு செய்ய, அங்ஙனம் இருவரு மிருக்கின்ற பொழுது, காரைக் குடி அழகன் செட்டியார், மெய்யப்ப செட்டியார் கடையி லிருந்து, பழநி யப்ப செட்டியா ரென்பவர் திருப் பணிப் பற்று வரவு கணக்குக் கட்டைக் கொண்டு வந்து, ஆண்ட வர் சந்நிதியில் வாசித்து வர, ஆண்டவர் முற்றுங் கேட்டு, பற்று வரவு தொகை கட்டும்படி உத்தர வாக, அருகிற் கேட்டுக்கொண்டிருந்த, ஸ்ரீ சிதம்பர சுவாமிகள், பற்று ரூபாய் இவ் வளவு வரவு, ரூபாய் இவ் வளவு, வரவு நீக்கி அதிகப் பற்று ரூபாய் இவ் வள வென்று உடனே எழுந்து சொல்ல, ஆண்டவர் பழநி யப்ப செட்டியாரைப் பார்த்து, இத் தொகையைக் குறித்துக் கொண்டு சரியா யிருக்கின் றதா வெனப் பா ரென் றுத்தர வளிக்க, அங்ஙனமே பார்த் துச் சரியாயிருக்கின்ற தென்று சொல்லியதை ஆண்டவர்

கேட்டு. இக் குழந்தை ஏகாக்கிர சித்தமும், புத்திசாலித் தன்மையு முடையதா யிருத்தலால், பாடஞ் சொல்லி வைத்தால், சீக்கிரங் கிரகணஞ் செய்யக் கூடுமென் றுத் தாவு செய்தருளினர். அவ் வாக்கியத்தைக் கேட்ட கருணு நிதியும், மதுரை குட்டை அய்யா அவர்களும், தேவி கோட் டைக்குப் போய் மீண்டுந் துறவு சுவாமிகளைத் தரிசித்து, வருவ தாகச் சொல்லிவிட்டு கோவி லூருக்கு வந்து, ஆண் டவரை நமஸ்கரித்து நிற்கையில், ஆண்டவர் உவந்து எங்கு வந்தீர்க ளென வினவ, அதற்குப் பாடங் கேட்க வேண்டு மென்று வந்தோம் என்று சொல்ல, அது கேட்டு, அன்றை யத திருமே சூடாமணியைப் பாடங் கேட்கும்படி ஆண் டவ ருத்தரவு செய்தருள, இருவரும், அவ் வாறு பாடங் கேட்டு வந்தனர். பின்னருங் கண்ட னூர் நாகப் பய்யா அவர்களும், பெரிய பெரியணய்யா அவர்களும், குமரப் பய்யா அவர்களும், குப்பய்யா அவர்களும், வேங்கடாசல அய்யா அவர்களும், இவர்களைப் போன்ற மற்று முள்ள சாதுக்களும், ஆண்டவரைச் சரண டைந்து, சற்சாஸ்திரம் பயின்று வந்தனர்.

அறுபத் தொன்ப தாவது

## ஸ்ரீ ஆண்டவர், காரைக் குடி, க்ஷேம நிமித்தம் கவி பாடி யனுப்புதல்.

ஸ்ரீ ஆண்டவர் இங்ஙனம் கோவி லூரில், திரு நெல்லை யம்பாளுக்கு ஆடிப் பூரத்தில், ரதோத்சவம் ஏற்படுத்தி வெகு சிறப்பாக நடத்திவரும் பொழுது, ஒரு திரு விழா விற்குக் காரைக் குடிக் கொப்புடையம்பாள் திரு விழாவிற் காகப் புதி தாகச் செய்திருந்த தேர்ச் சிலையை வாங்கி

வந்து ரதத்திற் கட்டித் திரு விழா முடிந்த பின், அனுப்பி விட்டு, மரு வருடத்திற்கு வாங்கி வரும்படி ஏவலாளர்களை யனுப்ப, கோயிற் றர்ம கர்த்தர்கள் கொப்புடையம்பாளுச் செய்த தேர்ச் சீலையைத், திரு நெல்லை யம்பாளுக்குக் கொடுத்தால், இந்த அம்பாள் திரு வுள்ள மெப்படி யிருக் குமோ, ஊருக்கு யாதேனும் இடர் நேர்ந்தா லென்ன செய் வோம் யோசனையா யிருக்கிற தென்று சொல்லி ஏவலாளர் களை அனுப்பிவிட்டார்கள். அவரது அபிப்பிராயத்தை ஏவலாளர்கள் ஆண்டவரிடந் தெரிவிக்க அதற்கு ஆண்ட வர்

வெண்பா.

எண்ணுன் கறம்வளர்த்த வெந்தாய் திருநெல்லை
கண்ணுரைப் பார்த்த கருணையினுற்—றண்ணுருஞ்
சீரக்க டல்வளருந் திங்களைக்கண் டாலதுபோற்
காரைக் குடிநகரங் காண்.

என்னும் வெண்பாவை வரைந்து சிதம்பரஞ் செட்டியா ருக்குத் திரு முக மனுப்ப, அவர் உடனே அத் திரு முகத் தைப் பார்த்து, உத்தரவுப்படி தேர்ச் சீலையை யநுப்பி வைத்தனர். அன்று முதல் அந் நகர் மிக க்ஷேமமா யிருக் கின்றதை இன்று மென்றும் பார்க்கலாம். பின் னொரு காலத்திற் காரைக் குடி ஆதப்ப செட்டியார் குமாரர் அண்ணமலை செட்டியா ரென்பவர், வழக்கம் போற் குன்றக் குடிக்குத் திருக் கார்த்திகைத் தரிசநார்த்தஞ் சென் றவர் அங் கிருந்தபடியே மீண்டு ஸ்ரீ கோவிலூர் மடா லயத்தை யடைந்து, ஸ்ரீ ஆண்டவர் இரண்டாங் கால போசனஞ் செய்யும் சமயம், ஆண்டவரை நமஸ்கரித் தெழுந்து நின்ற அளவில், ஆண்டவர் அவர் மேற் றிருக்

கண்ணுற்று நீ எங் கிருந்து, வருகின்றனை, உனது தேக மிளைத்தற்குக் காரண மென்னை என வினவியருள, அடியேன் குன்றக் குடிக்குச் சென்று முருகக் கடவுள் தரிசனை பெற்று வருகின்றே னெனவும், வயிற்று வலியினால் நெடுங் காலம் நலிவுற்றமையால் உடம்பு இளைக்கப் பெற்றே னெனவும், விண்ணப்பித்து,மீண்டும் நமஸ்கரித் தெழுந்து, நின்றனர். உடனே, ஆண்டவர் பே ரருள் கொண்டு தமது பரி கலத் துள்ள அன்னத்தி லொரு கவள மெடுத்துக் கொடுத்தருளினர். அன்றே வயிற்றுவலி நின்று விட்டது. அது முதல் மரண பரிந்தம் ஆண்டவரிடத் தன்பு பூண்டு தொண்டு செய்து வந்தனர்.

எழுபதாவது

## ஸ்ரீ ஆண்டவர் அப்புக் குட்டிச் செட்டியாருக்கு விபூதி யனுப்பி அநுக்கிரகித்தல்.

ஒரு காலத்தில், இராயபுரம், வெ. மு. அப்புக் குட்டிச் செட்டியார் பஞ்சு வியாபாரத்தால் இரண்டு லக்ஷம் ரூபாய் நஷ்ட மடைந்தமை பற்றி மன வருத்த முற்றிருக்கையில், அவ் விஷயம் கேள்வியுறுமையால் ஆண்டவர் பள்ளத்தூ ரய்யா அவர்களை இராய புரம் அப்புக் குட்டிச் செட்டியாரிடம் சென்று திருப் பணி விஷயத்தைத் தெரிவித்து, ஏதேனும் அவர் கொடுத்த பொருளைப் பெற்று வா வென்று திரு வாக் களிக்க, அவ் வாக்ஞையைச் சிரமேற் கொண்டு சென்று, வந்த கருத்தைத் தெரிவிக்க, அவரும், அவர் பிராதாக்களும், அதனை யுணர்ந்து, ஆண்டவர் உத்தர வானதற்கு இது சமயம் பூரண மாய்க் கொடுத்தற்கு இயலாத கால மாக விருக்கின்றது. ஆனாலும், உத்தரவா யிருப்ப

தால், இச் சமயாநுசார மாய் ஏதேனுங் கொடுத்தனுப்ப வேண்டு மென்று உத்தேசித்து மனக் களிப்புடன் வந்த வரை உபசரித்து, ருபாய் எழு நூற் றைம்பது கொடுத் தனுப்ப, அஃதைப் பெற்று வந்து ஆண்டவர் சந்நிதியில் வைத்து, அவர்கள் கருத்தை யறிவிக்கக், கிருபாநிதி யாகிய ஆண்டவர் கேட்டு அவர்களன்பிற்கு மிக வியந்து பே ரானந்த முற்று, அவர்கண் மீது கருணை சுரந்து, பள்ளத்தூ ரய்யா அவர்களை மீண்டு மழைத்துத், தமது சங்கம் சத்திரம் குலிசம், பத்மம், மச்சம், துவசம், சத்திரம், கலசம், அங்கு சம், டமருகம், முதலிய ரேகைகளால், அலங்கரிக்கப் பெற்று முப் போது மலர்ந்து, எப்போது மொவ்வாது அப்போ தலர்ந்த செந் தாமரைப் போ தென்ன வெப்போது மொப்பாது என வாது ஓதித் தன்னை யகத்து நினைத்துத் துதித்து வரும் அடியார்களுக்கு நன் னிதியும், நற் கதியும், நற் பதியும், நன் மதியும், தந்தருளும் திருக் கரத்தால் விபூதித் பையில் நிறைய விபூதியை யள்ளி வைத்து, பள் ளத்தூ ரய்யா கையிற் கொடுத்து, இக் கணமே விரைவில் இராய புரஞ் சென்று அவர்களிடம் இவ் விபூதிப் பையைக் கொடுத்து இதற்கு நாற் பத் தைந் தாவது திநம் பஞ்சில் வந்த நஷ்டமும் நீங்கி மேற்கொண்டு அதிக லாபமுங் கிடைக் கும் எனச் சொல்லி வா வென் றனுப்ப, அவர்களும், அவ் வாக்கையின் பிரகாரஞ் சென்று உத்தரவைத் தெரிவித்து, விபூதிப் பையைக் கொடுத்தனர். அவர்களும் மிக்க சந் தோஷத்துடன் அனுக்கிரக பூர்வ மாய் வந்த, அவ் விபூதிப் பையைப் பெற்று, இழந்த தனத்தை யடைந்தவரைப் போல, மிக்க களிப்புற்றுக் கண்களிற் சேர்த்து மிக ஆதர வுடன் அகத்தில் வைப்பது போல் பெட் டகத்தில் வைத்து, அர்ச்சித்துத் கர்ப்பூர ஆராதனை செய்து ஆண்டவ

ரது கருணைக்கு மிக ஆச்சரிய முற்றுப் பள்ளத் தூரய்யா அவர்களை மகிழ்வுறும்படி உபசரித்த தனுப்பிவைத்தார்கள், பத்துத் திநஞ் சென்ற பிறகு, திரு வாக்கின்படியே பஞ்சுவிலை யுயர்ந்து நஷ்டம் ரூபாய் இரண்டு லக்ஷமும் நீங்கி, அதிக லாபம் ரூபாய் லக்ஷங் கிடைக்கப் பெற்று, ஆண்டவர் திரு வருளைச் சிந்தித்து ஆருத பேரானந்த முற்றிருந்தனர்.

எழுபத்தொன்றுவது

## ஸ்ரீ ஆண்டவர் சித்தத்தை திருநெல்லையம்மை பேதித்தல்.

பின்னொரு காலத்தில் கொற்றவாளீசர் திருநெல்லையம்மை யாலயத் திருமதிலை முற்றும் இடித்து வாணம் வெட்டி வேலை நடத்திவருஞ் சமயத்தில், ஆண்டவர் குருமூர்த்தியைத் தரிசிக்குங் காரண மாகப் பல்லக்கை கொண்டுவரும்படி உத்தரவு செய்து, அதில் ஆரோகணித்துக் கொண்டு, சூர சம்சார உபாத்தியாயர், அப்பாப் போலீசு என்னும் அடியார்க ளிருவருடன், பொருள் வைத்த சேரிக்குச் செல்லும் பொழுது, மறு நாள் சோம வாரத் திநத்தன்று சாயங் காலம் ஆண்டவருக்கு இரண்டாங் காலப் போசனத்துக்கு வழக்கப் பிரகாரம் நல்லான் செட்டியார், அன்னங் கொண்டு கோயிலூருக்குச் சென்று, ஆண்டவ ரெங்கே என்று விசாரித்து, நேற்றுக் காலையில் பொருள் வைத்த சேரிக்கு ஆண்டவ ரெழுந்தருளியிருக்கின்ற தென்று கேள்வியுற்றுத், திருநெல்லை நாயகி சந்நிதியிற் சென்று, அம்மையைக் கண்ணுற்று நோக்கி, அடி பாவி உங்கள் அப்பன் அரியாய மாய் ஆலயத்தினுள் சுவா

நம் புகும்படி மதிலை இடித்துப்போட்டு போய்விட்டானே, தன் வீடு கொள்ளை கொடுத்துக் கைக்குப் பாதிக்கு நிற்கின்றவர்கள் போலச், சும்மா விருக்கின்றனையே, இப்படிக்கு உணர்ச்சி யில்லாம லிருக்கலாமா வென்று சொல்லிப் போயினர். அன்று ஆண்டவர் அறந் தாங்கி கடந்து ஓர் தடாகத்தின் கரையி லிறங்கி இருக்கும்பொழுது ஒருவன் ஒரு பக்ஷியைச் சுட அந்தத் துப்பாக்கியின் சத்தங் கேட்டுத் திடுக் கெனப் பய முற்றது போல, வெருண்டு சித்தப் பிரமை யுற்று வஸ்திரத்தைத் கிழித் தெறிந்து விட்டு வழி தப்பி யோடினர். அது கண்ட சூர சம்மார உபாத்தியாயரும், அப்பாப் போலீசு அய்யாவும், இ தென்ன புதுமை ஒரு நாளு மில்லாத திரு நாளா யிருக்கின்றதே எனச் சற்றுலோசித்து, இனி நாம் சும்மா விருக்க லாகா தென வெண்ணி, ஆண்டவரைத் தொடர்ந்து பற்றிக்கொண்டு, வந்து பல்லக்கில் வைத்து இரு புறமுங் கதவைச் சாத்திப் பூட்டித் பல்லக்கைச் சிக்கலுக்கு விட அது வரை ஆண்டவர் போசந மின்றிப் பேச்சுக்கள் அள வின்றிப் பேசிப் பிரக்ஞா பங்கமாகவே இருந்தனர். பின்பு பொருள் வைத்த சேரியிற் சென்று மடாலயத்திற் பல்லக்கை இறக்கிப் பூட்டைத் திறந்து ஆண்டவரை மடாலயத்துக்குள் அழைத்துக் கொண்டு போய், வீர பத்திர சுவாமிகள் சந்நிதியில் விட, வணக்க மின்றிச் சுபாவப் பிரக்ஞையு மின்றி, இங்கு இருக்கின்றவ னுர் இந்தப் பரதேசியைக் கொண்டையை அறுக்க வேண்டு மென்று சொல்லினர். அது கேட்டு வீரபத்திர சுவாமிகள், ஏ சூர சம்மாரம் என விளித்து, நடந்த வரலாற்றை விவரமாய்ச் சொல் லென்று கூற, அப் பொழுது, சூர சம்சார உபாத்தியாயர் கோவிலூரில் இரு மதி லிடித்துக்கிடப்பதையும், அகாரணமாகப்

புறப்பட்டதையும், அது முதல் நடந்த வரலாற்றையும், உள்ளபடி சொல்ல, அது கேட்ட வீர பத்திர சுவாமிகள் இது திரு நெல்லை யம்பாளால் நேர்ந்த இடரே தவிர வே றில்லை என்று சொல்லிப், பல்லக்கி லேற்றித் துரித மாய்க் கோவி லூருக்குக் கொண்டு போங்க ளென்று சொல்ல, அவ் விருவரும் அம் மொழியைக் கேட்டு, ஆண்டவரைப் பல்லக்கி லேற்றிக் கொண்டு மீண்டும் கோவி லூருக்குப் புறப்பட்டு அறந்தாங்கிக்குச் சமீபத் துள்ள முன் இறங்கிய தடாகக் கரையிற் பல்லக்கை இறக்கிய காலத்தில், ஆண்ட வர் பல்லக்கினு ளிருந்து ஏ சூரசம்மாரம் என விளித்து, இன்று என்ன கிழமை, நாம் புறப்பட்டு, எத்தனை நா ளாயிற்று பசி மிகுதி யாக விருக்கின்ற தென்று சொல்லி யருளினர். அம் மொழி கேட்ட அவ் விருவரும், ஆண்ட வரைப் பார்த்துச் சுவாமி இன்று ஏழு தினங்க ளாயின வென்று சொல்லி முன் துப்பாக்கி சுட்டது முதல் நடந்த சமாசாரங்களை விவர மாகச் சொல்ல, அது கேட்டு ஆண்ட வரும் மந்தகாசத்தோடு நல்லான் ஏதேனும் அம்மை சந்நி தியில் உளறி யிருப்பான், அதற் கவள் செய்த திருவிளை யாடலே தவிர வே றில்லை இவ்விடத்துச் சமையல் செய்வித் துப் போசநஞ் செய்து கொண்டு பிரயாணபபடுவோ மென்று உத்தரவு கொடுக்க, அது போல, அவர்கள் சமை யல் செய்விக்கப், போசநஞ் செய்து கொண்டு புறப்பட்டுக் கோவிலூ ரடைந்து, தேவி கோட்டை இராம நாதன் செட்டியாரிடம் பொருள் வாங்கித் திரு மதிலைக் கட்டி முடித்துத் திரு நெல்லை யம்மையின் திரு வருளைப் பூரண மாக அடைந்து விளங்கினர்.

எழு பத் திரண் டாவது

## ஆண்டவருக்குத் திரு நெல்லை யம்மை மடைப் பள்ளியில் நடந்த திருட்டை வெளிப்படுத்தல்.

ஒரு திநம் ஆண்டவர் ஒட்டினு லியற்றிய மடத்தின் கண் சயநித்திருக்கும் போது. சாலிவாடீசுவரி ஆண்டவர் சயந ஸ்தாநத்தை யடைந்து, சிரசின் பக்கத்தில் நின்று, அப்பா வென விளித்து, நான் மங்கள மான மஞ்சள் ஸ்நாநம் செய்து ஒரு திங்க ளாயிற்று மடைப்பள்ளி வேலைக்காரர்கள், அம் மஞ்சளைத் தாசியின் கிரகத்திற்குக் கொண்டு செல்கின்றனர். இவ் வநீதியை நீவிர் பார்த்திருத் தல் நீதியாமோ, இப் பொழுதும் தாசி வீட்டிற்குக் கொண்டு போதற்குப் புகை போக்கி மாடத்தில் மஞ்சளை வைத் திருக்கின்றனர். அவற்றை விசாரிப்பாயாக, வெனத் திரு வாய் மலர்ந்து, அந்தர் ஸ்தாந மாயினள், உடனே ஆண்ட வர் நித்திரைவிட் டெழுந்து, ஆலயத்திற்குச் சென்று, அத் தியாந பட்ட ராகிய சுப்பய்யரை அழைத்து மடைப்பள்ளி யினுட் சென்று புகைபோக்கி மாடத்தி லிருக்கும் மஞ்சளை எடுத்து வாரும் என் றுரைக்க, அவ் வாறே சென்று, அப் புகை போக்கி மாடத்தி லிருக்கும் மஞ்ச ளனைத்தையும் எடுத்து வந்து கொடுத்துத், தங்களுக்கு இஃ திருந்தது எவ் விதந் தெரியவரு மென்று கேட்கத், திரு நெல்லை யம்மையின் றிரு வருளால் தெரிய வந்த தென்று திரு வாய் மலர்ந்து, மடைப்பள்ளி வேலைக்காரர்களுக்கு அபராதம் நியமித்துச் செவ்வையாக நடத்திவரும்படி கட்டளையிட் டருளினர். அன்று முதல் அப் பணியாளர்கள் ஆண்டவ ரிடத்துத் திரு நெல்லை யம்பாளின் பூரணநுக்கிரக மிருப்

பதை யுணர்ந்து பய பக்தியோடும் அபிடேகாதிகளை முறைப்படி நடத்தி வந்தனர்.

எழு பத்து மூன் ருவது

## ஸ்ரீ ஆண்டவர் ஆலய பரிபாலநஞ் செய்தல்.

ஸ்ரீ ஆண்டவர் இவ் விதம் அநந்தம் திரு விளையாடல் களைப் புரிந்தும்- அடியார்களிடம் அநேக திரவியங்க ளார்ச் சித்துக் கொற்றவாளீச ராலயத் திருப் பணிகளை நடத்தியும், கிராமங்களைச் சீர் திருத்தியும், பூசை, நிவேதந முதலியவை களைச் செவ்வை யாக நடந்து வரும்படி ஏற்பாடு செய் தும், திரு நெல்லை யம்பாளுக்கு ரதோற்சவங்களை நன் ருய் நடத்தியும், அடியார்களுக்கு, வாசிட்டம், கைவல்லியம், வேதாந்த சூடாமணி, பஞ்ச தசி. கீதாத் திரயம், ரிபு கீதை, அவிரோத வுந்தியார், பரணிப் பிரபந்தம், சீவன் முத்திப் பிரகரணம், ஆத்ம போதம், விவேக சூடாமணி, உபநிட தம், முதலிய அநந்த வேதாந்த கிரந்தங்களை உபதேசித்துக் கிருதார்த்தர்க ளாகச் செய்தும். சமிவந க்ஷேத்திரத்தின் கண் எழுந்தருளியிருந்து, கருணாநிதி இவ் வாலயப் பணி முழுமையும் வகித்துப் பார்த்து வர வேண்டு மென் னு மெண்ண முடையரா யிருக்கும் பொழுது, ஒரு ஆடிப் பூர உச்சவத்தில் திரு நெல்லை யம்பாள் ரதோற்சவங் கொண்ட ருளும் பொழுது, மேல வீதியின்கண் இரதம் நடவாமல் நின் று கொண்டன இரதத்தின் பின் பக்க லெழுந்தருளிய ஸ்ரீ ஆண்டவரும், இரதம் நடவா மையைத் தெரிந்து கொண்டு, கல் மண்டப முகப்பி லெழுந்தருளினர். இராம நாதன் செட்டியார்,சீக்கிரம் ஆண்டவர் சந்நிதியிற் சென் று இரத நின் று விட்டதே. நிலைக்கு வரும்படி செய்தருளல்

வேண்டு மென்று விண்ணப்பிக்க, அதற்கு ஆண்டவரும், தெற்கு மடத்தார் தெற்கே இருக்க, வடக்கு மடத்தார் வடக்கே யிருக்க, இரத மெவ் விதந் தன்னிலைக்கு வந்து நிற்கு மென் றுத்தர வளித்தனர். இவ் வாக்கியத்தைக் கேட்ட அடியார்கள், தெற்குக் குளத்துக் கரையியி லுள்ள சிதம்பர விநாயக ராலயத்தி லிருந்த பெரியய்யா, அண்ணுமலை அய்யா அவர்களுக்கும், வடக்கே ஐயுளி அம்மன் ஆலயத்திருந்த கருணுநிதி குட்டை ஐயா அவர்களுக்குந் தெரிவித்தனர். அவ் விடங்களில், தியானஞ் செய்து கொண்டிருந்த கருணுநிதி முதலிய பெரியோர்களும் மிகுந்த அச்சத்துடன் சீக்கிரம் இரதத் தடியில் வந்து நின்றனர்கள். வெகு பெரியோர்க ளாகிய அடியா ரனைவரும் அங்குற்றனர். ஏனைய பரிசனங்களும் வந்து நெருங்க இரதம் அரை நொடியில், தன் னிலைக்கு வந்து நின் றன. ஆண்டவரும் தம் உளத்தின்கண் பே ரானந்த முற்றிருந்தனர்.

எழு பத்து நான் காவது

## ஸ்ரீ ஆண்டவர் அடியார்களைக் கைமாறு கேட்டல்.

ஒரு நா ளிரவிற் சவுக்கையைச் சுற்றிலும் அடியார்க ளிருக்கையில், ஆண்டவர் அனைவரையும் பார்த்துக் கல்லலய்யாவை, வெள்ளையப்பா வென விளித்து என தன் புள்ள புத்திரர்க ளெல்லோரு மெனக் கொரு கைமாறு செய்யும்படி கேட்கின்றேன். அவ் விதஞ் செய்ய வேண்டு மென்று உத்தரவு செய்தருளினர். அதற்கு கல்லலய்யா அவர்கள், ஆண்டவரைப் பார்த்துத், திரு வாக்கிற் கெதிர்வாக் குண்டோ, எவ் வித மாஞ்ஞாபித்தாலும், அவ்விதம்

நடந்து கொள்கின்றோ மென்று விண்ணப்பஞ் செய்ய, அது கேட்ட ஆண்டவர் மற்றெல்லோரும் ஒன்றும் பதில் மொழி வின்ளாதிருக்கின்றார்களே யாது காரண மென்று பின்னருங் கேட்க, அதற்குக் கல்ல லய்யா அவர்களும் உத்தரவுப் பிரகாரம் நடந்து கொள்ளு கின்றோம், திரு வாக்கினு லாக்ஞாபிக்க வேண்டியது தா னென்று பின்னரும் விண்ணப்பஞ் செய்ய, ஆண்டவர் எனக்கொரு பொருளுந் தர வேண்டுவ தில்லை. இன்று முதற் றங்கள் தங்கள் குடும்பச் செலவிற்குக் கையி லுள்ளது போது மென்ற மதியோடு, வியாபார நிமித்தந் தொலைகளுக்குப் பிரயாணப்படா திருக்கும்படி கேட்டுக்கொள்ளு கின்றே னென்று திரு வாய் மலர்ந்தருளினர். அது கேட்ட அடியார்க ளெல்லோரும் ஆக்ஞையின் பிரகாரம் நடக்கக் கடவோ மென்று சொல்லி, அமைந்த வுள்ளத்தோடும் விண்ணப்பித்துப் போந்தனர்.

எழு பத் தைந் தாவது

## *ஸ்ரீ ஆண்டவர் தமது சுவாநுபூதியைச் சபையிற் றிருவாய் மலர்தல்.*

ஆண்டவர் ஓர் தினம் இரவிற், சிக்கல், வீர பத்திர சுவாமிகள் பசுபதி கோயில், ஆறு முக சுவாமிகள், துறையூர் கருணனந்த சுவாமிகள், திரு விடை மருதூர், பிச்சு சாஸ்திரி சுவாமிகள் முதலிய மகான்களோடு சவுக்கையி லெழுந்தருளித் துறவு சுவாமிகள், பால் சுவாமிகள், கல்லலய்யா அவர்கள், தேவிகோட்டை இராமநாதன் செட்டியாரவர்கள், பள்ளத் தூர் முத்து வீரப் பய்யா முதலிய சீடர்கள் சுற்றிலு மிருந்து, திரு வாக்கை எதிர் பார்க்கப்

பாடஞ் சொல்லுங் காலத்தில், ஆண்டவர் கல்லல் வெள்ளையப்பய்யாவை பார்த்து வெள்ளையப்பா, வென விளித்துத் தர்மம், அர்த்தம், காமம், மோட்ச மென்னு மிந் நான்கு புருஷார்த்தங்களையும் யாம் தாமே பூரண மாய்த் தடையின்றி யடைந்தோ மென்று திரு வாய் மலர்ந்தருள, சுவாமின்! அவை எங்ஙனம் அடையப்பட்டன வென்று மிருது வாகக் கல்லலய்யா வினவத், தருமத்திற் காக யாம் பொருள் கொடுக்கும் பொழுது இவ் வளவு கொடுத்தே, மென்றும், இவ் வளவு கொடுக்கப் போகின்றே மென்றும், நினைவிற்கு வருகிற தில்லை. ஒருவன், எமது கையிற் றிரவியத்தைத் தந்து கொடுக்கச் சொன்னால், அதையும், இவ் வள வென்று பாராமலே கொடுத்துவிடுகின்றோம். ஆதலால், யாம் செய்த தருமம் போ லொருவருஞ் செய்த தில்லை, அர்த்த மொரு குடும்பி ஒரு கிரகத்திற்குச் சம்பாதிப்பான், யாமோ நூறு குடும்பங்களுக்குச் சம்பாதித்துக் கொடுத்து வந்தோம், ஆதலால், அர்த்தமும் எம்மைப் போ லார்ச்சித்தவ ரொருவரு மில்லை. காமந் தான் உங்களுக்குத் தெரியாத தல்ல. மோக்ஷ விஷயத்தி லென்றாலோ வியாச வசிட்ட ஜநகாதிகள் எந்த ஞாநம் அடைந்தார்களோ, அஃதே யாம் அடைந்த ஞாந மென பிரம சபையின்கண் ஆண்டவ ருத்தரவு செய்தருளினர்.

எழு பத் தாறுவது

## ஸ்ரீ ஆண்டவர் வாசிட்ட முபதேசித்தல்.

ஆண்டவர், பள்ளத் தூர், முத்து வீரப்பய்யா அவர்களுக் கொரு முறையும், கல்லல் வெள்ளையப்பய்யா அவர்

களுக்கும், கருங்குளம், நாராயணய்யா அவர்களுக்கும், ஒரு முறையும், கண்டனூர் கருத்தய்யா அவர்களுக்கும், அரிமளம் சுப்பிரமணிய அய்யா அவர்களுக்கும், ஒரு முறையும், நேமத்தான் பட்டி, பழநியப்பய்யா அவர்களுக்கும், கேட்டையூர், அண்ணுமலை அய்யா அவர்களுக்கும், கண்டனூர், இராமய்யா அவர்களுக்கு மொரு முறையும், ஸ்ரீ கருணாநிதி யாகிய சிதம்பர ஞாந தேசிக ரவர்களுக்கும், மதுரை,குட்டை அய்யா அவர்களுக்கு, மொரு முறையும், கண்டனூர், பெரிய வெள்ளை யப்பய்யா அவர்களுக்கும், நாகப்பய்யா அவர்களுக்கும், பெரிய யெரியணய்யா அவர்களுக்கு, மொரு முறையும், வெங்கடாசல அய்யா அவர்களுக்கும், மேற்படி யூர், குமாப்பய்யா அவர்களுக்கும், பள்ளத்தூர், குப்பான் செட்டி அய்யா அவர்களுக்கும், தேவிகோட்டை, காசி, பழநி யப்பய்யா அவர்களுக்கு மொரு முறையு மாக, ஏழு முறை வாசிட்ட பாட மநுக்கிரகஞ் செய்தருளினர். ஒரு காலம் குன்றுக் குடியில், திருவண்ணுமலை ஆதீந பரம்பரையிலுள்ள, முப்பத்தைந்தாவது பட்டம், ஆறுமுக ஞாந தேசிக ரென்னும் பண்டாரச் சந்நிதி, ஸ்ரீ ஆண்டவருக்கு அதிகப் பிரிய முடையவராயும், எப்பொழுதும், கோவிலூரில், ஆண்டவரை விட்டுப் பிரியாத பிரேம பத்தி யுள்ளவராயும், மகா வித்துவானுயு மிருந்தனர். அவர், வேதாகமாதி கிரந்தங்க ளெல்லாம் சம்பாதநம் பண்ணி சம்ரெக்ஷித்து சீவன் முத்தாநந்த முடையவரா யிருந்துள்ள மகா பெரியோர்களோடு, யேகாந்தமா யிருந்து சம்பாசநஞ் செய்துவந்தனர். அக் காலத்தில், ஆண்டவரது சமீபத்தி லிரு பக்கலு மிரண்டு விசுப்

பலகையி லிருந்து கொண்டு,இராப் பொழுது முழுமையும், சைவை, வைஷ்ணவ வாதத்தில், ஆறு முக ஞாந தேசிகரும், திரு விடை மருதூர், பிச்சு சாஸ்திரியா ரென்று பெயர் விளங்கிய, உலோக நாத சுவாமிகளும், சைவோற்கிருஷ்ட ஸ்தாபநஞ் செய்து, சிவ பரத்துவம் ஸ்தாபித்தனர்கள். ஆண்டவரும், வைணவ சித்தாந்தத்தைத் ஸ்தாபநஞ் செய்து,விஷ்ணு பரத்துவம் ஸ்தாபித்தனர். இவ்விதமாகப் பரமாத்துவித ஞாந சித்தாந்தங்களை யுணர்ந்து சமாதி நிட்டர்க ளான மகாத்மாக்களா யிருத்தலின், விநோத மாக விவகரித்து முடிவில் சந்தோஷத்துட னிருந்து ஆநந்த மாகவே காலங் கழித்து வந்தனர்கள்.

எழு பத்து ஏழு

## ஸ்ரீ ஆண்டவர் திரு வாய் மலர்ந்தருளிய பிரபந்தங்கள்.

ஆண்டவர் பூர்வந் தமது குரு மூர்த்தி பரிபூரண சமரச சுபாவ மடைந்த காலத்தும், ஏனைய காலங்களினும், தமது குரு மூர்த்தி யாகிய உகந்த குரு சுவாமிகள் பேரில், அறு சீர், எழு சீர், எண் சீர்களால், ஆசிரிய விருத்தம், வெண்பா முதலியவைகள் சொல்லித் துதித்துப், பின், அநந்தம் திரு விளையாடல்கள் செய்ததும் தவிரப், பிற்காலத்துச் சநிக்குஞ் சீவ கோடிகளின் சன்ம நிவாரண நிமித்தம் கவிகளாற் சிறந்த வெண்பா, கலித் துறை, விருத்தம், கலிப் பா, இரண் டடிக் குறட் டாழிசை, வெண்பா, செந்துறை, கண்ணி, சந்த விருத்தம், அகவற் பா முதலிய பல பாவினங்களாற் தெய்வ வணக்கம், தெய்வ நிச்சயம், முத்தி நிச்சயம், நெஞ்சிற் கறிவுறுத்தல், நெஞ்சோ டிரங்கல்

கிளிப் பத்து. சொரூப வணக்கம் இவை முதலிய அநேக நாமங்கள் புனைந்த பிரபந்தங்களைப் பாடித் தமது சுவாநுபூதியைத் திரு வாய் மலர்ந்தருளினர்.

எழுபத்தெட்டு.

## ஸ்ரீ ஆண்டவர், பரிபூரண மடைதல்.

ஸ்ரீ ஆண்டவர், கோவிலூர், க்ஷேத்திரத்தில், அடியார்களாகிய முமுக்ஷுகளுக்கு ஏழு முறை ஸ்ரீ வாசிட்ட கிரந்தத்தையும், மற்று மநந்த கிரந்தங்களை அநந்த வாவிர்த்தியும், பாடஞ் சொல்லி, அநுக்கிரகித்துக் கொண் டிருந்து, ஓர் நாள் சாயங் காலம், சரீர வியோகம் சமீபித்தது தெரிந்து, கல்லலய்யாவை நோக்கி, இப் பொழு திவ் விடத் தெழுந்தருளியிருக்கின்ற நமது தேசிக பரம்பரையி லுள்ள மகாத்மாக்களையும், அன்பர்களான மற்றுமுள்ள பெரியோகளையும், அடியார்க ளனைவரையும். இவ் விடத்துக்கு அழைப்பிக்க வேண்டு மென்று, ஆக்ஞாபிக்க. அவர்களும், அவ் வாஞ்ஞையின் பிரகாரந் தெரிவிக்க, உடனே சிக்கல், வீரபத்திர சுவாமிகள், பசுபதி கோவில், ஆறுமுகசுவாமிகள், திரு விடை மருதூர். பிச்சு சாஸ்திரி சுவாமிகள், துறையூர் கருணாநந்த சுவாமிகள், குன்றுக் குடித் திரு வண்ணாமலையாதீநத்து வேலாயுத சுவாமிகள் முதலிய மகான்களும், அவ் விடத்திற்கு வந்து சமீபத்தில் இனிது வீற்றிருக்கத், துறவு சுவாமிகள், மதுரைப் பால் சுவாமிகள், பள்ளத்தூர் முத்து வீரப்பய்யா அவர்கள், கல்லல் வெள்ளையப்பய்யா அவர்கள், கருத்தய்யா அவர்கள், பெரியய்யா வென்னுந் திரு நாம முடைய பழயப்பய்யா அவர்கள், அண்ணாமலை ஐயா அவர்கள், அரி மளம் சுப்பிர

மணிய அய்யா அவர்கள், காரைக்குடி, அழகப் பய்யா அவர்கள, மதுரை, குட்டை ஐயா அவர்கள், கருணை யங் கூட லென விளங்கிய ஸ்ரீ கருணாநிதி, மதுரை, மெய்யப் பய்யா அவர்கள், நாகப் பய்யா அவர்கள், பெரியணய்யா அவர்கள், வெள்ளையப்பய்யா அவர்கள், நல்லான் செட் டியா ரவர்கள், இராம நாதன் செட்டியா ரவர்கள், சாத் தப்ப செட்டியா ரவர்கள், இராய புரம், முத்தய்யா செட்டி யா ரவர்கள் முதலிய அநேக அடியர் குழாங்களும் வந்து, நமஸ்கரித்து, வணங்கி நிற்க, அப் பொழுது ஆண்டவர், அடியார்களனைவரைம் சந்நிதியிலிருக்கும்படி கட்டளையிட் டருளிக், கல்லய்யா அவர்களைப் பார்த்து, வெள்ளையப்பா வென விளித்து, இம் மடாலயத்தில், எப் பொழுதும் பரம் பரை யாக அடியார் குளாங்க ளிருந்து பரிபாலனஞ் செய்து விளங்கிவர வேண்டுமே உங்களுக் கெல்லாம் எப்படிச் சம்மத மென்று வினவ, அவர் சுவாமின் ஆக்ஞையின் பிர காரம் நடந்து கொள்கின்றோ மென்று, சொலல, பள் ளத் தூர், சிங்கய்யா பரிபாலஞ் செய்து வருவானோ வென்று பிரசிநஞ் செய்ய, எல்லோரும் பிரதி உத்தரஞ் சொல்லா திருந்தனர். மீண்டும ஆண்டவர் தாமே, அவன் காலையிற் பள்ளத் தூருக்குப் போய் விடுவேனே என்று திரு வாய் விண்டு, நீ தான் பரிபாலனம் பண்ணி வரு வாயோ வென்று கேட்க, அவர்களும், மௌனமா யிருத் தலைக் கண்டு, நீயும் மூன்ரும் நாள் கல்லலுக்குப் போய்விடு வாயே என்று திருவாய் மலர்ந்து, கண்ட னூர், கருத்தான் செட்டியார் பரிபாலனஞ் செய்து வருவானோ வென்று வினவி, அவனுங் கண்ட னூர் விடியப் போய் விடுவானே என்று திரு வாக களித்து, வீரப்பனுஞ் சாக்கைத் திருப் பணியை ஆரம்பித்துக் கொண்டானே. வேறே யார்

பார்க்கப் போகிறார்களென்று சொல்லியருளினர். அதற்குக் கல்லலய்யா ஆண்டவரைப் பார்த்துத், திருவாக்கிற்கெதிர்வாக்குண்டா, யாரைப் பார்க்கச் சொல்லி அநுக்கிரகித்தாலும், அவர்கள் அவ் வாக்ஞையைக் கடவாமல் பார்ப்பார்களென்று விண்ணப்பஞ் செய்ய, அது சரி தான், நீ சொல்லுகின்றனை, யாராகிலும் நான் பார்த்து வருகின்றேனென்று சொல்லவேண்டுமே, அப்படி ஒருவருஞ் சொல்லவில்லையே என, பின்னரும், கல்லலய்யா அவர்கள், அவ்விடத்தில் உத்தரவு கொடுத்தால் தடையில்லையென்று விண்ணப்பஞ் செய்யப், பின்னும் ஆண்டவர் துறவுப் பிள்ளை, சிதம்பரம் சிதம்பரமென்று போய் விடுமே எங்கும் சிதம்பரந் தானே என்று சொல்லிச், சமீபத்து வடபால் நின்ற துறவு சுவாமிகளை அன்பு கூர்ந்து நோக்கி, இன்று முதல் இம் மடாலயத்திலிருந்து அடியார்களுக்குப் பாடஞ் சொல்லிக் கொண்டு பரிகலப் பிக்ஷை ஏற்றுண்ண வேண்டுமென்று அநுக்கிரகித்து, விபூதியை எடுத்துக் கரத்தில் வைத்தருளி, மீண்டும் கருணையங் கடலாகிய ஆண்டவர் தமக்குத் தென்பால் நின்ற, கருணாநிதியை அன்பாற் கருணை மழை பொழிந்து கடாக்ஷித்து என்பாற் றந்த சிவஞானத்தைத் திருநெல்லையம்பாள் உன்பாற் றந்தருளுவள், இவ் வாலயத்தைச் செவ்வையாகப் பரிபாலநம் பண்ணி வரக் கடவை என்று ஆஞ்ஞாபித்துத், தமது திருக் கரத்தால் விபூதியை எடுத்து அநுக்கிரக பூர்வமாய்க் கையில் வைத்தருளினர் உடனே அடியார்கள் யாவரும் பேராநந்த சமுத்திரத்தில் மூழ்கி ஆச்சரிய முற்று, ஆண்டவர் திருக் குறிப்பிருந்தமையை நினைந்து, வியந்து, கனிந்து, கொண்டாடினார்கள், மேல் ஸ்ரீ குரு மூர்த்தியாகிய ஆண்டவர், கலி நாலாயிரத்துத் தொளாயிரத்து

நாற் பத் தெட்டு, சாலி வாகந சகாப்தம். ஆயிரத் தெழு நூற் றறு பத் தொன்பது, பில வங்க வருடம், உத்த ராயணம், சிசிர ருது, பங்குனி மாசம், சுக்கில பட்சம், எட் டாங் தேதி, பாநு வாரம், பௌர்ணிமை திதி, உத்திர நட்சத்திரம், கன்னியா லக்நம், இவைகள் கூடிய சுப திநத் தில், பிரமாநந்த சிந்துவிற் கலந்தருளினர். அப் பொழுது துறவு சுவாமிகள், கருணை நிதி முதலிய அடியார்களும், மற்று மேலைய பெரியோர்களும், ஆண்டவருக்கு மண்ட லாபிடேக பரியந்த மான கநந விதிகளை அதிக சிறப்பாக நடத்தி, அடியார்களுக்கு எல்லாம் மகேசுவர பூஜையையும், ஆலயத்தில் அபிடேக நிவேதநங்களையும், அபரிமித மாகச் செய்து களிப்புற்றிருந்தனர். இந்த அற்புத வைபவங்களை யெல்லாம், அப் பொழுது சிதம்பரத்து வாசஞ் செய்து கொண்டிருந்த, ஸ்ரீ யாழ்ப் பாணம், நல் லூர், ஆறு முக நாவல ரவர்கள், ஆண்டவரது அடியவர்களு ளொருவ ராகிய அரி மளம் அடைக்கப் பய்யா அவர்கள் வாயிலாகத் தெரியப் பெற்று, மிக்க ஆராமை மே லீட்டினுல், "சீர் கொண்ட சகவருட மாயரத் தெழுநூ று சேருமறு பத் தொன்பதிற்-றிருமருவு பிலவங்க வருடமதின் மீனமாங் திங்களெட் டாங்தேதியிற்-றிரமருவு பானுவா ரத்தினுத் திரமெனச் செப்புநட் சத்திரத்திற்-சிறந்தபூ ரணியெனுந் திதியதனி லினிதுவரு திகழ்கன்னி லக்கிநத்தே, கார்கொ ண்ட புயல்வண்ணன் மலரயன் வருந்தியுங் காணுத பெரு வாழ்வெனுங்-கறைமிடற் றிறைராச கட்க ர மேசுரன் கருணையுரு வோடமர்ந்து-கனவெழில்கொண் மணிமாட நிலவுசமி வநமெனக் கழறுமுயர் பதியில்வாழ்வான்- கணிதமறு சீடர்தம தகவிருடு ரத்தவரு கருதரிய ஞாநதப நன், போர்கொண்ட காமக்கு ரோதலோ பாதியாம் புகல்

குற்ற நீங்கு புனிதன்-பொறைபறிவ டக்கமருண் முதலாற் குணமொடு பொருந்திவள ருற்ற முதல்வன், புவநமூன் றினுமிவன் புகழ்சென்றி டற்கிடம் போதாதெ னச்சிறந் தோன்-பொருவிலா துயர்சுத்த வேதாந்த சாத்திரம் போத மிக்குள்ள நிபுணன், பேர்கொண்ட நிர்மலச மாதிசாட் சாத்கார பிரதாப மிகுசி ரேடஷன், "பெருமைநிறை தரு முத்துராமலிங் கக்குரு பிறங்கியிடு மத்துவிதநிட்-பிரபஞ்ச நிர்விஷய நிஷ்களா தீதமாம் பெருவெளிய தாகிநின்ற-பேசரும கண்டபரி பூரணசு காநந்த பிரமமா யிலகினு னே." என்னுங் கவியை இயற்றி யனுப்பினர்,

ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிகர் சரிதம்
முற்றுப் பெற்றது.

## 7. ஸ்ரீ (துறவு) அருணாசல தேசிக சுவாமிகள் சரித்திரம்.

நாவலர் போற்றும் சமிநிழல் அமரும்
நாயகன் நளிநநன் மலரை,
மாஎழில் ஆறு முகன்றனைக் கொற்ற
வாழ்இறை திருநெல்லை அம்மை,
ஆவல்நல் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞாநமும் அளித்துக்,
கோவிலூ ரினிவாழ் அருணா சலநற்
குருபரன் தாள்திநம் பணிவாம்.

கடல்புடை சூழ்ந்த பூலோகத்திலே பரமசிவன் அறு பத்து நான்கு திரு விளையாடல் புரிந்த, பாண்டி வள நாட் டிலே, தேவி கோட்டை யென்னும் ஊரிலே, தந வைசிய குலத்திலே, இலுப்பைக் குடி கோத்திரத்திலே, வினை தீர்த்

தான் செட்டியாரும், அவர் மனைவி முத்தம்மாளும், இருந்தனர். அவர்கள் புதல்வர் துறவு சுவாமிகள், கண்டனூர் அருணுசல சுவாமிகளுடன் வியாபார நிமித்தமாய்த், திரு நெல் வேலிக் குப்போயிருந்தனர். அங்கு இருவரும் மிக்க சிநேகத்தால் பிரியாத் தன்மை யுடையவர்களா யிருந்து, கோவி லூரில் ஆண்டவரைச் சர ணடைந்து, அநுக்கிரகம் பெற்றுச், சிலகால மங்கிருந்து, பஞ்ச தசி கைவல்ய முதலிய வேதாந்த சாஸ்திரங்களைப் பாடங் கேட்டு, அதி விரக்தியினுல், பரணிப் பிரபந்தமுங் பாடங் கேட்க வேண்டு மென்னுங், கருத்தினை யுடையவர் களாய், ஓர் வேதியர் முக மாகக், குன்ருக் குடியில், திரு வண்ணுமலை ஆதீந பரம்பரையி லுள்ள 35 வது பட்டம் ஆறு முக தேசிக ரவர்களிடத்தில், அந் நூல் இருப்ப தாகக் கேள்வி யுற்று, அங்கு சென்று அவ் வாறு முக தேசிகரை வணங்கி, அஞ்ஞ வதைப் பரணிப் பிரபந்தம் வேண்டு மென்று கேட்க, அவர்களைப் பார்த்துத் தாங்கள் தானே அஞ்ஞ வதைப் பரணி படித்துத் துறவு பண்ணிக் கொள் ளப் போகிறீர்கள்'' என்று மந்தகாசத்தினேடு கூறி, அந் நூலைக் கொடுக்க, அதனைப் பெற்றுக் கொண்டு ஒன்றும் பதில் விள்ளாது, கோவி லூருக்குப் போய், ஸ்ரீ, முத்தி ராம லிங்க ஞாந தேசிகரிடம் பாடம் கேட்டு முடித்துக் கொண்டு, அதன் பின் துறவடைய வேண்டு மென்னும் கருத் துற்று, எவ் வித உபாயத்தி லாவது ஆண்டவரிடம் உத்திரவு பெற்றுக் கொண்டு தான், அக் காரியத்தை முடிக்க வேணு மென் றெண்ணி, இரவிற் பாடங் கேட்டுப் போசநத்திற்குப் பின்பு, குரு மூர்த்தியின் சயந ஸ்தாநத்தை யடைந்து, குரு மூர்த்தியின் திரு வடிகளை வருடிக்கொண் டிருந்து, மிருது வாக, எங்க ளிருவருக்கும் சந்யாசத்திற்கு

உத்தரவு கொடுத்தருளல் வேண்டு மென்று பிரார்த்திக்க, அப்படியே செய்வீர்கள் எனத் திரு வாய் மலர்ந்தருளினர். அவ் வுத்தரவை சிர மேற்கொண்டு மும் முறை நமஸ்கரித் தெழுந்து, கொற்றவா வீசுவரர் ஆலயத்தினை அடைந்து, நாங் கொள்ளுந் துறவு, முற்றுப் பெற்று, நன்கு விளங்க வேண்டு மெனப் பிரார்த்தித்து, ராஜ கட்க பரமேசுவரரை யும், சாலிவாடீசுவரியையும், சாஷ்டாங்க மாக நமஸ்காரஞ் செய்து, விடை பெற்றுக் கொண்டு, வடபால் உள்ள நெடுங் குடி என்னும் ஊரில், சிவ க்ஷேத்திரத்தில், ஆதி குரு தக்ஷிணா மூர்த்தி சந்நிதியில், சந்நியாசம் பெற்றுச் சிதம் பரத்திற்குச் சென்றனர். அங்குச் சென்று, சிற்சபையின் கண் எழுந்தருளியிருக்கும் நடேச பிரானை இரண்டு கால முஞ் சேவித்துக் கொண்டு, அந்தச் க்ஷேத்திரத்திற் கரத் திற் பிக்ஷை யேற் றுண்டு, வீர பத்திர ஸ்வாமிக ளிருந்த கேணி மடத்தில் வாசஞ் செய்து கொண் டிருந்தனர்.

ஒரு நாள் சுவாமிக ளிருவரும், சிதம்பரத்தில் பிக்ஷைக்குச் சென்ற காலத்தில், ஒரு கிரகத்து முற்றத்தில், மாதர்கள் பிக்ஷையை வைத்துக் கொண்டு நின்றனர். ஸ்வாமிகள், பிக்ஷை வாங்குவதற்கு முற்றத்தில் சென்றவுடன் அம் மாதர்கள் கெட்ட எண்ணத்தோடு கபாட பந்தனஞ் செய்தனர். பின்னர் தங்கள் கருத்தை ஸ்வாமிகளிடம் அறி விக்க, உடனே இருவரும் மௌன முற்று முற்றத்திற் றானே பத்மாசனத்தி லிருந்து, நட ராஜனைத் தியானஞ் செய்து கொண்டிருந்தனர். அம் மாதர்களும், தங்கள் கருத்து நிறைவேற மாட்டா தென்று எண்ணிக் கொண்டு, விரை விற் கதவைத் திறந்து விடச் சுவாமிக ளிருவரும் வெளி யில் வந்து, இனி யாம் கிரகத்திற்குள் பிரவேசித்துப் பிக்ஷை

யேற்ப தில்லை யென்று நிச்சயஞ்செய்து கொண்டு, அன்று முதல் வீதியில் நின்றே பலி யேற்றுப் புசித்து வந்தனர். ஆண்டவர் உத்தரவின் பேரில் மீண்டுங் கோவிலூருக்கு வந்து. சிதம்பர விநாயகர் ஆலயத்தில், வசித்துக் கொண்டிருந்தார்கள். சில காலம் சென்ற பின்னர், இருவரும் ஆண்டவடரித்து உத்தரவு பெற்றுச் சிதம்பரஞ் சென்று வசித்து வரும் போது. சுவாமிகள், தம்மைச் சரணடைந்த நித்தியாநந்த சுவாமிகள், திருநெல்வேலி சுப்பிரமண்ய சுவாமிகள், வளவனூர் ஷண்முக சுவாமிகள், மதுரைச் சுப்பராய சுவாமிகள், கோவிந்த சுவாமிகள் முதலிய துறவிகளுக்கும், பாகநேரி முத்துக்கருப்பையா, மதுரை மெய்யப்பையா முதலிய கிரகஸ்தர்களுக்கும், நியமமாகத் திநந்தோறும் தர்க்க யுக்தி, அநுமாநங்களோடு சாஸ்திரங்களை அநுக்கிரகித்து வந்தார்கள், அப்போது, கண்டனூர் சின்னத்துரை சுவாமிகள், மாந தியாநாதிகளின் பொருட்டுத் தனியே யிருக்க வேண்டுமென்று வடக்குக் கோபுரத்தில், மாந தியாநாதிகளைச் செய்து கொண்டிருப்பர் சுவாமிகள் முமுக்ஷுக்களுக்கு உபதேசிக்கும் காலந் தவிர மற்றக் காலமெல்லாம் கேணி மடத்து ஒடுக்கத்தினுள் தியாநஞ் செய்து கொண்டிருப்பர், ஆலயத்திற்குத் தரிசந நிமித்தம் போகுங் காலத்து, ஒருவரை யொருவர் சந்தித்துச் கொள்வார்கள், ஆண்டவர் நடத்தி வருங் குரு பூஜை, திருநெல்லை யம்மை யுற்சவ முதலியவற்றிற்கு, வருடந் தோறும் போய் வருவார்கள். இவ் வா றிருவரும், சிதம்பரத்தில் வசிக்குங் காலத்துச், சுவேதாரண்ய க்ஷேத்திரத்திற்குச் சென்று, ஆலயத்துட் பிரவேசித்துத் திரு வெண்காடரைத் தரிசித்துச், சந்நிதாநத்தில் நிற்கும் போது, ஆதிசைவர்

விபூதி கொடுக்கப் பெற்று, வெளியில் வந்து வீதியில் பிக்ஷைக்குச் சென்று, அகால மாயின்மையால், பிக்ஷை யகப்படாமல் இருவரும் ஆலயத்திற் பிரவேசித்து, அர்த்த சாம தரிசநஞ் செய்து, தீர்த்தத்தில் இரண்டு கை ஜல மருந்திக் குட வரையில் சிவ பெருமானைச் சிந்தித்துக் கொண்டு நித்திரை செய்தார்கள். அக் காலையிற், சிவ பெரு மான் அவ் வடியார்கள் மீது கொண்ட கருணையினால், தாம் ஆதிசைவ வேஷங் கொண்டு, கமலத்தில் இரண்டு சர்க்கரை யந்நத்தைக் கொண்டு வந்து, அவ் விரு வர் கைகளிலுங் கொடுத்தனர். அப் போது, அவர்கள் அவரை ஆதிசைவ ரென மதித்து, அதனை அன்போடு வாங்கித் தீர்த்தக் கரையில் சென்று புசித்து, மறுபடியும் நித்திரை செய்து, காலையி லெழுந்து நித்திய கர்மங்களை முடித்துக் கொண்டு, ஆலயத்துட் சென்று, சிவ பிரானைத் தரிசிக்கும் போது, ஆதிசைவர் இருவரையும் பாத்து இர வில் எங்கு போஜநஞ் செய்து சயநித்திருந்தீர்க ளென்று கேட்க, சுவாமிக ளிருவரும் ஒருவரை யொருவர் பார்த்து இராத்திரி அந்நங் கொடுத்தவர் இவரா யிருக்க. இப்படிக் கேட்கின்றாரே என்று யோசித்து, அவ் வாதி சைவரைப் பார்த்து, இராத்திரி இரண்டு சர்க்கரை யநநங் கொடுத்தது தாங்கள் தானே யென்று கேட்டார்கள். அதற்கு அவர் "யான் எப் போது கொடுத்தேன்" என்று பிரதியுத்தரங் கூறினர். அதனைக் கேட்டு, இருவரும் இது ஸ்ரீ நடேசப் பெருமானது திரு விளையாடலே யன்றி, வே றில்லை யென்று தம் மநத்துட் கொண்டு, ஆச்சரியத்தையும், பே ராநந்தத்தையு மடைந்து, அங்கு சில நாள் வசித்தும், மீண்டும் சிதம்பரஞ் சென்று, அங்கு வசித்து வந்தனர். அவ் விருவரும், மற் றொரு காலத்தில், திரு வண்ணமலைக்

கெழுந்தருளி, அங் குள்ள ஆரண்யப் பிரதேசத்தில் வசிக்க வேண்டு மென்று கருதி, அம் மலையை நோக்கிச் செல்லு கையில், மேட்டுச் சாவடியி லிருந்த சேவகர்கள், அவ் வழி யாகத் தனியே போக லாகா தென்று தடுத்தனர். அதற் கிருவரும் எங்களுக்குந் தடை யுளதோ வென்ன, இடையிற் காவி வஸ்திர மிருக்கின்றதே யென் றச் சேவ கர்கள் கூறினர். அப்போது, இருவரும் இடையி லிருந்த வஸ்திரத்தைக் களைந்து அவர்கள் முன் வைத்து விட்டு, திகம்பரிக ளாய், அருண கிரியை யடைந்து ஈசாங்ய சுவாமி கள் மடத்திலும், அம் மலை ஆரண்யங்களிலும், சில காலம் ஏகாந்த மாய் வசித்து,பின்னர்த் திருப்பதி, திருக் காளத்தி முதலிய க்ஷேத்திரங்களிலும், கெந்த மூல பலாதிகளைப் புசித் துக் கொண்டு, சில நாட் கழித்து, மீண்டுந் தில்லையை யடைந்து நடந்து, நடந தரிசநஞ் செய்து, ஆத்மாநு சந்தாநபர்களா யிருந்தனர். அப் போது, யாழ்ப் பாணத் தைச் சார்ந்த, நல்லூ ரென்னும் நகரத்தில் வசிக்கும் சைவ சித்தாந்த வித்வத் சிரேஷ்ட ராகிய, ஆறு முக நாவலர் ஸ்ரீ நடேச தரிசநத்தின் பொருட்டுச் சிதம்பரத்தை யடைந்து, சிற் சபேசர் திரு வீதியி லெழுந்தருளத் தரிச நார்த்த மாக அங்குவந்து சோ்ந்தனர். அப் போது, சுவாமி க ளிருவரும் அடியார் குழாங்களோடு நின்று சபா நாத னைத் தரிசித்துச் செல்லுவதை கண் காக்ஷி யாகப் பார்த்து, பின் றொடர்ந்து அவாகள் வசிக்கும் கேணி மடத்திற் சென்று, இரண்டு மூர்த்திகளையும் தரிசித்து வணங்கி நின்ற னர். அப் போதவரைச் சுவாமிகள், "தாம் யார்?", என்று வினவ, அவர் யான் வசிப்பது யாழ்ப்பாணம் நல லூர், என் பெயர் ஆறு முகம், ஸ்ரீ நடேசப் பெரு மானைத் தரிசிக்கும் பொருட்டு இங்கு வந்தேன் என்று

கூறி நிற்க, அவர் வார்த்தை நயத்தைக் கேட்டு உட்காரும்படி ஆஞ்ஞாபித்ததின் பேரில், சற்று நேர மங்கிருந்து அவர்கள் பிரபாவங்களைக் கண்டு ஆச்சரிய மடைந்து, உத்தரவு பெற்றுச் சென்று, பின் நாள் தோறும், அவ்வாறே வந்து தரிசித்துப் போவர். சுவாமிகளும் அவரது நல்லொழுக்கத்திற்கு வியப் படைந்து ஸ்காந்த புராணத்தைத் திநந்தோறும் பகல் பதினைந்து நாளிகைக்குமேல் பிரசங்கஞ் செய்து வரும்படி ஆக்ஞாபிக்க, அங்ஙனமே செய்து வந்தனர். சுவாமிகள் அப் பிரசங்கத்தைக் கேட்டுச் சந்தோஷித்து, ஒரு நாள் இன்று முதல் புராணப் பிரசங்கம் செய்து வர வேண்டுமே யன்றிப், பாதிரிமார்களுக்குப் பாடஞ் சொல்லல லாகா தென்று உத்தரவு செய்ய, அவ்வாறே அன்று முதல் பாதிரிமார்களுக்குப் பாடம் சொல்லுத லொழிந்து, புராணப் பிரசங்கஞ் செய்தலோடு, சைவ நூல்களும் பயின்று வந்தனர், இவ் வாறு, அநந்த அடியார்களுக்கு அநுக்கிரகம் செய்துகொண்டு நெடுங் காலம் வசித்துக்கொண்டிருந்தார்கள். அங்ஙன மிருக்கு நாளில் ஒரு நாள் சின்னத் துறவு சுவாமிகளுக்குச் சிற்சபேசர் பிரசந்நமாய் 'நீ காசிக்குச் சென்று கங்கா ஸ்நாநம் பண்ணி விசுவ நாதரை தரிசிப்பாயாக'' என்று உத்தரவு செய்ய, அதனை சுவாமிகளுக்கு அறிவித்து விடைபெற்றுக் கொண்டு, காசி க்ஷேத்திரத்தை யடைந்து கங்கா ஸ்நாநம் பண்ணி விசுவ நாதரைத் தரிசித்துக் கொண்டு சில திந மிருந்தார்கள்.

ஒரு நாள் அத் தலத்தி லிருக்கும் திரு வாவடுதுறை மடத்து நமச்சிவாயத் தம்பிரானிடத்திற் சென்று, இந்தத் தேகம் குரோதி ளு, மிதுன மாசம், 31உ சுக்கிர வாரம்,

பத்து நாழிகைக்கு வியோக மாய் விடும், இவ் விஷபத்தை எமது ஞானாசாரியர் திருப் பெருந் துறைக் கடுத்த கோவி லூ ரென்னும் க்ஷேத்திரத்தில் எழுந்தருளி மிருக்கின் றமை யால், அவருக்கு ஒரு நிருப வாயிலாகத் தெரிவிக்க வேண் டும் என்று கூறினர், நமசிவாயத் தம்பிரானும், அதற் கியைந்து அன்று முதல் இரண் டடியார்களை, அத் துறவு ஸ்வாமிகளை விட் டகலாதிருக்கும்படி நியமித்து, சுவாமி கள் திரு வாய் மலர்ந்தருளிய பிரகாரம் தேக வியோக மெய்திய தன்மையை யறிந்து, ஆநந்த மடைந்து, அத் தேகத்தைத் கற் றெட்டியில் அடக்கஞ் செய்து, கங்கையி லிறக்கிவிட்டு, இவ் விஷயத்தைக் கோவிலூர் ஆண்டவ ருக்கு மிக வணக்கத்துடன் ஓர் நிருபம் எழுதித் தெரிவித்தனர். இஃது இங்ஙன மிருக்க, சிதம்பரத்தி லெழுந்தருளி யிருந்த சுவாமிகள், தம்மோடு இடைவிடா திருந்த சின்னத் துறவு சுவாமிகள், காசிக்குச் சென்ற பின், அடியார்களுடன் கோவி லூருக் கெழுந் தருளி, குரு மூர்த்தியைத் தரிசித்து நித்தியாநந்தத்தை யடைந்திருந்தனர். பின்னர், ஆண்டவர் பூரண தசை யடையுங் காலத்து, ஆஞ்ஞாபித்தபடி, அவ் வாதீநத்தி லிருந்து பிரசங்கத்தில், ஆதிசேஷனையும், போதனை சக்தியில், வசிஷ்டரையும், ஞானத்தில், ஜநகரையும், ஜீவகாருண்யத் தில், ஜடபரதரையும், சந்நியாசத்தில், சுகப் பிரஹ்மத்தையும், பக்தியில், நாரதரையும் ஒத்துக், தொற்றவா ளீஸ்வரர் திரு நெல்லை யம்மை யிருவர்களின் அநுக்கிரகத்திற்குப் பாத்திர ராய்ச், சர்வ கல்யாண குணங்களும் நிறைந்து, சம திருஷ் யோடு பிரகாசித்து, ஆப்தம், அங்கம், ஸ்தாநம், சத்பாவம், எனும் சதுர்விதப் பணிகளுஞ் செய்து, சமதமாதி சாதங்

கள் பூரண மான சாதுக்கட்குச் சதா சத் சாஸ்திரங்களையுப தேசித்து, அவர்கள் அகத்துதித்த மகத்தான மருளையும், அஞ்ஞான இருளையும், நீக்கித் திரு வருளைத் தந்து ஞானோதயமாகும்படி அநுக்கிரகஞ் செய்து கொண்டு, ஆண்டவர் கட்டளைப்படி, கனிஷ்ட ராகிய கருணாநிதியை ஆராதந முதலிய கோவிற் காரியங்களைச் செவ்வை யாய் நடத்தி வரும்படி நியமனஞ் செய்து, மடாலயத்தில் அள விறந்த அடியார்களுக்கு அன்ன மளிப்பித்தும், மற்றும், மடத்திற்கும், கோவிலுக்கும் வேண்டிய காரியங்களைச் சீர்திருத்தும்படி உத்தரவு செய்தும், எல்லாவற்றிற்கும், தான் சாக்ஷி யாக மேவ யிருந்து, ஆநந்தத்தை யநுபவித்துக் கொண்டிருந்தனர்.

கைவல்ய நவநீதத்திற்குப் பத சாரம் என்ற உரை யிறற்றியும், உலகநாத ஸ்வாமிகளைக் கொண்டு சமிவந க்ஷேத்திரமாஹாத்மியம், விவேக சூடாமணி, ஜீவன் முக்தி விவேகம், சூத சம்ஹிதை முக்தி கண்டம், சூத கீதை, ரிபு கீதை முதலிய சாஸ்திரங்களைத் தமிழில் மொழி பெயர்க்கச் செய்தும், விநோத மாகக் காலங் கழித்து வந்தார்கள்.

ஆண்டவர் பரிபூரண மாகிய பதி னே ழாவது மாசம் கலியுகம் 4950 சாலிவாகந சகாப்தம் 1771 சௌமிய வருஷம் தக்ஷிணாயநம், கிரீஷ்ம ருது, கடக மாசம், சுக்கில பக்ஷம், 9௳ பாநு வாரம், சதுர்த்தி திதி, பூர நக்ஷத்திரம், மிதுந லக்நம் என்னும் இவைகள் கூடிய சுப திநத்தில், சச்சிதாநந்த பரப் பிரம்ம சமரச சுபாவ மடைந்தனர். கருணாநிதியும், பெரியோர்களையும், அடியார்களையும், வர வழைத்து, அம் மூர்த்திகளுக்கு மண்டலாபிஷேக் பரியந்தமான

காரியங்களைச் சிறப்பாய் நடத்தியருளினர். பரிபூரண மடை ந்த திநத்தில், இவர்கள் மீது கருணாநிதியவர்கள் "அரியகலி யுக வருட நாலாயி ரத்துத்தொ ளாயிரத்தைம்ப தின்மே- லஞ்சாலி வாகநச காப்தமோ ராயிரம டுத்தவெழு நூற்ரு ருபதொன்-ருனசவு மியவருட மொடுதக்க ணயன மளப் பருங் கிரீஷ்ம ருதுவு-மங்கடக மதிதேதி யொன்பதொடு சுக்லப க்ஷாதிவா ரத்தி னிரவிற், றருமமிர்த கடிகையிரு பத்திறற் பூரநட் சத்திரந் திதிச துர்த்தி-தனின் மிதுன லக் கிநம தொடுவரி யானுடன் சார்வணிச வாக ரண முஞ்- சாற்றுமிவை சேர்சுபதி னத்தினின் மணிக்கரைத் தண் கடற் றூசு டுத்த, தரைமகட் கொருதரள மாலைபுரை மது நதித் தனிநடும தாணி யென்ன, மருவிவளர் தென்கழநி யம்பதியி னுப்பணெளிர் மாணிக்க மெனவி ளங்கும், வர முத்து ராமகுரு லிங்கத்தி லெங்நாளு மன்னுமொளி யாய்க் கலந்தான்-மகிமைதரு ரகுபதிக் கருளிருடி புங்கவ வசிட் டர்போ தகசத்தியும்-மலர்பணு டவியுரக னேந்துமொரு பூச்சக்ர வர்த்திசந கன்ஞானமும், வரையரிய சடபரதர் சீவகா ருண்யமு மன்னுசுகர் சந்நி யாசமும், வான்பரவு நாரதம காமுனி வரேந்திரன் மனதிலுறு சிவ பத்தியும்- வாரித்தி ரட்டியோ ருருவுகொடு வந்தென்னை வழி முறைமை யடிமை கொண்ட, மாசிலரு ணசல சதாசிவ சுபோதய மகாகுருசி காமணியரோ."

என்னும் ஆசிரிய விருத்தத்தை யியற்றி யருளினர். மதுரை சுப்பராய சுவாமிகள் அச் சுவாமிகள்மீது பிள்ளைத் தமி ழொன்று நூறு செய்யுட்களா லியற்றினர். இந்தப் பிள்ளைத் தமிழ் அச்சாகி யிருக்கின்றது.

குரு மூர்த்தியாகிய ஸ்ரீ ஆண்டவர், கருணாநிதியினிடத்து எப்பொழுதும் அன்பு பூண்டு திருக் கடைக் கண் சாத்தி அநுக்ரகத்தோடு அகத்திற் பற்றுடைத் தாகி நேரில் நோக்கி வசரியாது அந்நியர்கட்கு வசநிப்பது போன்று வசநித்துக் கொண்டும், கொற்றவாளீசுவரர் திருநெல்லையம்பாள் ஆலயப் பணிகளை நன்ருய்க் கவனித்துப் பார்த்து விருத்தியம்சங்களை அளவின்றி உண்டு பண்ணி நன்ருய்ச் சிறப்பாக நடத்தி வரவேண்டுமென்ற எண்ணமானது நெடுங் காலமாய்த் தம தந்தக் கரணத்தில் தொடர்ந்திருக்குஞ் சமயம், கருணாநிதி திருப் பெருந் துறை சென்றனர். அதனைச் சாதுக்கள் வாயிலாகச் சுவாமிகளுணர்ந்து மந வருத்தத்தினேடு, திருப் பெருந் துறையில் வசிக்குங் கருணாநிதிக்குக், குறுந்திரட்டுப், பெருந் திரட்டு முதலிய சாஸ்திரங்களி லிருந்து, ஐம்பது செய்யுள்களைத் திரட்டி, அதற்குச் சீடாசாரம், எனப் பெயரீந்து, அதனேடு அதன் அபிப்பிராயத்தினை வசநமாக எழுதி, ஒரு சாதுவிடம் கொடுத்து, இதனை, திருப் பெருந் துறையி லிருக்கும் சிதம்பரத்தினிடம் கொடுத்து வா வென்று, அனுப்பினர்கள். அதனை, அச் சாது பெற்றுக் கொண்டு, திருப் பெருந் துறை வந்து, கருணாநிதியிடம் கொடுக்க, அவர்கள் அதனை வாங்கிப் பார்த்து மிகக் களிப் படைந்து கண்களில் ஒற்றி கொண்டு, உடனே கோவிலூருக்கு வந்து, ஸ்ரீ குரு மூர்த்தி யாகிய ஆண்டவரிடத் தன்பு மேலிட்டு, அவர்கள் அந்தக் கரணத்தில் உத்தேசித்த பிரகாரம், கோவில் மடம் முதலியவற்றி லுள்ள சகல காரியங்களையும் வகித்துக் குரு மூர்த்தியின் உள்ளன்பிற்குப் பாத்திர மாக நடந்து கொண்டார்கள்.

## 8. கண்டனூர், அருணாசல ஸ்வாமிகள் சரிதம்.

கடல் புடை சூழ்ந்த பூலோகத்திலே, சிவ பெருமான் அறு பத்து நான்கு திரு விளையாடல் புரிந்த பாண்டி வள நாட்டிலே, கண்டனூரிலே தந வைசிய குலத்திலே, சூரைக் குடிக் கோத்திரத்திலே, பெரிய கருப்பன் செட்டியாரும், அவர் மனைவி ஸ்வர்ணவல்லி (பொற்கொடியாள்) அம்மையாரும், இருந்தனர். அவர்களுக்குப் புதல்வர் அருணாசல சுவாமிகள்.

ஒரு நாள் சிற் சபேசன் தமக்குப் பிரசந்ந மாகிக் காசிக்குச் சென்று கெங்கை ஸ்நாநம் செய்து விஸ்வநாதரைத் தரிசிக்கும்படி உத்திரவு செய்ததனைப் பெரிய துறவு ஸ்வாமிகளாகிய அருணாசல ஸ்வாமிகளுக்குத் தெரிவித்து, அவ்விடம் விட்டுக், காசி க்ஷேத்திரத்தினை யடைந்து, கங்கா ஸ்நாநம் பண்ணி விஸ்வ நாதரைத் தரிசித்துக் கொண்டு சில திந மிருந்து, ஒரு நாள் அத் தலத்தி லிருக்கும் திரு வாவடு துறை மடம் நமச் சிவாயத் தம்பிரானிடம் சென்று, "இத் தேகம் இந்த மிதுந மாதம், 31 உ சுக்ர வாரம் பத்து நாளிகைக்கு வியோக மாய் விடும் ஆனதால்,இந்தத் தேகத்தினைக் கஙந விதிப்படி கற றொட்டி செய்து,அதிற் கநநஞ் செய்து, கங்கை மத்தியில் விட்டு விட்டு, எமது ஞானாசாரியர் திருப் பெருந் துறைக் கடுத்த கோவி லூரில் எழுந்தருளி யிருக்கின்றபடியால், இத் தேக வியோகத்தினை அவர்கட்கு நிருப வாயிலாகத் தெரிவிக்க வேண்டு மென்று சொல்லியருளினர். நமச்சி வாயத் தம்பிரானும், அதற் கிசைந்து, இரண்டடியார்களைச் சுவாமிகளை விட் டகலா திருக்கும்படி செய்து, சுவாமிகள் திரு வாய் மலர்ந்தருளிய பிரகாரம் தேக வியோகமானது தெரிந்து, ஆநந்த மடைந்து, கற் றொட்டியிற் சமாதி செய்து, கங்கையி லிறக்கிவிட்டுக்,கோவி லூருக்கு

மிக்க வணக்கத்துடன் கடிதமெழுதி ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிக ரென்னும், ஆண்டவருக்கு இச் சங்கதியைத் தெரிவித்துக் கொண்டனர்.

### பட்டுக் கோட்டை அம்பலவாண பிள்ளை இயற்றியது.

வயமிகுங் குரோதிசம் வற்சரமி துநத்திலே
வளர்தேதி முப்ப தொன்று—
மகாவமர பக்ஷமுங் துவாதசி ரோகணி
மாவெள்ளி தசக டிகையுஞ்,
செயமிகுஞ் சிம்மலக் கிநசுப திநத்திலே
சிந்மயா நந்த வடிவே—
திகழுருவ மாய்வந்த முத்ராம குருசுவாமி
சீரடிவ ணங்கி நாளு,
நயமிகுந் துறவியாய்ச் சவுணுதி முழுதுமே
நன்னிலய மாயு ணர்ந்து—
நன்மைபெற ராமேசு ரங்காசி சென்றுமே
நற்றுரிய நிலையை நாடிச்,
சுயமான சீவந்முத் திப்பதந் தன்னிலே
சுகியாயி ருந்து நாளுந்—
தூயவரு ணசலசு வாமியும் வி தேகச்சு
பாவமத டைந்த னனரோ.

---

### 9 கோட்டை யூர், அண்ணுமலை சுவாமிகள் சரிதம்.

நாவலர் பரவும் சமிநிழல் அமரும்
நாயகன் நளிநநன் மலரை,
மாஎழில் ஆறு முகன்றனைக் கொற்ற
வாள்இறை திருநெல்லை அமையை,

ஆவல்நல் அன்புமிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞானம தளித்துக்,
கோவிலூ ரினில்வாழ் அண்ணு மலைக்
குருபரன் தனைத்திநம் பணிவாம்.

கடல் புடை சூழ்ந்த பூலோகத்திலே, பரம சிவன் அறு பத்து நான்கு திருவிளையாடல் புரிந்த, பாண்டி நாட்டிலே, கோட்டை யூர் என்னும் ஊரிலே, தநவைசிய குலத்திலே, இரணிக் கோவில் கோத்திரத்திலே, ஆண்டவரிடம் வழிபட்டு, திரு வருளைப் பெற்று, அத்வைத சாஸ்திரங்களை அப்யாசித்து, பிரஹ்ம நிஷ்டரா யிருந்து, சித்தார்த்தி ஸூ பங்குனி மீ 26உ, சுக்கிர வாரம், கிருஷ்ண பக்ஷ பிரதமை, சித்திரை நக்ஷத்திரம் கூடிய சுபதிநத்தில், நிரதிசய, கைவல்ய மான பரிபூரண தசையை யடைந்தனர்.

## 10. பழ நியப்ப சுவாமிகள் சரிதம்.

நாவலர் பரவும் சமிசிழல் அமரும்
நாயகன் களிநநன் மலரை,
மாஎழில் ஆறு முகன்றனைக் கொற்ற
வாள்இறை திருநெலை அமையை,
ஆவல்நன் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞானம தளித்துக்,
கோவிலூ ரினில்வாழ் பழநியப்ப ஞான
குருபரன் தனைத்திநம் பணிவாம்.

கடல் புடை சூழ்ந்த பூலோகத்திலே, பரம சிவன் அறு பத்து நான்கு திரு விளையாடல் செய்த, பாண்டி வள நாட்டிலே, நேமத்தான் பட்டி என்னும் ஊரிலே, தந

வைசிய குலத்திலே, கோத்திரத்திலே, முத்தைய செட்டியாரும், அவர் மனைவியாரும், இருந்தனர், அவர்கள் புதல்வர், பழனியப்ப சுவாமிகள்.

தம்மைச் சரணடைந்த மகாதேவஸ்வாமி, கிருஷ்ண சுவாமி, முத்துக் குமார சுவாமி, வெங்கடாசல சுவாமி பூங்குடி, கண்ணப் பய்யா, கடியா பட்டி, அருணாசலையா முதலிய அநேக சாதுக்களுக்கு வேதாந்த பாடஞ் சொல்லிக் கொண்டு, கோவிலூரி லிருந்து, சித்த விசிராந்தி யடைந்து, கலியப்தம் 4961, ரௌத்திரி ஸு, கடக மீ, 8உ, சனி வாரம், மக நக்ஷத்திரம், சுக்ல பக்ஷ, திருதியை, தெக்ஷணாமூர்த்தி சுபதினத்தில் நித்தியானந்த பரிபூரண தசையை யடைந்தனர்.

*கண்டனூர். முத்து ராமய்யா இயற்றியது.*

சுயமான கலியுக நாலாயி ரத்தித்தொ
 ளாயிரத் தறுப தொன்றிற்—
சொல்ரௌத் திரியாண்டு கடகமதி தேதியோ
 ரெட்டினிற் சுக்ல பட்ச,
நயமான திரிதியை திதிமந்த வாரமொடு
 நாடு மக நட்சத்திர—
நற்கடக லக்கினமி ரதவுச்ச வந்தனி
 னன்மைசேர் கழனி நகரில்,
உயர்வான முத்திரா மையனருள் பெற்றுமெய்
 யுரிமையுள வடியார்க் கெலா—
முண்மையையு ணர்த்துந்தி றத்தினிற் தெக்ஷணா
 மூர்த்திக்கு வொப்ப தாகக்,
செயமான திருவுருக் கொண்டநம் பழனி
 யப்பநற் றேசி கன்ருன்—

சீவன்முத் தித்தசை தனிலிருந் தாநந்த
சிற்சொருப மாகி னுனே.

---

## 11. முத்து வீரப்ப சுவாமிகள் சரிதம்.

நாவல பரவஞ் சமிசிழல் அமரும்
நாயகன் நளிநநன் மலரை,
மாஎழில் ஆறு முகன் றனைக் கொற்ற
வாள்இறை திருநெல்லை அமையை,
ஆவல்நல் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞாநம தளித்துக்,
கோவிலூ ரினில்வாழ் முதது வீரப்ப
குருபரன் தனைத்திநம் பணிவாம்.

கடல் புடை சூழ்ந்த பூலோகத்திலே, பரமசிவன் அறுபத்து நான்கு திரு விளையாடல் செய்த பாண்டி வள நாட்டிலே, பள்ளத் தூர் என்னும் நகரத்திலே, தந வைசிய குலத்திலே, சச்சிதாநந்த விக்கிரக மாக வெழுந்தருளி யிருந்த ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிகரிடத் தன்பு பூண்டு பால்ய முதல்வழிப்பட் டடிமைத் திறத் தொழுகி நின்று, குரு மூர்த்தியின் பரிபூர்ண கிருபையைப் பெற்று, ஞாந சித்தியாய்,நற் குணக் கட லாய்,நீண்ட காலம் வசித்து,ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிகரின் பூர்ண சகாயத்தால், கல்லாங் குடியின் கண் ணுற்ற சிவ க்ஷேத்திரத்தின் றிருப் பணி முற்று மியற்றுவித்துக், கலி யப்தம் 4976 சாலிவாகந சகாப்தம் 1791 யுவ வருடம், தை மாதம், 26௳, சோம வாரம், புநர் பூச நக்ஷத்திரம்,சுக்ல பக்ஷத் திரயோதசி, பிரதி நாம யோகம், கௌல வா கரணம் கூடிய சுபதிநத்தில் பரிபூரண தசையை அடைந்தனர்.

புகழுமெய் யுவவருட மகரமா தந்தேதி
புகலுமிருபத் தாறினிற்,
பூர்வபச் சந்திங்கள் திதிதிர யோதசி
பொருகடிகை யிருபதொன்றில்,
நிகழுதநுர் லக்குநம் புநர்பூச நாட்கொண்ட
நேர்மையாஞ் சாத்திகத்தி
னிகரில்சமி வநமெனுங் கழகிநகர் வாழ்முத்தி
ராமலிங் காசா னிடந்,
திகழுமுத லடியராய் ஞானவா சிட்டம்வரைச்
சிரவணு திகள்செய்துமே.
சிவகா ருண்யாதி சகலசற் குணமெலாஞ்
சேர்ந்தமெய்ஞ் ஞாநியான,
துகளிலா துறைபள்ளத் தூர்வணிக னுமுத்து
வீரப்ப சுவாமிகளுமே.
சுத்தசத் துவமதாய் நிறைந்தபரி பூரண
சொரூபமா யிலகினுனே,

---

## 12. வெள்ளை யப்ப ஸவாமிகள் சரிதம்.

அல்லலை அகற்றும் திறத்தினைத் தொழுவார்க்
கருள்செயும் இபமுகத் திறையைத்,
துல்லியர் துதிக்கும் அறுமுகத் தவனைச்
சோமசுந் தரேசனை இடம்சேர்,
நல்லசௌந் தரிய நாயகி பதத்தை
நறைமலர் சொரிபொழில் சூழும்,
கல்லல்வெள் ளையப்ப ஞானதே சிகனைக்
கவின்பெற நினைந்துவாழ்த் துதுமே.

கடல் புடை சூழ்ந்த பூலோகத்திலே, பரமசிவன் அறு
பத்து நான்கு திரு விளையாடல் இயற்றிய பாண்டிவள

நாட்டிலே, கல்லல் என்னும் நகரத்திலே, தந வைசிய குலத்திலே, மெய்யப்ப செட்டியாரும், அவர் மனைவியாரும் இருந்தனர். அவர்கள் புதல்வர் வெள்ளையப்ப சுவாமிகள்.

ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிகரைச் சரணடைந்து, ஆப்தாதி சதுர் விதப் பணிகளையும் செய்து, சத் சாஸ்திரம் பயின்று, திரு வருளைப் பெற்றுச், சம தமாதி குணங்கள் நிறைந்து, பிரஹ்ம விசார சீல ராய்க், குரு ஸ்தாநத்தில் பிரேம பக்தியோடு, ஸ்ரீ முத்திராம லிங்க ஞாந தேசிக ருடைய அதிஷ்டாநம் நித்திய மங்கள மாய் விளங்க வேண்டுமென் னும், எண்ண முடையவர்களாய்ச். சரீர கருமம் நீடித்து எண் பத் தேழ வயது பரியந்த மிருந்து, கலியப்தம் 4988 சாலிவாகந சகாப்தம் 1809 சர்வஜித் வருஷம், தைமீ, 28உ, குரு வாரம், பூராட நக்ஷத்திரம், அபரபக்ஷத் திரயோ தசி திதி, கடக லக்நம் கூடிய சுப திநத்தில் கல்லலில் நித்தி யாநந்த சிந்துவிற் கலந்தனர்.

---

## 13. சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகள் சரிதம். (கருணாநிதி சுவாமிகள் சரித்திரம்.)

நாவலர் போற்றும் சமிசிழல் அமரும்
நாயகன் நளிநகன் மலரை,
மாஎழில் ஆறு முகன்றனைக் கொற்ற
வாள்இறை திருநெல்லை அம்மை,
ஆவல்நல் அன்பு மிகுந்துவந் தடைந்தோர்க்
கருளொடு ஞாநம தளித்துக்,
கோவிலூர் தனிழ்வாழ் சிதம்பர ஞாந
குருபரன் தாள்திநம் பணிவாம்.

இவர் முன் பட்டத் திருந்த சுவாமிகளின் இளைய சகோதரர். அச் சுவாமிகள் துறவடைந்தமையைக் கேள்வி யுற்று, அவரைத் தரிசிக்கும் பொருட்டுக் கோவி லூருக்கு வந்த போது, ஆண்டவரைச் சரண டைந்து அநுக்கிரகிக்கப் பெற்று, அங்கு சில நாள் வசித்துப், பின் மதுரை குட்டை அய்யாவுடன் திருப் பெருந் துறைக்குச் சென்று, வடக்கு மடத்தில் தியாந சமாதிகளைச் செய்து கொண்டிருந்தனர். இவர், இவ் வாறு ஆண்டவரை விட்டுத் தனித் திருப்பதைச் சிதம்பரத் திருந்த துறவு சுவாமிகள், அடியார்கள் வாயிலாகக் கேட்டு, வருத்த முற்று. குறுந் திரட்டுப் பெருந் திரட்டு முதலிய சாஸ்திரங்களி னின்றும். ஐம் பது செய்யுளெடுத்துத் திரட்டிச் "சிடாச்சார" மெனப் பெய ரிட்டு, அதனோடு அத னபிப்பிராயம் முழுவதும் விளங்கும்படியான ஒரு நிருபமும் எழுதி, அவற்றை ஒரு மாணுக்கரிடங் கொடுத்துச் சிதம்பரத்தின் கையிற் கொடுத்து வா வென்றனுப்பினர். அத் திரு முகத்தை அவர் திருப் பெருந் துறையிற் கருணாநிதி யிடங் கொடுக்க, அதனை அவர் மிகத் திருப்தியோடு வாங்கிப் படித்துப் பார்த்துக் கண்களிலொற்றிக் கொண் டுடனே கோவி லூருக்குப் புறப்பட்டு வந்து, ஆண்டவர் உள் ளன்பிற்குப் பாத்தி ராய் நடந்து, வந்தனர். பின்னர், ஆண்டவர் பரிபூரண மாகுங் காலத்து ஆஞ்ஞாபித்தபடியும், துறவு சுவாமிகளது உத்தரவுப் பிரகாரமும், ஆஜா நுபாகுவாய்ச், சா முத்திரிகா லக்ஷணம் பூராஅமைந் துள்ள தமது அறி வுரு வான திரு வுருவத்தா லும், திவ்விய மங்கள குணங்களா லும், சர்வ ஜந ஆநந்த கரனாய்க், குருமூர்த்தியினது பூரண கிருபையையும், திரு நெல்லையம்பா ளுடைய பிரசந்ந மான அருளையும், அடைந்து, திட

மாகச் சுவாநுபவத்தில் அமிழ்ந்திச், சேது முதல் இமகிரி பரியந்த முள்ள சகல ஜீவர்களும் கண்ட மாத்திரத்தில் மநங் கசிந் துருகி உய்யும்படி சர்வ லோக பூஜ்பர்க ளாய், எழுந் தருளிப் பிறவிக் கடலின் மூழ்கித் தத்தளிக்கும் ஜீவர்கள் களிக்கும்படி ஞாநம் அளித்து, அவர்களை காக்கும் கருணை மாகட லாகலின் கருணாநிதி யெனப் பெயர் பெற்று, அவ் வாதீநத்தைப் பூரண மாகத் தாமே வகித்து, முன் தமது குரு மூர்த்தி யாரம்பித்த கொற்ற வாளீசுரர் ஆலயத்தையும், திரு நெல்லை யம்மை யாலயத்தையும், புதுக்கிச சம்புரோக்ஷணை செய்வித்து, உற்சவாதிகளை நடத்தி வந்தனர். ஆண்டவரை மகா லிங்க மூர்த்தி யாக வும், துறவு சுவாமிகளை நந்திகேசுர ராகவும், சமாதி ஸ்தா நத்தி லமைத்து, இருவருக்கும், ஒன் ருய்த் கர்ப்பக் கிரகம் முதலியவைகளை விநோத மாக முடிப்பித்துக் கும்பாபி ஷேகமும், சிறப்பாக நடத்தி, நித்திய நைமித்திய பூஜை முதலியவற்றைச் சிரத்தையோடு செய்து வரும்படி கட் டளையிட்டு, எப் போதும் குட்டை யையா முதலியோர் கள் தம் தருகில் இடைவிடா திருக்கப் பிரம ஞானோப தேசஞ் செய்து கொண்டு அங்கு எழுந்தருளியிருந்தனர்.

அங்ஙன மெழுந்தருளியிருக்குங் காலத்து, ஒரு சமயம் கருணாநிதி, சிதம்பரத்திற்கு, நடேச தரிசனுர்த்த மாகப் போயிருந்த போது, கோட்டை யூர்ப், பெத்தாச்சி சுவாமி கள், பொன்னம்பல சுவாமிகளை அழைத்து வந்து, ஸ்ரீ கருணாநிதி சந்நிதியிற் சேர்ப்பித்து, இப் பிள்ளை மிக மேதாவியா யிருத்தலால், பாடஞ் சொல்ல வேண்டு மென்று கேட்டுக் கொள்ள கருணாநிதியும் அவ் வாறே அவரிடத்து, நற் குண, நற் செய்கை ளமைந்திருந்தமையைக் கண்டு,

அடிமை கொண்டு, மிக அன்போடு பால சிக்ஷை முதல் பஞ்ச தசி பரியந்தம், அங்கு படிப்பித்து, பின் கோவி லூருக் கழைத்து வந்து, ஏனைய சாஸ்திரங்களையும் கிரம மாகத் போதித்து வந்தனர் பொன்னம்பல சுவாமிகளும் மிதுந்த பக்தியோடு கருணா நிதியைச் சாயை போல் விட்டு நீங்காது சந்நிதியிலே யிருந்து ஈஷணாத் திரயங்களு மொழி யக் குருவின் பரிபூரண கிருபையைப் பெற்றுக் குரு குல வாசம் செய்து வந்தனர். இன்னும் அக் கருணா நிதியவர் கள், தம்மைச் சர ணடைந்த, காரைக் குடி. இராம சாமி ஞான தேசிகர் முதலிய அடியார்களுக்கு அநுக்கிர கித்து வந்தனர். அக் காலத் தொரு நாள் ஸ்ரீ கருணா நிதி யவர்கள், தமது சீட ராகிய, தேவி கோட்டை, இலக்கு மணச் செட்டியாரை பார்த்து, சிதம்பரம் ஸ்ரீ மூலட் டானேசுரர் ஆலயத்தை ஜீரணோத்தாரணம் செய்விக்க வேண்டு மென் றுத்தரவு செய்ய, அவ் வாறே இலக்கு மணச் செட்டியாரும், தம் மினத்தவர்களை வர வழைத்து, அதற்கு வேண்டிய திரவியங்களைச் சேகரித்துச் கொண்டு வந்து குரு மூர்த்தியின் சந்நிதியிற் றெரிவித்தனர், அப் போது கருணா நிதி களிப் புற்று அடியார் திருக் கூட்டத் தோடு சிதம்பரத்திற்கு எழுந்தருளி, பல தேசங்களி லிருந்தும வைதிகர் களான பிராஹ்மணோத்தமர்களையும், வித்வான் களையும், மற்று முள்ள பெரியோர்களையும், வர வழைத்து, அபரிமித மாகப் பிராமண போஜநம் செய்வித்து, ஸ்ரீ நடேசப் பிரானுக் கொப் பான தீக்ஷதர்க ளனைவரையும் பூஜித்து மரியாதை செய்து, ஸ்ரீ மூலட்டானேசுரருக்குச் சொர்ண பந்தநம் செய்வித்து, வேத விதிப்படி வெகு விமரிசையாய்க் கால யுக்தி வருஷம், ஆனி மாதம் 14உ சோம வாரத் தன்று, கும்பாபிஷேகம் நடப்பித்துப் பே

ராநந்த முற்று அடியார்களுடன் மீண்டும் கோவி லூருக்கு எழுந்தருளினர்.

அங்கு எழுந் தருளி அடியார்களுக்கு அநுக்கிரகம் செய்து கொண்டிருந்ததோடு, கொற்ற வாளீசுவரர் ஆலயத்திற்கும், திரு நெல்லை யம்மை ஆலயத்திற்கும், கும்பாபிஷேகமும், அவ் வாலயங்களின் மத்தியில் நித்திய கல்யாணிக்கும், கைலாச நாதருக்கும், ஓர் புதிய ஆலயமும், சோமாஸ்கந்தருக்கு ஓர் சபையும், கல்யாண மண்டபமும், திருக் குளமும், அக் குளத்தில், மைய மண்டப முதலியனவு மாகிய திருப்பணிகளை இயற்றுவித்துப் பின் செய்ய வேண்டியவைகளுக்கும் பட மொன் றேற்படுத்தி, கும்பாபிஷேகம் தடாகப் பிரதிஷ்டை முதலியவற்றைச் சிறப் பாக நடத்தினர். கோவிலுக்கு ஏற்பட்ட கிராமங் களை யெல்லாம் சீர் திருத்தி அபரிமித மான வருமானங்களை யுண்டுபண்ணி, நித்திய நைமித்திய பூஜைகளையும் சிறப் பாக நடத்தி வரச் செய்து, மடாலயத்திற்கு, முன் கிராமத் தோடு புதிய கிராமங்களையும் வாங்கி, விசேஷ வருமா னத்தை யுண்டு பண்ணி, அடியார்களுக்கு அன்ன முதலிய வற்றை யுதவிக் குரு வாக்கிய பரிபாலனஞ் செய்து வந்த னர். இக் கருணா நிதி கண்ட னூர் சின்னையா, பொன் னம் பல சுவாமிகள் முதலிய மாணுக்கர்கள் பலருக்கு பல முறை வாசிட்ட பாடம் நடத்தி, சமாப்தி காலத்தில் செய் யத் தக்க விதிப்படி மாணுக்கர்களால் அர்ப்பணஞ் செய் யப்பட்ட அளவிறந்த திரவியங்களைக் கொண்டு பிராமண போஜனம் மகேசுர பூஜை அபிஷேக ஆராதனை முதலிய வைபவங்களை விசேஷமாய் நடத்தி ஆநந்தத்தோடிருந் தனர். அக் கருணாநிதி, அடியார்கள் மீது அன்பு கூர்ந்து, தமிழ்ப் பாவால் இலக்ஷணாவிருத்தி யென்னும் ஓர் நூலையும்,

தமதாசிரியர் பேரில் ஸ்துதி பரமாக குரு ஸ்துதி குசுமாஞ் சலி யென அநேக செய்யுட்களையும் செய்தருளினர். இவ் வாறு, கருணாநிதி சமிவந க்ஷேத்திரத்தில், வெகு காலம் அநேக அடியார்களுக்கு அநுக்கிரகம் செய்து கொண் டிருந்து, ஆடிப் பூரோற்சவ இரண்டாந் திரு விழா வன்று தனது தேகம் வியோகமாகு மெனத் தெரிந்து, கல்ல லையா முதலிய சாதுக்களும், பொன் னம்பல சுவாமிகள் முதலிய அடியார்களும், சூழ விருக்க,தமது சீட ரான காரைக் குடி இராம சுவாமி ஞாந தேசிகரை, அவ் வாதீநத் திருந்து அடியார்களுக்கு ஞாநோபதேசஞ் செய்து கொண்டு, சிவா லய மடாலய முதலியவற்றைப் பரிபாலித்து வரும்படி நியமித்து, கலி (4977) சாலிவாகந சகாப்தம் (1797) தாது வருஷம், ஆடி மாதம், கிருஷ்ண பக்ஷம், 4உ,சோம வாரம் ஏகா தசி, ரோகணி நக்ஷத்திரம், துலா லக்கிநம் என்னும் இவை பொருந்திய சுபதிநத்தில் அகண்டைக ரச சுபா வமான ஆத்மாநந்த சிந்துவிற் கலந்தருளினர். ஸ்ரீ பொன் னம்பல ஞாந தேசிகரும, இராம சுவாமி ஞாந தேசிகரும், கோடக நல்லூர் சுந்தர சுவாமிகளும், மற்று முள்ள பெரி யோர்களும், ஒருங்கு சேர்ந்து ஸ்வாமிகளின் திரு மேனியை ஆண்டவர் சந்நிதாநத்திற்கு நே ராகச் சமாதி செய்வித்து, அதன் பேரில் பலி பீடம் வைத்துப் பூசித்து மகேசுரபூஜை முதலியவற்றை அபரிமித மாகச் செய்து ஆண்டவர் துறவு சுவாமிகள் ஆலயங்கட்கு எவ் வாறு நித்திய நைமித்திய பூஜைகள் நடந்து வருகின்றதோ, அவ் வாறே சுவாமி கருணாநிதிக்கும் பூஜை நடந்து வரும் படி செய்தார்கள்.

24 சீர்க ழி நெடி லடி ஆசிரிய விருத்தம்.

திருமருவு மாயிரத் தைம்பதொன் றுமாண்டு
செறிதா து வருடத்தினிற்,
றிகழ்கடக மாதமதி முன்கான தேதியுஞ்
செறியமர பட்சந்தனிற்,
றினசோம வாரமே காதசி ரோகணி
திகழ்துலா லக்கிநத்தே,
தேவைநக ரதனில்வந் தவதார மாகியே
தென்கழசி யம்பதியினிற்,
குருநாத முழுத்து ராமலிங் கேசனருள்
கொண்டுமே யடியவர்க்குக்,
கூறுன வப்பதியி ருந்துபி னநுக்கிரகங்
குணமாக வருளுகின்றோன்,
கோதிலரு ணசலசு வாமிகட் கிளையநற்
குலமுடைய சூடாமணி,
கொண்டலென வேபொழியு மண்டலத் துளவணிகர்
குழுவெலாம் பணியவல்லோன்,
மருமருவு கொற்றவா ளீசனற் றிருநெல்லை
மாதுதன் கருணையாலே,
மதிமன்னர் நீதிமன்னர் கவிமன்னர் புவிமன்னர்
வந்துபணி கின்றதீரன்,
மங்களம தானமட வாலயசி வாலயம்
மலர்வனஞ் சத்திரமுதல்,
மலர்வான புவனத்த னேகமுண் டாகவே
வந்தகா ரணவள்ளலா,
மருமருவு சீவகா ருணிய முத முன்குமே
யழகான திருவுருவமா,

மறிவான கலவிசெல் வம்பொறுமை கீர்த்தியை
யரவனுங் கூறமுடியா,
வத்துவித நிச்சயசி தம்பரசு வாமியென்
ஞாநந்த கருணாநிதி,
யகண்டபரி பூரண சதாநந்த சிற்சொரூப
மாகினு னறிகமாதோ.

## சிதம்பர ஞாந தேசிகர் இயற்றிய நூல்.

(1) இலக்ஷண விருத்தி, (2) குருஸ்துதி குசுமாஞ்சலி, (3) பாகவதத் திரட்டு 700, (4) ஷை 150, (5) வாசிட்டத் திரட்டு, (6) பிரபு லிங்க லீலைத் திரட்டு, (7) பிரபோத சந்திரோதயத் திரட்டு, (8) பகவற் கீதைத் திரட்டு.

---

## 14. குட்டைய சுவாமிகள் சரிதம்

கோவி லூரில் இடைவிடாது ஸ்ரீ கருணாநிதியோடு வெகு காலம் வசித்துப், பின்னர் துவாதசாந்த க்ஷேத்திரஞ் சென்று, சில கால மிருந்து, இந்திரனு லியற்றப் பெற்ற ஸ்ரீ சுந்தரேச ருடைய இந்திர விமாநத்தையும், ஸ்ரீ மீனுக்ஷியம்மையின் விமாநத்தையும், இரண்டு துவஜ ஸ்தம்பங்களையும். சுவர்ணத்தா லியற்றிப், பின்னர் நந்தி மண்டபமாகிய துவஜ ஸ்தம்ப மண்டபத்தையும், உயர்ந்த கற்பணியாக்குவித்தற் பொருட்டு, பல மான யத்நஞ் செய்து, முடிவு பெறுது நிற்குஞ் சமயத்தில், சுவாமிகளுக்கு சரீரத்தில் அசௌக்கிய முண்டாக, அக் காலத்து அவர்களை தரிசிக்கு நிமித்தம் அவர்கள் தம்பி லெக்ஷிமணஞ் செட்டியாரும், அமராவதி புதூர் நாகப்ப செட்டியாரும், இன்னும் அநேகரும், வந்து பார்த்துக் கொண்டிருக்கும்

பொழுது, நாகப்ப செட்டியார் சுவாமிகளைப் பார்த்து, மீனாக்ஷி திருப் பணி குறையு முடியவில்லையே, தேகம் மிகவும், அசௌக்கியத்தை யடைந்திருக்கின்றதே, எவ் விதம் திருப் பணி முடியு மென்று சொல்ல, சுவாமிகளும், நாம தானா இத் திருப் பணியைச் செய்து முடிக்க வல்லவர், ஈசனால் முடிக்கத் தக்க தொன்று மில்லையோ, இது காறும் தாங்கள் படித்த படிப்பிற்கு பிரயோசந மிவ் வளவு தானோ, பல் லாயிரங் கோடி பண்டங்களை ஒரு நிமிட காலத்திற் கற்பித் துள்ள சிற் சத்தி ரூப மான மீனாக்ஷிக்குக் குறைப் பணியுஞ் செய்து முடித்துக் கொள்ள சாமர்த்திய மில்லையோ, உங்களது அந்தக் கரணங்களில், இப்படி எண்ணம் ஏன் உண்டாக வேண்டு மென்று, திரு வாய் மலர்ந்து, அக நோக்குற் றிருந்து, சிவ சாயுஜ்ஜிய பதம் பெறு மெனுஞ் சமயத்தில், தேவகி திரு வயிற் றுதித்த பகவா னும், குசேல னாகிய பிரஹ்ம நிஷ்டரும், பாலிய முதல் சிநேகித் திருந்தது போன்று, குழந்தை முதற் றோழரும், சமப் பிரியருமான ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிகருந், தானும், திருப் பெருந் துறை,சிதம்பரம் திரிசிர புரம் முதலிய விடங்களில்,தனித் திருந்து யேகாக்கர சித்தத்தோடு சமாதி யநுஷ்டித்து வந்த திட வாசனை வெளிப்பட்டமையால், ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிகரைப் பார்க்கும் அவா வுண்டாய், அக் கருத்தை சாதுக்கள் வாயி லாய் ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிகருக்குச் தெரிவிக்க, அவர்களும் கோவிலூரி லிருந்து திரு வாலவாய் ஸ்தலத்தை விரைவி லடைந்தார்கள். அவர்களும் சந்தித்தவுடன், கலியப்தம் 4973 சாலிவாகந சகாப்தம், 1793 ஆங்கிரச வருஷம், ஆவணி மாதம், 5௳ சோமவாரம், சதய நக்ஷத்திரம், கிருஷ்ண பக்ஷ பிரதமை, பத்திரவா யோகம், கரசவா கரணம் கூடிய சுபதிநத்தில் நினைத்த

கற் கரிய பரமாநந்த சிந்துவிற் கலந்தருளினர். கருணையங் கடலாகிய சிதம்பர ஞாந தேசிகரும் அவர்கட்கு கிருத மாலா நதியை யடுத்த வடபால் கநந வீதிகளைச் சிறப் பாகச் செய்து, அவரது பிரதம சீட ராகிய,புது வயல்,வீரப் பையா அவர்களையும, கொல்லங் குடி, சின்னையா அவர்களையும், தமது சீட ராகிப, நாகைக் காரோணம், ஷண் முக சுவாமி களையும், கொண்டு, ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரேசுவரர் ஆலயத்தி லுள்ள துவஜ ஸ்தம்ப மண்டபத்தையும், மற்று முள்ள திருப் பணிகளையுஞ், செவ்வை யாகச் செய்வித்தும், சுவாமி கள் அதிஷ்டாநத்திற்கு கெர்ப்ப கிரகம், மகா மண்டபம், விமாநம், மடாலயம் முதலியவற்றைச் சிறப் பாக முடிப் பித்தும், கொல்லங் குடி,சின்னையா சுவாமிகளை அம் மடத் தி லிருந்து அதிஷ்டாநத்திற்கு நித்திய நைமித்தியாதி பூசை களையும், குரு பூசை மகேசுவர பூசைகளையும், நன் ருக நடத்தி வரும்படி ஆக்ஞாபித்துவிட்டுக் கோவி லூருக்கு யெழுந்தருளினர்.

---

## 14. இராம சாமி ஞாந தேசிக ஸ்வாமிகள் சரிதம்

கோவி லூர் முத்திராம லிங்க ஞாநதேசிகர் ஆதிநத் தில், ஆசாரிய மூர்த்த மாய் எழுந்தருளியிருந்து, திரு நெல்லை யம்பாள் சந்நதியில், அஷ்ட லக்ஷிமி மண்டப மொன்று வெகு சிறப் பாக செய்து முடிப்பித்து, சிவாலயத்தில், அபிஷேக நைவேத்தியங்களையும் சிறப்பாக நடப்பித்து, குரு மூர்த்தியின் அதிஷ்டாநஆராதனையும் சாதுக்கட்குப், போசநமும், செவ்வனே செய்வித்தும், சாதுக்கட்கு ஞாநா நுக்கிரம் செய்து கொண்டிருந்து, சின் னுட் சென்ற

25

பின், சரீரா சௌக்கிய காலத்து, கல்லல் வெள்ளையப்பய்யா, ஸ்ரீ பொன் னம்பல ஞாந தேசிகர் முதலிய பெரியோர் களை அழைப்பித்துத் தமது சமீபத்தில் வைத்துக்கொண்டு, ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகரை ஆசாரிய ஸ்தாநத்தில் நியமித்து கலியப்தம் 4984 சாலிவாகந சகாப்தம் 1805 சுபாநு வருஷம், மார்கழி மாதம், 6உ, புதன் கிழமை, மக நக்ஷத்திரம், கிருஷ்ண பக்ஷ சஷ்டி திதி, தக்ஷிணாயநம், ஹேமந்த ருது, மகர லக்நம் கூடிய சுப திநத்தில் பரிபூரண பரப்பிரஹ்ம சமரச சுபாவ மடைந்தனர், அக் காலையில், கண்டனூர், முத்திராமய்யா இயற்றிய கவி— "அறிவான சாலிவா கநசகாப்த் தமது வாயிரத் தெண்ணூ ற்றி— லமர்சுபாநு வருடமுந் தநுர்மாச முந்தேதி யாறினி லமர பக்ஷம்— அழகான புத வார, மகரலக் கிநஞ் சட்டி யரியமக நட்சத்திர—மமைவதிற் பாண்டிநா டதனிலே சமிவந மாகின்ற கோவி லூரில், பரிவான கொற்றவா ளீசனற் றிருநெல்லை பாதாம்பு யத்தருளினுற்—பண்பான வணிகர்செய் பாக்கியத் தால்வந்த பரமநிதி யான வள் ளற்—பரசமய மியாவையுங் கண்டித்து வொப்பற்ற பர மாத்து விதசொரூபம்—பாலிக்கு முத்திரா மய்யனற் றிரு வடி பணிந்தருள் கொண்டு நின்றும், உரித்தான வாக்கு மல் லார்க்கமு துதவியே யுணர்வளிக் கின்ற கருணை, யுரு வாஞ்சி தம்பரசு வாமியின நுக்கிரக முண்மையாய்ப் பெற்று நின்றே, யொளிமிகு சச்சிதா நந்தபர சொரூபத்தை யுள்ளங்கை நெல்லி போல, வுத்தம சீடருக் குபதேச மருள் வதி லுணர்மிகுவ சிட்ட னெனவும், சரியான ஞாநமுஞ் சநகனுக் கொபபெனச் சற்குணந் தன்னிலேதான், சற்று மழி வில்லாத விராமனைப் போலவுஞ் சாந்தவயி ராகமுடைய—சந்நியா சத்திலே சுகர்போல வுயர்ராம சாமிக

ளான மூர்த்தி-சர்வபரி பூரணவ கண்டபர வொளியிலே தங்கிக்க லந்த னனரோ.'' எனக் கூறினர்

---

## 15. உகந்த லிங்க குரு ஸ்வாமிகள் சரிதம்.

விண்முகத் தமரர் முதலவர் வணங்க
 விளங்குறும் பொற்கரி முகனைச்,
சண்முகத் திறையைப் பொருள்வைமா நகர்வாழ்
 சம்புவைப் பொலம்புரி இறையைத்,
தண்முகத் தருளொ டொளிர்தரும் எனது
 தாய்சௌந் தரியநா யகியை,
உண்முகத் தவர்கள் போற்றவீற் றருளும்
 உகந்ததே சிகனைவாழத் துதுமே

சமுத்திரமுங்,காவேரியுஞ்,சூழப் பெற்றுச் சகல சிறப்புக்களோடு விளங்கும் சோழதேயத்தில், சிக்கல்-பொருள் வை மாநகரில், நவ வீரர் (கைக்கோளர்) குலத்தில், அவர்கட்கு தாங்கள் செய்த தவத்தால், நல் லாண்டு நற்றிங்கள் நன்னுள் நற்றிதி நன் முகூர்த்தத்தில், ஒரு குழந்தை பிறந்தது. அக்குழந்தை உகந்த லிங்க ஸ்வாமிகள் எனத் திருநாமம் வாய்ந்து திரு வள்ளுவர் நாயஞர் போலவும்,கபீர் தாஸ் போலவும், பரதிருஷ்டிக்கு நெய்தற் ருெழி லுடையவர் போன்றிருந்து,அதனுல் வரும் ஆதாயத்தினை மூன்று விபாகமாக்கி, மறுநாட் டொழிற்கு நூல் வாங்குவதற் கோர் பாகமும், குடும்பச் செலவிற் கோர் பாகமும், சாதுக்கட் கந்நதாநததிற் கோர் பாகமு மாக விநியோகித்து,இ வ்விதம் நா டோறும் நடத்திக்கொண்டு, சாதந சதுஷ்டய முடைய ராய்த் தம்மை வந்து சர ணடையாநிற்பவரைச் சோதித்து

ஞானோபதேசஞ் செய்து வந்தனர். ஒரு கால் இராய வேலூர், கந்தப்ப ஸ்வாமிக ளென்பவர்கள் ஸ்வாமிகளின் பிரபாவத்தினைக் கேளவியுற்று அநேகஞ் சாதுக்களோடு வந்து, ஸ்ரீ சுவாமிகளைப் பத்திர புஷ்ப பலாதிகளால் ஆராதித்து,நமஸ்கரித் தெழுந்து,இரு கரங்களையும் சிரமேற் கொண்டு நின்று, ஜநந மரண சம்சார துன்பத்தில் அருந் தும் அடியேங்கள் உய்யும் பொருட்டு ஞானாநுக்கிரஞ் செய்தருளல் வேண்டு மென்று பிரார்த்திக்க,அவ் விண்ணப் பத்தினைச் செவியுற்ற சுவாமிகளும் பரீக்ஷித்து அநுக்கிரகஞ் செய்யத் திரு வுளங் கொண்டு, இங்கே குரு குல வாசஞ் செய்யும்படி உத்திரவு செய்து, வடி கஞ்சியில் முத னுள் நனைத்து வைத்திருந்த நூலை பிழிந் தெடுத்துக் கொண்டு, அந்த நூல் நனைத்த கஞ்சியைப் பருகும்படி கட்டளை யிட்டருள, வைராக்கியாதி சாதந மின்றிய மற்றைச் சாதுக் கள் அதனைப் பருகாது தெருவிற் பிக்ஷைக்குச் சென்றனர். இராய வேலூர் கந்தப்ப ஸ்வாமிகள் மாத்திரம் அக் கஞ்சி யை வாங்கி மநங் கோணாது சந்தோஷத்தோடு புசித்தனர், அதனைப் பார்த்து, இவன் தான் பக்குவி யெனத் தெளிந்து, சில காலம் அவ் விடத்திருக்கும்படி ஆஞ்ஞாபித்து, அத் யாத்ம சாஸ்திர வாயி லாகப் பரமாத்வைத ஞானத்தினை அநுக்கிரகித்தருளினர். கந்தப்ப ஸ்வாமிகளும், குரு வுப தேசத்தினைப் பெற்றுச் சுவாநுபூதியினை அடைந்து, குரு மூர்த்தியினிடத்து விடைபெற்றுக் கொண்டு, திரு வண்ணா மலை என்னுந் தலத்தினை அடைந்து, ஈசாநியத்தில், ஆரண்ய வாச மாக, நிர்ஜ்ஜநப் பிரதேச மான விருக்ஷத்தடியில் சமா தியுற் றிருந்தனர்.

சுவாமிகள் முத்துராம லிங்க ஞானதேசிகரிடத் தன்பு முதிர்ந்து, நிரந்தரம் அநுபூதி ஞானங்களை அநுக்கிரகித்துக்

கொண்டு, பிரஹ்ம நிஷ்டராயிருந்து, கலியப்தம் 4929 சாலி வாகந சகாப்தம் 1740 வெகுதாந்ய வருஷம், பங்குனி மாதம், 26 மங்கள வாரம், ஏகாதசி திதி. மகநக்ஷத்திரம் சுப்பிர நாம யோகம். பத்திரவா கரணம் கூடிய சுபதிநத்தில் பரப்பிரஹ்ம சமரச ஸ்வபாவ மடைந்தனர் அதன் பின்னர், ஆண்டவர் திரு வண்ணுமலையி லெழுந்தருளி யிருக்கின்ற ஈசாநிய சுவா மிகள், அவர் மாணுக்கராகிய சிவ குரு சுவாமிகள், பரசுராம சுவாமிகள், திரு நாகைக் காரோணம், அருணுசல சுவாமி கள், திரு வாரூர் தக்ஷிணு மூர்த்தி சுவாமிகள் முதலிய பெரி யோர்களுக்கும், தமது நகரத்தி லிருக்கிற இல்லற அடியார் களுக்கும், அங்கங்கு திரு முக மனுப்பி வர வழைத்து வைத்துக் கொண்டு மண்டலாபிஷேக பரியந்த மான காந விதி களையும், குரு பூசை மஹேசுவர பூசைகளையும். சாஸ்திர விதிப்படி சிறப் பாகச் செய்து முடித்து, அக் குரு சுவாமி களின் மீது "தடமுயர் கடல்குழ் பொருள்வைநன் னகரந் தனின் மநுத் தேகமாய் விளங்கித், திடமுடன் சுருதி சாஸ் திரவே தாந்தஞ் சிந்தையி லநுபவந் தெளிந்து, படிதனிற் றனைவந் தடுத்தவர்க் கிரங்கிப் பரமசற் குருவதா யுணர்த்தி, யடியவ ரடிகட் கேயுகந் தாட்சி யரன்பதி கைலைவாழ்ந் தனனே." என்னும் பாசுரத்தையும், திரு வாய் மலர்ந் தருளினர்.

---

## 16 வீர பத்திர சுவாமிகள் சரிதம்.

விண்முகத் தமரர் முதலவர் வணங்க
விளங்கிடும் பொற்கரி முகனைச்,
சண்முகத் திறையைப் பொருள்வைமா நகர்வாழ்
சம்புவைப் பொலம்புரி இறையைத்,

தண்முகத் தருளொ டொளிர்தரும் எனது
தாய்சௌந் தரியநா யகியை,
விண்முகத் தவர்கள் போற்றவீற் றருளும்
வீரபத் திரனைவாழத் துதுமே

சிக்கலைச் சார்ந்த பொருள் வைத்த சேரியில், ஸ்ரீ குரு மூர்த்தி யாகிய உகந்த லிங்க குரு சுவாமிகள் அதிஷ்டானத்திற்கு நித்திய நைமித்திய பூஜைகளையும், குரு பூஜை மகேஸ்வர பூஜைகளையும், ஆண்டவ ரினத்தவர்க ளான தன வணிகர்களாலும், சிஷ்யவர்க்கங்களாலும் பொரு ளுதவி செய்யப் பெற்று, யாவரு நன்கு மதிக்கும்படி நீண்ட கால நடத்தி வந்து, சித்தோபசாந்தி பெற்று, சீவ காருண்யம், பாச வைராக்கியம், ஈசுவர பக்தி, பிரஹ்ம ஞான மென்னும் நான்கும் திரு வுருக் கொண்டது போல், அமர்ந்து, புராண கம காவியப் பிரசங்கங்களிற் சிறந்து விளங்கி, தம்மை யடைந்த அடியார்கட்குப் பாடஞ் சொல்லிக் கொண்டிருந்து, சரீர வியோகஞ் சமீபித்தது தெரிந்து, கோவிலூருக்குச் சிதம்பர ஞான தேசிகரவர்களுக்கு யெழுதி தெரிந்து கொண்டு, சிங்கார வேலு சுவாமிகளை அவ் வாதீனத்தி லிருந்து பரிபாலனஞ் செய்து வரும்படி கட்டளையிட்டு, கலியப்தம் நாலாயிரத்தித் தொளாயிரத் தறுபத் தொன்று, சாலிவாகன சகாப்தம் 1782, ரௌத்திரி வருஷம், வைகாசி மாதம், 7௳, சுக்கிர வாரம், கிருஷ் பக்ஷண சதுர்த் தசி, பரணி நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் பரிபூரண தசையை யடைந்தனர்.

---

## 17. *நாக லிங்க சுவாமிகள் சரிதம்.*

எண்டரும் பெரியோர் தொழுதெழ வருளும்
இபமுகத் திறைவனை விடத்தை

உண்டவர்க் கருள்வே லனை அருள் நிலத்தை
யுண்டவர் சுந்தமே சனைமண்
விண்டவர் புகழ்மீ நாக்ஷியை மேகம்
வீரைந்திவர் கண்டனூர் வாழும்,
திண்டரும மநம ஆர் நாகப்ப ஞான
தேசிகன் தனைப்பணிந் திடுவாம்.

கடல்புடை சூழ்ந்த பூலோகத்திலே, சிவ பெருமான் அறுபத்து நான்கு திரு விளையாடல் புரிந்த பாண்டி வள நாட்டிலே, கண்டனூரிலே, தந வைசிய குலத்திலே, சூரைக்குடிக் கோத்திரத்திலே, பெரிய கருப்பன் செட்டியாரும், அவர் மனைவி ஸ்வர்ணவல்லி (பொற்கொடியாள்) அம்மையாரும் இருந்தனர். அவர்கள் புதல்வர் நாகலிங்க சுவாமிகள்.

நன்மையாங் கலியுக நாலாயி ரத்தித்தொ
ழாயிரத் தொண்ணூ றைந்தி
னல்விசய வத்சரத் துயர்மேட மாதத்தி
னற்றேதி பத்தொன் பதி
னனிமேவு பாநுவா ரத்தினுயர் பௌரணை
நாட்சோதி கடக ராசி
நற்கடிகை பதினுன்கி னுத்தரா யணமதி
னன்கான பாண்டி நாட்டில்,
திண்மைதவிர் கண்டனூர் தன்னிற்சி வாலயந்
திருமட முதலா னதுந்
தெளிவுடனுண் டாவதற் காகவுயர் வான
தேசிகன் குலத்து தித்துத்
தேவரும் புகழ்கோவி லூர்நெல்லை யருள்பெற்ற
சீர்முத்தி ராம லிங்க

தேசிக னருளினைத் தமையனு மெய்த்துறவு
சாமிபெற் றபின் பெற்றுமே,
தொன்மையாங் கர்னுபு ரிச்சூரை நகர்தனிற்
சூள்திருப் பணிகள் செய்துஞ்
சுயமதாய்ச் சாத்திரம நேகமுண் டாக்கியுந்
துகளற்ற ஞாந மதனிற்
றூயநற் சநகனும் பொறுமையிற் றருமனுஞ்
சொல்லரிச் சந்தி ரனுமெய்த்
தொண்டுசெ யப்பனு முவமிக்கொ ணுததாய்த்
தோன்றியுஞ் சாந்தி யாதி,
சிந்மயம தாங்குணச் செல்வரிவ ரேயெனச்
செகமெலாம் பரவ நின்றுஞ்,
சிரவணம நநாதி சீடருக் கொழியாது
செப்பியுங் கடைய னேனைத்
திருவடிக் கடிமையாய்ச் செய்நாக லிங்ககுரு
தேசிக னை வெந்தை
சீவன்முத் திப்பதந் தன்னினின் றுனந்த
சிற்சொருப மாகி னுனே.

---

## 18. கண் ணப்ப சுவாமிகள் சரிதம்.

கடல் புடை சூழ்ந்த பூ லோகத்திலே, பரம சிவன் அறுபத்து நான்கு திரு விளையாடல் இயற்றிய பாண்டிவள நாட்டிலே, நாட்டரசன் கோட்டை என்னும் ஊரிலே தந வைசிய குலத்திலே கண் ணப்ப சுவாமிகள் அவதரித்தனர்.

### கண்ட னூர் மூத்தி ராமய்யா இயற்றியது.

சீர்கொண்ட பராபவவ ருடந்து லாமதி தேதியிரு பத்தைந்தினிற், றிகழ்மந்த வாரமோ டபரபக் கத்தினிற்

றிதிநவமி மகநாளிலே, பார்கொண்ட கழரியம் பதிச்சிதம் பரமூர்த்தி பாலருட் பெற்று மிக்க-பாசவை ராக்கியத் துடனடியர் தம்மொடு பயில்சிரவ ணம்புரிந்து, தேர் கொண்ட மதுரைமா நகர்வந்து குட்டையை யாமடஞ் சீர்திருத்தஞ், செய்தங்கு வருகின்ற வடியர்கட் கருள் செயச் செல்லப்ப சுவாமி யையும்வைத், தேர்கொண்ட கண்ணப்பச் சாமிகள் சரீரம்விட் டின்பஙிலே யெய்த வேண்டி யேகமே வாத்துவித மானபர சொருபத்தி லெய் திஞரறிகமாதோ.

## 19. அண்ணுமலே ஞாந தேசிகர் சரிதம்.

கடல் புடை சூழ்ந்த பூ லோகத்திலே பரம சிவன் அறு பத்து நான்கு திரு விளேயாடல் இயற்றிய பாண்டிவள நாட்டிலே, கழநி வாசல் என்னும் நகரத்திலே, தந வைசிய குலத்திலே, உதித்து, கோவிலூர் மடாலயத்தில், ஞாநாசாரிய ராக எழுந்தருளியிருந்து, அநேகஞ் சிஷ்யர்கட்கு, அஞ் ஞாந விருளேப் போக்கி, பிரஹ்ம ஞாநோபதேசஞ் செய் தும், பிரஹ்ம வித்யா பிரசாரண சபை யென ஒரு சபையினே ஸ்தாபித்து, ஸ்ரீ சுப்பைய ஞாந தேசிகர், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரிய சுவாமிகள் முதலிய வித்துவான்களேக் கொண்டு, காரைமா நகரில், காள யுக்தி வருஷம், மாசி மாதம், 1௨ முதல் ஐந்து திநங்களில் பரசமயங்களே வென்று ஜயக் கொடி நாட்டும்படி செய்தும், இன்னும் பல அற்புதங்களேச் செய்தும், திருக் களரில், குரு மூர்த்தியின் அதிஷ்டாநத்திற்கு ஆலய மியற்றுவித்தும், மடம், சாதுக் கள் வசிக்க இயற்றுவித்தும், அதற்கு வேண்டிய வளவு பூ ஸ்திதிகளே வேண்டிய அளவு சம்பாதித்தும்,

பாரிஜாத வநேசுவரர் கோவில் பூஜைக்காக மருத வநமென ஓர் கிராமம் வாங்கி வைத்தும், பிரஹ்மாநந்தாநுபவத்தில் ஆழ்ந்திருந்து, கலியப்தம் 5020 சாலிவாகந சகாப்தம் 1841 சித்தார்த்தி வருஷம், வைகாசி மாதம், 8௳, சௌமிய வாரம், திருவோண நக்ஷத்திரம், அமர பக்ஷ சஷ்டி திதி, சிம்ம லக்நம் கூடிய சுபதிநத்தில், கோவிலூரில் பரிபூரண மாகிய விதேக கைவல்யம் அடைந்தனர். எல்லையின்றிய சாதுக்களும், பெரியோர்களும் வந்திருந்து, எல்லாக் கிரியைகளையும் செவ்வனே நடத்தினார்கள். அக்காலத்தில் கண்டனூர், முத்திராமய்யா என்பவர் "இயல்பான கலியுகம தையாயி ரத்தொடிரு பத்தினுக் குற்ற தான-வேற்றமுள சித்தார்த்தி வருடம்வை காசிமதி யெட்டினிற் சௌமிய வாரம், யேரமர பக்ஷமுறு திதிசஷ்டி, திருவோண மெழில்சிம்ம லக்கி நத்தே, யெங்கணும் புகழ் கோவிலூர் நெல்லை நாயகி யிணையடிக் கன்ப ரான, நயமேவு றும்முத்திராமலிங் கையனருள் பெற்றிடுங்க ருணைநிதி, நாமமா குஞ்சிதம் பரகுரு விரண்டாக நற்பட்ட மேவ மேலே, ராமசா மிகள்பட்ட மூன்றாக வீரப்ப ஞாந குரு நான்க தாக, நாடெலாம் புகழ்பணி யியற்றித்திருக்களரில் ஞாநசோ தியில டங்க. அயலிலா வண்ணமைலத்தேசி கன்பெற்ற வறிவினு லுற்ற பட்ட, மைந்தினிற் குருநாத னுக்குரிய பணிதன்னை யழகாக, வேநடத்தி, யாக்கமுள பிரமவித் யாப்ரசா ரணசபையை யன்புடன் றுனமைத்து, மத்துவித நிலைமைக்கு மேனிலைமை யில்லையென் றினிதுறுங் காரை நகரிற், சுயமான வேதாந்த வெற்றிநற் கொடியதுந் துலங்கவே கட்டி யெங்குஞ், சொலித்திட மடத்தினுக் காகவேண் டியபொருள் துரிதமாய்ச் சேகரித்துந், தூயதாங் கடவுளுக் குரியபணி யானவுஞ் சுகமுட

ன டத்திமேலாஞ், சுத்தசத் துவவடிவ மாயகண் டாநந்த சொரூபமா யிலகி னனே.'' என்னும் கவியை இயற்றினர்.

---

## 20 சென்னை, சச்சிதாநந்த சுவாமிகள் சரிதம்.

கடல் புடை சூழ்ந்த பூலோகத்திலே, தொண்டை நாட்டிலே. ஈசுர் என்னும் நகரத்திலே, வேட் கோவர் மரபிலே, சுப்பராய பிள்ளை யென்பவரும், அவர் மனைவி முனியம்பாள் என்பவரும் இருந்தனர். அவர்கள் இல்லற வாழ்க்கையைத் தரும நெறி வழாது நடாத்தி வரு நாளில் கலியுகம் 4917க்குச் சரியான யுவ வருடம், மாதம உ கிழமை திதியில் ஒரு குழந்தை பிறந்தது, அக் குழந்தைக்குச் சச்சிதாநந்தன் என பெயரிட்டு அன்போடும் வளர்த்து வந்தனர், அக் கால் அக் குழந்தைக்கு மூன்று மாதம் கழிந்தவுடன், மாதா பிதாக்கள் சென்னைக் கடுத்த குயப் பேட்டை யென வழங்கும் ஷண் முக ஞாந புரத்திற்கு அக் குழந்தையைக் கொண்டு வந்தனர். அங்கு கொண்டு வந்து, பாலப் பருவம் வந்ததும் உபாத்தியாயரிடம் வித்தியாப்யாசஞ் செய்வித்து வந்தனர். அப் பொழுது அக் குழந்தைக்குத் "தோப்பாச்சாமி என்னும் பெரியாரது கிருபாவீக்ஷணயந் தங்கப் பெற்று, இளமை பருவத்திலேயே பொறுமை, அடக்கம், அன்பு, வாய்மை, பயனில் பாராட்டாமை முதலிய நற் குணங்கள் யாவும் கண்டோர் ஆநந்திக்கு மாறு விருத்தி யடைந்து வந்தன அப் பொழுது ஷி ஷண் முக ஞாந புரத்தில், வித்வத் சிகாமணியாயிருந்த விசாக பெருமாளையரது சகோதரர் சரவணப் பெருமாளையரவர்களிடத்தில், கல்வி கற்று இலக்கிய இலக்கணங்களில் மிகத் தேர்ச்சி யடைந்த சச்சிதாநந்தர் தமது

குல வொழுக்கத்தின்படி சிவ லிங்க தாரணஞ் செய்து கொண்டு, தாம் உபாசநாமுர்த்தமாக கொண்ட சுப்பிர மணியக் கடவுளை முக்காலமும் முறை வழாது உபாசித்து வந்தனர்.

இவ் வாறு,ஒழுகிவரு நாளில்,ஸ்ரீ மத் ஜகத் குரு சங்கர பூஜ்ய பகவத்பாதாசார்ய சுவாமிகள் மாணுக்கர் பரம் பரையில் சோழவள நாட்டில், காவேரி யாற்றின் தீரத்தில், திருத் துருத்தி என்னும் ஸ்தலத்தில், ஏற்படுத்தப்பட்டிருக் கும் இந்திரபீட மடத்தில் எழுந்தருளியிருந்த பிராஹ்மண குல திலக பரமஹம்ச சந்நியாசியாக ஸ்ரீ கரபாத்திர சுவாமி கள் பரம்பரையில் வந்த தத்தாத்திரய சுவாமிகளின் அநுக் கிரகம் பெற்ற செங்கமலச் சுவாமிகள் மரபினராய் நாகைக் காரோணத்தில் எழுந்தருளி யிருந்த, ஸ்ரீ அருணசல சுவாமி கள் மாணுக்கர் பிறைசை ஸ்ரீ அருணசல சுவாமிகள் ஷ ஷண் முக ஞாந புரத்திற்குத் தற் செயலாய் எழுந்தருளிவர, அப் பொழுது,சச்சிதாநந்தர் தமது உபாத்தியாயரவர்களின் ஆஞ்ஞையின்மீது அவர்களைப் போய்ச் சரணுகதியாக வடைந்து, சாதந சதுஷ்டயம் கை வரப் பெற்று, ஆசாரி யருக்கு, ஆப்தாதி சதுர் விதப் பணிவிடைகளுஞ் செய்து, குருவின் கிருபாவீக்ஷண்யம் அடைந்து, சிரவண மநந நிதித் தியாசநங்களைச் செய்து வந்தனர்.

இவ் வாறு, அநேக காலம் அப்யாசஞ் செய்துகொண்டு வந்து, பின் பாஹ்ய திருஷ்டியின்றி யந்தர் முக திருஷ்டி யொடு கூடி ஆத்ம சாக்ஷாத் காரத்தினை யடைந்தார்கள். அக் கால், அவர்களைப் பார்ப்பவர் யாவரும் "பிரஹ்மம் போகின் றது, பிரஹ்மம் போகின்றது" என்று கூறுவர். இவ் வாறு

ஆத்ம சாக்ஷாத்காரத்தினை, யடைந்து அந்தர் முக திருஷ்டி யோடு இருக்கும் நாளில், அநேகம் மாணுக்கர்கட்கு ஞானோபதேசஞ் செய்தும், துவைத சைவ சித்தாந்த முத லிய மதங்களை கண்டித்து உபந்யாசங்கள் செய்தும், திருக்குத் திருசிய விவேகம், பிரத்தியக்ஷாநுபூதி விளக்கம், உத்தம வாதம், சீவகாருண்ய விளக்கம், சுவாநுபூதி விளக் கம், யதார்த்தவாதம், வேதாந்த இலக்கணம், சர்வ மத சித் தாந்த விளக்க வினு விடை, சுவாநுபூதி விநோத நான்மணி மாலை, கைவல்ய நவநீத விருத்தி யுரை, வேதாந்த சூடா மணி, விருத்தி யுரை, பிரபு லிங்க லீலை உரை, உபநிஷத விருத்தி யுரை பகவற் கீதை விருத்தி யுரை, சொருபசார, விருத்தி யுரை, முதலிய நூல்களை எழுதி மந்த முமுக்ஷுக் கட்கு உபயோகித்து வந்தார்கள். வேதாந்த சாஸ்திர ஞான மில்லாதாரிடத்துப் பேசவும், அருவருப்புற் றிருந்தார் கள். அவர்கட்கு த்வைதம் சத்யம் என்று கூறுவோரது வார்த்தை கர்ண கடூர மாயிருந்தது. ஞானாநுபூதிச் செல் வரைக் காணின் அவர்கள் மிகுந்த சந்தோஷத்தோடு காலங் கழிவதை யுணராது ஆத்ம விசாரஞ் செய்து கொண் டிருப்பார்கள். இவ் வாறு, முப் பது வருஷம் வரை அத் வைத விஷயத்தினைப் பற்றி உபந்யாசஞ் செய்தும், மாணுக் கர் பலருக்குச் சந்தேக விபரீதங்களைக் களைந்தும், வாழ்ந்து கொண்டிருந்து, பார்த்திப வருஷம், கார்த்திகை மாதம், ஆதி வாரம் ஒன்றில், வழக்கம் போல் அத்வைத உபந் யாசஞ் செய்து, உபந்யாச முடிந்தவுடன், இனித் தேகம் நில்லா தென உணர்ந்து, மாணுக்கர்கட்கு தை மாதம், தைப் பூசத்திற்குள் தெரிந்து கொள்ள வேண்டுவன யாவும் தெரிந்து கொள்ளுங்கள் என ஆஞ்ஞாபித்தனர். அவ் வாறே மாணுக்கர்களும் குறித்த காலத்திற்குள் யாவுந்

தெரிந்து கொண்டனர். பின் கலி 4985க்கு, பார்த்திப வருஷம், தை மாதம், 10உ குரு வாரம் ஆயில்ய நக்ஷத்திரம் கூடிய சுபதிநத்தில் விதேக கைவல்யம் அடைந்தனர்.

நூற் பெயர்.

1. திருக்குத் திருசிய விவேக மூலமும் உரையும்
2. பிரத்தியக்ஷாநுபூதி விளக்கம்
3. உத்தம வாதம்
4. ஜீவ காருண்ய விளக்கம்
5. சுவாநுபூதி விளக்கம்
6. யதார்த்த வாதம்
7. வேதாந்த இலக்கணம்
8. சர்வ மத விளக்க வினு விடை
9. சுவாநுபூதி விநோத நான் மணி மாலை
10. கைவல்ய நவ நீத விருத்தி யுரை
11. வேதாந்த சூடாமணி விருத்தி யுரை
12. பிரபு லிங்க லீலை யுரை
13. உபநிஷத் விருத்தி யுரை
14. பகவற் கீதை விருத்தி யுரை
15. சொரூபசார விருத்தி யுரை. ஆக 15.

சச்சிதாநந்த சுவாமிகள் சரிதம் முற்றுப் பெற்றது.

---

## 21. திரு வண்ணாமலை, மஹாதேவ சுவாமிகள் சரிதம்,

சீர்மணக்கு மருணைகிரி தனின்மேவு
மீசாந தேசி கன் றன்

பேர்மணக்கு மரபில்வரு மாதேவ
முநிவனெனு மியற்கைப் பேரோன்
நேர்மணக்கு விளம்பிவரு டமேட
மாதிரைபஞ் சமியா நேர்ந்து
நார்மணக்கு மன்பர்பலர் போற்றநன்
முத்திதசை நண்ணி னனே.

---

## 22. சாக்கைக் கோட்டை, முத்துக் கருப்ப சுவாமிகள் சரிதம்.

கடல் புடை சூழ்ந்த பூலோகத்திலே, பரம சிவன் அறு பத்து நான்கு திரு விளையாடல் இயற்றிய பாண்டி நாட்டிலே, மலம் பட்டி என்னும் நகரத்திலே, தந வைசிய குலத்திலே, கோத்திரத்திலே பழநியப்ப செட்டியாரும், அவர் மனைவி வள்ளியம்மை என்பாரும் இருந்தனர். அவர்கள் புதல்வர் முத்துக் கருப்ப சுவாமி என்பவர் ஆவர்.

பார்மேவு கலிவருட மையாயி
ரத்தினெடு பகிருப தாகுமதனிற்
பண்பான சாலிவா கநசக
நவகுறைப் பதினெட்டி னரை நூறதா
யார்மேவு றுங்காள யுத்தியாண்
டதனிலே யாவணித் திங்கடெய்தி
யமைவான பத்தொன்ப தமரபக்ஷசஞ் துர்த்
தசியோடு புதனல்வராம்,
தேர்மேவு மகமதிற் கோவிலூ
ரதனிலே சிறந்திடுமி ராமசாமித்

தேசிகன் பதமதைப் பூசையா
கக்கொண்டு திகழுநற் சாக்கையுற்ற,
ஏர்மேவு முத்துக்க றுப்பசுவா
மிகள்மிக்க வேற்றமுள மடமியற்றி
யெழிற்சீவன் முத்திரின் றுயர்முத்தி
யெதிஞ ரேத்திடவ ருகமாதோ.

---

## 23. யோகாநந்தேந்திர சரஸ்வதி சுவாமிகள் சரிதம்.

சீர்மேவு சித்தார்த்தி யாண்டாடி
திங்கட் டேதியிருபத் தொன்றுஞ்
செவ்வாயு டன்சுக்ல பட்சமொடு
நவமிதிதி சேர நுஷ சுபதிநத்தில்,
சார்மேவு காஞ்சிபுர முபநிஷத்
ப்ரமேந்த்ர சபைமடத் தெழுந்துவந்த
சச்சிதா நந்தேந்த்ர சரஸ்வதி
சுவாமிகள் சரணா விந்தமுற்று,
ஆர்மேவு மத்துவித சாஸ்திரத்
தேர்ச்சியி லாதிசே டனுமுவப்ப
வரியதர்க் கத்தினுக் கியார்வரினு
மவர்வாயை யடங்கிடப் பேசுமதுலன்,
ஏர்மேவும் யோகாநந் தேந்திர
சரஸ்வதி சுவாமியென வேவிளங்கின்,
யெங்கணும் புகழ்கோட்டை யூரினிற்
சமாதிநிலை யெய்திஞ ரேத்தமாதே.

## 25. பொன்னம்பல ஞானதேசிகர் சரிதம்.

சொல்லமு தருளும் ஞானமுக் குறுணித்
தோன்றலே ஆன்றவர் வழுத்தும்,
எல்லையில் கருணைக் குகன்றனைச் சகம்ஈ
எழில்சிவ காமியம் மையினை,
நல்லவர் புகழும் நடநநா யகனை
நான்மறைப் பொருளெலாம் விரித்துத்,
தில்லையில் அமர்பொன் னம்பல ஞான
தேசிகன் தனைத்திநம் பணிவாம்.

ஸ்ரீ சிதம்பர ஞான தேசிகர் பரிபூரணம் அடைந்த பின்னர், ஸ்வாமிகளின் அடிச் சுவடுள்ள திரு வடியைப் பெற்றுக்கொண்டு சிதம்பம் சென்று, நடேசராலயத்திற் குக் கன்னி மூலையில், ஒரு மடாலயம் ஏற்படுத்தி, அதிற் றமது குரு மூர்த்தியின் திவ்விய திரு வடிகளைக் தாபித்தற் பொருட்டு, கல்லினுல் ஒரு மண்டபம் செய்வித்து, அதில் அற்புத மான கேடகம் ஒன்று இயற்றி, அதில் குரு மூர்த்தியின் திவ்விய திரு வடியை எழுந்தருளப் பண்ணி, நித்திய நைமித்திய பூஜைகளையும், குரு பூஜை, மஹேசுவர பூஜை முதலியவற்றையும், பே ரன்போடு செய்வித்துத் தம தாசாரிய ஸ்தாநத்தில் நடப்பது போன்று, சாதந சம்பத்தி யுள்ள முமுக்ஷுகட்குப் பிரதிதிநமும் ஞாநாநுக்கிரகம் செய்து கொண்டிருந்தனர் அன்றியும், சிற்றம்பலத்தின் கண் ஆநந்தத் தாண்டவஞ் செய்தருளாநின்ற சிற் சபேச னுக்கு விசேட காலங்க டோறும் அன்பு மிகுந்து அளவில் லாத அபிஷேக நைவேத்தியங்களையும், திநந் தோறும்

அர்ச்சனை நைவேத்தியங்களையும், பாவாடை நைவேத்தியங்களையும், செய்வித்துப், பிரதிதிநமும், சாதுக்களோடு தரிசித்து ஆநந்தத் தமிழ்ந்தி வியாக்ரபாத ரிஷீசுவரர் ஆத்மார்த்த பூஜை செய்துவந்த பௌவநேசுவரர் ஆலயத்தினையும், சந்நிதாநத் துள்ள பௌவந தீர்த்தத்தினையும், பெரி க. சிந்நயச் செட்டியார் பேருதவியால், கற்பணியாகச் செய்வித்தும், இறும் பூதூர். தத்துவராய சுவாமிகளின் அதிஷ்டாநத்தையும், கருங் கற் பணி யாகக் கோவி லூரில் படித்த சாதுக்கள் பேருதவியாற் கற்பித்தும், அவ் ஊரில் மடம் ஒன்று இயற்றுவித்தும், மடாலயங்களில் சாதுக்களுக்குப் போசநத்திற்கு வேண்டிய பூஸ்திதிகளைச் சம்பாதித்தும், செவ்வையாகப் பரிபாலநஞ் செய்து, அவற்றிற் கிஞ்சின் மாத்திரமும் பற் றின்றி சித்திய திருப்தியுடையவ ராகவே இருந்தனர்.

---

## 26. கத்தப்ப ஞாந தேசிகர் சரிதம்.

தெருள்நிறை முநிவர் பணிதரும் கரியின்
றிரைகொளும் கருணைநா யகனைப்,
பொருள்நனி அருளும் முருகவேள் இறையைப்
போதயன் அரியொடு நேடும்,
அருணநல் அசலம் எனும்என் றந் தையினை
அணிஉண்ணு முலையினம் மையினை,
அருணையில் உறைகந் தப்பதே சிகனை
அநுதிநம் வணங்கிவாழ்த் திடுவாம்.

பூ லோகத்திலே தொண்டை நாட்டிலே, க்ஷீர நதி தீரத்திலே, இராய வேலூரிலே, வேளாளர் குலத்திலே, திரு

நீல கண்ட தேசிகரும், அவரது பத்தினி உமைய பார்வதி யாரும், குரு லிங்க சங்கமங்களில் பேரன் புடையவராய் இல்லறத்திலே. யினிது வாழ்ந் திருந்தனர். அவர் தமக் கோர் புத்திர னில்லாமையால் நெடுநா ளாய் வருந்தி திரு வருணையி லுள்ள ஸ்ரீ முருகப் பெருமானை யுபாசித்து அவ ரருளால், ஒரு புத்திரனைப் பெற்று, முருக வேளி னதருளா லவதரித்த வக் குழந்தைக்குக் கந்தப்ப னென்னுந் திரு நாம மிட்டனர். கந்தப்பர், குழந்தைப் பருவத்திலே பல திரு விளையாடல்களை யியற்றி. ஒரு காலத்தில், மூன்று நாள் காறும் யாரு மறியா வண்ணம் மறைந்திருந்தனர். பள்ளி யில் உபாத்தியாயர் பாடங்களைக் கற்பிக்கு முன்னமே அப் பாடங்களை யொப்புவித்து விட்டு, ஆண்டும், நிட்டை கூடி மௌனமா யிருப்பர். அது கண்டு உபாத்தியாயரும், அவ் வூராரும்,இவர் தெய்வீகத் தன்மை யுடையவரென்று நினைத்து வந்தனர். இவரது அளவு கடந்த ஆச்சரியச் செயல்கள் பலவுங் கண்டு, இவரது பிதா இவருக்குத் திரு மணஞ் செய்யாமலே ஏழாவது வயதில் ஆசாரிய வபிஷே கமஞ் செய்து, தமது வேளாளர் மரபினற்குச் சிவ தீக்ஷை செய்விக்குங் குருத் தன்மையை விளக்குந் தேசிகர் என்ற பட்ட மிட்டுச் சிவபூஜையு மியற்றுவித்தனர். அன்று முதல் கந்தப்ப தேசிகர் பதி னுருவது வயது வரையிலும்,நியமத் துடன், சிவ பூஜையிற் றற்பர ராய் எப் போதுந் தியானத் தோடுங் கூடியிருப்பர். பிதா வான திரு நீல கண்ட தேசி கர் புத்திரனுக்குப் பருவ காலம் வந்தமையால்,அவருக்குத் திரு மணஞ் செய்யவேண்டி உறவினர் வீட்டிற்குக் கன்னி கையைத் தேடிச் சென்றனர். அதனை யுணர்ந்த கந்தப்ப தேசிகர் தமது மாதாவினிடம் "நான் சம்சாரியாக மாட்

டேன் நமது பரம்பரையை யடிமை கொண்ட சிவ பெரு மான் வீற்றிருக்குந் திருப் பதிகளைத் தெரிசித்துப் பேரா நந்த மடைய என் மந மெழுகின்ற'' தென்று கூறி, எவ் வாறோ மாதாவின் மந மகிழ்வால், விடை பெற்றுக் கொண்டு, பூமிப் பிரதக்ஷண மாய்ப் புறப்பட்டுச் சென்று ஆங்காங் குள்ள தீர்த்தங்களில் மூழ்கிச் செபித்து மூர்த்தி களைத் தியாநித்துத் துதித்துத் தரிசித்துக்கொண்டு செல் லுங் காலத்திலே, சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்து, நடே சப் பெருமானைத் தரிசித்து. ஸ்ரீ சபாநாயகருக்கு வோர் நித்ய அகண்ட தீபக் கட்டளையை யேற்படுத்தி, ஆண் டுள்ள தீக்ஷதர்களால் செப்புப் பட்டயம் ஒன்று அளிக்கப் பட்டு, அந்த க்ஷேத்திரத்தி லுள்ள ஆயி குளத்தின் வட கரையில், அகோ ராத்திரஞ் சமாதி புரிந் திருக்குஞ் சித்த புருஷ ரான, ஸ்ரீ மௌந சுவாமிகளைத் தெரிசித்து, இனி நாமுந் துறவியாய் உபதேசம் பெற வேண்டு மென்னு மெண்ணத்தால், சில கால மந்த க்ஷேத்திரத்திலே பிக்ஷை யால் சரீர தாரணஞ் செய்து கொண்டு, காலை மாலை யென்னு மிரண்டு காலங்களிலும, ஸ்ரீ மௌந சுவாமிகளைத் தெரிசித்துக் கொண்டு வந்தனர். ஒரு நாள் அதிக தீவிர மான விரத்தியால் தா மணிந்திருந்த வஸ்திர மனைத்து நீத்து, கௌபீந தாரி யாய் ஸ்ரீ மௌந சுவாமிகளைத் தரிசிக்கச் சென்றனர். அப்போது மார்கழி மாத மானதால் பனியும், மழையும், குளிரு மதிகமா யிருந்து மவற்றிற் கஞ்சாமற் சரீர நடுக்க மின்றி, யன்று பெய்த மழையில் நனைந்து கொண்டு வந்து, தேசிகர் தமதிடத்து வணக்க முற்றிருப் பதைக் கண் ணுற்று அன்றுத் தம்மீது யாரோ போர்த்தி யிருந்த கம்பளத்தை யெடுத்துத் தேசிகருக்குப் போர்த்தி யுபதேசித்து ஆண்டே தியாநத்தோ டிருக்கச் செய்தனர்.

அத் தியாந விசேஷத்தால், சில சித்தி விளங்கியது. அதனுல், தமது குரு மூர்த்தி யான ஸ்ரீ மௌந சுவாமிகளின் மேல் ''நித்ய பரிபூரணு'' யென் றுரம்பித்துப் பஞ்ச ரத்திந மென்ற வோ ரற்புத மான தோத்திரப் பா மாலையை யியற்றிச் சித்தர்களுக் குரிய யோக தண்டு யோகப் பட்டை முதலியவற்றைக் கையிற் கொண்டு, திகம்பர ராய்ச் சடா மகுடந் தரித்து, ஸ்ரீ மௌந சுவாமிகளிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டுச் சென்று திரு வாரூரை யடைந்து, ஸ்ரீ தியாக ராஜப் பெருமானைத் தெரிசித்து, ஆண்டு மடப்புரத்தில் நிலவுகின்ற மஹா சித்த மூர்த்தி யாகிய ஸ்ரீ தக்ஷிணு மூர்த்திச் சுவாமிகளுடன் சில காலம் கூடியிருந்து, திரு நாகைக் காரோணம் போகையில், சிக்கல் என்ற க்ஷேத்திரத்தை யடுத்த பொருள் வைத்த சேரியில், பிரஹ்மாநுபவ நிஷ்ட ராய்ப் பல சீடர்களுக்கு ஞானோபதேசஞ் செய்து கொண்டு வீற்றிருக்கும், ஸ்ரீ உகந்த லிங்க ஞாநதேசிகரைத் தெரிசித்து, ஆண்டுச் சில காலம் வாசஞ் செய்து, சம்பாஷித்துக் கொண் டிருந்து, பின்பு நிருவிகற்ப சமாதி கூட வேண்டு மென்று, நிர் ஜநப் பிரதேசம் போக விச்சித்து, அவ் விடம் விட்டுப் புறப்பட்டு வட திசையை நோக்கி வந்து திரு வண்ணுமலைக் கடுத்த வேட்ட வலத்திற்குச் சமீப மான பாக்கத்து மலையிலே யுள்ள வோர் குகையிலே, யாரும் அறியா வண்ணம், பல வருஷங்க ளாக நிருவிகற்ப சமாதி கூடியிருந்தனர். அப் போது அவ் வூரிலே, தொழு வேளாள ஜாதியிலே யிருந்த, முத்துச் சாமி உடையா ரென்பவர் தாம் மேய்க்கு மாடுகளிலே பால் கறந்து நா டோறும் தேசிகருக்குக் கொடுத்துக் கொண்டு வந்தார். இப் புண்ணிய பலனுல் அவர் வீடு கட்டு நிமித்தம் அடிப்

படையிட நிலத்தைத் தோண்டும் போது, அவருக்கு நிதிக்குவிய லொன்று கிடைத்தது. அதனு லவர் சிறிது நாளிலேயே அதிக தந முடையவ ராய் விளங்குவதைக் கண்ட அவ் வூரார் இவருக்கு நிதி கிடைத்தமையை யுண ராதவர்க ளாய், இப் பெரியா ரன்றோ தமக்குப் பா லுப கரித்த வுரிமையால், இரச வேதநத்தால் நாணய மளித் திருக்கின்ருர் என்று, மருண்ட மநத்த ராய்த் தேசிக ரிடம் வந்து பல வித மாய்த் துதித்து சுவாமிகளே! மூத்துச் சாமி உடையாருக்கு அநுக்கிரகம் செய்தது போல், எங்களுக்கு மநுக்கிரகஞ் செய்ய வேண்டு மென்று சொல்லி நிட்டைக்கு இடையூ ருய்க் கூட்ட மிட் டனர். அது கண்டு சுவாமிகள் அவ் விடம் விட்டுப் புறப் பட்டு யாரும் அறியா வண்ணம் வந்து, ஸ்ரீ உண்ணுமுலை சமேத அண்ணுமலையார் வீற்றிருக்கும் சோண சைலத்தின் தென் மேற்கி லுள்ள கோரக்க நாதரது குளக் கரையின் மேல் நிஷ்டை கூடியிருந்தனர். அவ் வூரிலே யிருந்த அருணுசலஞ் செட்டியா ரென்னு மொருவர், நெடு நா ளாய் தனக் கோர் புத்திர னில்லாமையால் மநம் வருந்தி யிருக் கும் போது, பெரியா ரருளால் புத்திரப் பே றுண்டா மெனப் பலர் சொல்லக் கேட்டுப், பெரியாரைத் தேடிச் சென்று, கோரக்க நாதர் குளக் கரையில் நிட்டை கூடி யிருக்குஞ் சுவாமிகளைக் கண்டு வணங்கிப் புத்திரப் பேற்றை விரும்பியவ ராய் தொண்டு புரிந்து அன்பு செலுத்தி வந்தனர். ஆண்டு கோபாலர் பலர் பால் முத லிய வுணப் பொருள்களை யளித்து வந்தனர். அதைச் சுவாமிகள் மந மகிழ்ந் துண்டிருப்பார்கள். இங்ஙன மிருக் கும்போது ஒரு நாள் அவ் வருண கிரியில் விழிப் புலனிற்கு

வெளிப்படாது வாசம் புரியுஞ் சித்தர்கள் வந்து, ஸ்ரீ சுவாமிகளை யழைத்துக் கொண்டு போய் மனித சஞ்சார மின்றிய மலைக் குகையில் வைத்திருந்தனர். அங்கு அதிகமாய்ப் பலித்துக் கிடந்த பழ முதலியவற்றைப் பார்த்து, இக் கனியில், ஒன்றை அருணாசலஞ் செட்டியாருக் கீயின், நற் புத்திரப் பே றுண்டா மென்று ஸ்ரீ சுவாமிகள் திருவுளத்தே சங்கற்பித்தனர். அதை யுணர்ந்த சித்தர்கள், "அவ்வாறே வுலக வநுக்கிரஹ இச்சையை நிறைவேற்றுவாயாக" வென்று வேண்டிய பழங்களுடன் ஸ்ரீ சுவாமிகளை அக் குளக் கரையிலே கொண்டு வந்து விட்டுச் சென்றனர். ஸ்ரீ சுவாமிகள் தம தன்ப ராகிய வருணாசலஞ் செட்டியாருக்குப் பழத்தை யளிக்க, வது காரண மாக வேலாயுதஞ் செட்டியா ரென்னும் ஒரு நற் புத்திரனை ஈன்றார். அவ் வேலாயுதஞ் செட்டியார் புத்திர ராகிய முருகப்பச் செட்டியார், தமது பிதாமக ரான வருணா செட்டியாருக்கு, ஸ்ரீ சுவாமிகள் அளித் தருளிய விபூதிப் பையினை, இன்றும் வைத்துப் பூசை புரிந்து தங்களுக்கு வரு மிடையூறுக ளனைத்தையும் அதனால் நீக்கிக் கொள்கின்றனர். இங்ஙனம், யாரு மறியாது ஸ்ரீ சுவாமிகள் வந்த நாண் முதல் பக்கத்துக் கிராம வாசி யான முத்துச் சாமி உடையார், தேசிகரைக் காணாமையால், மந மிக வருந்தி துயருற் றிருக்கும் போது கருணா மூர்த்தியான ஸ்ரீ அருணாசலேசுவரர், அவரது சொப்பநத்தில், ஸ்ரீ சுவாமிகள் போல் விளங்கி, "அப்பா நீ வருந்த வேண்டாம். நாம் அருணாசலத்தின் ஈசாந்ய பாகத்தி லிருக்கின்றோம் அங்கு நீ வரக்கடவாய்" என்று திரு வாய் மலர்ந்து, ஸ்ரீ சுவாமிகள் இடம் வந்து, தமது மங்கள வடிவத்தைத் தரிசிப்பித்து, "அப்பா!

உன்னைக் காண ஓரன்பனை ஈசானிய திசைக்கு, வரும்படி யாய்ச் சொல்லி யிருக்கின்றோம், நீயு மங்கு போகக் கட வாய்'' என்று சொல்லி, அந்தர்த்தான மாயினர். அக் கருணை மூர்த்தியின் கருணைத் திறத்தை, நினைத்து, நினைத்து, ஸ்ரீ அண்ணாமலையார் தோத்திரப் பாமாலை யென்னும் சில வருட் பாடல்களைப் பாடிக்கொண்டு, ஈசானிய திசைக்கு ஸ்ரீ சுவாமிகள் எழுந்தருளி வந்து, தொழு வேளாளர் குலத் திற்குப் பொது வான அண்ணாமலை யார் பூந் தோட்டத் திற்குச் சார்பான மாமரங்களும், செடிகளும், சூரைப் புதர் களும், நெருங்கின ஈசானிய தீர்த்தத்தின் தென் கரையி லுள்ள ஒரு பெரிய வால மரத்தின் கீழ் சிவ யோக சமாதி புரிந்திருந்தனர். பாக்கத்து வாசி யான முத்துச் சாமி உடையா ரென்னு மன்பர், பொதி மாட்டி லரிசி முதலிய வற்றை யேற்றிக் கொண்டு வந்து, ஸ்ரீ சுவாமிகளைத் தரி சித்து,வடங்காத வானந்தக் காட்சியி லாழ்ந்து அடியவர்க்கு வமுதளித்துச் சென்று, ஸ்ரீ சுவாமிகளை விட்டுப் பிரிய மன மில்லாதவரா யிடை யிடையே வந்து தெரிசித்துப் போவார். அக் காலத்தில்,ஸ்ரீ சுவாமிகள் அறு பது வயதை யும், நீண்டு பரந்த சடா பாரத்தையும், திக் காடையையு முடையவ ராய்,சதா சமாதி யோக நிஷ்டா பர ராய் விளங் கினர். அப் போது, ஸ்ரீ அண்ணாமலையார், பயங்கர மான வரிப் புலியாய் வந்து, ஸ்ரீ சுவாமிகள் நிஷ்டை கூடி யிருக்குங் காலத்தில், யா தொரு இடையூறும் வாரா வண் ணம் சமீபத்தில் காவ லாய்ப் படுத்துக் கொண் டிருப்பர். சுவாமிகள் நிஷ்டை கலைந்து சமீபத்திற் படுத்துக் கொண் டிருக்கும் வரிப் புலியைக் கண்ணுற்று, ஸ்ரீ அருணாசலேசு வரரே, இவ் வடிவந் தாங்கி நமக்குக் காவலா யிருக்கின்

றன ரென்று மிகவு மந மகிழ் வுற்று, அப் புலியின் மீது தமது திருக் கரங்களால், "அண்ணுமலேயே என் னரசே" யெனப் பல வாறு வழைத்துத் தடவிக் கொணடிருப்பர். இதனை புணர்ந்த மற்றைய காட்டுப் புலிகளும், தமது வினத்தின் வாஞ்சையால் ஸ்ரீ அண்ணுமலையா ராகிய வரிப் புலியைப் பின்பற்றிச் சுவாமிகளது சமீபத்தில் வந்து காவலாய்ப் படுத்துக் கொண்டிருக்கும், தம தன்பர்கள், தம்மைத் தெரிசிக்க வருங் காலத்திற், புலிகளைப் பார்த்து உங்களைக் கண்டு அன்பர்கள் பய மடைவார்களாதலின், சற்று விலகி யிருங்க ளென்று. திரு வாய் மலர்ந் தருளுவார்கள். அது கேட்டுப் புலிகள் விலகி நிற்பினும் நிற்கும், அல்லது, தமது மலைக் குகைக்களுக்குச் செல்லினுஞ் செல்லும். அவ் வன்பர், தரிசிததுச் சென்றதூஉம் சுவாமிகள் சமாதி கூடி நிற்பார்கள். மீண்டும் வரிப் புலிகள் அவ் விடம் வந்து காவலா யிருக்கும். சில சமயங்களில், ஸ்ரீ சுவாமிகள் சமாதி கூடி நிற்கும் போது அன்பர்கள் வந்து சமீபத்திற் படுத்திருக்கும் வரிப் புலிகளைப் பார்த்து, அவைகள், விலகும்படிப் பயப்பட்டுக் கர கோஷஞ் செய்வார்கள்; அது சமயம் ஸ்ரீ சுவாமிகள் கண் விழித்துச் சற்று விலகி யிருக்கும்படி திரு வாய் மலந்தருளுவார்கள். இங்ஙனம் ஸ்ரீ சுவாமிகளின் திரு விளையாடல்கள் நிகழ்ந்து கொண் டிருக்கும் போது, கூட லூரைச் சார்ந்த தென்பேர் புதுப் பாளைய மென்னுங் கிராமத்தி லிருக்கும் ஒரு நாய்க்கர், தமக் குற்ற சூலை யென்னும் பெரும் பிணியாற் றுன்பஞ் சகிக் கொணுதவ ராய், வருத்த முற்று, ஸ்ரீ அருணுசல க்ஷேத்திரத்திற்கு வந்து, அக் காலத் துள்ள கொடி வழி மார்க்க மாய், கிரி பிரதக்ஷணஞ் செய்து வருகையில், ஸ்ரீ

தரிசித்து சுவாமிகளே இப் பெரியாராலே இப் பெரும் பிணி விலகு மென்று நம்பிக்கை யுடையவ ராய், ஸ்ரீ சுவாமிகளே வலம் வந்து நமஸ்கரித்து, சுவாமி இந் நோய் நீங் தும்படி யருள்புரிய வேண்டு மென்று பிரார்த்தித்தனர், அவர் மீ திரக்க முற்று அந் நோய் நீங்கும்படி திருக் கண் சாற்றி யருளவும்,வியாதி சூரியனைக் கண்ட பனி போல் விலகிற்று. அத் திரு விளையாடலைக் கண்டு ஆச்சரிய முற்று இப் பெரியார்க் கடிமையா யிருத்த லன்றோ நமக் குற்ற கடைமை, அதனுல்,நமது ஜெந்மமுஞ் சாபல்யமா மென்று நிச்சயித்து, உடனே சந்நியாசத்தை வஹித்து, ஸ்ரீ சுவாமி கள் சந்நிதிக்கு அடிக் கடி வந்து தரிசித்துப் போவார். அதனுல், அவருக்கு அநாயாச மாய்க் கல்விப் பே றுண்டா னது. அதனைக் கண்ட தமது வூரி லுள்ள சுற்றத்தவர்கள் அவண் வந்து, ஸ்ரீ சுவாமிகளிடம் உத்திரவு பெற்று அவரை யழைத்துக் கொண்டு போய், ஈசாநிய சுவாமி யென்று அவருக்குத் திரு நாம மிட்டு, அவர்பாற் பலர் சிரவணஞ் செய்து வந்தனர். அச் சுவாமிகள் விதேக கைவல்லிய மடைந்த பின்னர், சமாதி யாலயமு மடமுங் கட்டி, ஸ்ரீ தேசிகர் மகிமை யோங்கும்படி ஈசாநிய சுவாமி சமாதி யென்ற பெயரானேயே யின் றளவும் வழங்கி வரு கின்றனர். ஒரு நாள் ஒரு கரடி மிகுந்த பசி வருத்தத்தினுல், ஸ்ரீ சுவாமிகளே மிகுந்த கோப முடைய தாய் அடித்துக் கொல்லும் பொருட்டுச் சமீபத்தில் வந்தது. அது கண்டு அங் கோர் மாமரத் தடியில் ஸ்தாபிக்கப் பெற்றிருந்த விநா யக சிலா விக்கிரக மானது, ஓடி யக் கரடி மேல் விழ, அக் கரடி வுயி ரிழந்தது, அதனு லவ் விநாயகருக்குக் கரடி விநாயக ரென்றும், மாமரத் தடி விநாயக ரென்றும், பெய ரிட்டு, இன் றளவும் வழங்குகின்றனர். இடை யிடையே

வந்து ஸ்ரீ சுவாமிகளை தரிசித்துப் போகும் வழக்க முடைய பாக்கத்து வாசியாகிய முத்துச் சாமி உடையார், ஒரு நாள் தமது மரபினர்க் கெல்லா நமது, "தோட்டத்தில் இப் பெரி யார் வந்து தவம் புரிய நாம் எப் புண்ணியத்தைப் புரிந் தோமோ வறிகிலேம்" என்று சொல்லி, நமது நந்த வனத் திற்குக் கட்டுப்படுத்தி வைத்திருக்கு மிவ் விடத்தினை யிப் பெரியாருக்கே தானஞ் செய்து விடுவது நல மென்று தீர்மானித்து, மூன்றி லொரு பாகம் வட புற மாகத் தானஞ் செய்தனர், சுவாமிகள் ஈசாநிய திசையி லிருத்தலின், ஈசா நிய ஞாந தேசிக ரென வன்று முதல் வழங்கினர். பிணி யாளர் பலர் வரின், அவரது பிணிகள், சுவாமிகளது கிரு பையால், மருந் தருந்துத லின்றியே நீங்கி வந்தன, ஸ்ரீ சுவாமிகளின் முக்ய சீடருண் முதன்மைய ரான நாக பட்டணம், இராம லிங்க சுவாமிகள், புதுச் சேரி, அருணு சல சுவாமிகள், பாக்கத்து வாசி, முத்துச்சாமி உடையார், அருணை வாசி, அருணுசலஞ் செட்டியார், என்னு மிவருள் அருணுசல சுவாமிகளின் சந்ததியார் ஒருவரு மில்லாமை யா, லவர் தந மனைத்துங் கொள்வா ரின்றிப் பிரஞ்சு தேசத் தரசர்பா லிருந்தன. அப் போது அருணுசல சுவாமி கள், சுவாமிகளிடம் "யான் புதுவைக்குச் சென்று எனது குடும்பத்தவரின் திரவிய மனைத்தையும் பூர்வாசிரமந் தரித்து வாங்கி வருகின்றேற" னென்றனர். அதற்கு சுவாமி கள், "அப்பா நமக்குப் பணமும் வேண்டாம், கொண்ட வேடத்தையுங் களைதல் கூடாது, நீ மீறிப் போனுல் மீளவு மாட்டா', யென்று திரு வாய் மலர்ந்தருளினுர்கள். இங்ங னஞ் சுவாமிகள் கருணையாற் கூறிய மொழிக ளனைத்தை யுங் கடந்து, புதுவைக்குப் போய், பூர்வாச்சிரமந் தரித்துக் கொண்டு, எமக்குச் சேர வேண்டிய வெமது சந்ததியார்

சொத்தை யெமக் களித்தல் முறையா மென்று தக்க சாக்ஷி களுடன் அரசாங்கத்தவர்பாற் சொல்லிச் சொத்தை வாங்கி யேலம் போட்டுச் சுவர்ண மாக மாற்றிப் பொதி மாட்டி லேற்றிப். "போ போ மாடே" யென்று வதனை யடிக்க,யென்று மிகச் சாந்த மான வம் மாடுந் திடீ ரென்று திரும்பிக் குத்தி, அவரது குட ரொழுகச் செய்தது. அத ஞல், அவ ராண்டு விதேக கை வல்லிய மடைந்தனர். அப் போது, அவ் வரசாங்கத்தார் அவருடைய ஞாபகார்த்த மாய் சிலையினுல் அவரையும் அவ் வெருதினையும் அப் பணச் செலவால் புதுவை முத்தியால் பேட்டைக் கடுத்த கரடி குப்பத்தின் மேற் புறத்தில் செய்து வைத்திருக்கின்ருர்கள், அது இன்றளவும் ஸ்ரீ சுவாமி களுடைய ஞாபகார்த்த மாய் விளங்கி வருகின்றது, அக் காலத்தில், அருணுசலத்தி லிருந்து விருத்தாசலம் வரையிலும் ஜில்லா கலெக்டர் அதி கார முடைய ஐடன் துரை யென்பவ ரொருவர். இச் சுவாமிகளது மஹிமைகளைக் கேள்வியுற்று, ஸ்ரீ சுவாமி களைத் தெரிசிக்க வருங் காலத்தில், சுவாமிகள் சமீபத்தி லிருந்த வரிப் புலியைப் பார்த்து, "அண்ணுமலை யாரே! ஓர் ஐரோப்பியன் வருகின்ருன் அவ னுன்னைக் கண்டு பய மடைவான், ஆகையால், சற்று விலகி யிரு மென்று" கட்டளை யிட, வரிப் புலியும் விலகியது. துரையும் வந்து ஸ்ரீ சுவாமிகளைத் தெரிசித்து, நெடு நா ளாய்த் தனக் குற்ற காச வியாதியின் வலியைச் சொல்லி, அது விலகும்படி யருள் புரிய வேண்டு மென்று பிரார்த்தித்தனர். சுவாமிகள் புன்னகை புரிந்து கருணையா லதை விலகும்படி திரு வுளத் திற் சங்கற்பித்துக் காறித் துப்பினர், வியாதி யுடனே நீங்கி விட்டது. அதைக் கண்டு துரையும், மிகுந்த வாச்சரியத் தையும், அன்பையும், பயத்தையு முடையவராய், ஸ்ரீ சுவா

மிகளை நோக்கி, "சுவாமின் யான் இப்போது வேண்டிய பூமிகளைப் புதிதாகச் சேர்ந்திருக்கிறேன் அதில் தேவரீருக்கு எவ்வளவு வேண்டினும் தான சாசனஞ் செய்து வைக்கிறேன், அது நீடூழி தேவரீருக்குச் சாசுவத மாகு" மென்று சொன்னார். அதைக் கேட்டு ஸ்ரீ சுவாமிகள் புன்னகை புரிந்து, மழை வறண்ட காலத்திலும், உமது பூமி விளையுமோ வென்று பரிகசித்து, இதோ இரண்டு குழந்தைகளுடன் ஒரு பெருங் குடும்பி யுளன். அவனுக் கெவ்வளவு பூமி தானஞ் செய்தாலுந் தகும். பரதேசி யான நமக்குத் தகுதிய தாகா தென்று, ஸ்ரீ உண்ணுமுலை சமேத வண்ணுமலையாரைத் தமது திருக் கரத்தாற் காட்டித், திருவாய் மலர்ந்தருளினார்கள். ஐடன்துரை மிகுந்த பய பக்தியோடு விடை பெற்றுப் போய், அடிக் கடி வந்து தெரிசித்துக் கொண்டு போவார், தா னெந்தக் காரியத்தைச் செய்ய வாரம்பித்தாலும் ஸ்ரீ சுவாமிகளை தியானித்து "தாத்தாவே நீ யிக் காரியத்திற்கு முன் னிரு, நீ யே செய்" என்று சொல்லி தொடங்குவதை வழக்க மாக வுடையவரா யிருந்தார். ஸ்ரீ அண்ணுமலையார், ரதோத்ஸவத்திலும் முதல் தாம் வடம் பிடிக்கையில் "தாத்தாவே நீ பிடி முன் னிரு" வென்று கூறுவர். அதைக் கண்ட ஜனங்கள், இவரிடத்துள்ள ஸ்ரீ சுவாமிகளின் அன்பின் பெருக்கைக்கண்டு ஆச்சரிய மடைவார்கள், பின் போர் காலத்தில், பெண்ணை நதிக்குத் தெற்கி லிருக்கும் போது, இரதோத்ஸவ கால மிகச் சமீபித்தபடியால் இரதத்தை நடத்திவைக்கும் பொருட்டு அருணையினை நோக்கி வந்து கொண் டிருந்தனர். அப்போது பெய்த மழையின் மிகுதியால், பெண்ணை நதியி னிரு கரையு நிறம்பிய நீர்ப் பிரவாஹத்தால் கடந்து வர முடியாதவ ராய்த் திகைத்து நின்று, நா மினித் தாமதித்

தால் அண்ணுமலையார் இரதோத்ஸவம் நடை பெரு
தென்று நினைத்து, தா மேறி வந்த குதிரையைப் பார்த்து
“ஏ குதிரையே தாத்தாவைப் பார்க்க வேண்டும் இரதத்
தையும் நடத்த வேண்டும் நீ தாத்தாவை நினைத்துக்
கொண்டு இந்த வாற்றைத் தாண்டுவாய்” என்று சொல்லி
அடித்தனர். உடனே குதிரை திடீ ரென்று ஜலத்தி
லிறங்கி ஒரு அபாயமு மில்லாமல் அக் கரைக்கு அநாயாச
மாய் விரைவாகக் கொண்டு வந்து சேர்த்தது. அதைக்
கண்டு இரு கரையும் இரங்க முடியா துட்கார்ந்திருந்த
ஜநங்கள் மிக்க வாச்சரிய மடைந்தார்கள்.

அப்போது திரு வருணை யீசாநியத்தி லிருந்த ஸ்ரீ
சுவாமிகள் கண் விழித்து தென் பக்க மாகத் திடீ ரென்று
கையை நீட்டி, இடது பக்கம் மெது வாகத் தாழ்த்தினர்
கள். அதனை யருகி லிருந்து பார்த்த, நாகை, இராம லிங்க
சுவாமிகள், ஸ்ரீ சுவாமிகளை நோக்கி சுவாமின் தியாநத்தி
லிருந்து, திடீ ரென்று கண் விழித்துச் கையை நீட்டி
மெது வாக இடது பக்க மாய்த் தாழ்த்திய காரணத்தை
வடியேங்கட்குத் தயையாற் றெரிவிக்க வேண்டு மென்று
பிரார்த்திக்க, வதற்கு ஸ்ரீ சுவாமிகள் “எவ னுற்றில்
விழுந்தாலும் அதற்கு நாம் உத்திரவாதி யாக வேண்டுமா”
மென்று திரு வாய் மலர்ந்தருளி மௌந மா யிருந்தனர்.
ஐடன் துணா சுக மாக வருணை வந்து சேர்ந்து, ஸ்ரீ சுவாமி
களைத் தெரிசித்து “தேவரீரது கிருபையா லபார ஜலத்
தைக் குதிரையுடன் ருண்டி வந்தே” னென்று சொல்லிப்
பரவச முற்றுர். பிறகு சுவாமிகளது உத்தரவினுல்
அண்ணுமலையார் இரதோத்ஸவத்தையும் வழக்கம் போல்
நடத்திவைத்தனர். இங்ஙனம், ஸ்ரீ சுவாமிகள் திரு விளையா
டற்களைக் கண்டு கேட்ட ஜநங்கள், ஸ்ரீ சுவாமிகளது சங்

சிதியை மிகுந்த வன்புடையவர்க ளாய், விட்டு நீங்கா திருந் தார்கள். அப் போது வரிப் புலிகள் மிகுதியும் வருவ தில்லை. பின் சில பக்குவிகள் மோக்ஷ சாதந விருப்பினர் களா யிருத்தலைக் கண்டு, அவர் பொருட்டு ஞாநக் கட் டளை யெனப் பெய ரிய ஓர் அரிய நூலினை யியற்றி யுண் மையை யுபதேசித்து வருங் காலத்தில், அவ் வடியவர்கள் வசிக்கும் பொருட்டு, அவ் வருணை வாசிகளால், ஸ்ரீ சுவா மிகள் விரும்பியபடி ஒரு பர்ண சாலை யமைக்கப்பட்டது. அக் காலத்தில், திரு வண்ணமலைக் கடுத்த மண்ட குளத் தூரிலே, கர்ணிகர் குலத்திலே, இருந்த சபாபதி பிள்ளை யென்பவ ரொருவர் விதிப்படி இல் லறத்தை நடத்தி வந்த னர். அப் புண்ணியத்தால் உலகப் பற் றற்று பரம் பொரு ளைக் காணும் பற்றுடையவ ராய்த் துறந்து, ஸ்ரீ சத்ருவைத் தேடிச் சென்று, திருக் கச்சிக்குப் போய், ஸ்ரீ காமாக்ஷி சமேத ஏகாம்பர நாதரைத் தரிசித்து, அன் றிரவு தனது மநோபீஷ்டத்தை ஸ்ரீ காமாக்ஷியம்மையின்பால் சொல் லிப் பிரார்த்தித்துக் கொண்டு, கம்பா நதி தீர்த்தக் கரையில், துயில் கொண்டனர். அவரது சொப்பநத்தில் உலக மாதா வான காமாக்ஷி யம்மை, ஒரு கன்னிகை யாக வி ள ங் கி அப்பா நீ வருந்த வேண்டாம், திரு வண்ணமலையின் ஈசா நிய பாகத்தில் வீற்றிருக்கும் சித்தரிடம் போய் உனது குறைவுபாட்டை நீக்கிக் கொள்ள வேண்டியது என்று திரு வாய் மலர்ந்தருளி மறைந்தனள். உடனே, திடீ ரென்று சபாபதி சுவாமிகள் விழித்து அம்பிகை யென்று தெரிந்து அன்று முதல் தேவி யுபாசனையையும், அதிகமாய்ச் செய்து கொண்டு, திரு வருணைக்கு வந்து, ஸ்ரீ சுவாமிகளைத் தரிசித்து வலம் வந்து துதித்து வணக்கத்தோடும், ஆண்டு சில காலந் தொண் டியற்றிக் கொண் டிருந்தனர், இவரது

பக்குவத்தைக் கண்டு, ஸ்ரீ சுவாமிகள் ஆங்மோபதேசஞ் செய்து, தியாநத்தி லிருக்கச் செய்தார்கள்,

அப்போது சுவாமி கிருபையாலும், அம்பிகை கிருபையாலும், சபாபதி சுவாமிகளுக்கு, சமஸ்கிருத பாஷையில், அதிக பண்டிதத் தன்மை யுண்டாயிற்று. சபாபதி சுவாமிகள், தனக்கு நிஷ்டை கூடாத காரணத்தை சுவாமிகளிடம் தெரிவிக்க, அதற்குச் சுவாமிகள், வித்யா தாநஞ் செய்தால்,பிரதிபந்த நீங்கி நிஷ்டை கூடுமென்று திருவாய் மலர்ந்தருள, உடனே சபாபதி சுவாமிகள் விடைபெற்றுக் கொண்டு போய், மண்ட குளத் தூரி லிருந்த சில வேதியச் சிறுவர்களின் விருப்பின்படிக்கு சமஸ்கிருத வித்தையைத் தாநஞ் செய்து, தடை நீங்கி நிஷ்டை கூடி அம்பிகையின் கிருபையால் கிணற்றில் வீழ்ந்து உயி ரிழந்த தனது சகாபாடிக்கு உயிர் கொடுத்தும், மேட்டுப் பாளையத்தில், சில சீடர்களுக்கு வேதாந்த பாடம் ஓதி வைக்கையில், நீரால் விளக் கெறித்தும், இன்னு மிவை முதலிய திரு விளையாடற்களைச் செய்து, ஆண்டுத் திருக்கோயில் கொண்டெழுந் தருளினர், அதனு லிப்போது அங்கு ஸ்ரீ தேசிகர் மகிமை யோங்கும்படிக்கு மடமும், ஆலயமுங், தடமு, மிடம் பெறக் கட்டப்பட்டு, நித்திய பூஜையாதி நடந்து வருகின்றன,

கோரக்க நாதர் குளக் கரையிலே, ஸ்ரீ அண்ணுமலையார் தரிசநங் கொடுத்த காலத்தில், தா மியற்றிய அண்ணுமலையார் தோத்திரப் பா மாலை, வெண்பா, அந்தாதி, கண்ணி முதலிய பிரபந்தங்களையும், வேதாந்த சாஸ்திரங்களையும்,

பல சிடர்களுக் குபதேசித்துக் கொண் டிருக்கையில்,தமது ஞாநாசாரியராகிய, சிக்கல், பொருள்வை மாநகர், ஸ்ரீ உகந்த லிங்க ஞாந தேசிகரின் விதேக கால மாரம்பித்த தன்மையைக், கோவிலூர் ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிகரவர்கள் அனுப்பிய சாதுக்களால உணர்ந்து, பலசீடர்களுடன் புறப்பட்டுச் சென்று, பொருள் வைத்த சேரியை யடைந்து, ஸ்ரீ உகந்த லிங்க ஞாந தேசிகரைத் தெரிசிக்கு முன்னே விதேக கைவல்லிய மடைந்தனர், அத் திரு மேனியை யங்குச் சமாதி வைக்க வொட்டாது, அவ் வூரார் தடை செய்ததைப் பார்த்து, ஸ்ரீ சுவாமிகள் அவர்க ளறியா வண்ணம் தமது மகிமையால், ஆண்டே சமாதி வைத்தனர். மறுநாள், அதை யுணர்ந்த அவ் வூரார் மீண்டுங் கலகஞ் செய்யக் கூட்ட மிட்டனர், அதைக் கண்டு, ஸ்ரீ சுவாமிகள் புத்திர பௌத்ர பாரம்பர்யத்தை கெடுதி யின்றி நீங்கள் விரும்பியவர்களானால், ஜிதேந்திரியரான துறவிகளுடன் விவாதஞ் செய்யாதிருக்க வேண்டு மென்று மிகப் பய முறுத்த, வதற்கவர்கள், இவ் வருணைச் சித்தரது சாப மிகப் பொல்லாதெனப் பயந்து விலகி விட்டனர் அச் சமாதிக்குச் செய்கடன் முடித்துச் சிடர்களுடன் ஸ்ரீ சுவாமிக ளருணைக்கு வந்து, முன் போல், சில காலம் ஆங்மோபதேசாதி திருவிளையாடற்களைச் செய்து கொண் டிருக்கும போது, தமது விதே ககால மாரம்பித்ததை யுணர்ந்து சில நாளுக்கு முன்பே, ஒரு ஓலையில் பரிபூரண மாகுங் காலத்தை வரைந்து, தமது ஆசநத்தின் கீழ் வைத்து. கலியுகம் 4930க்குச் சரியான சாலிவாஹன சகாப்தம் 1751க்கு, விரோதி வருஷம் மார்கழி மாதம் 26ம் தேதி குரு வாரம் மிருக சீர்ஷ நக்ஷத்திரமுங் கூடிய சுபதிநத்தில், ஸ்ரீ நடராஜப் பெருமான்

டிருக்கும் போது நிட்டை கூடிய எட்டா நா ளாகிய (கலி 4937) மன்மத ஞூ, ஆவணிமீ, உத்திர நக்ஷத்திர மாகிய சுப திநத்தில், சச்சிதாநந்த பரிபூர்ண வியோமா தீதப் பிரஹ்ம மாத்திர மாகிய விதேக கைவல்யத்தை யடைந்தது.

அப் போது, சுற்றிலு மிருந்த பரிபக்குவர்க ளாகிய பெரியோர்கள், மன மானவை, சற்றுப் போது ஆத்மாவி லசைவற்று நின்றனர்! சுகந்த பரிமள மாகிய காற்றுகள் வீசின. சந்தந மழைத் துளிகள் சுற்றிலும் நின்றவர்கள் சரீரங்களிற் றோன்றும்படி பெய்தன! பெரியோர்கள், தங் கள் மனம் அசைவற நின்றது முதலிய சில வேதுக்களால், சுவாமிகள் விதேக கைவல்யத்தை யடைந்த தென வறிந்து, பலர்க்குந் தெரிவித்துச் சுவாமிகளுக்கு அபிடேக வலங்கார நைவேதந மாகிய பூசைகள் செய்வித்துத், தரிசித்து விபூ திப் பிரசாதம் பெற்றுக் கொண்டு, முன் சுவாமிகளுக் காகக் கட்டப்பட்டிருந்த சமாதிக் கோவிலில் எழுந்தரு ளப் பண்ணி பே ராநந்த முற்று, மநதாற் றியாநித்து வாக்கால் வாழ்த்தினர்கள்.

திரு வாரூர் மடப் புரம்
தட்சிணா மூர்த்தி சுவாமிகள் சரிதம் முற்றுப் பெற்றது.

---

## 28. *மழ பாடி (மழு ஆடி) சுயம்பிரகாச சுவாமிகள் சரிதம்.*

மாஉடை உருவும் நரர்உடை உருவும்
மன்னிடும் இபமுக இறையைத்,
தேவுடைத் தேவர் அரதநம் ஆகச் செப்பிடும்
அறுமுக இறையை,

ஆவுடை வயிரத் தூணரை எந்தம்
அழகிய நாயகி பதத்தைக்,
காவுடை மழுவா டியிலமர் சுயம்பிர
காசதே சிகனைவாழ்த் துதுமே.
(நாம் எழுதி முன் ஒரு முறை 1916ல
அச்சிட்ட சரிதம்;)

தென் ஞடுகள் பலவற்றினுஞ் சிறப் புற்று விளங்கா நின்ற சோழ மண்டலத்தில், பொன்னி நதியின், வட கரையி லுள்ள துஞ், சமய குரவர்கள் நால்வருள், சுந்தர மூர்த்தி சுவாமிக ளிடத்தில், சிவ பெருமான் நம்மைத் தரிசிக்க மறந்தனையோ வென் று, யோக நித்திரையின்கண், ஆக்ஞாபிக்க, "அன்னே யுன்னை யல்லா லினி யாரைநி னைக்கேனே" என் றும், அப்பர் சுவாமிகள், திரு ஞாந சம்பந்த சுவாமிகளா லும், பாடல் பெற் றுள்ள து; மார்க்கண்டேயருக்கு, ஆநந்தத் தாண்டவ தரிசநந் தந்து, மழு ஆடப் பெற் றது மாகிய, திரு மழ பாடி (திரு மழு வாடி) யென்னுந் திவ்விய க்ஷேத்திரத்தின்கண், சற் றேறக் குறைய 120 வருஷத்திற்கு முன், வேளாளர் குல திலக ராயும், குரு லிங்க சங்கம பத்தியிற் சிறந்தவ ராயும், சுப்பராய பிள்ளை யென்பவரும், அவர்க்குத், தருமம், ஒழுக்கம், அறிவு, அன்பு. அடக்கம், சிவ பத்தி, அடியார் பத்தியிற் சிறந்தவருங், கற்புடையவரு மான ஆத்தம்மாள் என்கின்ற மனைவியாரு மிருந்தார்கள். அவர்கள், பூர்வஞ் செய்த தவப் பேற் ருலு, மிவ் வுலகின்கண் ணுள்ள சகல ஆந்மாக்களும், பவக் கடலி னின் று முய்யும் பொருட்டாலும், சத்திய ஞாநாநந்த பரிபூரணப் பிரஹ்மமே ஒரு வடி வங் கொண்டவோ ராண்மகவைப், பாற் கடல் சந்திரனைப் பெற்ருற்

போல, அந்த ஆத்தம்மாள்,நல்ல திதி,வார நக்ஷத்திர,யோக கரண மமைந்த சுபலக்கிநத்தில் பெற்ருர். வேளாண்மை யிற் சிறந்த பிதாவானவரும், தாயாரு மக் குழந்தையைப் பரிவோடும் போற்றி வந்தார்கள் அக் குழந்தையைப் பெற்றவர்கள், களிப்படையவுஞ், சுற்ற முதலிய மற்றவர் கள் வாராத வாழ்வு வாய்த்த தென்றும், சிவ ஞாநம் யாம் பெறவேண்டி யிவ்வாறு வந்ததோ வென்றும், சிவன் றிரு வரு ளிங்ஙனம் நம்மைத் தடுத் தாளக் குழந்தை வடி வாக வில் வில்லில் வந்ததோ வென்று அதிசயித்துத் துதித்தும்; ஆநந்தமா யிருந்தார்கள். பெற்ருேர்கள், அக் குழந்தைக்கு விதிப்படி சுப திநத்தில் கிருஷ்ண சாமி என்று நாம கரணம் சூட்டிஞர்கள். தாய் தந்தைய ரிருவருக்கும், இன்பம் விளைய, இவ் விளங் குழந்தை யாகிய பெருந் தகை யாரும், அன்பு, அறிவு, அடக்கம், ஆசாரம், சிரா ஸை, சத்தியம், தவம், வேதாகம சாஸ்திர ஆராய்ச்சி, சிவ பக்தி முதலியன வெல்லா முடன் வர, வளர்ந்தார். ஐந்து திரு வய தடைந்ததும், தாய், தந்தையர், அக் குழந்தைக்குக் கல்வி பயிலத் தக்க பருவம் வந்திருப்பதை யுணர்ந்து, நல்ல தோர் உபாத்தியாயரை வருவித்து, அவர்க்கு வேண டியவற்றை வெறுப்பக் கொடுத்து, ஓதுவதற்குப் பள் ளியில் அமைத்தார்கள். அக் குழந்தைக்கு வித்தை யேற, வயது மேறி, யேழு திரு வய தடைந்தது. சுவாமிகளின் தந்தையார், சுவாமிகளின் வரலாற்றை முற்றுங் கண்டு களிக்கப் பெருது, தேக வியோக மாய், சிவ பதம் பெற்ற னர். சுவாமிகளும், அன்னையா ரேவற்படி பிதாவுக்குச் செய்ய வேண்டிய நீர்க் கடன் முதலிய யாவும், நூன் முறை வழுவாது செய்து முடித்தார்கள். சுவாமிகளுந், தவக்

குறை முடிக்க வந்தவர்க ளாதலால், கண்டவ ரெல்லாரும் வியக்கும்படி ஆகம புராண சைவ சித்தாந்தங்களைக் குறை வற வோதி முத் தமிழில் சிறந்தவர்க ளாய் முற்று முணர்ந்தவர்களில் முதல்வ ராக விருந்தார்கள். சுவாமிகளும், அவ் விளம் பருவத்திற் றானே முற் பிறப்பின் றொடர்ச்சியால், சிவாலய தரிசநம் செய்தல், சிவ னடியார்களுக்கு, அந்நம் படைத்தல், முதலானவைகளில், அதிக பிரியங் கொண்டு விளங்கினார்கள். மேலும், அவ் விளம் பருவத்திற் றானே சிவாலயத்திற்குத் திநந் தோறும் தவறுமல் போவார்கள். போய் வருங் காலத்தில், சந்திரப் பிரகாச மில்லாத திநங்களில், தனிமை யாய்ப் போகப் பயந்து, ஒரு முதிர்ந்த சிவ பக்தரை யழைத்துப் போவது வழக்கம். இவ் வாறுகச் சுவாமி தரிசநஞ் செய்து வரும் காலத்தில், அச் சிவ பக்தரும், சுவாமிகளின் குணாதிசயங்களைக் கண்டு, அதி விரைவில் சகலத் தியாகத்தை யடையு மென்ப தாகத் தம் மநதிற் பட்டமை கண்டு, ஒரு யுக்தி செய்ய நிச்சயித்து, ஒரு திநம் சுவாமிகளின் பின்னால் சிவாலய தரிசிநத்துக்குப் போகையில்; சுவாமிகளை நோக்கி, நீங்கள் விவாகஞ் செய்து கொள்வதா யுறுதி மொழி கூறுவீர்களானால், யான் எப் பொழுதும் பின் தொடர்ந்து வருவேன், அன்றி, வாரே னென்று கூற, சுவாமிகளும், தவறுமற் சிவாலய தரிசநம் செய்யப் பே ராசை மிகுந் திருந்ததால், சுவாமி தரிசநத்துக்கு விக்கிநம் வராமல் இருக்கும்படி, விவாகஞ் செய்து கொள்ளுகிறேன் யென் றுறுதி மொழி கூறினார்கள். இங்ஙன மாக நிகழு நாளில், அதன் பின் சுவாமிகள், கிரஜ விவகாரம் நடக்கும் நிமித்தம் பள்ளிக் கூடம் வைத்துப் பிள்ளைகட் கெல்

லாம் கல்வி கற்பித்து அதன் வருமானத்தினைக் கொண்டு, காலக்ஷேபம் நடத்திக் கொண்டிருக்குங் கால், பஞ்ச லக்ஷணங்களிலும், தேர்ச்சி யுடையவர்க ளாய், சுவாமி களைப் பார்க்க வந்த வித்துவான்க ளெல்லாம், அபஜய மடைந்து போனார்கள். தாயார், சுவாமிகளுக்கு திரு வயது பதினாறு ஆகவும்,திரு மணம் நடப்பிக்க நிச்சயித்து உணர்த்த, சுவாமிகளும், அதற் கிணங்காதவர்களா யிருக் கக் கண்டு வருந்துகையில், இதைக் கேள்வி யுற்ற அச் சிவ பக்தரும் வந்து, முன் னடந்த மொழியை விண்ணப்பித்து, "சொற்கடவாது விளங்கும் நீங்கள் இதை மட்டும் கடக்கக் கூடுமோ" என்று கூற, சுவாமிகளும்,மௌனமா யிருந்தார் கள். உடனே நல்ல சுப தினத்தில் திரு மணம் புரிவித்து, சுவாமிகளும், மாப் பிள்ளைக் கோல மாக, மதுரைக்குச் சமீபத்தி லுள்ள கடம்பங் குளம் என்னும் கிராமத்தில், தம் மனைவியார் கிரகத்திற்குப் போ யிருக்கையில், தநத்திற் சிறந்தவரும்,வித்தையிற் பண்டிதரு மாகிய ஒரு பிராமணர் வந்து, சில அற்புதக் கேள்விகளைக் கேட்க, சுவாமிகளு மஞ்சாது விடை யளிப்ப, அப்பால், சுவாமிகளும், ஒரு செய்யுளின் தாற்பரியங் கேட்க, அவரும் சொல்ல முடியா மல், சுவாமிகளைத் தம் கிரகத்திற் கழைத்துச் சென்று, சில நாள் உபசரித்து, சுவாமிகளின் வித்வத் தன்மையைக் கண்டு வியப் புற்று, திரு வாலவா யுடையா ராகிய சொக்க நாதர் பேரிலும், அங்கயற்கண் ணம்மையார் பேரிலு மாக, நூதந மாய்ப் பாட வேண்டு மென்று கேட்க, சுவாமி களும் பாடிக் கொடுத்தார்கள். பிறகு சில நாள், அங்குத் தங்கி யிருந்து,மீண்டு மழ பாடி வந்து சில காலம் இல் லற தருமப்படி வழுவாமல், வந்த அதிதிகளுக்கு உண்டி முத

லாயின சமர்ப்பித்து வந்தார்கள். சில நாட் கழியவே, சுவாமிகளுக்குப் பிரஹ்ம ஞாநம் வர, சாதநங்கள் நான்கும் நா டோறும் விர்த்தி யாகிப் பரிபாக காலம் வரவும். தெக்ஷிண திசையி லிருந்து ஞாநாசாரியர் வந்து, சுவாமி களின் பரிபாகத்தையும், ஆகம புராணங்களி லிருந்த பேராசையையும் கண்டு, ஆத்ம ஞாந சாஸ்திரங்களை விசா ரிப்பதைவிட்டு வீணுகக் காலத்தைப் போக்கக் கூடா தென்று, தத்துவ நிச்சய முண்டாக ஞாந சாஸ்திர மொன் றைக் கொடுத்து, விசாரம் பண்ணச் சொல்லியும், சுவாமி களுக்கு, முன் அப்யாசித்த ஆகம புராணுதிகளின் வாசனை விடாமல், இருப்பதை யுணர்ந்து, புராணுதி வாசனை விட்டா லொழிய, கேவல நிலை தோன்ருதென்ப தாய்த் தெளிவித்து விட்டு, மீண்டும் தான் வந்த திசை நோக்கிச் சென்றனர். இப்பால் சுவாமிகளும், அபர வறிவை விட்டு, வேதாந்த விசாரஞ் செய்து வந்தும், ஆத்ம சொரூபம் வெளிப்படாமை கண்டு, வருந்தி ஸ்தலங்க டோறும், துதித் துப் பாடி வந்தார்கள். ஒரு நாள் சுவாமிகளுக்கு ஏதோ ஒரு சங்கற்பம் திரு வண்ணுமலை போக உண்டானதால், புறப்பட்டுச் சென்று பிராரப்தப்படி நடக்கு மெனப் பாத சாரியாய்ப் போகும் போது, அவ் வவ் வூரி லுள்ள ஜநங்கள் வந்து உபசரிக்கத் திருக் கோவி லூரில் பிக்ஷைக்குப் போயும், அங்கங் கிடைக்காமையினுல், முடிவில் தெருவின் கோடியில், உண்ணுமுலை அம்மனே ஒரு கிழவி யாக வந்து, உபசரிக்கப் பிக்ஷை செய்து கொண்டு, நடந்து போய்த், திரு வண்ணுமலையில் பல அறிஞர் சூழ வீற்றிருந்தார்கள். இப்பால் சுவாமிகளின் தாயார் சுவாமிகளைக் காணுமல்

வருத்தப்பட்டு, பின் றொடர்ந்து, பல உறவினரோடு, திரு வண்ணமலையை யடைந்தார். அங்குச் சுவாமிகளைத் தேடிக் கண்ட வளவில், சுவாமிகளை விடப் பிரிய மில்லாமல், அவ் விடத்திலேயே இருத்தி விடுவ தாகச் சிலர் சொன்ன வசனத்தைத் தாயார் கேள்வி யுற்று வருந்துகையில், சுவாமிகளும் தாயாரின் குணத்திற் காகக் கூட வருவ தாக வாக்குக் கொடுத்து, சில நாள் அங்குத் தங்கி யிருந்து புறப்பட்டு, புனல் வாசல் வந்து சேர்ந்தார்கள்.

சில காலம் தங்கி யிருந்து, மறுபடி சிதாகாச மென்னும் சிதம்பர க்ஷேத்திரத்திற்குப் போக அன்பு மிகுந்து. உடனே புறப்பட்டுப் போய், சிவ கங்கை யென்னும் திவ்விய தீர்த்தத்தில் படிந்து, விதிப்படி கோயில் வலம் வந்து, நடராஜப் பெருமான் சந்நிதி யடைந்து, நன்ருக வணங்கித் துதித்து நின்று, முன்னஞ் சிவ கங்கை என்கின்ற பாடலைப் பாடி யழுது, பிறவித் துன்பத்தைத் துடைக்க வல்லீரோ வென்று பிரார்த்தித்து நிற்க, இங்கு வந்தும், துன்ப முண்டோ வென்று அசரீரி வாக்கிய முண்டாகவே, பிரசாதம் கிடைத்தது. நடராஜப் பெருமான் உத்தரவே யெனப் பே ரானந்தத்தில் அழுந்தினவர்களாய், மிகக் களிப் புற்று, சில நாள் தங்கியிருந்து, நா டோறும் தரிசித்து வந்தார்கள், பிறகு மழ பாடி வந்து சாஸ்திர விசாரணை இல்லாமல், அசரீரி வாக்கியத்தை யெதிர்பார்த்திருந்தார்கள், இங்ஙன மாக இருக்கையில், உத்தர திசையிலிருந்து ஆத்ம ஞான சாஸ்திரங்களிற் சில அச்சிட்டு எடுத்துக் கொண்டு, ஓர் அறிஞர் திரு மழ பாடி வந்து சேர்ந்து, சுவாமிகளுக்கு வேதாந்த விசார மிருப்பதைக் கேள்வி யுற்று, சுவாமிகளின் கிரகத்துக்கு வந்து தங்கி அந்நம்

புசித்து, சுவாமிகளின் பக்குவத்தைக் கண்டு யார்க்கும் அடைவதற்கு அரிதாகிய பதத்தை யடைவீர்க ளென்று சொல்லி, தம்மிட மிருந்த சாஸ்திரங்களுள், முதலி லிருந்த பஞ்சதசப் பிரகரணத்தைக் கொடுக்க, சுவாமிகளும் நடராஜப் பெருமானே இவ் விதம் வந்து கொடுக்கிறார் என்பதாக வணங்கி வாங்கவும், அவரும் விடை பெற்றுக் கொண்டு போனார். சுவாமிகளும், சிரத்தையுடன் அதை யொருமுறை விசாரித்து. மறுமுறை பார்க்கையில் ஆதி மத்தியாந்த ரகித மாய் விளங்காநின்ற, தன் சொருபத்தை பிரத்தியக்ஷ மாய்க் கண்டார்கள். பிறகு ஸ்ரீமருத நாயக அய்யா என்பவர்களிடம் வாசிஷ்ட முதலிய சாஸ்திரங் களைப் பாடங் கேட்டு, உடனே தேகோகமா யிருந்த நாம் நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமாநந்தாத்துவித சொருப மாய் விளங்குகிறோமே யென்று பரவச மாய், யதேச்சை யாய், வீதி நதி மயாநம் முதலான இடங்க டோறும் கூத் தாடிக் களித் திருந்தார்கள். இதைக் கண்ட யாவரும் அதிசயங் கொண்டார்கள், ஒரு திநம் இவ் விருத் தாந்தங்களைக் கேள்வி யுற்ற, அடியார் பத்தி, சிவ பத்தி யிற் சிறந் துள்ள, சுவாமிகளின் சகோதரி யாகிய மங்களத் தம்மாள் வந்து, நமஸ்கரித்துச் சுவாமிகளைத் தா னிருக்கும் புனல் வாசல் என்னும் க்ஷேத்திரத்திற்கு அழைத்துக் கொண்டு போய் உபசரித்து வைத்திருக்கையில், சுவாமி களும், ஊர் புறம்பா யுள்ள ஏகாந்த ஸ்தாநத்தில் சமாதியி லிருந்து, உச்சிப் போதில் வந்து அந்நம் புசித்து வந்தார் கள். இப்படி யிருக்கையில், ஒரு நாள் எருக்கம் பாலைக் குடித்தால், மரண மாவார்க ளென்று ஜநங்கள் சொல் வதைப் பார்ப்போம் என்ப தாகப் பாலைக் கறந்து சில நாள் சாப்பிட்டு வந்தார்கள். அது ஆல கால விஷம் சிவ

பெருமானுக்கு அமிர்த மானுப் போல, அமிர்த மாயிற்று. சில துஷ்டர்கள் சுவாமிகளுடைய தொடையில் மருந்து வைத்தும், வேட்டு வைத்தும், கூடாத வார்த்தைகளைச் சொல்லியும், ஜலத்தில் அமிழ்த்தியும், வைத்தார்கள். அத ளுல், ஸ்வாமிகளுக்கு ஒரு பாதகமு முண்டாக வில்லை. துஷ்டர்கள் துக்கத்தினை அடைந்தார்கள். இதைக் கண்ட யாவரும் வியப் புற்றுர்கள். சுவாமிகளும், புனல் வாசலி லுள்ள பெருமான் பேரில் பாடும்படி சிலர் கேட்டுக் கொள்ள, பாடிக் கொடுத்து, அங்கு ஐந்து வருஷ கால மிருந்தார்கள்.

சில நாளில் மங்களத் தம்மாள் தேக வியோக மாய்ச் சிவ பத மடைந்தனர், உடனே சுவாமிகளும் மழபாடி வந்து பிரஹ்மாநந்தா நுபவத்தால் பிரபஞ்சத் தோற்ற மில் லாமல், உடுத் திருந்த கலைகளும், கௌபீநமும், நழுவத், திரு மேனி முழு வதும் குளிர்ந்து அந்நாகார மில்லாமல், ஆறு மாதம் வரையில் கொள்ளிட மணலில் சூரியோதய கால முதல் அஸ்த மான பரியந்தம் சூரியனையே பார்த் துக் கொண்டு அண்ணுந்து படுத்திருப்பார்கள், படுத் திருந்த அவ் விடம் குளிர்ந்து போக, வேறு இடத்தில் படுப்பார்கள். இராக் காலங்களில் நாணல் புதர்களில் இருப்பார்கள். பிறகு சுவாமிகள் ஐந்து வருஷம் மௌந மாய் ஊருக்குப் புறம்பா யுள்ள, அங்கா ளம்மன் கோவிலி லிருக்கும் போது, முன் வந்த குரு வானவர் வந்து சுவாமிகளின் விருத்தாந்தங்களைக் கேட்டு, அதிசயப்பட்டு சுயம்பிரகாசமே யென்று கூப் பிட்டு, மௌநம் விட்டு என்னுேடாவது சுவாநு பவத் தைத் தெரியப்படுத்தக் கூடாதா வென்று கேட்டுக்

கொள்ள, சுவாமிகளும், கிருபை கூர்ந்து வாக்குவசநிக்க வாராது, தாழ்ந்த சப்த மாய், பிரமைவாகம் என்று பிரஹ்மாநந்த விலாசமாகத் தன் சுவாநுபவத்தையும், சுயம்பிரகாச மென்கிற நாமம் குருவால் அழைக்கப்பட்டதையுங் காட்டி, கீர்த்தந மாகப் பாடினுர்கள். குருவும் இவ் வநுபவம் வரப்பெற்றிலோமே யென்று கூறி, சுவாமிகளின் பெருமை யாவராலும் அளவிடக் கூடா தென்று மந மகிழ்ந்து சென்றனர். அது முத லாகச் சுவாமிகளும் மௌநம் விட்டுச் சகச நிஷ்டையி லிருந்து அநேகம் கீர்த்தனைகளைப் பிரஹ்மாநந்த விலாச மாய்ப் பாடி விநோதமாயிருந்தார்கள். அக் காலத்தில் சுந்தர சுவாமிகள், திரு வையாறு தில்லை ஸ்தாந முதலிய ஸ்தலங்களி லுள்ள சிவாலயத் திருப் பணி யியற்றிக் கும்பாபிஷேகமுஞ் செய்யும் பொருட்டு, மழ பாடி வந்த காலத்தில், சுயம்பிரகாச சுவாமிகளைக் கண்டு தழுவி யிருவரு மாக சுகித் திருக்கையில், திரு மழ பாடி க்ஷேத்திரத்திற்கும் திருப் பணி செய்ய வேண்டு மென்றும், பொன்னி நதிக்குத் தென்பா லுள்ள கடு வெளி யென்ற ஸ்தலத்தில் சிவாலய மானது முன்னொரு காலத்தில் சோழ ராஜா, வழக்கப்படி சிவாலய தரிசநம் செய்ய வருகையில், ஆலயத்திற்குச் சமீபத்தில் ஒரு சித்தர் பிரபஞ்ச நாட்ட மில்லாமல் சமாதியி லிருப்பதைப் பார்த்து, அச் சித்தரைச் சமாதியினின்று வெளிப்படுத்தி, விடயாநந்தத்தில் செலுத்தி வைப்பவர்களுக்குப் பரிசு கொடுப்ப தாக வாக்கு அளிக்கவும், அதைக் கேள்வியுற்ற ஒரு தாசி அந்தப் பிரகாரம் செய்வ தாகச் சொல்லி மரத்தி லிருந்து விழுந்த சருகைப் புசித்துக் கண்மூடிச் சமாதியி லிருப்பதைக் கண்டு, சருகைப் போல, சிறு

உணவு செய்து நாடோறும் அவர் கரத்தில் போட்டு வர: அவரும் அதைப் புசித்து, விழித்துத் தாகத்திற்கு சலம் கேட்க,அதன் பின் தன் கிரகத்திற்கு அழைத்துக் கொண்டு போய் வைத் திருந்து, அந்த முத லான உணவுகளை யருந் தச் செய்து, விடய சுகத்தில் அழுந்தும்படி செய்ய, அவ ரும், அவள் ஏவல் கேட்டு, இங்ஙன மாக வாழு நாளில்; சோழ ராஜா முன் போல ஆலயத்திற்கு வருகையில், இந்தத் தாசி ஆலயத்தில் அநேகர் கூடி யிருக்கையில் நிருத்தஞ் செய்து காலி லுள்ள சலங்கையை நழுவ விட, அதைக் கண்ட சித்தரும் குனிந்து எடுத்துக் கட்டி விடவும், இதைப் பார்த்த இராஜா முதலானவர்கள் நகைக்க, அப்போது சித்தர்,

செல்லும் பொழுது செலுத்துவேன் சிந்தையை
வெல்லும் பொழுது விடுவேன் வெகுளியை
அல்லும் பகலு மறிவுடன் துஞ்சினுல்
கல்லும் பிளந்த கடுவெளி யாகுமே'' என்ற பாவைக்

கூற, சிவ லிங்க மானது பிளக்க, ராஜா முதலானவர்கள் பயந்து வேண்டிப் பிரார்த்தித்துக் கொள்ள, மீண்டும்,

''எட்டி ரண்டும றியாத வென்னை
எட்டி ரண்டும றிவித்தா னென்னந்தி
எட்டி ரண்டும றிவால றிந்தபின்
எட்டி ரண்டுமி லிங்கம தாமே'' என்று பாட, முன்

போல, சிவ லிங்கம் சேர்ந்தது; அது முத லாக ஆலயம் ஜீரணித்தும், குடிகளும் வருந்தியு மிருப்பதை யுணர்ந்து, அதற்குந் திருப்பணி செய்ய வேண்டு மென்றும், சுந்தர ஸ்வாமிகளிடம் சுயம்பிரகாச சுவாமிகளும் தெரிவிக்கக்,

கர்மேந்தநம் ஞாநாக்கிநிக்கு ஒரு பொருளாமா'' என்று சொல்லிச் சுவாமிகளும் புறப்பட்டுக் கடு வெளிக்குச் சென்று திரு நோக்கம் வைக்கவே, திருப் பணி செய்து கும்பாபிஷேகமும் நடந்தது; குடிகளும் க்ஷேமத்தை யடைந்தார்கள். ஆனதால், ஞாநிகளால் வந்த குறைவு ஞாநிகளால் தீருமே யொழிய வேறு வழியினுற் றீராது; சில காலத்திற்குப் பின் சுவாமிகளின் தாயார் தேக வியோக மாய்ச் சிவ பதம் பெற்றனர். அப்பால், சுவாமிகளும், மழ பாடி க்ஷேத்திரம் நீர் வள மாகப் பாட, நீர் வள முண்டாய்ச் சிறந் திருந்தது, விளாங் குடி, புனல் வாசல் முதலிய இடங்களில், நீர் வளம் முதலியன இல்லா திருந்த காலத்துச் சுவாமிகளை அழைத்துக் கொண்டு போய், அவ்வூர் ஜநங்கள் பத்துத் திநம் உபசரித்து வைத் திருந்தார்கள். அதன் பின் சுவாமிகள் அநுக்கிரகத்தால் நீர் வளம் உண்டாகச் சுக ஜீவிகளா யிருக்கின்றூர்கள். சுவாமிகளின் அநுக்கிரகத்தால், அநேக சீவர்கள் ஆதி வியாதியி னின்று நிவிர்த்த மானுர்கள். சுவாமிகளும், சேஷாத்திரி சிவனுர் அருளிச் செய்த, நாநா சீவ வாதக் கட்டளைக்குத் தாம் அடைந்த பேறு உலகம் அடைய, கிருபை கூர்ந்து பதார்த்தம் விரித்துச் செய்தும், அநேகம் பக்துவர்களுக்கு பவக் கடலி னின்று நீங்கும்படி அநுக்கிரகித்தும், வந்தார்கள். இங்ஙன மாகச் சில காலம் சீவன் முத்தியி லிருந்து, கலி 4997 க்குச் சரியான துன்முகி ஞு தை மீ, 12 தேதி, சனிக் கிழமை, சஷ்டி திதி, அஸ்த நக்ஷத்திரத்தில், நிருபாதிக வகண்ட பரிபூரண சச்சிதாநந்த சிவ ஸ்வரூப மான நிலையில் தேகத்தினை விட்டு விளங்கினுர் கள்.

சமாதி கவி.

ஆதிகலி யையாயி ரத்தாண்டின் மூன்றுகுறை வான
துன் முகியாண்டினி—லமரர்பக லெனுமுத்த ராயணமு
மேமந்த மானரிது மகரமதிசேர், தேதிபன் னிரண்டிலே
சப்தவா ரந்தனிற் றிதிஷஷ்டி யமரபக்ஷத்—திமிரமொன்
றின்றியொளி ரஸ்தநட் சத்திரஞ் சேரிரவு சாம நாலில்,
சோதிவா னவர்பரவு மழபாடி நகரில்வாழ் சொருபஞா
நியர்வாக்கிறைற்—றுதிபெருக வாழ்மடம் தனிற்றலைமை
பெருஞாந தோமிற்சு யம்பிர காசன், நீதிபெரு மடியவர்க்
கருள்செய்த கண்டைக நிசசச்சி தாநந்தமாய்-நித்தியசி ரா
லம்ப வத்துவித சுத்தசிவ நிலையிற்க லந்தனனரோ.

ஸ்வயம்பிரகாச சுவாமிகள் சரித முற்றுப் பெற்றது.

## தோத்திரங்கள்.

### காசி. (இன் னிசை).

ஆதார மற்றியம ஞக்கினைக்கி யஞ்சியுந்தன்
பாதார விந்தம் பரவிப் பரதவித்துக்
காதார் கடைவிழிதோய் கங்கைநதி சூழ்விசுவ
நாதாமி கத்தளர்ந்தேன் நாளுமென்னை யாளுவையே. (1)

### திரு வாரூர்.

சீரார்விண் ணிந்திர னுந் தேவரும்பூ மழைபொழியத்
தாராருஞ் சுந்தரற்காய்ச் சந்துசென்ற வெம்பெருமான்
காராரும் புன்னைமலர்க் காவிலுமை யோடிருக்கும்
ஆரூரா வென்னையுந்த னடியிணைக்கீ ழாக்குவையே. (2)

### இராமேசுவரம்.

உன்னை யறிந்துடல மோர்மூன்று மீந்துனக்குத்
தன்னை யறியச் சமனில்லை-யெம்பெருமான்
பொன்னேநீ நாஞயப் பொருந்துகின்ற நானீயாய்
நன்னயஞ்செய் வெவ்வுயிர்க்கு நாயகமே யிராமலிங்கம். (3)

திருப் பெருந்துறை.

வருந்தித் தவர்புரியும் வாதவூ ரெம்மடிக்காய்த்
திருந்தப் பரிகடத்துஞ் சேவகமாய் வந்தருளிப்
பொருந்தப் பசுபாசம் போக்கிச்சி வமாக்கிக்
குருந்தடியில் வீற்றிருக்குங் கோவே சிவக்கொழுந்தே. 4)

மதுரை.

அந்தரத்தின் முழுவதிர வணிபொழில்சூழ் கோடரங்கள்
கந்தரத்திற் கம்பித்தாற் கனிபடுக்குந் தென்கூடற்
செந்துவர்வாய் வல்லிபங்கா செல்வரவிற் கூட்டாமற்
சுந்தரே சாவென்னை நின் றுணையடிக்கி ழாக்குவையே; (5)

28. ஸ்வயம்பிரகாச சுவாமிகள் சரிதம் முற்றும்.

---

## 29. சுந்தர ஸ்வாமிகள் சரித்திரம்.

இந்துசேர் சடிலக் கயமுகன் தன்னை
இமையவர்க் கிறைவனும் குகனைச்,
சுந்தரேச் சுரனை உலகினை ஈன்ற
தோகைமீ நாக்ஷியை முகிழ்சூழ்,
கொந்தலர் பொழில்ஆர் ஞிமிறின ஒலிகள்
குழுகுழு கெனும்அரி மழும் வாழ்,
சுந்தர ஞாந தேசிகன் பதத்தைத்
தொழுபவர் கழல்பணிந் திடுவாம்.

புண்ணியாபுண்ணிய மென்னு மிரு வினையி னுெப்பா மினிய ஞாந சாதநத்தை யெய்தற் குரிய இடமாதலின்,

எவ் வுலகத்தில், தென் பாண்டித் திரு நாட்டில், தக்ஷிண கங்கை யெனப் பெயர் பெற் ேறாங்கிய தாமிர பர்ணி நதி யின் வளமிக்க தீரத்தி லுள்ளதும், புராணங்க ளான் மிகச் சிறப்பித்துச் கூறப் பெற்றது மான சாலி வாட புர மென் னுந் திருப் பெயர் வாய்ந்த திரு நெல் வேலி க்ஷேத்திரத் துக்கு வடபால், ஒரு யோசனை தூரத்தில், சிறப்பு மிக்க சித்திர கங்கா தீரத்தில், ஆநந்த வல்லி சமேத ராய் ஸ்ரீ கைலாச பதி திருக் கோயில் கொண் டருளி வீற் றிருக் கும், கங்கை கொண்டா னெனப் பெய ரிய திவ்விய சிவ க்ஷேத்திர மொன் றிருக்கின்றது.

அந்த க்ஷேத்திரத்தில், கலி, நா லாயிரத்துத் தொள்ளா யிர மாண்டிற்கு மேல், அந்தணர் குலத்தில் ஸ்ரீ அப்பய தீக்ஷிதரவர்கள் தௌஹித்ர பரம்பரையில், ஸ்ரீவத்ஸ கோத் திரத்தி லுற்பவித்தவ ராய், வருணாச்சிரம வொழுக்கங்களை, கற்பு வாய்ந்த காமாக்ஷி யம்மா ளென்னுந் தமது தரும பத்தினியாருடன் வழுவா தியற்றிவருபவ ராய், வேத வேதாங்கங்களை நன்கு கற்று ஐயந் திரி பறப் பொரு ளுணர்ந்து, தம்பாற் கற்க வருபவர்க்கு, நன் குணர்த்து பவ ராய், குரு லிங்க சங்கம பத்தியிற் சிறந்தவ ராய், பஸ்ம ருத்ராக்ஷாபரண பூஷித ராய், சிவ லிங்கார்ச்சந தற் பர ராய், கருணை யாதிய கல்யாண குணங்கள் பொருந்தியவ ராய், யஞ்ஞேசுரர் எனப் பெய ரிய ஓர் விப்பிர சிரேஷ்ட ரிருந்தார்.

அவருக்குச் சிவ பெருமானது திரு வருளால், முன் னைப் பிறவி பலவற்றில், முயன்று செய்த முழுத் தவத்தின் பலனே, ஓ ருரு வெடுத்து வந்தாற் போல, கலி நா லாயிரத்

துத் தொள் ளாயிரத்து முப் பத்து மூன்ரு மாண்டில், கர வருஷத்தில், கார்த்திகை மாசத்தில், இரு பதாந் திநத்தில், திர வாரத்தில், அமாவாசியில், அநுஷ நக்ஷத்திரத்தில், இடப லக்கிநத்தில், இடபாரூடரி னினிய வருளே, யோர் மகவா யவதரித்தது.

அந்த மாண் பார்ந்த மக வவதரித்த திவ்விய தினத்தில், அப் பதிக்கண் ணுள்ள மாந்த ரனைவரும் போந்து, அத் திரு மகவினைக் கண் களிப்ப நோக்கி, முன் கண் டறியாப் பே ரழகும், சோதி வடிவுங் கண்டு, இது சுந்தரமோ, வெனப் பே ரன்பாற் கூறிக் கூறித், தத் த மில்ல மேகுவார். ஏகு மவர் சிறிது நெறி செல்லுழித் தெவிட்டாத் திரு வழகைக் கண்ட கண்கண் மீளவுங் காண விச்சை கூரத் திரும்பி வருவர். தேவ ருலகைத் திண்டி நீண்ட செழுமை மிக்க காவில் வாழுங் கக நிறைகள் கானம் பாடிக் களித்தன. காம தேநுவை நிகர்க்கும் ஆன் கன்றுகள் துள்ளிக் குதித்துத் தருக்களி லுள்ள கனிகளை யுகுத்தன. சித்திர கங்கையின் றிரு நீத்தம், தனது ஜன்ம பூமியிலுள்ள சிவ மது கங்கை மானத் தெளிந்து விளங்கிற்று. மிகக் கூறி யென்? ஆண் டுள்ள பல் வகைப் பிராணிகளும், இகலொரீஇ நட்பு, இன்ப வாரியிற் றிளைத்தன.

சிவ பரஞ் சுடரா யிலங்கு மிம் மகவினைக் கண் குளிர நோக்கி, யஞ்ஞேசுரர், பரமாநந்த சிந்துவிற் படிந்து, சுக முற்ரு ராயினும், உலகியல் கருதிச் சித்திர கங்கா நதியிற் படிந்து, ஜாத கர்மாதிக் கிரியைகளை வேதங் கூறிய வாறு நடாத்தி, கோ தாநம், பூமி தாநம், சுவர்ண தாநம், முதலிய, அநேக தாநங்களும் செய்து, அரிய மானிடப் பிறவி பெற்றதனு லாம் பயன் பெற்ருே மெனப் பெரு

மகிழ் வெய்தி யிருந்தனர். பின்னர், அன்னப் பிராசநம், சௌளமுதலிய கிரியைகளேயும், மறை புகன்ற வண்ணம் வழுவாது நடாத்தி யன்போடும் வளர்த்து வந்தனர்.

அம் மகவு, அன்பர்களிடத்திற் சிவ பெருமான தருள் வளருவது போல, வளர்ந்து வந்தது. அக் குழவி யிளம் பருவத்திலேயே விளையாடும் விளையாட் டெல்லாம் வேத புராணங்களையும், சைவாகமங்களையும், ஸ்மிருதிகளையும், நல் லாசிரியர் மூலமா யுணர்ந்த அன்பர்க ளியற்றிவரும், சிவ பூஜையாதி யுத்தமச் செயல் போலவே யிருந்தன.

சில பொழுது, இம் மகவு, அந்தணச் சிறுருடன் மகா தேவ நாம பஜநம் பண்ணிக்கொண் டிருக்கும் போழ்து, பதுமாதநத்தில் வீற்றிருந்து, மெய், கண்டம், சிர மிவற் றைக் கோடாது வைத்து, சிவத் தியானம் செய்வர். இவ் வாறு, இவ் விப்பிர குல சிகாமணி, இளம் பருவத்தின் கண்ணேயே, அரிய திரு விளையாடல்களைச் செய்து கொண் டிருந்ததைக் கண்டு களித்து, ஆநந்த வாரிதியிற் படிந் திருந்த, அவரது மாதா பிதாக்கள், வீண வயத்த ராய்ப் பதி னெண் மதி நிறைந்த விக் குழவியை விட்டுப் பரகதி யடைந்தார்கள்.

பின் இச் சுந்தரரையும், இவரது மூத்த சகோதர ராகிய குப்பாணி என்ற, இராம சுப்பய்யரையும், மாதுலர் வெங்கட சுப்பய்யர், தம தூருக்கு அழைத்துக் கொண்டு வந்து வளர்த்து வந்தனர்.

பின்னர், சுந்தரர்க்கு ஐந் தாவ தாண்டில், வட மொழி தென் மொழி வல்லுந ராய வொரு வுபாத்தியாயரால்

அக்ஷராப்பியாசம் செய்வித்து, நூல்களைப் பயிற்றுவித்தனர். இச் சுந்தரர் பரசிவத்தின் றிருவருளா லவதரித்தவ ராதலின் கற்கத் தொடங்கிய நூல்களை யெல்லாம் முன் கற்றவர் போலவே, ஆசிரியர் வியப்ப எளிது விரைந்து கற்று வல்ல ராயினர். பின்னர், மாதுலராற் றூனே உபநயநஞ் செய் யப் பெற்று அவ் வூரி லிருந்த இராமகிருஷ்ண கனபாடி களிடத்தில் வேதாத்யயநமுஞ் செய்து வந்தனர். நாள டைவில் பரசிவப்ரஸாதத்தால் வேத பாஷ்யங்களையும், புரா ணம், ஸ்மிருதி, இதிகாசம், தர்க்கம், வியா கரணம், மீமாம்ஸங்களையும், தானே கற் றுணர்ந்து, அவ் வச் சாத் திரங்களில் வல்லுநரா யுள்ளா ரெல்லாம் வந்து வாதஞ் செய்து, தோல்வியுற்று வணங்கிப் புகழத், திசை யெலாம், தன் புகழ் பரவ இலங்கினர். பின்னர், வீரவ நல்லூ ரென் னுந் திவ்ய க்ஷேத்திரத்தில் வசித்த சுரோத்திரிய ராயும், பிரம நிஷ்டராயும், கருணை, முதிதை, மைத்திரி, உபரதி யாதிய குணங்கள் நிறைந்தவ ராயு முள்ள பிராமண சிரேஷ்ட ராகிய ஸ்ரீ சுந்தர சாஸ்திரிகளை யடைந்து, சர்வ வேதாந்த நிச்சாயக மாய் விளங்கும், சூத்ர பாஷ்யம், உப நிஷத் பாஷ் யம், கீதா பாஷ்யம், என்கிற பிரஸ்தாநத் திரயங்களையும் சம்பிரதாயப்படி சாந்தி பாடம் செய்து, பின்னர் பத்த மடை வந்து சூதசங்கிதை பாராயணமும் செய்து வந்த னர். தினந் தோறும் சுருதி கூறிய வாறு விடிய வைந்து நாழிகைக்கு முன் எழுந்து ஸ்நாநாதி நித்திய கருமங்களை நிறைவேற்றி, பஸ்ம, ருத்திராக்ஷ தாரி யாய் சிவதரிசநத்தை விதிப்படி யன்போடும் செய்வதும், நியம மான ஆகாரம் செய்வதும், சூத சங்கிதா படநம் செய்வதும். பின் சாயஞ் சந்தியில், ஸ்நா னானுஷ்டா னாதிகள் செய்வதும், ராத்திரியில் சிவ பஜநம் செய்வது மாகக் காலத்தை எட்டுணையும்

வீணுக்காமல் சிவ கைங்கர்யத்திலேயே கழித்து வருவர். இவ் வாறு, அரிய நல் லொழுக்கங்களை அநுஷ்டித்துவரும் அவ் வேதிய புங்கவரைக் கண்டு ஆச்சரிய முற்று, இவர் சிவனே யென நினைந்து, அப் பதியின்கண் ணுள்ளாரும், பிற வான்றோரும், சுந்தர சிவ னென அழைப்பா ராயினர். இவரது ஆண்டின் சிறுமையினையும், அரு மறை வழி யொழுகும் அரிய நற் குணத்தின் பெருமையினையும், மாது லர் கண்டு அதிசய முற்று, அடைச்சாணி யென்னும் கிரா மத்தில், வைதிக சாம்பவராய் சுந்தரசிவ னுடைய மரபிற் கியைந்தவ ராய் இராம சுப்பய்யர் என்னும் நாமத்தினரா யுள்ள வொரு விப்பிர சிரேஷ்ட ருடைய அருமைப் புதல்வி யாகிய ஜாநகி யம்மாளை வேத விதிப்படி மணம்புரிவித்த னர். சுந்தர சிவனுர் கற் போர்வடிவுகொண் டென்னக் கவினும் ஜானகி யம்மையுடன் ஸ்வாத்மாராமராய் இல்லற நடாத்திவரு நாளில், பஸ்மருத்ராக்ஷதாரிகளா யுள்ள வேதி யர்கள், பக்தர்க்ள், யோகியர்; ஞானியர் முதலான சாதுக் களைக் காணில் அன்போடும் கிரகத்துக்கு அழைத்து வந்து போஜநம் செய்வித்தும், அவ்வவருக்கியைந்த வுபசாரங்களை ச்செய்தும், அவர்களிடத்திற் சாத்திரார்த்தங்களை வினவியும் ஆநந்த முறுவர். பின்னர், இவரது மனைவியாரின் பிதா வாகிய இராம சுப்பய்யர், தமது பதிக் கழைத்துச் சென்று சின்னுள் தமது இல்லின்கண் வசிக்கு மாறு செய்து, இவ ரது பத்தியின் வன்மையைக் கண்டு வியப்புற்று, பாண லிங்கமும், நடராஜர், சிவகாமியம்மை முதலாய மூர்த்திகளை யும், பூஜை செய்து வருமாறு கொடுத்து, பூஜை முறைகளை வைதிக சம்பிரதாயப்படி யுபதேசித்துப், பூஜை புரிவித்துச் சுந்தரசிவனுரை அவர் பதிக் கனுப்பினர். பின்னர்ச் சுந்தரர் பத்தமடை வந்து, நிகமும் தமது திருக் கரத்தானே ஆயிரம்

கூவிளமும்,பிற பத்திர புஷ்பங்களும் எடுத்து திரி காலமும் மனைவியார் சமர்ப்பிக்கும் மகா நிவேத்யாதிகளை நிவேதித்து சோடசோபசாரமும் செய்து பூஜித்தும், சிவ நாம மிலக்கம் ஜபித்தும், ஆத்ம லிங்கத்துக்கு நிவேதித்தவைகளையே புசித்தும், இராத்திரியில் ஆலய தரிசநம், பஜனை முதலியவைகளைச் செய்தும், பால் பழ முதலியவற்றையே பருகியும், சிவ தியானுதிகளால் இரா முழுதும் கழித்தும், இவ்வாறு அரிய தவ மியற்றி வருவா ராயினர்.இவ் வாறே,அவரது மனைவியாரும் இருந்தனர். இன்னணம் வாழ் நாளில் சுந்தர சிவன் சிவ ப்ரஸாதத்தால் நான்கு சாதநமும் அடையப் பெற்றவராய், சற் குருவை யடைந்து ஞானுேபதேசம் பெற வேண்டு மென்னு மவா மிக்கவராய்,ஞாநாசிரியரைப் பலவிடங்களிலுந் தேடி, அடைச்சாணிப் பதியில் விசுவேச்சுர ரென்னும் ஒரு ஞானைசுவரிய சம்பன்ன ரிருக்கின்ருரெனக் கேள்வியுற்று, அவரது சந்நிதாநத்தை யடைந்து, அகண்ட பரசிவமே எளியேனை யாண்டருளும் பொருட்டு இத் திருக் கோலங் கொண்டு வீற்றிருக்கின்ற தென வுள்ளத்திற் குறித்து, அவரது பாத கமலங்களில் சாஷ்டாங்க மாக நமஸ்கரித்து எழுந்து, உள்ள முருகவும், கண்ணீர் பெருகவும், உரோமஞ் சிலிர்ப்பவும், நாத் தழுதழுப்பவும், நின்று தரிசித்து அடிகளே, அடியேனை ஞானுேபதேசம் செய்து திரு வடிக் காளாக்கி இரக்ஷித் தருள வேண்டு மென்று பிரார்த்தித்தனர்.

ஆசிரியரும்,மன மகிழ்ந்து,இவரது அதிதீவிர பக்குவத்தை நோக்கிக், கிருபா நோக்கம் செய்து, சமீபத்தில் அழைத்து, அஞ்சே லென் றருளி, ஞானுேபதேசம், அஸ்த மஸ்தக சையோக பூர்வம் செய்தருளினர். செய்தருளலும்,

சுந்தரர், உலக வாதனை யற்று உண்மை வடிவினை யுணர்ந்து, ஞாதிரு ஞான ஞேய ரகித கூடஸ்தாபின்ன வகண்டாகாரப் பிரம மாய் விளங்கினர், பின்னர், நெடுநேரஞ் சென்று, சமாதியினின்று விழித்து, பரமானந்தம் மனத்தி னிரம்பி யடங்காது ததும்புவது போல, ஆநந்தக் கண்ணீர் ஆறுய்ப் பெருக, ஐயனே, விண்ணவர்க்கு நண்ணரிய இந்நிலையினை யருளியதற்கு, எளியேன் செய்யும் கைம்மாறு முண்டேயோ? இந்நிலையின்கண்ணே என்ஞ் ஞான்றும் தவருது நிற்குமா றருள் புரிய வேண்டு மெனப் பிரார்த்திக்க, அவர் உலகிற் கிந் நிலையினை யுணர்த்தற்கே, இத் திரு மேனியைத் தரித்த நுமக் கொருவர் அநுக்கிரகம் பண்ண வேண்டுவது முண்டோ? சம்பிரதாயத்தை விளக்க வன்றோ, தாம் எம்மை யடைந்ததும், நாம் உமக் குபதேசித்தது மென் றருளினர்.

பின்னர், சின்னுள் ஆசிரியர் சந்நிதாநத்திலேயே யிருந்து, அவர் திருப்பணியை அன்போடும் செய்து, ஆசிரியரை உள்ளம் மகிழ்வித்துப், பின்னர், அவரது ஆணையின்படி பத்தமடை வந்து, தமது மனைவியாரையும், தம்மைப் போலவே முத்தி நெறியின் முயல்வித்துப், பல் லாயிரம் மாணவர்களைப் போலவே, இவரையும் ஒரு மாணவராக்கித் தாம் அடைந்த நிலையையே, அவருக்கு முபதேசித்து, முன் போலவே, அநுதினமும் சிவ பூஜை செய்தும், சமாதி செய்தும், சிவாலய தரிசநம், சிவ பஜனம், சிவ கதாப் பிரசங்கம் செய்தும், தம்மை யடைந்த மாணவர்களுக்கு, ஞானுேபதேசம் செய்துஞ் சாஸ்திரார்த்தங்களைச் சிரவணஞ் செய்வித்தும், இச் செய லெல்லாம் சிவ சொரூப மெனக் கண்டு, ஆனந்தாநுபூதிமாஞய் அழகாய்க் காலங் கழித்து வந்தனர்.

பின்னர், பக்தர்களுடன் தக்ஷிண கங்கா தீரத்தி லுள்ள க்ஷேத்திரங்களையும், தீர்த்தங்களையும், தரிசிக்கவும், தீர்த்த மாடவும், இச்சை கூர்ந்தவ ராய், பத்தர் குழாத்துடன் பிர யாணித்து, பொதிகாசலம், பாண தீர்த்தம், கல்யாண தீர்த் தம், பாப விநாசம் முத லாகத் திருச் செந்தூ ரீ ருயுள்ள தாமிர பர்ணி தீரத்தி னிரு மருங்கினு மிருக்கும் க்ஷேத்திரங் களை யெல்லாம் தரிசித்தும், தீர்த்தங்க ளாடியும், ஆங்காங்கு ஜநங்க ளெல்லாம் பரமாநந்தக் கட லாடச் சிவ பஜநம் சூதசம்ஹிதா படநப் பிரவசநம் முத லாய செய்தும், யாத் திரையைப் பூர்த்தி செய்து, மீளத் தமது வாசஸ்தாநத்தை யடைந்து, முன் போலவே வசித்து வந்தனர்.

அடைச் சாணி கிராமத்திற்கு ஞாநாசிரியரைத் தரிசித் தற்கும், நெல்லை யம்பதிக்கு, ஸ்ரீ காந்திமதி யம்மையின் றரிசநத்திற்கும், அடிக் கடி போய் வருவர்.

போய் வரும் நாளில், ஒரு நாள் ஞாநாசிரியரைத் தரி சித்து சம்பாஷணம் செய்துகொண்டிருக்கையில், ஸ்வாமி, நமது பரம்பரையைக் கிரம மாய்த் தெரிந்து கொள்ள விருப்ப மிருக்கிற தென விண்ணப்பிக்க, ஆசிரியரும், மன மகிழ்ந்து, ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி முதல், தமது குரு மூர்த்தி யாகிய, ஆன்பூர் இராம சந்திர சாஸ்திரிகள் பரியந்த மான பரம்பரையைக் கூறி, குரு புத்திர ராகிய சோம சுந்தரசாஸ் திரிகளும், தாமும், ஒருங்கு ஆசிரிய ரருள் பெற்றோ ரென வுங் கூறினர்.

பின்னர், தம தூர் வந்து, சின் னுள் வசித்துக் கொண் டிருக்கையில், உத்தர தேச யாத்திரை செய்ய வேண்டு

மென்னும் விருப்ப முண்டாய், பல உத்தம பத்தர்களுடன் பிரயாணித்து, மதுரை, ஜம்புகேசுரம், திரு வை யாறு, மாயூரம், புள்ளி ருக்கும், வேளூர், பிரம புரம், சுவேதாரண்யம், சிதம்பரம், விருத்தாசலம், காளத்தி, காசி முதலாய பல க்ஷேத்திரங்கள் தரிசித்தும், ஆங் காங் குள்ள, கங்கை, முதலாய தீர்த்தங்கள் ஆடியும், யாத்திரையை நிறைவேற்றித், தமது பதி யெய்தி யிருந்தனர்.

அக்காற் றமது ஞாநாசிரியர் தாம் கங்கா யாத்திரை செய்த காலத்திற், பரிபூரண மடைந்த தாகக் கேள்வியுற்று, ஆசிரியர் வசித்த தல மடைந்து, அவர்கள் சமாதியைத் தரிசித்து, விருத்தாந்தம் யாவுந் தெரிந்து, அவணின் றுன் பூர் அடைந்து, சோம சுந்தர சாஸ்திரிகளைத் தரிசித்து, சகஜ சமாதி பின் விஸ்தாரங்களை பரஸ்பரம் நன்கு சம்பாஷித்து ஆநந்த முற்றிருந்தனர்.

பின்னர், பத்த மடை யுற்று, சகஜ நிஷ்டராய், மௌந விரதி யாய், சில காலங் கழித்து, மௌந விரதத்தையு நீத்துச், சகஜநிஷ்டரா யிருக்கையில், தாமிரபர்ணி நதியின் வடகரையி லுள்ள கோடக நல் லூர் இராம சாமி சிவன் முதலிய சில வைதிகர்கள் வந்து தரிசித்து, சிவனே எம் மூரி லுள்ளாருய்யு மாறு சூதசம்ஹிதா படநம் நடத்த வேண்டு மென்று பிரார்த்திக்க, அது பஞ்சாக, சம்பிரதாய மாய் நடத்தல் உசிதமா மெனத் திரு வாய் மலர்ந்தருள, அவர்களும், அப்படியே யென்று, அவ் வாணையைச் சிரமேற் றுங்கி, தாமிர பர்ணி தீரத்தின் கிராமங்களி லுள்ள சாம்பவர்கள் பலரையும், வரவழைத்து, சுந்தர சிவ னவர்களைத் தமது கிராமத்திற் கழைத்துவந்து, தக்க வுபசாரங்கள் செய்து, சிவாலயத்தில்

ஓர் பக்கலில், மிக்கதோ ராசநத்தில் வீற்றிருக்கச் செய்து, சூத சம்ஹிதா படநத்தை விதிப்படி ஐந்து நாளில் அவர்களாற் பூர்த்தி செய்வித்து, ஐந்து நாளும், பகலும், இரவும் பிராமண போஜநமும், இராத்திரி சிவ பஜநமும, இடை இடையே கதாப்பிரசங்கமும், செய்யக் கேட்டு, எல்லாரும் நாம் இவ் வரிய மாநுடப் பிறவி பெற்றதனு லாய பயன் பெற்ருே மென ஆநந்தக் கடலின்கண் மூழ்கினர், அது முதல் அங் குள்ளார் சிவ னவர்கள் ஆக்ஞையின்படி அவ் வூர் சிவாலயத்தில், ஓர் பக்கலில் பஜனை மடம் நிர்மாணம் செய்து, திநமும், இரவில் சிவ பஜநம் செய்து வந்தார்கள்.

பின்னர், பத்தமடையில், யஜ்ஞேச்சுர னென்னும் ஐந்து வய துள்ள ஓர் விப்பிரச் சிறுவன், வாய்க்காலில் வீழ்ந் திறந்து போக, அக் குழந்தையின் மாதா பிதாக்கள் இரவெல்லாந் தேடி மறு பகலிற் கண்டு எடுத்து வீட்டிற்குக் கொண்டு வந்து, போட்டுத் துக்கித்துக் கொண்டிருக்கையில், சுந்தர சிவன் அங்கு எழுந்தருளி, அக் குழந்தையின் மெய்யினை ஸ்பரிசித்துப் பார்த்து, உயி ரின்மையை யுணர்ந்து, தமது திருத் தோண்மேற் போட்டுக் கொண்டு, ஒருவரும் அழற்க வென வாஜ்ஞாபித்து, ஓ ரரங்கிற் புக்கு மந்திர ஜல புரோக்ஷணஞ் செய்து, பஸ்மோத் தூள முஞ் செய்து, சிவபிரானைச் சில சுலோகங்களாற் பிரார்த்திக்க, குழந்தை துயினின் றெழுவது போல, சுக மாய் எழுந்திருக்க, அக் குழந்தையைக் கையிற் பிடித்துக் கொண்டு, வெளியில் வந்தனர். அது கண்டு, அங் குள்ள மாதுலர் முத லாய வெல்லாரும் மிக வாச் சரியமுற்றுப், பரசிவனே இவ ரெனச் சாஷ்டாங்க வந்தநம் செய்து, புகழ்ந்து கொண்டாடி ஆநந்தித்தனர்;

பின்னர், சுத்த மல்லி கிராம வாசி யாகிய, சூரிய நாரா யண சிவன் முதலாய பிராமணோத்தமர்கள் வந்து தங்கள் கிராமத்திற்கு எழுந்தருளிச் சூதசம்ஹிதா படநம் நடத்தி எங்களைத் தன்னிய ராக்குவிக்க வேண்டு மெனப் பிரார்த் திக்க, சிவ னவர்களும் அதற் கிசைய, உடன் சிவ னவர்களை யழைத்துச் சென்று, மற்றைக் கிராமத்தி லுள்ள சாம்ப வர்களையும், அழைத்து, தக்கதோ ரிடத்தில் சிவ னவர்களை மிக்க வுபசாரத்துடன் உயர்ந்த வாதநத்து வீற்றிருக்கு மாறு செய்து, சூரிய நாராயண சிவன், சூதசம்ஹிதா மூல சுலோகங்களை வாசிக்கவும், ஸ்ரீ சிவ னவர்கள், வாக்கியார்த்த ப்ரவசநம் செய்யவும், கடையம் சேஷாசல தீக்ஷிதர் முத லாய சாம்பவ வைதிக சிரேஷ்டர்கள் அரு கிருந்து சிர வணம் செய்யவும், மகா வைபவத்துடன் முதல் நாள் படநம் நடந் தேறியது. இரண்டாவது நாள் படனம் தொடங்கி நடந்துவரும் மத்தியில், சேஷாசல தீக்ஷிதர் அவர்களை அருத்தம் சொல்லு மாறு சமிக்கினை செய்து, வெளியே வந்து, எந்த நிமிஷத்தில் வைராக்ய முண்டா கிறதோ, அந்த நிமிஷத்தில் துறக்க வெனச் சுருதியிருப்ப தால், உடனே சிகா யஜ்ஞோபவீத விஜர்ஜந புரஸ்ஸர மாய், வித்வத் ஸந்யாஸத்தைத் திடீ ரெனச் செய்து, கொண்டு, சபையிற் பிரவேசித்து ஆதநத்திருந்து பட நத்தை நடத்தத் தொடங்கவும், சபையி லுள்ளா ரெல்லா ரும் கண்டு, மிக ஆச்சரிய முற்று, வணங்கித் தோத்திரித்து, எல்லாரும் சிரவணம் செய்து, ஆநந்த முற்றுர்கள். அன்று பிராமண போஜநம், முடிந்தவுடன் கோடக நல்லூர், இராமசிவன் நீலகண்டய்யர் முதலாய பஜனை பத்தர்களை, வரவழைத்துத் தாம் பூஜித்து வந்த பாண லிங்கத்தையும்,

ஏனைய மூர்த்திகளையும், அவரது கையிற் கொடுத்து, நீவிர் இம் மூர்த்திகளை பஜனை சபையில் வைத்துப் பூஜித்துப் பஜனை செய்தும், வாருங்களென்று ஆஜ்ஞை செய்தார்கள். அவர்களும், அப்படியே யென்றூர்கள், பின், மூன்று நாட் படநமும் செய்து, சமாப்தி செய்துவிட்டு, உடனே திரு நெல் வேலி வந்து, ஸ்ரீ ஆசார்யாளது மடத்திலிறங்கி வசித்து வந்தார்கள்.

அக் காலத்தில், சதாசிவ தருவாடியார் கிருஷ்ண தருவாடியார் மாவடிச் சிதம்பரம் பிள்ளை இவர்கள் வந்து தரிசித்துத், திரு வடிக் காளாகிச் சிவா நுபவச் செல்வ ராய் விளங்கினர்கள். இன்னும், பல பக்தர்களும், பண்டிதர்களும்,தினமும் வந்து தரிசித்தும்,அமுத மழையை வென்ற அத் திருவாக்கினைக் கேட்டும், ஆநந்த மடைந்து வந்தார்கள்.

பின்னர், ஆயிரத்து முப் பதா மாண்டு, இரௌத்திரி வருஷம், தை மாஸத்தில், சதாசிவ தருவாடியார் முத்துச் செல்லமையர் முதலிய அன்பர்கள் பிரார்த்தனையின்படி ஒரு நற்றிநத்தில், ஸ்ரீ ஆசார்யாள் மடத்திலேயே சூத சங்கிதா படந மாரம்பித்துப் பகலில், சுத்த மல்லி சூரிய நாராயண சிவன் மூல சுலோகங்களைப் படிக்கவும், சுவாமிக ளவர்கள், வாக்கியார்த்தப் பிர வசநம் செய்யவும், இரவில், சிவ பஜநமும், சேஷாசல தீக்ஷிதர் அவர்கள் கதாப் பிரசங்கமு மாக, ஐந்து நாளும் நடாத்தி சமாப்தி செய்தார்கள். அதன் பின், பற் பல கிராமங்களிலும் மிகவும் சிறப் பாய் இவ் வாறே படநம் நடாத்திப் பிராணிகளை யெல்லாம் பரசிவாநந்தப் பரவை யாடு மாறு கருணை புரிந்திருந்தனர்.

பின்னர்க் கோடக நல் லூரின்கண் தாமிரபர்ணி தீரத்தி லுள்ள சர வணங்களில் இடை விடாது சுவாமிகள் நிஷ்டை செய்து வந்தார்கள். அக் காலத்தில், கோடக நல் லூர் பிராமணோத்தமர்கள் தருப்பை மூடுகள் தோறும் வந்து, சுவாமீ சுவாமீ, யெனப் பே ரொளி செய்து அழைத்து, விழித்து வரின், திரு வமுது செய்வித்துச் செல்வர். செல்வ ரிவரே யன்றோ? இவ் வாறு,நடந்துவரு நாளி லோர் நாள் ஒருவரும் அன்னம் கொணரா திருக்க, "கொடுக்கச் சிவ னுண்டு" எனுந் திருவாக்கினலு முன் சுந்தரர்க்கு அந் நம் அளித்த அந்நங் காணுத பொன்னம்பலத்தரே ஓர் அந்தண ருருக் கொடு வந்து, சுவாமி எனப் பன்முறை வேதம் பகர்ந்த திரு வாக்கால் விளித்து. அது கேட்டுச் சமாதி தெளிந்து, வந்த சுந்தரர்க்கு, அந்ந மூட்டி இனிய வுரையாடிக் கொண்டிருக்கையில், உட்கார்ர்ந்து கொண்டிருந்த இடத்திற் ருனே திரு வுருவைச் சிவபிரான் கரந்தருள, சுவாமிகள் எளியேன் பொருட்டும் இத்துணை யருளோ ஐயனே! மெய்யனே! துய்யனே! ஞால மிந்திர னுன்முகன் வானவர் நிற்க, மற் றென்னை நயந்தினி தாண்டாய்க்கு நாயேன் நவிலும் முகமன் நன்றே எனச் சில ஸ்துதிகளை வட மொழியிற் செய்தருளி, முன் போலவே சமாதி செய்து வந்தார்கள். இவ் வாறு, அரிய செயலினரா யங்கு வசித்த காரணத்தால் கோடக நல் லூர் சுவாமிகள் என்று பெயர் வந்தது.

ஆயிரத்து முப் பத் தெட்டா மாண்டு, திரு நெல் வேலிக்கு எழுந்தருளி வந்து, பின் னு மோர் முறை வைகாசி மாதத்தில் படநம் நடாத்தி அங் குள்ள அன்பர்களை நோக்கி, ஸ்ரீ நடராஜ மூர்த்தி படத்தை வைத்துப் பஜநம்

பண்ணி வரும்படி யாஜ்ஞாபிக்க, அவ் வாறே, தருவாடி யார் முதலான பக்தர்கள் பஜனை மடம் ஒன்று, தற்காலத் துக்குத் திட்டம் செய்து, அதில் பஜனை செய்து வந்தார் கள். சுவாமிகள் அந்த மடத்திற் சில காலம் வசித்தார்கள். பின்னர், ஆடி மாசத்தில், கம்பா நதிக்கண் வசித்தார்கள். அவ் வாண் டைப்பசி மதிக்கண் ஸ்ரீ காந்திமதியம்மையின் மகோற்சவத்தில், ஏழாந் திரு விழாவில், அம்பிகையைத் தவழுங் குழந்தை யாகிய பாலாம்பிகை வடிவ மாகவும், எட்டாந் திரு விழாவில், கோ லடிக்கும் பெண் போன்ற திருக் கோல மாகவும், அலங்காரஞ் செய்ய வாஞ்ஞாபித்து, ஓர் பக்தரால் தங்கக் கோல்களும், சமர்ப்பிக்கச் செய்து, அந்த உற்சவம் எப்போதும் நடந்து வரும்படியாகவும், ஏற்பாடு செய்தார்கள். அவ் வாறே, இப் பொழுதும் நடந்து வருகிறது.

பின்னர், சுவாமிகள் கம்பா நதியில், வசிக்கும்போது, தீபாவளி யன்று இராமச்சந்திர மேத்தா முதல் பக்தர்கள் பலர் வந்து பே ரன்புடன் சுவாமிகளைத் தரிசித்து, ஆநந்த முற்றிருக்கையில், சுவாமிகள் போஜந விதியைத் திரு வாய் மலர்ந்தருளுஞ் சமயத்தில் வலது உள்ளங் கையில் அக்கிநி யிருக்கிற தென்றும், அதி லங்கம் படும்படி புஜித்தல் கூடா தென்றும், அங்ஙனம் செய்வது நீசர் போஜநத்துக்குச் சமாநம் என்றும், பிரசக்கித்தார்கள். அவ் வமையத்தில் மிக விருத்த ராய் அத் தலக் காமாக்ஷி தேவியைப் பூஜிக்கும் சுப்பிரமணிய பட்டர் அர்ச்சனைக்கு வேண்டிய பத்திர புஷ்பமும், அரிசி முதலாயவைகளும், தென்னங் கூந்தலி லக்கினியும், கொண்டு வந்தனர், மழையால், நெருப் பவிந்து போயிற்று. அவர், சுவாமிகள் சந்நிதியில் வந்து,

சுவாமி யான் கொணர்ந்த அக்கினி மழையா லவிந்தமையின், ஓடர்களைக் கொண்டு, சிறி தக்கினி அருள வேண்டு மென, சுவாமிகள் ஆவடையப்ப பிள்ளையை நோக்கி, இத்தடி வீரன் கோயிற் றெருச் சென்று, நெருப் பெடுத்து, வாரு மென் றுஞ்ஞாபிக்க,பக்கலி லிருந்த இராமச்சந்திரர் சுவாமி சற்று முன் அஃ துள்ளங்கையி லுள்ள தெனத் திருவாய் மலர்ந்தருளியதே, அதனை வர வழைக்கக் கூடாதா வென, வரவழைப்போம் உமது உத்தரீயத்தைக் கொடுப்பீரா வெனச் சுவாமிகள் வினவ, அவரு மியைந்து, அன் றுடுத்த கோடி வஸ்திரம் தர, வதனை சுவாமிகள் வலது உள்ளங் கையிற் றேய்க்கக், குபீ ரென்று, அக்கினி பற்றியது. மேத்தா விலை யுயர்ந்த வஸ்திர மாதலின், அக்கினியை அவிக்க முயல, சுவாமிகள் அக்கினி பகவானுக்குத் திருப்தியாய்க் கொடுத்து விடு மென. அவ் வாறே, வாளா விருந்தனர். பின்னர், ஆதிசைவசிகாமணி, அந் நெருப்பி னின் றும் அக்கினியை விருத்தி செய்து, எடுத்துக் கொண்டு போயி னர். அக் காலத்தில்,அங் குள்ள பத்தர்க ளெல்லாம் கண்டு ஆச்சரிய முற்று, அஷ்ட மூர்த்தி வடிவாய இவருக்கு, அவற் றுள், ஒரு மூர்த்தியை வெளிப்படுத்தல் வியப்போ வென வும், எவனது ஆணையால் அக்கினி வரம்பு கடவாது நடக் கின்றதோ, அவனை அவ் வீச னகிய இவர் வர வழைத்தல் வியப்போ வெனவும், கூறி சுவாமிகளைத் துதித்தார்கள். மேத்தாவும், சுவாமி நாயேன், அறியாமையாற் செய்த இவ் வபராதத்தினை பொறுத்தருள வேண்டு மெனப் பிரார்த் திக்க, சுவாமிகளும்,நகைத்து, இஃதோர் வேடிக்கை,நீவிர் அஞ்சற்க வென்று கிருபை கூர்ந்தருளப், பின் ஆண்டு வந்தா ரெல்லாரும் அடிகளது அடிகளில், அடியற்ற மரம் போல், வீழ்ந்து எழுந்து, சுவாமிகளின் கிருபாமிர்தத்தாற் குளிர்விக்கப்பட்ட ஆணையைப் பெற்றுத் தத்த மிருக்கை

புக் கிருந்தனர். பின்னர், சுவாமிகள், அத் துலா மதிக் கண்ணே, பிரதோஷ தரிசநத்திற்காக, வந்து ஸ்ரீ காந்திமதி யம்மை தரிசநஞ் செய்து பிரதக்ஷிணம் வருகையில், மிகுந்த தீபம் வைத்திருத்தலை நோக்கி, அங்கு நின்றவர்களை, இது கோவிலேற்பாடா, வழிபாடா வென்று வினவ, அவர்கள், இஃது இக் கோயில் மணியம் சுப்பிரமணிய பிள்ளை யாசக விருத்தியாற் செய்யும், வழிபா டென்று கூற, அக் கணமே அவர் வந்து, சுவாமிகளது திரு வடிகளில் மிக்க அன்போ டும் வணங்கிக் கரங்களைச் சிரமேற் கூப்பி நின்று, அடியே னுக்கு சுவாமிகள் தரிசநம் கிடைத்தது எத்துணைப் பிற வித் தவப் பயனோ வென்றுறுதிக்க, சுவாமிகள் நீவிர் இக் கைங்கரியத்தை வழுவா தியற்றிவாரும், உமக்கு சிவப் பிரசாத முண்டா மென் றுசீர்வதிக்க, அவர் சுவாமிகளை நோக்கி, தைச் சங்கராந்தியிற் றிரு வநந்தபுரத்தில் நடக்கும் இலக்ஷ தீபம் போல, இத் தலத்திலும் ஒரு முறை இயற்றித் தரிசிக்க விச்சையிருக்கின்றது. சுவாமிகள் கருணை செய்யி, னடக்கு மெனப் பிரார்த்திக்க, சுவாமிகள், அப்படியே யாகுக வென அருளி, நெல்லையப்பரையும், தரிசித்து பஜனை மடத்தில் வந்திருந்தார்கள். மறு நாள் சதா சிவ தருவாடி யாரவர்கள் சுவாமிகளை தரிசிக்க வந்த காலத்தில், லக்ஷ தீபம் நடத்த விருப்ப மிருப்பதை அப் பத்த சிரோமணி யிடம் சொல்ல, அவர்களும் அப்படியே யென, உடனே மகா லிங்க தீக்ஷிதர், ஐயா தீக்ஷிதர், இவர்களை வரு மாறு செய்து, லக்ஷ தீபம் நடத்து முறை யா தென வினவ, அவர்கள், சுவாமி சர்வஞ்ஞ சன் னிதாநத்தில் யாங்கள் தெரிவிக்கப்பாலரோ வெனக் கூறி, அதன், பின் அதன்

முறையாவது பதி னொரு தினம் மகா ருத்ராபிஷேகம், வேத பாராயணம், இதிகாச புராண படனம், பிராமண போஜனம், நாநா வித வாத்தியகோஷ வேத கோஷத்துடன் ஸ்ரீ பலி நாதரை எழுந்தருளுவித்தல், ஊஞ்சல் மண்டபக் கொலு தீப பூஜை, இவற்றை நடத்திப், பதினோராவது நா ளிரவில், இலக்க தீபம் ஏற்றி இடபவாகனாரூடராய் சுவாமி எழுந் தருளுதலையும், செய்தல், சம்பிரதாய மா மெனக் கேட்டு, இதற்குப் பதி னையாயிரம் ரூபா செலவு மதித்து, சதா சிவ தருவாடியார் அவர்கள், சுந்தர மூர்த்திக் கவி ராஜர் அவர்களையும், நெல்லையப்ப பிள்ளையனவர்களை யும், தளவாய் ராம சாமி முதலியார் அவர்களையும், காசுக் கடை வேலாயுதம் பிள்ளையவர்களையும், இன்னும் முக் கிய மான சிலரையும், அழைத்து, ஊஞ்ஜல் மண்டபத்தில் சபை கூடி, இலக்ஷ தீப விஷய மாய்ப் பேசி, இவ் வருஷம் (1039) தை மாசம், திங்கட் கிழமை, அமாவாசை, திரு வோண நக்ஷத்திரங் கூடிய அர்த்தோதய புண்ணிய காலம் வருகின்றமையால், அம் மகா புண்ணிய தினத்தில் இலக்ஷ தீபத்தை நடத்திவிட வேண்டு மென்று தீர்மானித்து, அதற் கான முயற்சி செய்து, பின்பு கல்லத்தி முடுக்குத் தெரு அருணாசலம் பிள்ளையவர்கள், புராணிகர் சண்முகம் பிள்ளை யவர்கள், வடக்கு அரண்மனை காந்திமதிநாத பிள்ளை யவர் கள், இவர்களைக் காரியஸ்தர்க ளாக நியமித்து, சுவாமிகள் தருவாடியார் முதலான பத்தர்களுடன் எட்டயபுரம் முதலாய பாளையப்பட்டு, களக் காடு, முதலாய பண்ணை, பிற பத்தர்களிடமும், சென்று நெல்லையினு மாய்ப் பொரு ளீட்டி ரூபா இருபதி னாயிரம் சேர்த்து, வெள்ளித் தீபம், தங்கத் தீபம், ஓர் தங்க ரத்தினப் பதக்கம், இவைகள் வாங்கி

யும், இன்னும் இலக்ஷ தீப அங்கங்கள் எல்லாம் பரிஷ்கார மாய்ச் செய்தும், சரியை கிரியை யோகம் ஞாநம் இவை களை அநுஷ்டித்துவரும் அடியவர் குழாம் அரகர வென் றநவரதம் கோஷிக்க, கற்பக தருவைப் போல், அங்கு வந்த பண்டிதர்கள், சாதாரண ஜநங்கள், யாருக்கும் அந்ந தாநம், வஸ்திர தாநம், சுவர்ண தாநம் முத லாய எல்லாத் தாநங்களையும, அவ் வருக் கியைந்த வாறு செய்து, சூத சங்கிதா படநத்துடன் லக்ஷ தீபத்தை மிகச் சிறப்பாய் நடத்தினார்கள். பின்னர், சில நாள், பஜனை மடத்தில் வந் திருக்கையில். கொ. சிதம்பரம் பிள்ளையவர்கள் வந்து, சுவாமிகள் திரு வடிக் கமலங்களில் சாஷ்டாங்க மாய் நமஸ்கரித்து அடியேனை யாட்கொண் டருள வேண்டு மெனப் பிரார்த்திக்க, சுவாமிகள் "அப்பா அறவாழி யந்த ணன் ருள்சேர்ந்தார்க் கல்லாற் பிறவாழிநீந்த லரி தெனப், பெரியர் கூறியதை யறிவா யன்றோ? அப் பரம சிவனது புகழை யநவரதமும்,நெஞ்ச நெக்குருக நாத் தழுத் தழுப்பப் பாடித் துதித்துப் பஜனை பண்ணிவருக." அவ் வாறு பஜனை பண்ணி வரும்போது, பத்தி முதிருங்கால் உள்ளம் காடின் யம் நீங்கித்,திரவ பாவத்தை யடையும், அடையவே,கட்டி யாகிய வெண்ணெய் பல அவயவங்க ளுடைய வடிவங்க ளாய்ச் செய்திருந்தது, அக்கினியின் சம்பந்தத்தை யடை யின், அது தன்பாற் செய்யப்பட்டிருந்த, அவ் வடிவங் களையும், பெயர்களையு, மிழந்து நெய்யா யிளகி நிற்பது போல, நாம ருபங்களை யிழந்து, அன்பா யுருகி, அன்பே சிவ மெனப் பெரிய ருரைத்த வண்ணம், சிவ மாய் விளங்கி நிற்கும். இவ் வாறு, பத்தியாற் பரம் பொரு ளெய்தப் பெறு வ தன்றி, ஏனைய சாதந மாத்திரத்தால் அடையப் பெறுவ தின் றென்பதை, "எண்ணிலாக் கல்வியா லு மிலங்கிய

கேள்வியாலும், திண்ணிதா மதியினாலுந் தெளிய வாராது திர, நண்ணிய ஞானி தானே நயந்தருள் செய்யின்ஞானக், கண்ணினாற் காண லாகும் கரத்திலா மலகம் போல'' எனவும், ''பத்தி செய்கர னருட் பெரும் பத்தருக் கன்றி, முத்தி யெய்து வதரிதென'' எனவும், ''யானே பொய் யென்னெஞ்சும் பொய் யென் னன்பும் பொய்யானால் வினையே னழுதாலுன்னைப் பெறலாமே'' யெனவும், ''பத்தி வலையிற் படுவோன் காண்க'' வெனவும், ''அப்பொழு தருகி னின்ற வருணந்தி தேவ னன்னே, வொப்பறு பத்தி யென்னு மஞ்சன மொன்றுண் டாகிற், செப்பரு ஞானனந்த வல்லம தேவ னென்னும், வைப்பினை யெளிது காண லாமென மகிழ்ந்து சொன்னான்'' எனவும், பெரியவர் கூறிய திரு வாக்குக்கள் நன் குணர்த்தும். ஞான சாஸ்திரங்களை நன்கு கற்றுப் பொரு ளுணரினும் ''தர்க்க மானனந் தாவொழிய தானு யுள்ள பேரொளியை, மிக்க கருத்தா வாகுதலும் விடய மாகு தலுமின்றிப், பொக்க மறவே றறக்கண்ட பொழுது புரைதீர் பொருளான, தக்க பிரம தத்துவத்தைக் கண்டா னாகுந் தானாக'' வென்னு நிலைவரி னன்றிப், பய னின்றா மாகலானும், அந் நிலையையே பகவற் பாதாளும் அவகதி யெனப் பாடியங்களிற் றிரு வாய் மலர்ந்திருத்தலினாலும், தற் போத மிழந்து சிவ மாய் நிற்றலையே, நன் னிலை யெனச் சைவசித்தாந்த தற்பரர் பலருங் கூறியிருத்தலினாலும், ''மூடன் அநுபூதி யின்றி, பிரமத்தினிடத்தில், நீரினுட் டோன்றும் பிரதிபிம்ப பழத்தைச் சுவைத்து ருசிப்பது போல, வீணா யாநந்திக்கிறான்'' எனப் பகவற் பாதாள் அநுபூதி யின்றிய கலைஞான முடையவனை நிந்தித் திருத்தலினானும், அவ் வநுபூதி முன் கூறிய வாறு, சித்தஞ் சிவ பெருமானைச் சிந்தித் துருகிச்

சுக வடி வொழிந்து சுக வடி வாய்ப் பிரகாசித்தலே யாதலி ஞலும், அச் சித்த முருகுதற்கு, இன்றியமையாக் காரண மான, சிவ பஜநம் செய்து வருக வென வருளலும், அத் திரு வாக் கா மமிர்தம், செவி யாகிய கால் வழிச் சென்று, நெஞ்ச மாகிய மடுவிற் பெருகி,நிறைந்து மறுகால் போவது போல, இரு கண்களின்றும் ஆநந்த பாஷ்ப மாய்ப் பொழி ய, "தேசிகன் றன்றிரு மேனிச் சிந்தை செய்யச், சிவனைச் சிந் தித்தாரு" மென்ற, சுருதியின்படி, சுவாமிகள் திரு மேனி யைச் சிந்தை செய்து; கிருதார்த்த ராய், தன்னிய ராய், சகல வாதனையு மற்றவ ராய், சச்சிதாநந்த சிந்து வாய்ப் பிரகாசித் தனர். பின்பு, சமாதியினின்று, மெழுந்து, சுவாமிகள் திரு வடிக் கமலங்களில் விழுந்து எழுந்து, கரங்களைச் சிரமேற் கூப்பி நின்று, தன்னையே தந்த தலைவள்ள லாகிய மகா சந்நி தாநத்திற்கு நாயினேன் யாது கைம்மாறு செய்ய வல்லேவ, னெனத் துதித்துப், பெரும்பாலும் மகா சந்நிதாந சரண கமலங்களை விடாது உடன் சஞ்சரித்தும், தனியிருக்குங் காலையில், சகஜ ஸ்திதியி லிருந்து கொண்டே, ஆணையின் படி சிவ பஜநம் செய்தும் வந்தனர்கள். பின்னர், வேனில் வந்தது, வரலும், சுவாமிகள் தாபத் திரயங்களை மாற்றும் தண் ணருட் சாகர மாயினும், உலகியல் பொத்து, அவ் வே டை யாற்றுர் போல," மருமலர்க் காக்கள் வா னளாய் வளர் ந்து பரிதியின்கிரணம் பானிலா வாக,இடை யிடை யிலங்க வின்னிசை ஞிமிறு, தொடை பெறப் பாடத் தோகைக ளாட, வெண் மணற் குன்றுகள் விமல னுறையும், தண் கயி லாய வரை யெனத் தயங்க, பொருனை நீத்தம் பொதிகையிற் பிறந்த, முத்தமும் பொன்னும் சுத்தமான் மதமும், அகிலு மா மரமும், துகிரொடு சுமந்து, துறை துறை தோறும் நிறைபட நிரப்பக், கண்டவ ருள்ளங் கரையி லாநந்தங்,

கொண்டதி சயிக்குங் குறுக்குத் துறையெனுந், திண்டிறற் செவ்வே டிருவு மாமலை, யடைந்து, கரையி லுவகை யோடும் வசித்து வந்தார்கள்.

அக் காலத்தில், திம்ம ராஜ புரம் சிவ சுவாமிகள் வந்து தரிசித்து அநுக்கிரகம் பெற்றுக், கூடவே வசித்தார்கள். பின், சில நாளைக் கெல்லாம் சேரை சௌந்தர பாண்டியம் பிள்ளை வந்து, சுவாமிகளது திரு வடிக் கமலங்களில் வீழ்ந் தெழுந்து, சுவாமி அடியேனை அடிகளது அடிக் கமலங் களில், அன்புடை யா ளுக்கி யாட்கொண் டருள வேண்டு மென்று பிரார்த்திக்க,மைந்த, "உரை செயிற் பரம ஞானம் ஒன் றுமே முத்திக்கேது.", அப் பரம ஞானம் "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு" எனக் கூறிய தாம், இப் பல வேறு நாம ரூபங்களும், உண்மை யாய்ப் பார்க்கின், சிவத்தை யன்றி வேருகாது. சிவமே எல்லா மெனத் தேர்தலே மெய்யறி வாம், எனத் திரு வாய் மலர்ந்த, விஸ்தார மாய உபதேச மொழிகளைக் கேட்டுக், கூறிய வழியே ஆராய்ந்து,எல்லாம் உண்மை யாய்ப் பார்க்கும் போது, சிவ மாய் விளங்கி நிற்றலை யுணர்ந்து, சித்தம் சிவ மாய்த் தேக வாதனை யற்று சமாதி யுற்றனர். பின் நெடு நேரஞ் சென்று, கண் விழித்து, ஆநந்த பாஷ்பம் ஆ றுய்ப் பெருக, சுவாமிகளது திரு வடிக் கமலங்களில் வீழ்ந் தெழுந்து, கரங்களைச் சிரமேற் குவித்து நின்று,சுவாமி எல்லாஞ் சிவ மாய் விளங்கு மாறு அருளிய கருணையைப் புகழ்ந்து கூற, வெளியன் வல்லனே வெனத் துதித்து, அடிகளது திரு வடிக்கண்ணே அகலாத அன்பு வாய்ந்தவ ராய்ச், சிவ போகச் செல்வரா யிலங்கினர். பின்னர்,தருவாடியார் முத லாய முக்கிய சிஷ்யர்கள்,சன்னி

தானத்தில் வணங்கி, சுவாமி உலகத்திற்கும், அடியேங் கட்கும், உபகாரமா மாறு ஸ்வாநுபூதியை எளிதில் நன் குணர்த்துவ தாய, ஒரு நூல் செய்தருள வேண்டு மெனப் பிரார்த்திக்க, அவ் வாறே, ஸ்வாநுபூதி ரஸாயந மென்னு மொரு அரிய நூலைச் செய்தருளினார்கள். அக் காலத்தில், ஒரு நா ளிரவு, குறுக்குத் துறையின்கண் ணுள்ள ஒரு மூங் கிற் பண்ணைக்குள் சமாதி செய்து கொண்டிருக்க, சுவாமி களைப் பல இடங்களிலும் தேடிக் காணு தலைந்து வருந் திக் கொண்டிருந்த சௌந்தரபாண்டியம்பிள்ளை, திரு வருள் சித்தத்திற் குறிக்கத் தெரிந்து, அம் மூங்கிற் பண்ணை யருகில் வந்து சாஷ்டாங்க மாய் வணங்கி நிற்க, சுவாமிகளும், வெளி வந்து தரிசநம் தந்து, உபதேச மொழிகளைத் திரு வாய் மலர்ந்து கொண்டு சம்பாஷித்திருக்கையில், சௌந்தர பாண்டியம் பிள்ளை, சுவாமி! சந்நிதாந தரிசந மாத்திரத்தால் தன்னிய னுனேன், தரிசநம் செய்வதற்கு முன் புதுக் கோட் டையில் வசிக்கும் ஒட்டுத் திண்ணைப் பரதேசிகள் அவர் களைத் தரிசிக்க வேண்டு மென்னும் இச்சை மிக விருந்த தென விண்ணப்பிக்க, இன்னும் தெரிசிக்கலா மென சுவாமி கள் திருவாய் மலரச், சௌந்தர பாண்டியரும், விடை பெற்று வீட்டிற்குச் சென்றனர். அன் றிரவிலேயே, சுவா மிகள் புதுக் கோட்டைக்குப் பிரயாணித்து விட்டார்கள். பாண்டியரும், மறு நாள் சுவாமிகளைத் தரிசிக்க வந்து, பல இடங்களிலும் தேடிக் காணுமையால், தாய் விட்டுப் போன வொரு தனிக் குழவி யெனத், தளர்வுற்று, பின்னர், தருவாடி யா ரவர்களிடம விசாரித்து, புதுக் கோட்டை சீமை க்கு எழுந்தருளியிருத்தலைக் கேட்டுத், தாமும், அந் நகர் நோக்கிப் பிரயாணித்தனர். புதுக்கோட்டையை யடைந்து, சாந்தநாதர் திரு வாலயத்தில், அந்த மூர்த்தியின் சர மூர்த்தி

யாகிய ஸ்ரீ சுவாமிகளை தரிசித்து, சாயை போல், சுவாமி களைப் பிரியாமல் வசித்து வந்தனர். அங்கு சுவாமிகள் விஜயமா யிருப்பது தெரிந்து, அப் பதியின்கண் வஸிக்கும், பத்த சிகாமணி யாகிய, ராமசாஸ்திரிகள், ஸ்ரீ சந்நிதானத்தை யடைந்து, அநுக்கிரகம் பெற்று, சொருபாநுபூதிமா னுய் திரு வுளக் குறிப் பறிந்து நடக்கும் உத்தம ஸத் சிஷ்ய ராய் விளங்கினர். அவரது கிரகத்தின்கண் ணுள்ள எல்லா ஜநங்களும், அப்படியே சந்நிதாநத்தின் பரிபூரண கிருபை க்குப் பாத்தியப்பட்டவர்க ளாய் விளங்கினுர்கள். பின், சுப்பராய சிவன், இராமு பாகவதர், இராம சாமி சாஸ்திரி கள், அப்பு நாயக்கர் எல்லாருங் கூடி மகாசந்நிதாநம் திரு வாய் மலர்ந்தருளும் இனிய சொற்களைக் கேட்க, மிகவும் காதல் கொண்டு, மகா சந்நிதாநத்தின் முக மாய் வேதாந்த் தப் பிரதிபாதக மாகிய சூதசம்மிதை என்னும் புரா ணத்தை ஐந்து திநத்தில் சிரவணம் செய்ய உபக்கிரமித் தார்கள். மகா சந்நிதாநமும், தென் னுடு, வட நாடுகளி லுள்ள பிரஹ்ம நிஷ்டர்களால் சூழப்பட்ட வித்வத் சபை யில், அன்பர்களா லிடப்பட்ட பீடத்தில் வீராசநத்தி லிருந்து கொண்டு, கீழ் திசைச் சூரியனுக்குத் தரிசநம் கொடுக்க, மேற் றிசையி லுதித்த தின மணியாய் விளங்கி, அங் குள்ள பக்தர்களுக்கு மூலாஞ்ஞாந மாகிய இருள் நிவிர்த்தி யடைய, சூதஸம்மிதாப் பிரவசந மொழிகளாகிற ஆயிரங் கிரணங்களாற் பிரகாசித்து, இனிய சொற்களால் அவர்க ளுள்ளங் குளிரும்படி செய்து, மோக்ஷம் அளிக்கப் பட்டது,

அப்போது, அங்குச் சிரவணம் செய்யும் சில விப்பிரர் கள், ஸ்திரி சூத்திரர்களுக்கு ஞாநம் கிடையா தென்று

சுருதியிற் சொல்லப்பட்டிருக்க, இவ் விடத்தில் ஈசுரப்ரசா தத்தால் சகலருக்கும் கிடைக்கும் என்றதெப்படி என வினவ, இச் சந்தேகத்தை யிறைவனே யிங்கு நிவிர்த்திப்ப னென, அக் கணத்தில் இராம சுவாமி சாஸ்திரிகள் 5 வய துள்ள சிவகாமி என்ற பேருடைய தமது குழந்தையுடன் மகா சந்நிதாநத்தை பிக்ஷைக் கழைக்க வந்தார்கள். அப் போது மகா சந்நிதாநம், அந்தக் குழந்தையை வாம ஹஸ் தத்தாற் பிடித்துக் கொண்டு, உனக்கு என்ன வேண்டு மென்று கேட்க, ஞாநாநந்தத்தில் மூழ்க வேண்டு மெனப் பிரார்த்திக்க, மகா சந்நிதாநம், அவ் வாறே ஆகுக என்று மற்றோர் கையினால், விபூதியைக் குழந்தையின் நெற்றியில் இட்டு, சிந் முத்திரை செய்வித்து, உபதேசித்தருளி வீட்டி ற் கனுப்ப, வீட்டில் வந்ததும், அக் குழந்தை அவ் வுபதேச மொழிகளைச் சிந்தித்து சமாதி யுற்றது. இரண்டு ஜாம பரி யந்தம், பகிர்முகத்துக்கு வர வில்லை; இதை யெல்லோரும் தரிசித்து, ஆச்சரியக் கூச்ச லுடன் மநதி லுள்ள வழுக்கு நீங்கி, யாநந்த பரவச ராஞர்கள். அப்பால், மாத்தியாந்நிக காலம் வந்துவிட்டது. எல்லாரும் பூஜாநுஷ்டாநத்திற் குச் சென்றார்கள். போஜநத்திற்குக் காலம் தவறியதால் குழந்தை மூர்ச்சையாகிவிட்ட தென்றெண்ணி யசைத் தெழுப்பினார்கள். அக் காலத்து, அவ் விடம் வந்திருந்த வெங்கு சாஸ்திரிகள், குச்சியில் துணியைச் சுற்றி மூக்கில் விட்டார். கொஞ்சம் கண்ணைத் திறந்து, விழிக்க மந மில்லை என்று பூர்வம் போல் கண்ணை மூடிக் கொண்டது. பிறகு மகா சந்நிதாநம் விஜய மாகி சீதள ஹஸ்தத்தாற் றடவி யாகாரம் கொடுத்துப் பகிர் முகம் செய்தார்கள். அந்தக் குழந்தையின் பிதா, சுவாமி சமாதி போதும் தங்கள்

கருணை காப்பாற்று மென்று கேட்டுக் கொண்டார், அந்தக் கிருபையால், இப்பொழுதும், திருச் சிராப் பள்ளிப் புன்னை வாசல் என்ற கிராமத்தில் திவ்விய சரண ஸ்மிருதி யோடு சுகமா யிருக்கிருள்.

மறு தினத்தில், இராமஸ்வாமி சாஸ்திரிகள் வண்டிக்கா ரன் அரங்கக் கோன், பத்தியின் மேம்பாட்டால், மஹா சந்நி தானத்திய திவ்விய அநுக்கிரகக்திற்குப் பாத்திர ஞய் சுக ஸம்ஹிதா படன காலத்தில், பிரவசநம் பண்ணப்பட்ட மஹா வாக்கியார்த்தங்களைச் சிந்தித்து, ஆநந்த நர்த்தநம் செய்யத் தொடங்கினன். இராம ஸ்வாமி சாஸ்திரிகள், யாது குதிக்கின்ருயென, யான் பிரஹ்ம ஸ்வரூபம் என்ற தாதிய வாக்கியங்களால் பிரமாநுபூதியைக் கரதலாமலக மெனப் பிரசங்கித்தனன். அப்பொழுது முனைச் சங்கித் தவர்கள் எல்லாம், ஐய மகன்று மகா சந்நிதானத்தின் அருள் வலி எம்மனேரால் அளக்கற்பாற்ருே வெனப் புகழ்ந்து, திரு வடிக் கமலங்களில், அடியற்ற மர மென்ன வீழ்ந்து வணங்கி ஆணை பெற்று, தத்த மில்லிற்கேகினர். இவ் வாறு, சுக ஸம்ஹிதா படநம் ஐந்து நாளும் முடிந் தது.

அக் காலத்து, அரிமளம், சிவ ராமன் செட்டியாரும், புதுவயல், அழகப்பன் செட்டியாரும், மகா சந்நிதாந மகிமை யைக் கேள்வியுற்று, இருவரும் புதுக்கோட்டைக்கு வந்து, மகா சந்நிதாநத்தின் பாத கமலங்களில் நமஸ்கரித்துத், தரி சித்து, அநுக்கிரகம் பெற்றுப் பணிவிடை யியற்றிக் கொண்டிருந்தார்கள். அப் போது தஞ்சையி லிருந்து ஒரு வியாபாரி நடராஜர் பட மொன்றை மகா சந்நிதாநத்தி னிடத்தில் கொணர்ந்து காட்ட, மகாசந்நிதாநமும் அதைப்

பார்த்து மகிழ்ந்து, பூஜைக்கு யோக்கியமா யிருக்கிறது என் றுன்னி, இதன் கிரையம் என்ன வென்று கேட்க, அங்கிருந்த சிவ ராமன் செட்டியார், வர்த்தகனிடத்தில் அதனை வாங்கி, மகா சந்நிதாநத்தில் சமர்ப்பித்தார். மகா சந்நிதாநமும், இது திரு நெல் வேலி பஜனை மடத்திற்காகு மென்று திரு வுளத்திற் கருதி, சில நாட்கழித்து. மாணுக்கருடனும், படத்துடனும், திரு நெல் வேலி வந்து சேர்ந்து, பஜனை மடத்தில் அப் படத்தை எழுந்தருளச் செய்து, பஜனை சிதம்பரம் பிள்ளையவர்களை நோக்கி, பூஜை செய்து வரும்படி ஆக்ஞாபித்து சில நா ளங் கிருந்தார்கள்.

பின்னர், மகா சந்நிதாநத்தின் அபாரக் கருணையின் மகிமையைக் கேள்வியுற்றுப் பல திசைகளினின்றும் பக்தர் குழாங்கள் வந்து நெருங்கின. அக் குழாங்களுடன் மகா சந்நிதாநம், சிவ க்ஷேத்திரங்களை தரிசித்துக் கொண்டு வருகையில், புதுக் கோட்டையி லிருக்குங் காலத்து சேஷப்பா என்ற ஒரு பிராமணர், மகா சந்நிதாநத்தை யடைந்து, நீர் செய்து வரும் மார்க்கம் அனைத்தும் ஜாலம் ஜநங்கள் எல்லாம் உமது பிரமத்தில் அகப்பட்டுக் கெடும்படி, சக்தி பாதம் என்னும், வியாஜத்தால் துள்ளி விழுகிறீர்; இதை நிறுத்த வேண்டியது, பிரமாண மென்றுவது நிரூபிக்க வேண்டியது, என்று சொன்னார். அது சமயம் மகா சந்நிதாநம் அவ்யாஜ கருணையால், அந்த சேஷப்பாவை கதியடையும்படி கடாக்ஷ, தீக்ஷை செய்ய, அவர் சரீரம் அந்த வீட்டிற் போட் டிருந்த தூதுவளம் பந்தலின் மேல் சக்தி பாதத்தால் துள்ளி விழுந்து விட்டது. அரை முகூர்த்தம் எழுந்திருக்க வில்லை. அவ் விட மிருப்பவர்கள் ஆச்சரிய மடைந்தனர். பின் அவர், சக்தி பாதம் தெளிந்து,

வந்து வணங்கி, மகா சந்நிதான சரண கமலத்தைத் தன் சிரசில் தாங்கி. இரு கண்களிலும் ஆநந்த பாஷ்பம் பெருகத் தேக முழுவது முரோமஞ் சிலிர்ப்ப, மநதி லுள்ள மல வி க்ஷேப மழிந்து சுத்த ஸத்வம் வர உருகித் தழு தழுத்த வாக் குடன், சிவ பெருமானை அன் புள்ள பக்தியுடன் தோத் திரங்கள் செய்து, முன்னோர்க ளெல்லாம் கதியடைந்தார் கள். கல்லினும் வலிமை யான மந துடைய மகா பாபி யாகிய நான், கடுமை யாகிய நிந்தனைகளைச் செய்து, மகா சந்நிதாநத்திய பெருங் கருணை வெள்ளத்தில் மூழ்கி, துக் கம் நீங்கி, சுகக் கட லாடினேன். என் போன்ற கன் மனத்த வரும் கதி யடையத் திரு மேனி கொண்ட பழம் பொருளே, என்று தோத்திரங்கள் செய்தார். அப்படியே, அங்குள்ள அடியார்களும், ஆச்சரியங் கொண்டு, தோத்திர மலர்கள் சொரிந்தார்கள். அதன் பிறகு, மகா சந்நிதாநம் அங் குள்ள பக்தர்களின் பிரார்த்தனையின் படி சூத ஸம்ஹிதாபட நம் நடத்தி, தம்மைவிட்டு, நீங்காத அன்பர்களுடன் ஸ்ரீ சிதம்பரக்ஷேத்திரத்தை யடைந்து, தரிசித்து சிவகாமியம்பா ளுக்கு, முத்தக்காப் பட்டி, ஜமீந்தாரிணியா ருடைய திரவிய வுபகாரத்தால், திவ்ய ரத மொன்று, செய்து சமர்ப்பிவித்தார் கள். அங் கிருந்து மகா சந்நிதாநம் ஓர் காலத்தில் அன்பர் களுடன் திரு வண்ணமலை க்ஷேத்திரத்தை யடைந்து தரி சித்து, திரு மலையை வலம் வருகையில், ஈசாந திசைக்கு வருங்கால், தம்மைச் சூழ்ந்துவரும் அடியார்களை நோக்கி, இப் பர்வதத்தை உற்று நோக்கினீரோ வென, அன்பர்கள் நோக்குங்கால், அத் திரு மலை ஜோதி மலை யாய்த் தோன்றலும், எல்லாம் வல்ல இறை யாகிய மகா சந்நிதாநத்தின் கருணையால் யுகாந்தரங்களில் அக்கினி ரூப மாய் பிரம விஷ்ணுகளுக்குத் தரிசநம் கொடுத்தபடி இப்

பரஞ்சோதி வடி வாக இன்று ஏழையேம் தரிசிக்கப் பெற்ரேம் என, ஆச்சரிய முற்று விஞ்ஞாபித்தார்கள்.

அதன் மேல், அவிடம் விட்டுப் புறப்பட்டு இடையி லுள்ள சிவ க்ஷேத்திரங்கள் பலவற்றையும் தரிசித்து, திரு நெல்லை யம்பதி வந்து, பஜனை மடத்திலிருக்கும்போது, சுந்த ரத் தோழப் பிள்ளை முடுக்குத் தெருவிருக்கும், எஞ்ஜினீய ராபீஸ் ரைட்டர், காந்தி மதி நாத பிள்ளையவர்கள் வந்து, மகா சந்நிதாநத்தின் திரு வடிகளை யடைந்து, அவர்கள் கிருபைக்குப் பாத்ர ராஞர்கள் அவ வேளையில் தருவாடியா ரவர்கள், சுவா நுபூதிரசாயநத்தை மகா சந்நிதாநத்திடத் துப் பாடங்கேட்டு வந்தார்கள். அதைப் பார்த்துக் கொண் டிருக்கையில், இஃதென்ன புஸ்தகம் என்று வினவ, அதற் குத் தருவாடியாரவர்கள், சுவா நுபூதி ரசாயநம் என்று விடை கூற, அவர்களும் கூட விருந்து சிரவணம் செய்து கொண்டு வந்தார்கள். பின்னும் கொஞ்சக் காலம் கழித்து, ஸ்வா நுபவ ரஸ மஞ்சரி யென்னும் சாஸ்திரத்தை இயற்றி யருளிஞர்கள்,

மறுபடியும், மகா சந்நிதாநம், புதுக் கோட்டை மார்க் கம், இராமேச்சுர யாத்திரை செய்ய உத்தேசித்து, மதுரை மார்க்கம் திருப் புத்தூர் சென்று, இராத் தங்கியிருக்கையில், மகா சந்நிதாநம் இராம சிவனை யழைத்து, இராப் போஜ நத்திற்கு, கோவிலில் ஏழு கட்டி அந்நம் வாங்கி வாரும் என் றனுப்ப, அவர்களும், அங்குச் சென்று மடைப் பள்ளிக்காரரிடம் விசாரிக்க, அவர்கள் இப்போதாகில், சுத் தாந்நம் கிடைக்கும். அர்த்த சாமர்த்தி லாகில், பஞ்சாந் நமும் கிடைக்கும், உம்மிஷ்டம் என்ன வென்று கேட்க.

இவர் அர்த்த சாமத்தி லாகட்டு மென்று சொல்லி, மகா சந்நிதாநத்தினிடம் வந்து, சமாசார மறிவித்து; அங் கிருந் தார்கள். எல்லாரும் மகா சந்நிதாநத்தின் திரு வாக் கமுத பாநம் பண்ணிக் கொண்டிருந்ததனல், போது போனது தெரியாமல், இரவு ஒரு மணி யாய் விட்டது மறுபடியும், மகா சந்நிதாநம் இராம சிவனை யழைத்து, இப்போது போய் வாங்கி வாரு மென் றனுப்ப, அங்கே கோயிற் காலம் எல்லாம் கூடி வெளிக் கதவும் திருக் காப் பிட்டிருந்ததைப் பார்த்து, வந் தறிவிக்க, மகா சந்நிதாநமும், இன் றிரவில் உப வாசித்தால் எவ் வளவோ பல னுண் டென்றருளி, எல்லா ரையும் சயநிக்கச் செய்து, தாங்களும், சயநித்துக் கொண் டார்கள். பின்னர், அக் கடவுள், கருணையால், அக் கோவில் பரிசாரகரைப் போல, மகா சந்நிதாநம் படுத்திருக்கு மிடத் தில் எழுந்தருளிவந்து, திரு நெல் வேலியி லிருந்து வந்த பிராமணர் எங்கே என்று வினவ, மகா சந்நிதாநமும் என்ன வென்று கேட்க, வந்த பரிசாரகரும், அந்நம் கேட்ட வர் வாங்கிக் கொண்டு போகலாகாதா, இருக்கு மிடந் தேடி வருமா? என, மகா சந்நிதாநம் இராம சிவனை யழைத்துக் கூடப் போய் அந்நம் வாங்கி வாரு மென, அவர் உடனே பின் செல்ல, பரிசாரகர் முன்னே சென்று, பூட்டியிருந்த கோபுர வாயிற் கதவைத் தள்ள, அது திறந்துவிட்டது. அக்கணம் இவர் கையை அவர் பற்றி மடைப்பள்ளிக்குக் கூட்டிக்கொண்டு போய், ஏழு சாதம் வைத்திருந்தேன் ஒன்றை எலியோ, பூனையோ தின்று விட்டது போக ஆறு சாத மிருக்கின்றது கொண்டு போ மென்று கொடுக்க, அவர்கள் வாங்கிக்கொண்டு, வெளியேற, அப்பால் கோயிற் கதவு தானே மூடிக் கொள்ளப் பரிசாரகரைக் காணமல், இவர்கள் திகைத்துக் கொண்டு, பரவசப்பட்டு, ஓய்

சுவாமி, ஓய்! சுவாமி, என்று பல முறை கூவியும் காணுமை யால், ஆநந்த பரவசத்துடன் சுலோகங்களால் தோத்திரித்து நின்ருர். இங்கே மகா சந்நிதாநம் போனவர் வரவில்லையே என்று ஆவுடையப்ப பிள்ளையைக் கூப்பிட்டு, நீர் போய்ப் பார்த்து வாரும் என்றனுப்ப, அவர் வந்து அழைத்துக் கொண்டு, இருவர்களும் மகா சந்நிதாநத்தினிடம் வந்து, நடந்த சங்கதிகளை அறிவிக்க, மகா சந்நிதாநமும், ஆநந்தத் துடன் கேட்டு, பரம சிவத்தின் கிருபையைப் புகழ்ந்து, சந்தோஷித்துப் பிரசாதத்தைத் தானும் உட்கொண்டு, மற்றையர்க்கு மளித்து, ஒரு சாதத்தைப் பிரசாத ரூப மாய்ப் பின் சாப்பிட வேண்டி யுலரவைக்கும்படி ஆஞ்ஞாபித்து, இதற்குத் தேவாமிர்தமும் இணை யல்ல வென்று, ஆச்சரிய மடைந்து, அன்றிரவைச் சிவசிசிப் பொழுதாக்கி, ஆநந்த மாய்க் கழித்தார்கள். மேல் நடப்பனவற்றைப் பார்க்க விரும்பினவன் போல, ஆதித்தனும், உதய கிரியி லெழுந்த னன். உடனே மகா சந்நிதாநம் அன்பர்களுடன் ஆலயம் நண்ணி சிவபிரானுக்கு அபிஷேகாதிகள் புரிவித்து, இராமேச்சுர தரிசநம் இங்கே கிடைத்த தென ஆஞ்ஞா பித்து, புதுக் கோட்டை போய்ச் சேர்ந்து, சில நா ளங் கிருந்தார்கள்.

அங்ஙன மிருக்கையில், ஒரு திநத்தில் மகா சந்நிதாநம், அன்பர்களை நோக்கி, இராமேச்சுரம் போக வேண்டு மென்று ஆஞ்ஞை செய்ய, அவ் வாஞ்ஞையைப் பெற்ற பக்தியையே பணியாய்ப் பூண்ட, அரிமளம், சிவ ராமன் செட்டியார் முத லான அன்பர்கள், யாத்திரைக் குரிய சாத நங்கள் சித்தமாயிற் றென்று விண்ணப்பிக்க, உடனே மகா சந்நிதாநம், ஓர் வண்டியிலும், மற்றையோர் கால் நடை

யாயும் போகையில், இப் போது வண்டி எவ் விடத்திற் போகிற தென்று மகா சந்நிதாநம் கேட்க, திரு மெய்யம் மூன்று மை லிருக்கிற தென்று சொல்லக்கேட்டு, சயசித்துக் கொண்டார்கள். திரு மெய்யங் கடந்து, சிறிது தூரம் செல்லுகையில், சிவ பெருமான் வண்டிக் கெதிராக, மகா சந்நிதாநம் போலத் திரு வுரு வெடுத்து, சகலாத்துப் போர்வை போர்த்துக் கொண்டு வந்து, இனி மேல், இங்கே போகக் கூடாது, புதுக் கோட்டைக்குத் தானே வண்டியைத் திருப் பென்று திரு வாய் மலர்ந்தருள, சுவாமிகள் உத்திரவின்படி வண்டியைத் திருப்பி, வெகுதூரம் செல்ல, மகா சந்நிதாநம் போர்வையைத் திறந்து, எவ் விடம் போகின்ற தென புதுக் கோட்டை யின்னும் ஐந்து மைல் இருக்கிற தென்று சொல்ல, மகா சந்நிதாநம் இராமேச்சுரம் போக வில்லையா வென நடந்தவற்றைத் தாஸர்கள் வெளிப்படுத்த, மகா சந்நிதாநமும், இஃ தென்னை என் ருச்சரியமுற்று, யான் வண்டியை விட்டுக் கீழி றங்க வில்லையே யென்று கூட வந்தவர்களுடன் திரு வாக் கருளி கடவுளைத் தோத்தரித் திருந்தார்கள். அவர்களும், மகா அதிசயத்தை யடைந்து, மவுநமா யிருந்தார்கள். அப்பால் எல்லாரும் புதுக் கோட்டைக்கு வந்து சேர்ந்தார்கள். மறு நாட் காலையில், எவ் விடத்திருந்து வண்டியைத் திருப்பினார்களோ, அதற்கு ஒருமைலுக் கப்பால், புய லடித்து, அநேக மரங்கள் வண்டிகள், ஆடு மாடுகள், வீடுகள் முதலான சேத மாயின வென்று, பிரயாணிகள் முதலோர்களால் தெரிய வந்தது. கடவுள் கிருபைக்குக் கைமா றுளவோ என்று வியந்து, "தன் கட னடியேனையும் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே" என்றருளிச் செய்து அங்கிருந்தார்கள்.

அதன் பின் சிவ ராமன் செட்டியார் மகா சந்நிதாநத்தை தன் னூ ராகிய அரிமளத்துக்கு அழைத்துப் போய் அங்குள்ள மீனுக்ஷிசுந்தரேச்சுரர் ஆலயத்தை பரிஷ்காரப்படுத்தும்படி அந் நகரத்தார்களுக்கு ஆக்ஞாபிக்குமாறு சுவாமிகளை வேண்டிக்கொள்ள, அவ்விதம் ஆக்ஞை செய்து அவ்வுத்திரவுப்படி கோவில் கட்டி முடித்து மீனுக்ஷிசுந்தரேச்சுரருக்கு அஷ்ட பந்தந கும்பாபிஷேகமும் செய்து முடித்தார்கள். அந்தக் காலத்தில், நகரத்தார் வேண்டுகோளின்படி வந் திருந்த கோயி லூர் சிதம்பரையா மகா சந்நிதாநத்தை தரிசித்து, ஆத்மாநுபூதியைக் குறித்து சம்பாஷித்து, மகா சந்நிதாநத்தினிடத்து மிக்க அன் புடையவ ராஞர்கள். பின்னர், ஒரு கால் மகா சந்நிதாநமும், கோவி லூருக்கு, அவர்கள் மநம் பிரார்த்திக்க விஜய மாகுதலும், ஐயா அவர்களும், வந்தனை வழிபாடு செய்து, நகரத்தார்களுடைய பல ஊர்களிலும், சூத சம்ஹிதா படநம் நடத்திச் சந்தோஷமடைந்தார்கள். பின் அவ் வூர் வந்து இரண்டாவது லக்ஷ தீபம் கொல்லம் 1045,ம் ஆண்டு, தை மாசம், அமாவாசையில் வர, அதற்கு வேண்டிய பணம் சேகரித்து வருகையில், நாராயண சிவ னவர்களும், ரெங்க நாத சிவ னவர்களும், வந் தடைந்தார்கள். அப் போது, சோ ணுட்டிலுள்ள கந பாடிகள் பால கிருஷ்ண சாஸ்திரிகள் முதலிய வித்வான்களையும், கோயி லூர்,ஐயா அவர்கள் முதலியோர்களையும், மாணுக்கர்கள் சகிதம் அழைத்து உபசரித்து, மகா ருத்திராபிடேக தரிசநம், இலக்ஷ தீப தரிசநம், ரிஷப வாகநக் காட்சி முதலிய தரிசநங்களைச் செய்வித்து, ஆநந்தத்துட னிருந்தார்கள், பின், எல்லோரும் மகா சந்நிதாநத்தில், ஆஞ்ஞைபெற்றுத் தத் தம் ஊரை யடைந்தார்கள்.

அதற் கப்பால் சில திநங் கழித்து, மகா சந்நிதாநம் திருச்சிர, ஜம்புகேச்வரம் முதலான ஸ்தல யாத்திரை செய்து, திரு வை யாறும், அதைச் சேர்ந்த ஸப்த ஸ்தாநங்களும், தரிசித்து வருகையில், அங் குள்ள சிவ நேசச் செல்வர்களா கிய பிராமணோத்தமர்கள், மகா சந்நிதாநத்தை நோக்கி இத் தலத்தையும, இதைச் சேர்ந்த சப்த ஸ்தாநங்களையும், ஜீரணோத்தாரணம் செய்து, அஷ்ட பந்தநம் செய்தருள வேண்டும். சுவாமிகள் கிருபை செய்யின் முடிவு பெறு மென்று பிரார்த்தித்துக் கொண்டார்கள். அப் போது, அதற் கிசைந்து, சிவராமன் செட்டியார், சத்திரம் சின்னையா செட்டியார் இவர்களைப் பார்த்து, இவ் விடங்களில் யாச கம் பிரியுமா வென ராஜகரம் கபிஸ்தல முதலிய திருப்ப தாற் பிரியு மென, அப்படியே, பல ஊர்களிலும் சென்று யாசித்து வந்தார்கள்.

அவ் விதம் யாசித்து வருகையில், உமையா புரம் என் னுங் கிராமத்தில், அம்பா அம்மாவிடம், மகா சந்நிதாநத் தின் சிஷ்யர்களில் ஒருவ ரான நாராயண சிவ னவர்களைப் போல, ஐயாற் றப்பர் மூர்த்திகரித்துப் போய், அம்மே! மகா சந்நிதாநம் பகல் ஒரு யாமத்தில் இங்கு வருகிறார்கள். அதற்குள், நீ சமயல் செய்து, பிள்ளையார் கோவிலில் கொணர்ந்து தயாரா யிருக்க வேண்டு மென்று சொல்லி வெளிச் செல்பவர் போல, அந்தர்த்தாந மாயினர். அவ் வம் மணியும், அப்படியே செய்து, அங்கு வந்து காத்திருக்க, மகா சந்நிதாநம் தனியே அங்கு வந்து சேர்ந்து, திருவ முது கொள்ளு மத்தியில், தேவரீர் வர வறிவித்த நாராயண சிவன் எங்கே என்று, அம்மாள் மகா சந்நிதானத்தினிடம் வினவ, அவர்களும், ஐ யாற்றப்பரது திரு விளையாட்

டென்று கூறி, அம் மாளைப் பார்த்து, யான் மாத்திரம் வந்தேன், அவர்கள் நாமக் கல்லுக்குச் சமீபம் முத்தக்காபட்டியி லன்றோ இருக்கின்றார்கள் என, அது கேட்ட வவ்வம்மாளும், அதிசயித்து மகா சந்நிதானத்தைப் பல தரம் நமஸ்கரித்துத், திரு வமுது செய்வித்து விடை பெற்றுக் கொண்டு சேடத்தைத் தன் இல்லிற்கு கொண்டுபோய் பிரசாத மாய் புசித்து, இவ் வற்புதத்தைச் சிந்தித்து எவருடனும் சொல்லாமல் ஆநந்தித்திருந்தனர்.

பின், மகா சந்நிதாநம், திரு வையாறு வந்து சேர்ந்து, திருச் சோற்றுத் துறை, திரு வேதிக்குடி, திருக் கண்டியூர், திருப் பூந் துருத்தி, திரு நெய்த் தாநம். திருப்பெரும் புலியூர் திரு மழபாடி, திருத் திங்க ளூர், திருக்கடு வெளி இவைகளில் திரு வை யாற்றுக்குக் குப்பாணி சிவனையும், மற்றை க்ஷேத்திரங்களுக்கு பிற சீடர்களையு மனுப்பி, திருப் பணியியற்றித் திருக கண்டி யூர், திருவையா று நீங்க லாக, மற்றை ஸ்தலங்களில், கொல்லம் 1047-ம் ஹூ ஆங்கிர ஹூ இடபமதியில், இயைந்த வா று சுபதிநங்களில், பிராமண போஜநம் ரிஷப வாகநக் காட்சி முதலியவைகளுடன் அஷ்ட பந்தந கும்பாபிஷேகத்தைச் சிறப்பாய்ச் செய்து, மிதுந ரவி 3உ திருக் கண்டி யூரிலும், 9உ திரு வை யாற்றிலும், அஷ்ட பந்தந கும்பாபிஷேகம் செய்ய நிச்சயித்து, வித்வாம்ஸர்கள் கந பாடிகள் தீக்ஷிதர்கள் சாஸ்திரிகள் கோயி லூர் சிதம்பரய்யா, அவர்கள் மாணுக்கர்கள், மற்ற நகரத்தார்கள் பிரபுக்கள் முதலிய எல்லோருக்கும் பத்திரிகை அனுப்பி வரு மா று செய்து, 3உ திருக் கண்டி யூரி லும் 9உ திருவை யாற் றி லு மாக "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள" என்னும் திரு வாக்கின்படி எவரு மாநந்த மடையு மா று,

மிகுந்த சிறப் பாய்ச் செய்து நிறைவேற்றினார்கள். அக் காலையில், மகா வைத்தி பாகவதரவர்கள், அவரது தமயனார் இராமசாமி பாகவதர் அவர்கள் இவ் விருவரும் வந்து, சுவாமிகளைத் தரிசித்துப் பாடித் தங்களை ஆட்கொள்ள வேண்டு மென்று பிரார்த்திக்க, அப்படியே அநுக்கிரகித்த லும், அவர்களும், திருவடிக் காளாய் இடையறு அன்பு வாய்ந்தவகளானார்கள். அதன் பின், கோபி லூர் ஐயா அவர்கள் முதலியோர்களை உபசரித்தனுப்பித் தாமும் திரு நெல் வேலிக்கு வந்து சேர்ந்தார்கள்.

அங்கு பஜனை மடத்தி லிருக்கும்போது காம தேநு பூஜித்த ஸ்தல மென்றும், திந்திரிணி வன மென்றும், வழங்கு கின்ற கங்கை கொண்டான் ஸ்தலத்தி லுள்ள ஆநந்த வல்லி சமேத கைலாய நாதர் ஆலயத்திலும், அஷ்டபந்த னம் செய்ய வேண்டு மென்று, அக் கிராமத்தார் கேட்டுக் கொள்ள, அதற் கிசைந்து, சிவ ராமன் செட்டியாருடன், கொளும்பு முதலான பல தேசங்களுக்குச் சென்றிருந்தார் கள். திரும்பி வருங்கால் வல்ல நாட்டுப் பொத்தைக்குச் சமீபத்தில், திருடர்கள் வந்து, பொருளை அபகரிக்க யத்தனித்து, நெருங்கவும், அவர்கள் கண்ணிற்கு பஜனை செய்துகொண்டு செல்லுகின்ற மகா சந்நிதாநத்திய திருக் கூட்டம் பல ஆயுதங்கள் தரித்த பெரிய ராணுவ சைந்நி யங்கள் போலத் தோன்ற, திசைக் கொருவ ராய் வெருவி யோடினார்கள். பின், மகா சந்நிதாநம் கங்கை கொண் டான் வந்து சேர்ந்து, குப்பாணி சிவனைக் கொண்டு, பணி யியற்றி, கொல்லம் 1048-ம் ஸ்ரீ ஸ்ரீமுக வருடம் வைகாசி மீ, 19உ ல் மகா வைத்தியநாத சிவன், அவரது சகோதரர் இராம சுவாமி சிவன் முதலானவர்கள் சகிதம் பிராமண

போஜந இடப வாகநக் காட்சியுடன் அஷ்டபந்தந கும்பாபிஷேகத்தைச் செய்து ஆநந்த மளித்தார்கள். மறு படியும், திரு நெல்வேலி வந்து சேர்ந்து பஜனை மடத்தி லிருக்கும்போது, மாணுக்கர்கள் மகா சந்நிதாநத்தை வணங்கி, சுவாமி அடியேங்கட்குப் பிரம கீதையைத் தமி ழில் மொழி பெயர்த்தருள வேண்டு மென்று விண்ணப் பிக்க, மகா சந்நிதாநமு மதற் கிசைந்து சொக்க லிங்கம் பிள்ளையை எழுத உத்தரவு செய்து, மூன் றத்தியாய முடிந்த சமயத்து, கல்லத்தி முடுக்குத் தெரு, ஐயாச்சாமியா பிள்ளையவர்கள் சந்நிதாந தரிசநத்திற்கு வர, அவர்களிடம் இதனைக் காண்பிவிக்க, அவர்கள் பார்த்து சந்தோஷித்து, முன்னமே தத்துவ ராய சுவாமிகள் இதனைத் தமிழ்ப் பிர பந்த மாகச் செய்திருக்கின்றூர்கள், அதற் கிது உரை யாக லாம் என்று சொல்லி, ஏட்டைக் கொணர்ந்து கொடுக்க, இரண்டும் ஒத்திருக்குகையைப் பார்த்து, அப்படியே பிரம கீதைக்கு உரை யியற்றினூர்கள். அதைச் சென்ன பட்டணத்தில் அச்சியற்றிப் பிரசித்தம் செய்தார்கள்.

இப்படி இருக்கையில், ஒரு திநம் மகா சந்நிதாநமும் இஞ்சிணீயராபீஸ் ரைட்டர் காந்திமதி நாத பிள்ளை யவர் களும், மற்றைய மாணுக்கர்களும், பஜனை மடத்தி லிருக் கும்போது, திரு வநந்த புரம் காலேஜ் தர்க்க சாஸ்திர பண்டிதரும், இந்து காலேஜ் ஹெட்மாஸ்ட்டரு மாகிய, எம், ஏ. சுந்தரம் பிள்ளை யென்பவர், மகா சந்நிதாநத்தினி டம் வந்து, அடியேனையும், ஆண்டுகொள்ள வேண்டு மென்று விண்ணப்பிக்க, அவர்களுக்கும் அநுக்கிரகம் செய்தார்கள். அது முதல் மேற் கூறப்பட்டுள்ள மூன்று சாஸ்திரங்களையும், மகா சந்நிதானத்தினிடம் நன்ருய் விசா ரித்து, அதன் பொருள்களை யெல்லாம் நன்ரு யுணர்ந்து

மகா சந்நிதாநத்தை நோக்கி, நியாயம் வியாகரணம் பூர்வ மீமாம்ஸை, நிரீசுர சாங்கியம் சேசுர சாங்கிம், பௌத்தம் சகஜம் முதலிய மதங்கள் அத்துவிதத்துக்கு வேறில்லாமல் அதி லடங்கியது தான் என்பதையும், உபாஸ்திகளின் எதார்த்தத்தையும், சற்று விசாரித் தெழுதி அருளிச் செய்ய வேண்டு மென்று கேட்க, அப்படியே, அவர்கள் கேட்டுக் கொண்டனவும், பிறவும், அருளிச் செய்தார்கள். கடைசி யாக,குல சேகரம் பட்டணத்தில்,சூதஸம்ஹிதா படந நடத் துகையில், இரண்டா நாட் படநத்தில் குப்பாணி சிவன் பத்த மடையில் கிரியாண மானதைத் தெரிந்து, மாவடி சிதம்பரம் பிள்ளையிடம் இரகசிய மாய் அறிவிக்க, அவரும் ஆச்சரியத்தோடு சற்று துக்கமும், அடைந்திருந்தனர். நாலா நாட் படந நடத்தி இரவில் பஜனையுடன் கதாப்பிர சங்கமும், நடத்தி, முடிந்த பின், சமுத்திரக் கரையோரம் மாணுக்கர் தற் சூழ, நிலவில் ஆநந்தமா யிருக்கும் போது, மகா சந்நிதாநம் அகாரண மாய் ஒரு பெரிய சப்தம் கொடுக்க, சீடர்கள் பயந்து, சுவாமி இஃ தென்ன வென்று வினவ, இந் நேரத்தில் பத்த மடைக் கோவிலில் கொள்ளை செய்வதற்குத் திருடர் வந்திருந்தார்கள். ஊரவர்களை எழுப்பினேன் என்று, சந்நிதாநம் திரு வாய் மலர அப்படி யா வென்று எல்லாரும் அதிசயித்து, பின்னர், அவரவ ரிடங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். மறு நாட் காலை யில், ஐந்தா நாட் படந நடத்தி சமாப்தி செய்தார்கள். ஆரும் நாளில், இவ் விரண்டு விஷயமும் குறித்து இரண்டு நிருபம் வந்து சேர்ந்தது, ஒன்றில், கோவிலில், திருடர்கள் திருட வந்ததாகவும், அகாரண மாய் ஒரு பெரும் சத்தங் கேட்டு ஊரார் எழுந்து, அவர்களை ஓட்டிவிட்டதாகவும் கண்டிருந்தது: அப்படியே மற் றொன்றிலும் குப்பாணி

சிவன் நிரியாண தசைசைப்பற்றி வரைந்திருந்தது. அதைக் கேட்டு அதிசய மடைந்து, அவ் விடம் விட்டுப் புறப்பட்டு திருச் செந்தூர் வந்து தரிசித்து, திரு நெல் வேலிக்கு வந்து பத்திர தீபம் நடத்தி, அப்பாற் பல தேயங்கள் சென்று, அரிமளம் போய்ச் சேர்ந்தார்கள். அங் கிருந்து, மகா வாக்கியச் சுருக்கமும், வேதாகம சம்பிரதாயப் பிரகரணமும், செய்து, அப்பால் மனோ நாச மார்க்கமு மியற்றி, முன்னர் இயற்றியருளிய பிரகரணங்களையும், ஒருங்கு சேர்த்து, நிஜாநந்த விலாசம் எனப் பெய ரிட்டு வழங்குக என, ஆக்ஞாபித்து பஜனைச் சிதம்பரம் பிள்ளை கையிற் கொடுத்தார்கள்.

இங்கு அதிக மாய் எழுதுவதால் என்? மகா சந்நிதாநம் சேது முதல் ஹிமாசல பரியந்த மான சர்வ தேசங்களிலும், லோகோபகாரார்த்த மாய்ச் சஞ்சரித்து ஆங்காங்குள்ள பக்தர்களுக்கு (அதன் பரம காஷ்டை யான சக்தி பாதத்தையும் கடைக் கண்ணேக்க லேசத்தால்) (எல்லாம் பரமாநந்தாநு பூதியையும்) அருளிச் செய்து, சாவன மான பஸ்ம ருத்ராக்ஷ தாரணம் சிவலிங்கார்ச்சநம் குரு லிங்க சங்கமம் சாஸ்திரங்களில் உத்தம மான பக்தி இவைகளை நிலைநிறுத்தி, உலகை எல்லாம் உய்வித்து, பின்னர், கொல்லம் 1054-ம் ௵ வெகுதாசிய-௵, ஐப்பசிமீ 6௳ திங்கட் கிழமை தசமி யன்று சிவ ராமன் செட்டியார் முதலான தமது கருணைக் குரிய மெய் யன்புற்ற மாணுக்கர் பலர் சூழ்ந்திருப்ப, அரிமளம் என்னும் திவ்விய ஸ்தலத்தில், பிரஹ்ம சொரூபத்தில், ஐக்ய மடைந்தார்கள். வாதவூரடிகளைப் போன்ற சிவ ராமன் செட்டியாரவர்கள், ஸ்ரீ மகா சந்நிதாநம் சமாதி வீற்றிருக்கும் அந்த ஸ்தாநத்தில் ஸ்ரீ

மகா சந்நிதாநத்தால் இவ் விலிங்கம் எங்குப் பதிட்டிக்கப் படுகின்றதோ, அந்த ஸ்தாநத்தில், விசேஷ மாய்ப் பரம சிவம் சாந்நித்தியம் செய்தருளும், அங்குத் தவ மியற்றினர்க்கு விரைவில் இஷ்ட பலன் கிடைக்கும். நிஷ்காம மாய்த் தவ மியற்றினும் புக்தியும், கல்வியும், ஞாநமும், புகழும், உண் டா மென அநுக்கிரகித்தருளிய நர்மதா லிங்கத்தை, மதுரா புரியில், இந்திரன் விமானம் இயற்றியது போல, அழகிய ஆலயம் இயற்றி, அதில் பிரதிஷ்டை செய்து, வைதிக நெறி யின்படி மிகச் சிறப் பாய் கும்பாபிஷேகமும் நடத்திய பின், நித்திய, நைமித்திய பூஜை பல சிறப்புக்களும், நடத்தி வருகிறார்கள். ஸ்ரீ மகா சந்நிதாநம் இப்பொழுதும் அங்கு உள்ளன்புடன் தவம் செய்வார்க்கு பரமாநந்தம் அளித் துப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஸ்ரீ சுந்தர சுவாமிகள் சரிதம் முற்றுப் பெற்றது:

---

## 30. பேரூர்,

## *ஸ்ரீ சாந்த லிங்க சுவாமிகள் சரித்திரம்.*

பேரையூர் விளங்கும் விநாயகன் அடியை
பெருங்குகப் பிரான தடியை,
போரையே கொண்ட பேரையூர் இறைவன்
பொங்குசெந் தாமரை அடியை,
நாரைகள் போற்றும் நயநநா யகியின்
நற்றிரு வடிகளைத் திநமும்,
பேரையூர் வாழும் சாந்தலிங் கேசன்
பிறைஅடி களைத்திநம் தொழுவாம்.

ஸ்ரீ அகண்ட பரிபூரண சச்சிதாநந்த சொருபமே ஓருரு வாகத் திரு மேனி கொண்டருளிய, திருத் துறை

யூர், ஸ்ரீமத் சாந்த லிங்க சுவாமிகள், சிறு வயதிலேயே கல்விப் பயன் கைவரப் பெற்று, ஆசிரியர் உத்திரவுப்படி "ஞானாம்பிகை அம்மையை மணந்து, இல் லறம் நடத்தி வருங்கால், சுவாமிகள்" மெய் யெனத் தோற்றும் உலக வாழ் வனைத்தும் பொய் யெனத் தேர்ந்து, சகல பற்றுகளையும் விட்டு, விரக்தி யடைந்து, துறவு பூண்டு. ஸ்ரீமத், சிவப் பிரகாச சுவாமிக ளிடம் ஞானோபதேசம் பெற்று, கொங்கு நாடு செய்த தவப் பயனின் விசேடத்தால், மேலைச் சிதம்பர மென்னும் திருப் பே ரூரில் எழுந்தருளி யிருந்தார்கள்.

அப் போது, அள விறந்த அடியார் குழாங்கள் சுவாமிகளிடம் சாத்திர விசாரணை செய்து வருங் கால், அவ ரவர்கள் மனோ நிலைமைக்குத் தக்க வாறு, சந்தேக விபரீத மில்லாமல், சுவாமிகள் சாத்திரத்தின் சாராம்சத்தைச் சாற்றிடுவார். பக்குவ முற்றூர்கள், பரகதி அடைய ஞானோபதேசமுஞ் செய்திடுவார். இங்ஙன மிருக்க, ஸ்ரீ குமார தேவர், ஆறு சுத்த தேக மெடுத்து செய்து வந்த தவத்தின் பயனுல், ஈசன் கட்டளைப்படி, ஏ ழாவது தேகம் கந்நட தேயத் திறைவனுக்கு புத்திர ளுக அவதரித்துச், சிறிது நாளரசு புரிந்து, பிறகு துறவு பூண்டு, ஒரு நாள், தன் சரித்திர முழு தும், பேரை யூர் சாந்த லிங்க சுவாமிகளுக்குத் தெரிவித்த பின்பு, தாமே போய் ஷை சுவாமிகளைக் கண்டு வணங்கி நிற்க, அது தெரிந்து சுவாமிகளும், இவரது பரிபாகத்தை நோக்கும் பொருட்டுத், தம்மிட மிருக்கும் கையேட்டுத் தம்பிரானைப் பார்த்து, அப்பா? இவனைப் பார்த்தால் அரசனைப் போ லிருக்கிறது, இவ னிந்த வழிக்

குப் பாத்திரவா னல்லன், ஆதலால், இவனைப் போகச் சொல் லென்றார். அதற்கு, அந்தத் தம்பிரானும், சுவாமி? இவனிடத்தில் அதி தீவிர பக்குவ முடைய பதி ணெண் குறியு மிருக்கிற தென்று சைகை யாகச் சொல்ல, சுவாமி களும் (முன்பே அறிந் திருப்பதால்) ஆனால், இவனை நமது எருதுக்குப் புல் லறுத்துப் போடச் சொல் லென்றார். அவ் வாறே, தம்பிரான் கட்டளை யிட மகா ராஜ வான குமார தேவர், அரிவாளுங் கயிறுங் கொண்டு, பள்ளர்கள் புல் அறுப்பதைப் பார்த்துத் தாமும், அவ் வாறே அறுக்க நினைத்து, இடக் கையால் புல்லைப் பற்றி, வலக்கையால், அரி வாளைப் புல்லின் மேல் பூட்டாமல், இடக் கைமேல் பூட்டி யிழுக்க, கை அறுபட்ட மாத்திரத்தில், வலக் கையைப் பார்த்துக் கோபித்தார். இதைக் கண்ட பள்ளர் கள், நீர் ஆ ரையா? என்று கேட்டு, விருத்தாந்த முழுது மறிந்து, புல்லை யறுத்து சுமை யாகக் கட்டி, மகா ராஜா வின் முடி மேல் வைக்க, முடி சாய்ந்தது. (முன் பின் பழக்க மில்லாததால்) பள்ளர்கள், தாங்களே கொண்டு வந்து வைத்துப் போனார்கள்,

இவ் வாறு, இரண்டு நாள் சென்ற பின்பு, மூன்றும் நாள் பள்ளர்கள், இவ் விஷயத்தைக் கையேட்டுத் தம்பி ரானுக் கறிவிக்க, தம்பிரான் சுவாமிகளுக்குக் குறிப் பாகத் தெரிவித்தனர். சுவாமிகளும், மகா ராஜாவைப் பார்த்து, சோதனை நிமித்தம் கோபிக்க, அவரும் நடு நடுங்கி, ஒருபுற மொதுங்கி நின்றார். அன் றிரவு, சுவாமிகள் தம்பிரானை அழைத்து. அப்பா? எங்க ளிருவருக்கும் வெவ் வேறு கட் டமுது கட்டி, தண்டில் மாட்டி, இந்த மகா ராஜ னிடத்தில் கொடுத்து நம்மோடு கூட அனுப்பிவை

யென்று கட்டளையிட்டருள, தம்பிரான், அவ் வாறே செய்ய, சுவாமிகள் முன்னும், குமார தேவர் பின்னு மாய்ப் போகையில், சில தூரம் சென்று சுவாமிகள், இவரைத் திரும்பிப் பார்த்து, ஏன் தாமத மென்று அதட்ட, அது கேட்டு, இவரும் பயந்து, சுவாமி? "ஒரு புறம் அச்சு லிங்கம்,'; மற்றொரு புறம் கணு யுத்தம் இழுக்கின்றதே, என்று சொல்ல, அக் குறிப்பை யறிந்து சுவாமிகள், தமக் குத் தாமே ஆநந்த பரவச மடைந்து, ஓர் குளக் கரையி லிறங்கி இருவரும் ஒன்ருக உட்கார்ந்து இரண் டன்னத் யும் ஒன்ருகச் சேர்த்து, மகா ராஜா சுவாமிகளுக்குப் பரி மார, சுவாமிகள் உண்ட பின் சேட மான மகாப் பிரசா தத்தைத், தாமும் உட் கொண்டு, பிறகு சற் சில விஷயங் களை வசகித்துக் கொண்டிருந்து, மீண்டும் இருப்பிடம் வந்து சின்னுள் கழித்து, சுவாமிகளிடத்தில் அநுக்கிரகம் பெற்றுக் கொண்டு, சாதனை செய்து முதிர்ந்த காலத்தில், ஓர் நாள், சாந்த லிங்க சுவாமிகள், இவரை மகா ராஜா வென்று பெயரிட் டழைத்து, அப்பா? நீ விருத்தாசலத் திற்குப் போக வேண்டு மென்று கட்டளையிட் டருளினுர். உத்தரவைப் பெற்ற குமார தேவர் உடனே பிரயாணப் பட்டு, பற் பல தலங்களைத் தரிசித்தும், அநேக அற்புதங் களைச் செய்தும், கடைசியாய் விருத்தாசலம் வந்து அத் தலத்தில், அநேக திரு விளையாடலைப் புரிந்து வீற்றிருக்குங் கால், அத் தலத்தில், மதுரையி லிருந்து வந்திருக்கும் இலக் கண வித்துவா ஞகிய, சிதம்பரம் பிள்ளை என்பவர், ஓர் தநவந்தன் பிள்ளைக்கு இலக்கணப்பியாசம் செய்து கொண் டிருக்குங் கால், ஷை குமார தேவர் குக்ஷி பாதை நிமித்தம் ஷை தநவந்தன் வீட்டுக்கு வருகையில், ஷை பிள்ளை யான வர் இவரிடத்தில், மதிப் பற்று இரு மாந் திருப்பதைக்

கண்டு, அவரைத் தடுத் தாட் கொள்ளத் திருவுளங் கொண்டு, அவரை நோக்கி, ஓர் வாக்கியத்தைக் கூறி பயன் யாதென வினவ, எவ்வளவு வித்வ சாமர்த்திய மிருந்த போதிலும், இச் சந்நிதானத்தில் நா வெழாமல் பயன் கூருது மயங்கி நின்று, அடிமையை மன்னித்து இரக்ஷித்தருள வேண்டு மென்று விண்ணப்பஞ் செய்து, திரு வடியில் விழுந்து வணங்கி, பின் இவரும் துறவு பூண்டு உடன் சென்ருர்.

பிறகு, இருவரும் பல தலங்களை வணங்கி, திருப் பேரூர் திரு மடத்துக்குச் சமீப மாக போகையில், விடியற் காலையாகையினுல், தம்பிரானைக் கண்டு, சுவாமிக ளிருக் கும் சமய மெப்படி யென்று வினவ, சுவாமிகள் பர நிட்டையில் எழுந்தருளி யிருக்கின்ரு ரெனக் கூற, ஆனுல், நாம் பணி செய்வோ மென்று நினைத்து, ஸ்ரீ குமார தேவர் சாணச் சட்டி யெடுத்துக் கொண்டு, திரு மெழுகிட, சிதம் பர சுவாமிகளும், திரு வல கெடுத்துக் கொண்டு திரு வல கிட்டார். பிறகு சுவாமி நிட்டையி லிருந்து தெளிந்த பின், சேதி யறிந்து, இருவர்களும் மடத்துட் சென்று வணங்கி நிற்க, சுவாமிகளும் குமார தேவரைப் பார்த்து, அப்பா? உன்னை யடுத்து நிற்கின்றவன் யார்? என்று கேட்க, தென் ஞட்டுச் சைவ னென்று செர்ல்ல. இவனை ஏன் அழைத்து வந்தாய்? என்று கேட்க, அதற்கு குமார தேவர் மௌனமா யிருந்து விட்டார், இப்படி இரண்டு திநம் சென்றதும், தம்பிரான் சிதம்பர சுவாமிகள் நடையை அறிந்து, சுவாமிகளுக்குச் சொல்ல, அவர் நமக் கிருக்கும் சந்ததி போதும், ஆனுல், நமது சந்ததிக்குச் சந்ததி நெடு நாளா யில்லா திருந்து இப் போது கிடைத்த படியால், அப்படியே செய்விக்க

வேண்டு மென்று கட்டளையிட, அதற்குத் தம்பிரான் மௌநமா யிருந்து விட்டார். மூன் ரும் நாள் சுவாமிகள் குமார தேவரை அழைத்து, உன் னிருப்பிடம் போ வென்று சொல்ல, குமார தேவர் "இவன் இவடத்தி லிருக் கட்டு" மென்று வீண்ணப்பஞ் செய்ய,சுவாமிகள் "இவடத் தில் வேண்டாம் நீயே அழைத்துப் போ"வென்று சொல்ல, குமார தேவர், "இவனைக் கொண்டு போய் அடிமை யென் செய்கிற" தென்று கேட்க,இவன் பக்குவ மறிந்து,"உனக் குச் சொன்னதை இவனுக்குச் சொல்லிவை" யென்று கட்டளையிட, அவ் வாறே, குமார தேவர், சிதம்பர சுவாமி களை அழைத்துக் கொண்டு விருத்தாசலம் வந்து, சிதம்பர சுவாமிகளின் பக்குவ மறிந்து ஞானோபதேசம் செய்தருளி ஞர். பிறகு, இருவர்களும் பக்குவ மடைந்த ஆன்மாக் களுக்கு அவ் வப் போது, உபதேசஞ் செய்து, தங்கள் அநுபவத்தைச் சாத்திர மாகச் செய்துவைத்து பரிபூரண தசையை அடைந்தார்கள்.

ஸ்ரீமத் சாந்த லிங்க சுவாமிகள், தற் போத மாயில், எம் மதத்தி லுள்ளவர்கள்? எந் நிட்டை சொன்னுலுஞ் சம்மதமே யெனக் கொண்டு, ஆன்மாக்க ளுய்யும்படி, கொலை மறுத்தல், வைராக்கிய (பக்தி) சதகம், வைராக்கிய தீபம், அவிரோத வுந்தியார், என்னும் நான்கு அற்புத நூற் களை இயற்றி, அதன் விசேஷ கருத்துக்களை தம்மிட மிருந்த அடியார் குழாங்களுக்கு எடுத் துரைத்து, தானும், சிவ யோக சாதனையில் சி ருற்றுப் பே ருற்றுப் பே ராநந்தக் கடலி லாழ்ந்து, ஓர் சுபதிநத்தில் சமாதி நிலையில் ஐக்கிய மடைந்தார்கள்; சுபம். சுபம்.

சாந்த லிங்க சுவாமிகள் சரிதம் முற்றுப் பெற்றது.

## 31. ஸ்ரீ குமார தேவர் சரித்திரம்.

அருத்தமாநன் கடைய வளிக்குநல் கருணை
ஆழத்துப் பிள்ளையைச் சிகரிக்,
கொருத்தனென் றுரைக்குங் குமரநற் குருவை,
யொருவிலா விருத்தநா யகனைத்,
திருத்தநன் ஞாநங் கொடுக்குநம் குருவாச்
செப்பிடும் விருத்தநா யகியை,
விருத்தநல் லசலக் குமாரதே வன்றன்
விரைமலர் அடியிணை தொழுவாம்.

ஸ்ரீ அகண்ட பரிபூரண சச்சிதாநந்த ஸ்வரூபமே ஓருரு வாகத் திரு மேனி கொண் டருளிய, ஸ்ரீ குமார தேவர் முற் பிறப்பில் பரம சிவத்தை நோக்கி, மல்லிகார்ச்சுந பர்வதத்தில், நிஷ்காம தவஞ் செய்கையில், அந்தச் சுவாமி களோடு கூட வே யொருவர் அந்தப் பர்வதத்தின் கண்ணே தவஞ் செய்து கொண் டிருந்தார்; அப் போது, பரம சிவம் அவரது தவத்திற் கிரங்கிப் பிரத்தியக்ஷமா யெழுந்தருளி வந்து, அப்பனே! உனக்கு என்ன வரம் வேண்டு மென் று கேட்கு மளவில், அவரோ, ஒன்றைக் கருதி, மற் றொன் றைக் கேட்ட மாத்திரத்தில், பரம சிவம் திரு வுளத்தில் முனிவு கொண்டு, அடா நீ ஜடா முநி யாகக் கடவ தென் று சபிக்க, அது கேட்டு அவரும் திடுக்கிட் டெழுந்து நின் று, சுவாமி! யான் கருதி வந்ததைக் கேளாமல் ஊழ்வினைச் சேட்டையால் தவறிப் போனேன். பரம் பொருளே! இனி யாது செய்ய வல்லேன். அச்சோ! இச் சாபம் அடிமைக்கு, எக் காலத்தில் விமோசந மாகு மென் று, அடி வணங்கி கேட்க, அடா! நீ போய், விருத்தாசலத்தில், மணி முத்தா நதிக் கரையில், வளர்ந் தோங்கி யிருக்கின் ற அரச மரத்தின்

மே லிருந்தா யாகில், இந்தப் பர்வதத்தில் உன்னோடு தவஞ் செய்து நிற்கின்ற, எமது அன்ப னாகிய ஒருவன், கர்நட தேயத்தில், இராஜ னாக வவதாரஞ் செய்து, சிறிது நாள் ராஜ்ய பாரம் பண்ணி, பிறகு **விரக்தி** யுண்டாய், பேரை யூர்ச், சாந்த லிங்க சுவாமிக ளிடத்தில், அநுக்ரகம் பெற்றுக் கொண்டு, மேற்படி ஆசிரிய ருத்தரவுப்படி விருத்தாசலம் வந்து, நீ இருக்கின்ற அரச மரத்தி னிழலில் இருப்பான். அப் போது, நீ அவனைக் கண்டு, வணங்கிக் கேட்டால், அவன் விமோசநஞ் செய்வா னென்று, திரு வாய் மலர்ந் தருளிய மாத்திரத்தில், அந்த ஜடா முநியும், சுவாமீ! அவ ருக்கு முத்தித் திசை எப்போ தென்று கேட்க, அடா! அந்த அன்பன் இதற்கு முன்னர், ஐந்து சுத்த தேக மெடுத்து நம்மை நோக்கி நிஷ்காம தவஞ் செய்திருக் கின்றான், இஃது ஆறுவது தேகம். இன்னம் ஒரு தேகத் தில், முக்தியை பெறுவா னென் றருளிச் செய்ய, அது கேட்டு ஜடாமுநியும், பாக்கிய மென்று பரம சிவனிடத் தில் விடை பெற்றுக் கொண்டு போய், மேற் சொல்லிய அரச மரத்தின் மே லிருந்து, எப் போது விமோசந காலம் நேரிடு மென்று வழிபார்த்துக் கொண்டிருந்தான்.

ஸ்ரீ குமார தேவரோ என்றால், பரம சிவத்தின் திரு வருட் படி அருளே திரு வுரு வாகக் கொண்ட போதி னும், ஆசிரியர் வேண்டி யிருப்பதால், கர்நட தேயத்தி லவதரித்துச் சிறிது நாள் அரசு செய்து, பிறகு துறவு பூண்டு, ஒரு நாள், தம் மிடத்தி லுள்ள மந்திரிமார்களில், முதல் மந்திரி யானவரால், தமது சரித்திர முழுதும் பேரை யூர்ச் சாந்த லிங்க சுவாமிகளுக்குத் தெரிவித்த பின்பு, தாமே போய் மேற்படி சுவாமிகளைக் கண்டு வணங்கி

நிற்க, அது தெரிந்து சுவாமிகளும், இவரது பரிபாகத்தை நோக்கும் பொருட்டுத், தம்மிடத் திருக்கும் கையேட்டுத் தம்பிரானைப் பார்த்து! அப்பா இவனைப் பார்த்தால் அரசனைப் போ லிருக்கின்றது, இவ னிந்த வழிக்குப் பாத்திர வா னல்லன், ஆதலால், இவனை அரசுக்கே போகும்படி சொல், லென்று சொல்ல; அதற்கு அந்தத் தம்பிரானும் சுவாமி! இவ் வரசனிடத்தில், அதி தீவிர பக்குவ முடைய சற் சிஷ்யருக் குள்ள பதி னெண் குறியும் உண்டாயிருக் கிறதே யென்று சைகையாகச் சொல்ல, சுவாமிகளும் (முன்பே அறிந்திருப்பதால்) ஆனால், இவனை நமது எருதுக்குப் புல் லறுத்துப் போடச் சொல் லென்று, கட்டளையிட்டருள, அவ் வாறே, தம்பிரான் அரிவாளும், புல்லு கட்டுங் கயிறுங் கொடுத் தனுப்ப, மேற்படி ஸ்ரீ குமார தேவரும், அத் திருப் பணியைச் சிரசா வைத்துக் கொண்டு வயலுக்குப் போய், பள்ளர்கள் புல் லறுப்பதைப் பார்த்துத், தாமும் அவ் வாறே, அறுக்க நினைத்து, இடக் கையால் புல்லைப் பற்றி, வலக்கையி லுள்ள அரிவாளைப் புல்லின் மேற் பூட்டாமல், இடக்கையின் மேற் பூட்டி யிளுக்க, கை யறுபட்ட மாத்திரத்தில் மேற்படி வலக் கையைப் பார்த்துக் கோபித்தார். இவ் வற்புதக் காட்சியைக் கண்ணுற் கண்ட மேற்படி பள்ளர்கள், நீர் ஆ ரையா? என்று கேட்க, நான் பேரை யூர்ச் சாந்த லிங்க சுவாமிகள் வாகநத்திற்குப் புல் லறுப்பவ னென்று சொல்ல அது, கேட்டு அப் பள்ளர்கள் ஆச்சரிய மடைந்து, இவர் அரசனைப் போ லிருக்கின்ற தென் றெண்ணி, அப் பள்ளர்களே, புல் லறுத்துக் கட்டுக் கட்டி அவர் திரு முடிமேல் வைக்க, அச் சுமை பொருமல் திரு முடி சாய்ந்து போவதைக் கண்ட பள்ளர்கள், அப் புற

சுமையை எடுத்து வந்து மேற்படி மடாலயத்து வெளியில் வைத்துப் போனார்கள்.

இவ்வாறு, இரண்டு நாள் சென்ற பின்பு,மூன்ருவது நாள், மேற்படி புற்சுமையை எடுத்து வந்த பள்ளர், இவர் சேதி முழுதும் கையேட்டுத் தம்பிரானுக்குத் தெரிவிக்க, அவரும் இவர் கையறுப்புண்ட சேதியை சுவாமிகளுக்குக் குறிப்பாகத் தெரிவித்தனர். சுவாமிகளும், ஸ்ரீ குமார தேவரைப் பார்த்துச், சோதனை நிமித்தம் முனிவு கொள்பவர் போல் கோபிக்க, அவரும் உண்மை யாகவே பயந்து ஒரு புறம் ஒதுங்கி இருந்துவிட்டார்.

பிறகு அன்று இராத்திரி சுவாமிகள் கையேட்டுத் தம்பிரானை யழைத்து, அப்பா! எங்க ளிருவருக்கும் வெவ்வேறே கட்டமுது கட்டி ஒரு கண்டத்தில், மாட்டி அரசனிடத்திற் கொடுத்து நம்மோடு கூட அனுப்பிவையென்று கட்டளையிட்டருள, அவரும் அவ் வாறே செய்தனுப்பி வைக்க, சுவாமிகள் முன்னும், ஸ்ரீ குமார தேவர் பின்னுமாய்ப் போகையில், சில தூரம் போய், சுவாமிகள் இவரைத் திரும்பிப் பார்த்து,என்ன தாமத மென் றதட்ட. அது கேட்டு இவரும் பயந்து. சுவாமி! ஒரு புறம் அச்சு லிங்கம், மற் றொரு புறம் கண்ட யுத்தம் இழுக்கின்றதே என்று சொல்ல, அக் குறிப்பை யறிந்து, சுவாமிகள் தமக்குத் தாமே ஆநந்த பரவச மடைந்து, பிறகு அவ் விடத்திலுள்ள ஓர் குளக் கரை மே லிறங்கி, இருவரும் ஒன்ருக உட்கார்ந்து இரண் டந்நத்தையும் ஒன்ருகச் சேர்த்து ஸ்ரீ குமார தேவர் சுவாமிகளுக்குப் பரிமாற மேற்படி

சுவாமிகள், நைவேத்தியங் கொண்டபின், சேட மான மஹாப் பிரசாதத்தைத் தாமும் உட் கொண்டு, சிறிது நேரம், அவ் விடத்தில் இருவரும் சிற் சில விஷயங்களை வசநித்துக் கொண் டிருந்து, பிறகு மடாலயத்திற்கு வந்து சேர்ந்து, சில நாள் கழித்து. மேற்படி சுவாமிகளிடத்தில், அநுக்ரஹம் பெற்றுக் கொண்டு சாதனை செய்து முதிர்ந்த காலத்தில், ஒரு நாள் சாந்த லிங்க சுவாமிகள், இவரை மகா ராஜா என்று பெய ரிட் டழைத்து, அப்பா! நீ விருத் தாசலத்துக்குப் போக வேண்டு மென்று கட்டளையிட் டருள. அங்ஙனமே நல்ல தென்று விடை பெற்றுக் கொண்டு, விருத்தாசலத்தை நோக்கி வருகிற வழியில். சின்ன சேலத்திற்குக் கீழ்ப் புற மான காட்டில்,இவர் நிமித் தம் அன்பு கூர்ந்து பழ மலை நாதரே ஒரு பிராமண ரூபமா யெழுந்தருளி வந்து, தண்ணீர்ப் பந்தல் வைத்துக் கொண் டிருந்து,இவரைக் கண்டு அப்பா!நீ ஆயாச மாய்ப் போகிற படியால், நால் வகை ஜலமு மிருக்கின்றன. உனக்கு வேண்டிய மட்டும் சாப்பிட்டு விடாய் தீர்க்கலா மென் றுபசரித்துத்,தண்ணீர் கொடுக்க. இவர் அதைச் சாப்பிட்டு தாக நிவிர்த்தி செய்து கொண்டு, விருத்தாசலம் வந்து சேர்ந்து, மணி முத்தா நதிக் கரையி லிருக்கின்ற அரச மரத்து நிழலில், நடந்துவந்த ஆயாசத்தினால், சற்று இளைப் பாறச் சயநித்து பிரமாநந்த நித்திரையி லெழுந்தருளி யிருந் தனர்.

அது சேதி பெரிய நாயகியா ரறிந்து, தன தபிடேகத் திற்குச் சுவர்ண பாத்திரத்தில் வைத் திருந்த பசுவின் பாலை ஏந்திக் கொண்டு, ஓர் பிராஹ்மண ஸ்திரியைப் போல, அங்கு இவரிடத்தில் வந்து, தலைப் பக்கத்தி லுட் கார்ந்து, தனது திரு மடியின் மே லிவரது முடியைத்

தூக்கி வைத்து, அந்தப் பாலைப் புகட்டின பின்பு, இவர் ஆயாசந் தீர்ந்து, கண்ணை விழித்துப் பார்த்து, நீ ஆரம்மா! என்று கேட்க, அப்பா! குமார தேவா! நான் தான் பெரிய நாயகி! நீ எப்போதும் என்னிடத்தில் தானே சுகமாயிரு வென்று திரு வாய் மலர்ந் தருளி, உடனே மறைந்தருளினுள். பிறகு, ஸ்ரீ குமார தேவர், அம்மா! உன் கிருபைக்கு அடிமை யாது கைம்மாறு செய்யவல்லேன்! என்று பலவாறு தோத்திரஞ் செய்து அங்ஙனே பரவச மாய் இருந் தார்.

இதை மேற்படி ஜடா முநி, தேடி யிருந்த பொருள் கிட்டிற் றென வெண்ணி, அம் மரத்தை விட்டுக் கீழே யிறங்கி பிராஹ்மண உருவ மாய் வந்து அதிவிநயத்துடன் அடி வணங்கி நிற்க! இவர் அந்த ஜடா முநியைப் பார்த்து, நீ யார்? என்று கேட்க: நான் ஜடா முநி யென்று சொல்ல; நீ இவ் விடத்திற்கு வந்த காரிய மென்ன வென்று கேட்ட மாத்திரத்தில், ஜடா முநி தன் து சரித்திர முழுதும் விவரமாகச் சொல்ல, அது கேட்டு, ஸ்ரீ குமார தேவரும் சந்தோஷ மாய் ஜடா முநியின் சாப நிவிர்த்தி செய்து, சிறிது நாள் அவ் விடத்தில் தானே கர பாத்திரஞ் செய்து கொண்டிருக்குங் காலத்தில், அவ் விடத்தி லுள்ள ஒரு குடும்பி யானவன், இவரை மகா னென் றறிந்து நாள் தோறும் உண்மை யாய்த் தரிசநஞ் செய்து கொண்டே வர, அவனுக்கு நாளுக்கு நாள் சகல சம்பத்தும் அபி விருத்தி யடைந்து வருகையில், ஓர் நாள், அவன் ஸ்ரீ குமார தேவரைக் கண்டு வணங்கி, சுவாமி! அடியேனுக்கு ஏதேனும் ஓர் திருப் பணி கட்டளையிட்டருள வேண்டு மென்று வருந்திக் கேட்க, ஸ்ரீ குமார தேவரும் அப்பா! அப்படி உனக் கிஷ்ட மிருந்தால் ஸ்ரீ பெரிய நாயகியார்

சந்நிதானத்திற் கெதி ராக ஒரு மண்டபங் கட்டிவை யென்று கட்டளையிட்டருள, அவனும், அப்படியே மகா பாக்கிய மென்று மண்டபங் கட்டும்படி எத்தனித்துக் கட்டும் போது, உத்திரக் கல் மே லேருமல் வருத்த மடைந்து, ஸ்ரீ குமார தேவருக்குத் தெரிவிக்க, ஸ்ரீ குமார தேவரும், விபூதியைக் கொடுத்து இதை அந்தக் கல்லின் பேரில் போட்டுத் தூக் கென்று உத்தரவு செய்ய, அப் படியே செய்து முடித்த பின்பு, அந்தக் குடும்பியும் சந் தோஷ சித்த னய், ஸ்ரீ குமார தேவரை வணங்கி நின்று, சுவாமி தேவரீ ருடைய பிரபாவத்தை யின்ன தென்று அளவிட்டுச் சொல்ல ஆரா லாகு மென்று நாநா வித மாகத் தோத்திரஞ் செய்ய, ஸ்ரீ குமார தேவரும், அவனை அழைத் துக் கொண்டு போய், கோபுர வாயிலிற் செய்து வைத் திருக்கும் இரண்டு துவாரபாலக ருடைய முதுகும் உரை பட்டிருப்பதைக் காண்பித்து, இவர்களுக்குத் தவன கஞ்சி, காய்ச்சி நைவேத்தியம் பண் ணென்று கட்டளையிட் டருள, அவனும் மகாபாக்கிய மென்று அப்படியே செய் வித்துக் கிருத கிருத்திய னானன்.

பிறகு, ஒரு நாள், ஸ்ரீ குமார தேவரும், ஓர் குடும்பி வீட்டு வாயிலில் கர பாத்திரத்திற்குச் சென்று கையேந்த, அவர்கள் இவரது மகிமையை யறியாதவர்களாய், தங்கள் வீட்டில் சமைத்து வைத்திருந்த மச்சத்தை அன்னத்தோடு கலந்து இவர் கையிற் பரிமாற, அது தெரிந்து, ஸ்ரீ குமார தேவரும, அங்ஙனே குளத்தின் நீ ரருகிற் செல்ல, அந்த மச்சம் உயிர் பெற்று குளத்திற் குதித்துப் போய்விட்டது.

இப்படி யிருக்க, ஒரு குஷ்ட ரோகி யானவன், தனது தேக வருத்தம் நீங்க வேண்டு மென்று நாள் தோறும்

இடை விடாமல் ஸ்ரீ குமார தேவரைக் கண்டு தரிசநஞ் செய்து கொண்டே வருகையில், ஒரு நாள் அதிக வாதனை யினால் சகிக்கப்படாதவ னாய், ஸ்ரீ குமார தேவரது திரு வடி யில் வந்து வீழ்ந்து, கோ வென்று அலறி முறையிட, ஸ்ரீ குமார தேவரும், அப்பா! நாம் வயித்திய னல்லவே யென் னலும், அவனும் சுவாமி தேவரீரது திருக் கையினால் விபூதியாகிலுங் கொடுத்தால் எனது ரோகம் நிவிர்த்தியாகு மென் றிரங்கிக் கேட்க, ஸ்ரீ குமார தேவருந், திரு வுள மிரங்கி, விபூதியை யள்ளி அவனது இடக் கையில் வைத்து வலக்கையால் மூடிக் கொள்ளச் சொல்லி பழமலேயார் சந்நிதாநத்தினுள் ஒரு மாடத்தி லிருக்கும் விக்நேசுவர ரைக் குறி யாகக் காண்பித்து, நீ அந்த விக்நேசுவரர் முன்னே போய், இரண்டு கண்களையும் மூடிக் கொண்டு நின்று, அங்கே நடக்கின்ற அதிசயத்தை நமக்கு வந்து சொல் லென்று கட்டளையிட் டருள, அவனும், அப் படியே போய் நின்ற மாத்திரத்தில் அவனுக்குச் சுழுத்தி போற் றேன்ற, அத் தருணத்தில் அந்த விநாயகக் கடவுள் தனது துதிக்கையை நீட்டி இவனது இடக் கையி லிருந்த விபூதியைத் தொட்டது போலக் கண்டு, விழித்து ஸ்ரீ குமார தேவ ரிடத்திற்கு வந்து விண்ணப்பஞ் செய்த மாத் திரத்தில், ஸ்ரீ குமார தேவரும், ஆநந்த மாய் அந்த விபூதி யைத் தொட்டுத் தரித்துக் கொண்டு! அவனையும் தரித்துக் கொள்ளும்படி உத்தரவு செய்ய, அவன் அப்படியே தரித்து வருங் காலையில், அவனது குஷ்ட ரோகம் நிவிர்த்தி யாகிச் சௌக்கிய மடைந்தான்

இப்படி யிருக்கின்ற நாளையில், ஒரு நாள், ஸ்ரீ குமார தேவரும், திரு வாரூர் மஹோற்சவத்திற்கு போயிருந்த

போது, இரதோச்சவத் திநம் தியாக ராஜப் பெருமான் இரத மேறி மாட வீதி திருக் கோலம் வருகையில், அந்த இரதத்திற்கு நேரே ஸ்ரீ குமார தேவர் தரிசநங் கொண் டிருப்பதை இரண்டு சைவர்கள் கண்டு, ஒருவர்க் கொரு வர் விகட மாய், வீர சைவ மருளேப் பார்த்தீர்களோ, வென்று பேசிக் கொள்ள, அந்த விகட வார்த்தையை, ஸ்ரீ குமார தேவர் கேட்டு, இரதத்தில் வருந் தியாக ராஜப் பெருமானைப் பார்த்து, தியாக ராஜப் பெருமானே! "வீர சைவம் மருளானுல் இரதம் நடக்க, அருளானுல் இரதம் நிற்க" என்று, திரு வாய் மலர்ந்தருளினவுடனே இரதம் நின்று விட்டது; பிறகு, ஸ்ரீ குமார தேவர், கொஞ்ச தூரத் திருந்த ஒரு மர நிழலி லுட்கார்ந் திருந்தார், இரதம் நின்று விட்ட சேதி தெரிந்த தர்ம கர்த்த ராகிய தஞ்சா வூர் அரசன், இரத மானது நிலே வந்து சேர்ந்த பிறகு போஜநஞ் செய்கிற தென்னும் நிச்சய முடையவ னுதலால், என்ன செய்வோ மென் றச்ச முற்று, இவ் விடத்தில், நடந்த இரகசியந் தெரியாத படியினுல், சாயங் கால பரியந்தமும் அந்த இரதம் நடக்கும்படி அநேக பிரயத்தநங்கள் செய் வித்தும், அஃது சற்றுகிலும் அசையாது நிற்பதைப் பார்த்து, இனி யென்ன செய்யக் கூடும்! இது யாரால் உற்ற இடறு! அந்தோ! வீணில் விரதம் தவறுத லாகிறதே! எம்பிரானே! என்று வியசந முற்று, மெய் சோர்ந்து வாடி, பிறகு தேறி யிருக்குங் காலேயில், மேற்படி யரசன் அவ் விடத்தில் நடந்த இரகசியத்தைக் கேள்விப் பட்டு, ஸ்ரீ குமார தேவர் இருக்கு மிடத்திற்கு வந்து அவரைக் கண்டு வணங்கி, விண்ணப்பஞ் செய்ய, ஸ்ரீ குமார தேவரும், அரச னேப் பார்த்து, இம் மறுளனிடத்தில் உங்களுக்கு என்ன

அலுவல் போங்க ளென்று சொல்ல, அரசனும் சுவாமி! இந் தப் பிழையை மன்னித்து, இரதத்தை நடப்பித் தருள வேண்டு மென்று, வெகு வாகத் தோத்திரஞ் செய்ய, அதற்கு, ஸ்ரீ குமார தேவரும் திரு வுள மிரங்கி அந்த இராஜ னுடனுஞ், சேனைக ளுடனும், எழுந் தருளி வந்து இரதத்தின் முன்னே நின்று, தியாகராஜப் பெருமானைப் பார்த்து, எமது தயாநிதியே! வீர சைவம் அருளானல் இரதம் நடக்க, மருளானல் இரதம் நிற்க'' என்று திரு வாய் மலர்ந்தருளின மாத்திரத்தில், இரதம் சடுதியில் நடந்து யாவருங் களிக்க நிலையிற் போய் நின்றது.

இப்பால், ஸ்ரீ குமார தேவர், மறுபடியும் விருத்தா சலம் வந்து, அவ் வரச மரத்தின் கீழ் வாசம் பண்ணிக் கொண் டிருக்குங் காலையில், பிரதேசத்தி லுள்ள ஓர் மாந் திரீகன் விருத்தாசலத்தி லுள்ள பத்திரகாளியைத் தன் கைவச மாக்கிக் கொள்ள எண்ணினவ னய்த், தனது நாட்டை விட்டு மணி முத்தா நதிக்கு வட திசை யாக வருகையில், மேற்படி பத்திர காளி யறிந்து, அச்ச முற்றவ ளாய், ஒரு ஸ்திரியைப் போல், ஸ்ரீ குமார தேவரிடத்திற்கு வந்து, அவரைப் பிரதக்ஷிண நமஸ்காரம் பண்ணி அவருக் கெதிரே நிற்க, அது கண்டு, ஸ்ரீ குமார தேவரும் நீ யார்? என்று வினவ, சுவாமி! நான் பத்திரகாளி, என்னைத் தன் வசஞ் செய்து கொள்ளும்படி ஒரு சண்டாளன் வருகின் ருன். அதனல், பயந்து வந்தே னென்று விண்ணப்பஞ் செய்ய, அதற்கு, ஸ்ரீ குமார தேவரும் என்னல் உனக்கு ஆக வேண்டிய தென் னென்று வினவ, பத்திர காளியும் சுவாமி! தேவரீரது திரு வடிகளை அடியாள் சிரசின் மேல் வைத்தால், எனது ஆபத்து நீங்கு மென்று விண்ணப்பஞ்

செய்ய, ஸ்ரீ குமார தேவரும், திரு வுள மிரங்கி, அங் ஙனமே நல்ல தென்று பத்திர காளிச் சந்நிதிக் கெழுந்தருளி வந்து, அந்த விக்ரகத்தின் முடிமேல் தமது திரு முடியைத் தூக்கி வைத்த மாத்திரத்தில், அம் மாந்திரீக னுடைய இரண்டு கண்களும், அவன் மன விருள் போலவே. இரு ளடைந்தன; அது தெரிந்த அந்த மாந்திரீகனும் பயங் கொண்டு, இந்த ஸ்தலத்தில் பெரியோர்கள் வாசஞ் செய்திருக்கின்றனர் போலும் என் றெண்ணி, அவ் விடத்தில் விசாரிக்க, ஸ்ரீ குமார தேவர் எழுந்தழுளி யிருப்பதைக் கேள்விப்பட்டு, அவ ரிருக்குமிடந் தேடி வந்து, அவரைக் கண்டு வணங்கி நிற்க, ஸ்ரீ குமார தேவரும், அவனைப் பார்த்து நீ யார்? என்று வினவ, சுவாமி! நான் மாந்திரீகன், நான் இவ் விடத்திற்கு இந்த உத்தேச மாய் வந்த இடத்தில், எனக்கு இவ் வகையான ஆபத்து நேரிட்டது. இதைத் தேவரீரே தீர்த்தருள வேண்டு மென்று வெகு வாகத் தோத்திரஞ் செய்து நிற்க; ஸ்ரீ குமார தேவரும் சற்றே திரு வுள மிரங்கி அடா! உன் சரீர முள்ள வரையிலும் இந்த மாந்திரீகத்தை விட்டிருப்பா யாகில், உனக்கு ஒரு கண் மாத்திரந் தெரிய, அநுக்கிரகஞ் செய்வோ மென்னலும், அம் மாந்திரீகனும், அப்படியே நல்ல தென்று ஸ்ரீ குமார தேவரது திரு வடியைத் தொட்டுச் சொன்ன வளவில், ஒரு கண் தெரிந்து தன் னுடைய தேசத்திற்குப் போயினன்.

இப்பால், ஒரு குடும்பி யானவன், புத்திரரபேக்ஷை யினால், ஸ்திரியுந், தா னும், நெடு நா ளாய் வியசநப்பட்டுக் கொண்டு, ஸ்ரீ குமார தேவரைக் கண்டு நாள் தோறும் தரிசநம் பண்ணி வருகையில், ஒரு நாள் ஸ்ரீ குமார தேவர் திரு வுள மிரங்கி மேற்படி குடும்பிக்கு விபூதி யளிக்க,

அவ் விபூதிப் பிரசாதத்தால் அவர்களுக்கு இரண்டு ஆண் பிள்ளைகள் பிறந்து, அவர்கள் வளர்ந்து, ஐந்து வய தாகிப் பள்ளிக் கூடத்தில் வைத்து வித்தியாப்பியாசஞ் செய்வித்த பிறகு, அந்தப் பிள்ளைகளுக்கு இலக்கணப்பியாசஞ் செய்விக்க வேண்டி, இலக்கண வித்துவா னாகிய சிதம்பரம் பிள்ளை யென்பவரை, மதுரையி லிருந்து வர வழைத்து மேற்படி இரண்டு பிள்ளைகளுக்கும் இலக்கணப்பியாசஞ் செய்வித்து வருங் காலத்தில், ஒரு நாள் ஸ்ரீ குமார தேவர் குக்ஷி பாதை நிமித்தம் அந்தக் குடும்பி வீட்டுக்கு வருகையில், மேற்படி சிதம்பரம் பிள்ளை யென்னும் உபாத்தியாயர், இவரிடத்தில் மதிப் பற்று இழுமாந் திருப்பதைக் கண்டு, அவரைத் தடுத் தாட் கொள்ளத் திரு வுளங் கொண்டு, அவரை நோக்கி, ஓர் வாக்கியத்தைக் கூறி, அதற்குப் பயன் வினவ, அவருக் கென்ன வித்வத் சாமர்த்திய மிருந்த போதிலும், இந்தச் சந்நிதானத்தில், நா வெழாமையால், பயன் கூறாது மயங்கி நின்று, சற்றே தெளி வுண்டாகி, ஸ்ரீ குமார தேவரது திரு வடியில் விழுந்து வணங்கி, சுவாமி! அடிமையை மன்னித்து இரக்ஷித்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்து, அது முதல் துறவு பூண்டு, மேற்படி ஸ்ரீ குமார தேவரது பின் னாகச் சாயை போற் றொடர்ந்து, தானுங் கர பாத்திரம் பண்ணிக் கொண்டிருந்தார், அவரது ஆராமையையும், மெய் யன்பையும், ஸ்ரீ குமார தேவ ரறிந்து, அவரைத் தமது ஆசிரிய ரிருக்கும் திருப் பேரை யூருக்குக் கூட்டிக் கொண்டு நடந்து, மடாலயத்திற்குச் சமீப மாகப் போகையில், விடியற் காலை யாகையினால், எழுந் திருந்து வெளியே வந்து நிற்கிற தம்பிரானைக் கண்டு, சுவாமிக ளிருக்குஞ் சமைய மெப்படி

யென்று வினவ, சுவாமிகள் பர நிட்டையி லெழுந்தருளி யிருக்கின்ற தெனக் கூற, ஆனல், நாம் பணி செய்வோ மென்று நினைத்து, ஸ்ரீ குமார தேவர் சாணச் சட்டி யெடுத்துக்கொண்டு திருமெழுகிட, சிதம்பர சுவாமிகளும், திரு வல கெடுத்துக் கொண்டு திரு வல கிட்டார்; இத் திருப் பணி முடிந்த பின்பு, சுவாமிகள் திருக் கண் விழித் தருளிய சேதி தெரிந்து இவ் விருவர்களும் மடாலயத்துட் சென்று சுவாமிகளைக் கண்டு வணங்கி நிற்க, சுவாமிகளும் ஸ்ரீ குமார தேவரைப் பார்த்து, அப்பா! உன்னை யடுத்து நிற்கின்றவன் யார்? என்று வினவ, தென் ஞட்டுச் சைவ னென்று சொல்ல, இவனை ஏ னழைத்து வந்தாய்? எனறு கேட்க, அதற்கு, ஸ்ரீ குமார தேவர் மௌனமா யிருந்து விட்டார், இப்படி இரண்டு திநஞ் சென்ற பின்பு, சிதம் பர சுவாமிகளது நடையைக் கையேட்டுத் தம்பிரான் அறிந்து, சுவாமிகளை வணங்கிநின்று, சுவாமி இந்தச் சைவன் மிகுந்த வல்லவனு யிருக்கிறபடியால் இவனைத் திரு வடிக்கு ஆளாக்கிக் கொள்ள வேண்டு மென்று விண் ணப்பஞ் செய்ய, அதற்கு சுவாமிகளும், மேற்படி தம்பி ரானைப் பார்த்து, அப்பா! நமக் கிருக்கிற சந்ததி போதும்; நமது சந்ததிக்குச் சந்ததி நெடு நாளா யில்லா திருந்து, இப்போது கிடைத்தபடியால், அப்படியே செய்விக்க வேண்டு மென்று கட்டளையிட, அதற்குத் தம்பிரான் மௌனமா யிருந்துவிட்டார். இப்படி இரண்டு நாள் கழிந்த பின்பு, மூன் ருவது நாள், சாந்த லிங்க சுவாமிகள், ஸ்ரீ குமார தேவரை அழைத்து, நீ உன் னிருப்பிடம் போ வென்று சொல்ல, ஸ்ரீ குமார தேவரும், இவன் இவ் விடத்தி லிருக்கட்டு மென்று விண்ணப்பஞ் செய்ய, சுவாமிகள் இவ் விடத்தில் வேண்டாம், நீயே யழைத்துக்

கொண்டு போ வென்று சொல்ல, ஸ்ரீ குமார தேவரும் இவனைக் கொண்டு போய் அடிமை யென்ன செய்கிற தென்று கேட்க, சுவாமிகளும், ஸ்ரீ குமார தேவரைப் பார்த்து, அப்பா! நீ இவனைக் கொண்டு போய்ப் பக்குவ மறிந்து, உனக்குச் சொன்னதை இவனுக்குச் சொல்லிவை யென்று கட்டளையிட, ஸ்ரீ குமார தேவரும், மகாப் பிரசாத மென்று விடை பெற்றுக் கொண்டு, இருவரும் விருத்தா சலம் வந்து சேர்ந்து, பிறகு சிதம்பர சுவாமிகளது பக்கு வஞ் சோதித்து அநுக்கிரகஞ் செய்து அருளினர், இவர் தான், திருப் போரூர்ச் சந்நிதானம் விளக்கிய சிதம்பர சுவாமிகள்.

இப்படி நடந்து வருங் காலத்தில், பெரிய நாயகியாரும், ஸ்ரீ குமார தேவரால் சாஸ்திரஞ் செய்விக்குமபடி திரு வுளங் கொண்டு, ஸ்ரீ குமார தேவரது யோகில் வந்து, அப்பா! குமார தேவா! நீ சாஸ்திரஞ் சொல்ல வேண்டு மென்று திரு வாய் மலர்ந் தருள, ஸ்ரீ குமார தேவரும், அம்மா! அடிமையாற் சொல்ல முடியா தென்று விண்ணப் பஞ் செய்ய, பெரிய நாயகியாரும், ஆனல், நாமே உனது நாவில் நின்று சொல்லி முடிக்கின்றோ மென் றநுக்கிர கித்து, அங்ஙனே. இந்த ஷோடசு மகா சாஸ்திரங்களையுஞ் சொல்லி முடித் தருளினா. இப்படி அநந்த மகத்துவங் களைச் செய்து, அந்தத்தில், ஸ்ரீ குமார தேவரும், சொரூப சாக்ஷாத்கார பரிபூரண தசையை யடையுஞ் சமய மறிந்து, இரண்டாவது அடிமை யாகிய ரெட்டி சிதம்பர சுவாமிகள், ஸ்ரீ குமார தேவரைப் பார்த்து, சுவாமி! தேவர் பரிபூரண மான பின்பு, அடியார்கள் தரிசனஞ் செய் துய்யும் பொருட்டு, ஓர் திருப் பணி கட்டளையிட்டருள வேண்டு

யென்று வினவ. சுவாமிகள் பர சிட்டையி லெழுந்தருளி யிருக்கின்ற தெனக் கூற, ஆனால், நாம் பணி செய்வோ மென்று நினைத்து, ஸ்ரீ குமார தேவர் சாணச் சட்டி யெடுத்துக்கொண்டு திருமெழுகிட, சிதம்பர சுவாமிகளும், திரு வல கெடுத்துக் கொண்டு திரு வல கிட்டார்; இத் திருப் பணி முடிந்த பின்பு, சுவாமிகள் திருக் கண் விழித் தருளிய சேதி தெரிந்து இவ் விருவர்களும் மடாலயத்துட் சென்று சுவாமிகளைக் கண்டு வணங்கி நிற்க. சுவாமிகளும் ஸ்ரீ குமார தேவரைப் பார்த்து, அப்பா! உன்னை யடுத்து நிற்கின்றவன் யார்? என்று வினவ, தென் னாட்டுச் சைவ னென்று சொல்ல, இவனை ஏ னழைத்து வந்தாய்? என்று கேட்க, அதற்கு, ஸ்ரீ குமார தேவர் மௌனமா யிருந்து விட்டார். இப்படி இரண்டு தினஞ் சென்ற பின்பு, சிதம் பர சுவாமிகளது நடையைக் கையேட்டுத் தம்பிரான் அறிந்து, சுவாமிகளை வணங்கிநின்று, சுவாமி இந்தச் சைவன் மிகுந்த வல்லவனா யிருக்கிறபடியால் இவனைத் திரு வடிக்கு ஆளாக்கிக் கொள்ள வேண்டு மென்று விண் ணப்பஞ் செய்ய, அதற்கு சுவாமிகளும், மேற்படி தம்பி ரானைப் பார்த்து, அப்பா! நமக் கிருக்கிற சந்ததி போதும்; நமது சந்ததிக்குச் சந்ததி நெடு நாளா யில்லா திருந்து, இப்போது கிடைத்தபடியால், அப்படியே செய்விக்க வேண்டு மென்று கட்டளையிட, அதற்குத் தம்பிரான் மௌனமா யிருந்துவிட்டார். இப்படி இரண்டு நாள் கழிந்த பின்பு, மூன்றாவது நாள், சாந்த லிங்க சுவாமிகள், ஸ்ரீ குமார தேவரை அழைத்து, நீ உன் னிருப்பிடம் போ வென்று சொல்ல, ஸ்ரீ குமார தேவரும், இவன் இவ் விடத்தி லிருக்கட்டு மென்று விண்ணப்பஞ் செய்ய, சுவாமிகள் இவ் விடத்தில் வேண்டாம், நீயே யழைத்துக்

கொண்டு போ வென்று சொல்ல, ஸ்ரீ குமார தேவரும் இவனைக் கொண்டு போய் அடிமை யென்ன செய்கிற தென்று கேட்க, சுவாமிகளும், ஸ்ரீ குமார தேவரைப் பார்த்து, அப்பா! நீ இவனைக் கொண்டு போய்ப் பக்குவ மறிந்து, உனக்குச் சொன்னதை இவனுக்குச் சொல்லிவை யென்று கட்டளையிட, ஸ்ரீ குமார தேவரும், மகாப் பிரசாத மென்று விடை பெற்றுக் கொண்டு, இருவரும் விருத்தா சலம் வந்து சேர்ந்து, பிறகு சிதம்பர சுவாமிகளது பக்கு வஞ் சோதித்து அநுக்கிரகஞ் செய்து அருளினர், இவர் தான், திருப் போரூர்ச் சந்நிதானம் விளக்கிய சிதம்பர சுவாமிகள்.

இப்படி நடந்து வருங் காலத்தில், பெரிய நாயகியாரும், ஸ்ரீ குமார தேவரால் சாஸ்திரஞ் செய்விக்கும்படி திரு வுளங் கொண்டு, ஸ்ரீ குமார தேவரது யோகில் வந்து, அப்பா! குமார தேவா! நீ சாஸ்திரஞ் சொல்ல வேண்டு மென்று திரு வாய் மலர்ந் தருள, ஸ்ரீ குமார தேவரும், அம்மா! அடிமையாற் சொல்ல முடியா தென்று விண்ணப் பஞ் செய்ய, பெரிய நாயகியாரும், ஆனால், நாமே உனது நாவில் நின்று சொல்லி முடிக்கின்றோ மென் றநுக்கிர கித்து, அங்ஙனே. இந்த ஷோடச மகா சாஸ்திரங்களையுஞ் சொல்லி முடித் தருளினா. இப்படி அநந்த மகத்துவங் களைச் செய்து, அந்தத்தில், ஸ்ரீ குமார தேவரும், சொரூப சாக்ஷாத்கார பரிபூரண தசையை யடையுஞ் சமய மறிந்து, இரண்டாவது அடிமை யாகிய ரெட்டி சிதம்பர சுவாமிகள், ஸ்ரீ குமார தேவரைப் பார்த்து, சுவாமி! தேவர் பரிபூரண மான பின்பு, அடியார்கள் தரிசனஞ் செய் துய்யும் பொருட்டு, ஓர் திருப் பணி கட்டளையிட்டருள வேண்டு

மென்று விண்ணப்பஞ் செய்ய, அதற்கு, ஸ்ரீ குமார தேவர், நாம் மறைந்தும், நமது பெயர் இருக்க வேண்டுமா வென்று, அகண்ட பரிபூரண சாக்ஷாத்கார சொரூப வியா பகத்திற், புரட்டாசிமீ பூர்வ பக்ஷம் சதுர்த் தசியில் கலந் தருளினர். இப் பால் ரெட்டி, சிதம்பர சுவாமிகளும், ஸ்ரீ பெரிய நாயகியார் கட்டளைப்படி ஸ்ரீ குமார தேவர் திரு நாமத்தினல் கோயில் மடாலய முதலாகியவைகளுஞ் செய் வித்து, பிறகு தாமும், பரிபூரண தசையை யடைந் தருளி னர்.

குமார தேவர் செய்த நூல்.

1. மகா ராஜத் துறவு.
2. சுத்த சாதகம்.
3. விஜ்ஞாந சாரம்.
4. அத்துவித வுண்மை.
5. பிரமாநுபூதி விளக்கம்.
6. ஞாந வம்மாளை
7. வேதாந்த தசாவத்தைக் கட்டளை.
8. வேதாந்த தச காரியக் கட்டளை.
9. சகஜ நிஷ்டை
10. உபதேச சித்தாந்தக் கட்டளை
11. பிரம சித்தி யகவல்
12. சிவ தரிசந அகவல்.
13. ஆகம நெறி அகவல்.
14. வேத நெறி யகவல்.
15. பிரமாநுபவ அகவல்.
16. சிவ சமரச வாத அகவல்,

பெரிய நாயகி யம்மன் பதிகம்.

31. ஸ்ரீ குமார தேவர் சரிதம் முற்றுப் பெற்றது.

தொண்டை நாட்டின்கண்
ஸ்ரீ சிவ சுப்ரமணிய சுவாமி ஸ்தலங்களுள் ஒன்ருகிய
திருப் போரூர் ஆதிநம்

## 32. ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் சரிதம்.

உலக மிறைஞ்சு நிலை பெற் றுள்ள தாய்க், காண் டகு வள நிறை பாண்டி நன் ஞட்டின், வரு பல பாண் டியர், திரு வர சிருக்கை யாய், மலைய மாதவ னென நிலவு மெய்க் குரவஞற் றலையளிசெய, நனி வளர் தமிழ்ப் பெரும் பயன், பொங்கப் பலவிளை சங்கப் பலகை சேர், தெய்வத் தகைய தாம் வையை யடுத்ததா, யெண்ணில் சிரங்கற் கண்ணிம ஞுளன், றிருவிளை யாட லிருநா லெட்டு, நிகழ்தரு தலமெனப் புகழ் திரு மதுரையிற், சங்கப் புலவர் மரபிற் ருேன்றிச் சிதம்பர கவி ராஜ ரென்னும் பெய ரினரா, யங்கயற்க ணம்மை யுபாசநா விரத மேற் கொண் டிருந்தனர்,

கொங்கு தேயத்தி லுள்ள, பே ரூர் அவிநாசி யென் னுந் தலத்தில், வீர சைவ சமயாசாரிய, ராய் வீற் றிருந்த, சிவப் பிரகாச சுவாமிகள தருள் பெற்ற, அவரது சகோதரி புத்திர ராகிய, சாந்த லிங்க சுவாமிகள், குரு மூர்த்த மாகி, அங்கு எழுந் திருந்த நாளிற், கன்னட தேயம்,புங்க னூரில், அரசியல் புரிந் திளமையிற் ருனே, துறவு பூண்டு, சாந்த லிங்க சுவாமிகளால், ஞாநோபதேசம் பெற்று, அவர் கட்ட ளைப்படி விருத்தாசலத்தில் வந்த குமார தேவர், மணி முத்தா நதிக் கரையில், ஓ ரரச மர நிழலி லெழுந்தருளி யிருக்க, அம் மரத்தின்கண் பூர்வம் ஒரு காரணத்தாற் காத்திருந்த பிரம ராக்ஷஸ ு, குமார தேவரது தீக்ஷண்யத்

தால், அவர்க் கெதிர் வரலும், யார் நீ யென வினவத், தனது *பூர்வ சரித்திரங்களை விண்ணப்பஞ் செய்து, தரிசனை பெற்று, முன்னைய தேகத்தை யடைந்து விடை கொண்டு சென்றது.

பின்னர், குமார தேவர், ஆறு மாதத்திற் கொருமுறை சாந்த லிங்க சுவாமிகளது தரிசனார்த்தம் அவிநாசிக்குச் சென்று, விருத்த கிரிக்கு வரும் நியமங் கொண்டிருந்தபடி, தாம் விருத்த கிரியி லிருந்து வருகிற மார்க்கத்தி லோரூரிற், சிவ பக்தியிலும், அடியார் பூசனையிலும், முதிர்ந்த அன் புள்ள, ஒரு ரெட்டியாரது வேண்டுகோளால் அவ ரில்லத் திற் பிக்ஷை யங்கீகரித்து நடக்கின்றவரா யிருந்த போது, அவருக்கு, புத்திரர்க ளுண்டாக வநுக்கிரகிக்கப் பிறந்த குழந்தைகளுக்கு, ரெட்டியார் வித்தியாப்பியாசஞ் செய் விக்க வேண்டிச், சிதம்பர கவி ராஜ ரவ்வூருக்கு வரக் கண் டுபசரித்து, அவரைக் கொண்டு, கல்வி பயில்வித்து வருகையில், அக் காலத்தில் வந்த குமார தேவர், அங்கு சிதம்பர கவி ராஜர், அப் பிள்ளைகளுக்கு வாசிப்பிக்கின்ற வளமையும், கல்வி மாக்ஷிமையையும், கேள்வி யுற்று நோக்கி, அவரை யாட் கொள்ளக் கருதிச், சில வேதாந்த

*பூர்வ சரித்திர மாவது தான் கைலை, சாரலிற் காமி யத்தை யுத்தேசித்து தவம் செய்ததும், பரம சிவம் பிரசந்ந மான போது, நிஷ்காமியத்தைப் பற்றி வரங் கேட்டதா லிவ் வுரு வா கென்று சபித்ததும், அங்கு நிஷ்காமியத்தை முன்னிட்டுத் தவம புரிந்த, மற்றோர் மூவருள் ஒருவர் சிவப் பிரகாசர், ஒருவர் சாந்த லிங்கர், மற் றொருவர் குமார தேவ ராய் வருவ ரென்றதூஉம், அக் குமார தேவராற் சாபம் நிவிர்த்தியாயிடு மென்றதுமாம்.

இவற்றை இப் போது பாடலாய் சிதம்பர சுவாமிகள் புரா ணத்திற் கண்டு கொள்க.

சொற்களுக்குப் பொருள் வினவ உத்தரஞ் சொல்ல விசை யாமற் சும்மா விருந்ததை நோக்கி, நாம் வினவியவை அரிய பொருளின வாதலால், இன் னொரு கா லிவண் வரும் பொழுது சொல்க வென் றுரைத்துச் சென்று, தமது ஆசிரிய தரிசநம் பெற்று விருத்தாசலம் சேர்ந்திருந்து, பின்னும் அவ் வாறு வந்த போது, ரெட்டியார் கிரகத்தில் கவி ராஜரை நோக்கி வினவ, முன்னைய வாறே சும்மா விருக்க, நாம் பிக்ஷை பண்ணிக் கொண்டு வருவதற்குள், முன் வினவிய சொற்களுக்கு பொருள் சொல்லக் கடவை யென்று கட்டளையிட், டுள்ளே போந்து புசித்து வந்து கிருபா நோக்கத்தில், கேசாதி பாதம் வரை மூன்று முறை நோக்கித், தம தாசிரிய ரிருக்குந் திசையை யுன்னி வழிக் கொண்டனர்.

சிதம்பர கவி ராஜரும், அச் சொற்களின் பொருள்களை யுள் ளுணர்ந்து, அன்பும், பத்தியு மேலிட்டு, அவரை விட்டு நீங்காச் சாயை போற் றொடர்ந்து சென்று, அன் றிர வெல் லாம் நடந்து விடியற் காலையில் அவிநாசியிற் குரவர் இருக் கையிற் சேர்ந்தனர். அவ் வமயம் உதய கால மானதாற், குமார தேவர் கோமயங் கரைத்துத் திரு மடத்தின் தலை வாயிலில் தெளிக்கச், சிதம்பர சுவாமி திரு வலகிட, இங்ங னம் பணி புரிந்து, பின்னர்த் தம் நியமங்களை முடித்து, முன் னும் பின் னு மாக, இருவரும் பரிஞமத்திற் புகுந்து, சாந்த லிங்க மூர்த்தி சந்நிதாநத்தில் தரிசநார்த்தம் புறங் காத்திருக்க, ஆசிரியர் ஒடுக்கத்தினின்றும் புறம் போந்து அங்கு நின்ற இருவரையுங் கண்ணுற்று, மீண் டுள்ளே யெழுந் தருளித் தா மியற்றியுள்ள, வைராக்கிய சதகம், தீபம், அவிரோத வுந்தியார், கொலை மறுத்தல், முதலிய

நூல்களேயும், கண் ணுடைய வள்ளலார் ஒழுவி லொடுக் கத்தையும், எடுத்து வந்து, தரிசநந் தந்து, குமார தேவரை நோக்கி, அப்பா! நாம் உன்னைப் புத்திர னாகக் கொண்டாற் போல, நீயு மிவ் வொரு புத்திரனைக் கொணர்ந்தாய், இப் பிள்ளை, கல்வி கேள்விகளா லமைந்த பக்குவசாலி யாக லால், இத் தோன்றலைக் கொண் "டிந் நூல்களுக்கு உரை யியற்றுவித்திடுக" வென்று, தாங் கொணர்ந்த புத்தகங் களைத் தந் தருள, அவற்றைக் குமார தேவர், இரு கையா லும், ஏற்றுக் கண்களி லொற்றிக் கொண்டு, சிதம்பர தேவ ரிடத்தி லளிக்க, அவரும் கைகளி லேந்திச் சிரத்தில் வைத் தஞ்சலித்து நிற்கக், குமார தேவர் ஆசிரியரை வணங்கி, தேவரீர் இப் பிள்ளையைப் புத்திர னாகக் கடாக்ஷித்தல் வேண்டு மென்ன, ஆசிரியர் நமக்குப் புத்ரன் நீ யிருக்கின் றனை, அவ் வா றுனக்குப் புத்திர னாக விவ் விளவலைக் கொள்க, வென் றருளி, விடைதரக் கொண்டு சிதம்பர சுவாமியுடன் விருத்தாசலத்தி லடைந்தனர்.

இங்கு குமார தேவர், சிதம்பர தேவருக்கு, வா துளா கம, வீராகமங்களிலும், உத்தர சைவ சித்தாந்தத்திலும், நிருபண மாகி யுள்ள, வீர சாமாநியம், வீர விசேஷம், வீர நிராபார முதலிய இரு பத் தொரு தீக்ஷையையும், வீர சைவ விதி முறையை யநுக்ரஹித்து, இயமாதி அங்க யோகங் களையு முணர்த்தி, ஞானோபதேசம் செய்து, சமாதி கூட்டு விக்க, அவ் வாறே, தாம் அவற்றை யுள்ளங் கைக் கனி போல, ஐய மாதி முத் தடையு மற நன் குணர்ந்து, ஞாந சமாதி கூடி யிருக்கையில், ஒரு மயில் தோன்றித் தனது சிறகை விரித்துச் சொருபத்தை மறைத்து நிருத்தம் செய்த தைக் குமார தேவரிடத்தில் விண்ணப்பஞ் செய்ய, ஆசிரியர் அந்த ரகசியத்தைப் புலப்படுத்தாமல், சிதம்பர மூர்த்தியை

நோக்கி, உனக்கு உபாசநா மூர்த்தியா யுள்ளது யா தென்ன? மதுரை அங்கயற்கண் அம்மை யெனக் கேட்டு, நம்மை யிங்குப் பெரிய நாயகியார் ஆட் கொண் டுயிர்க் குறுதித் துணையா யிருக்கின்றபடி, நீ, மதுரைக்குச் சென்று அங் கயற்க ணம்மையை யுபாசித்தால், தேவியார் உனக் குறுதித் துணையாய் நின்று, அதனைப் புலப்படுத்து மென்று விடை தரச், சிதம்பர மூர்த்தி, ஆசிரியரை வணங்கித், தேவ ரீரே அதனைத் திரு வுளம் பற்ற லாகாதோ வென, ஆசிரியர் அப்பா! உனக்கு உபாசநா மூர்த்தியா யுள்ள தேவியார் சந்நிதிக்கே போதல் நல மென் றுரைத்தனர்.

குரு வாக்கியந் தவறுமல், திரு மதுரைக் கெழுந் தருளி நாற் பத் தைந்து நாள் கொண்ட ஒரு மண்டல அளவை யுள் தேவியார், தரிசநந் தந் தருளாவிடில், அங் குள்ள பொற் றாமரைத் தீர்த்தத்தில் தாம் வீழ்ந்து வியூக மாயிடுவ தாக நிச்சயஞ் செய்து கொண்டு, தேவியார், சந்நிதிக்கெதி ரில், நா டோ றும் பொற் றாமரையி லாடி. நித்திய நியம முற்று, ஒரு பிடி பச் சறுகும், மூன் று கை அத் தீர்த்தமும், ஒரே வேளை புசிப் பாக உட் கொண்டு, நிஷ்டை சாதித் திருக்கையில், தேவியார் சோதனைக் காரண மாக, சுரமும், கை காற் பிடிப்பும், சிறங்கு முதலிய நோய்களும், சம்ப விக்க, அவற்றால், மிகவும் வருத்தங்கள் நேரிட்டும், தமது ஊக்கஞ் சோராமலும், அருந் தவம் தவறு படாமலும், நிலைத்துச் சில நாள் செல்லப், பின்பு தம்மால் எழுந்து நிற் கவும், அசையவும், அசக்த ராய்த் தவ றுற்றதையும்; தாம் நின்ற நிலை பெயராமல் அங்கு தரிசநார்த்தம் வருகின்ற வர்களால், அறுகும், நீரும், வருவித்துத் திநந்தோறும் உச்சி

காலத்தி லவற்றைப் புசித்து, அந் நா ளளவை வரையில், தமது விரதத்தை நிறைவேற்றி, மீநாக்ஷி யம்மையின் அநுக்கிரஹார்த்தம், கலி வெண்பா வென்னும் ஓர் தமிழ்ப் பிரபந்தம் பாடினர். அது போழ்து தேவியார், திரு வுள மகிழ்ந்து, எதிர் வந்தருளி இவரது சரீரத்தி லுள்ள பிணிகளுடன், மலப் பிணியும், விலகு மாறு மலர்க் கரத்தாற் றடவித், திரு வாய் மலர்ந்தருளி நின்றார். உனது அநுபவத்திற் சொருபத்தை மயி லாடி மறைக்கின்ற தாவது, இப் பதியின் வடபால் முப் பது யோசனை தூரத்தில் யுத்த புரி யென்று சுப்ர மண்ய க்ஷேத்திரம் ஒன் றுண்டு. அஃது இதற்கு முன் ஆறு தரம் பிரசித்தி யாய் விளங்கி யிருந் திப் போது ஜீரணப்பட்டிருக்கின்றது, இனி ஏ ழாந் தரம் உன்னாலே ஜீரணோத்தாரண மாகி, நிலை பெற்று விளங்க, வேண்டுவதா யுள்ளது. அத் தல மூர்த்தியே உனக்குக் குரு வடிவா யெழுந்தருளித் தரிசநந் தந்து, மேல் உண்மையை விளக்கும். இக் காரண மாக, அக் கடவுள் உனது நிஷ்டா நுபவத்தில், மயி லுருவாய் வந்து சொருபத்தை மறைத்த தென்று காண்க. ஆதலால், நீ இது போதே யத்தலத்திற்குச் செல்க வெனத் திரு வுளம் பற்றினர். இவ் வா றருள் பெற்ற, சிதம்பர தேவர் சிவ ஞாந பேற்றை யடையும் வண்ணம், எண்ணிய அடியேனுக்கு ஸ்தல ஜீரணோத்தாரணம் செய்க வென்றோ அருளிச் செய்தீர். தாமே அடியேன் வேண்டுகோளை யநுக்ரஹிக்கலாமே யென்று குறை யிரக்கத், தேவியார் இன்று முதல் நாற்பது தினங்களுள், அத் தலத்து முருகவேளே ஆசிரிய வுருவாய் முன் வந் தருள்புரியுமாதலா, லுனக்கு அவன் அநுபூதி சித்தி யாகும். இவ் வமயம் தவறுபடில், மேலே ஜநநமெடுக்க வரும், அஞ்சே லென வுரைத்து, மறைந் தருளி

னர். அவ் வாறே, சிதம்பர மூர்த்தி, தேவியார் அருட் பிரசாதத்தை மேற்கொண் டடி வணங்கிப் போற்றி யுத்த புரி யென்னுந் திருப் போ ரூரை நோக்கி வட திசை வழிக் கொண்டு வருவா ராயினர். இஃது நிற்க.

அந் நாளில், திருப் போ ரூர் ஆ ருவது முறை ஜீரண முற்றுப் பனங் கா டாகிப் பல வகை கொடிகளாலும், செடிகள், விருக்ஷங்களாலும், அடர்ந்ததா யிருந்தது. அக் காட்டில், ஒரு பெண்பனைச் சாரலில், ஸ்ரீ சுப்ரமண்யம் புற் றிடங் கொண்டு வீற்றிருந்தது. அக் காட்டின் கிழக்கே, சிலர் பயி ரிடுந் தொழிலின ராய், வீடு கட்டிக் கொண் டிருந்தனர். அவ் வூரில் விஸ்தாரம் பனை மரங்க ளுள்ளன வாகையால். சான்ருர்கள் சிலர், அம்மரங்களிற் பனம் சாறு, நுங்கு, பழம், கிழங்கு முதலியவையால், ஜீவனஞ் செய்து வந்தனர். அவருள் ஒருவன், அப் பனங் காட்டிடத்தில், ஒரு பெண் பனை மரம் நன்ருய், யுயர்ந் தோங்கி வளர்ந்து ஓலைக் கோர் பாளை யாக அரும்பி விசோதித்துக் குலைகள் செழித்திருந்ததைத் கண்டு, அம் மரத்தை யடர வூறுங் கொடிகள் சூழ்ந்திருந்ததைக் களைந்து, அம் மரத்தி லேறிப் பாளைகளைச் சிறுக் கறுத்துக் குடங்களைப் புகட்டி, யதனுற் கிடைத்த மதுவின் பயனை ஒரு பொழுது காண விசேஷ பிரயோஜநம் பெற்று, அன்று மாலைப் போழ்தில் வந்து பார்க்க, முன் போலவே அக் கொடிகளால் அது அடரப்பட்டிருந்தது கண்டு, அது களைத் துணித்து, மது பலனைக் கைக்கொண்டனன். அங்ஙனம் நா டோறும் அதிகரித்துப் படர்ந்து சுற்றிக் கொள்ளும் அக் கொடிகளை இரண்டு காலமுங் களைந்து

அம் மரத்திற் குடங் குட மாக மதுவை யவ் வொருவனே கொண்டு போகத் தொடங்கினன். நா டோறும், கொடி களை யறுப்பதில் மிகவும் வருத்த முற்று, அதனை வேறுடன் களைய வெண்ணி, அதற் கேற்ற கருவிகளைக் கொண்டு, சிலருடன் வந்து சுற்றிலு முள்ள புதர்களை வேர் களைந்து வருகையில், அம் மரத்தின் கீழ்த் திசையினின்று, மேற் றிசையி லோங்கிப் படுத்துக் கீழே யுருவி யோடிய மூல வேரைப் பற்றி யரிவாளால் வெட்ட, அங் குள்ள புற்றில் திரு மேனி மறைந் துள்ள ஸ்வயம்புவின் மேல் தாக்கின தால் சிவப்பு உண்டாயிற்று. அதனைக் கண்டு சான்றோன் முதலியோர், துண் ணென அச்சுற்றுத் துடித்து, மூர்ச்சை யாயினர். இவ் வாறு, நோக்கிய பிற னொருவன், அயலி லுள்ள பனைமரங்களி லேறிக் கொண் டிருந்தவர்கட்குத் தெரிவிக்க, அவர்கள் பொள் ளென வந்து மூர்ச்சை யுற்ற வர்களைச் சீதோபசாரஞ் செய்து, பெண் பனையின் அடியைப் பற்றி நன்கு சோதித்துப் பார்க்க, அப் புற்றி னுட் ஸ்வயம்புவைக் கண்டு, அஞ்சிப் பக்தி மேலிட்டு முருகக் கடவுளைத் தோத்திரம் செய்ய, மூர்ச்சை யடைந்து கிடந்தவர்கள், தெளிந் தெழுந்து போற்றினர். அது முத லாக, அச் சான்றோர் தமக்குள் ஏணிக் கோர் பெரிய பணம் ஏற்பாடு செய்து சுவாமிக்குக் கூரைக் கட்டிட மாக ஓர் சிற் றாலயம் புரிவித்து அவ் வூர்க் குடிகளுடன் சேர்ந்து, சுவாமிக்குப் பூஜை முதலியவை நடத்த ஆதி சைவ ரொருவரை நியமித்தனர். அவர் முத நாள் ஸ்வாமிக்குத் திருமஞ்சன முதலியன செய்து, கற்பூர ஆராதனை செய்கை யில், அவ்வூரும், குற்றாலயமும், அந் நிலையே வே றோர் காரண மின்றிப் பற்றிக்கொண்டது கண்டு, அவ் வாதி

சைவ ரஞ்சி யோடிப் போயினர். ஊராரும், மிகவும் பயந் திருந்தனர். அது காரண மாக, சுவாமிக்குச் சின் ளுள் பூசை முதலியவு மில்லாம லிருந்தன.

இப்பால், சிதம்பர சுவாமிகள், அங்கயற்கண் அம்மை யருளியதை விண்ணப்பம் செய்ய நினைந்து, மதுரையினின் றும் விருத்தாசலத்திற்கு வந்து பார்க்க, அவ் வமயம் குமார தேவர் நிஷ்டையி லிருந்தபடியால், நிட்டை தெளியக் காலம் நீடிக்கும். அது காறு மிங் கிருந்து சேவித்துச் சொல்லிக் கொள்ள வேண்டின், தேவியார் கட்டளையை நடத்தத் தாமதிக்கு மென்று கருதி (அகண்டாகார மய மாகிச் சுட் டிறந்த சுகாதீத மாகி, யுல குயிர் பர மென்று வேறு கருதற் கேலாத சச்சிதாநந்த சம்பூர்ண ஜோதியின் வசத்த ராய் நின்ற நிலை பெயராது) ஆசிரியரை வல முற வந்து வணங்கிப், புற விடை கொண்டு, வட திசை வரு கையிற், பொம்மைய பாளைய மென்னும் ஊரினிற் சிவா நு பூதிச் செல்வ ராகியும், சதுரக் கள்ளிப் பாலே தம துண வாக வுண்பவரும், சிதம்பர சுவாமிகளது அதிதீவிர பக்குவ தசையில், கைவந்த அநுபவ சித்தியைக் கேள்வி யுற்று, அவரைப் பார்க்க விருப்பங் கொண்டிருந்தவரு மாகிய, பாலைய சுவாமிகளைத் தாமுங் காணு மாறு அவர் வசித் திருக்கும் வீதி வழியே செல்லாநிற்க, அச் சமயம், வைகறை யாகலால், பாலைய சுவாமிகள் குளக் கரையி லிருந் தெதிராய் வர, இருவரும், நோக்கி யளவளாவி வசித்துக் கொண்டு, திரு மடத்தின் தெருத் திண்ணையி லெழுந்தருளியிருந்து, தந்த தாவநம் செய்து கொண்டே எட்டு நாள் வரை யிராப் பகல் விடாமற் சுபாநு பவத்தை முன்னிட்ட நிலைகளைப் பேசிக் கொண்டிருந்து, ஒன்பதா

நா ளுதய காலத்தில், மேட்டு மடையில், திரும்பி வாய் பூசிக் கொண்டு, சிவார்ச்சனை முடித்து, அவருடன் புசித்து, விடை கொண்டு வந்தனர். சின்னுள் பின்பு, ஸ்ரீ மயிலாசல மென்னும் க்ஷேத்திரத்தில் தமது குரு மூர்த்தி யாகிய ஸ்ரீ சுப்ரமண்ய சந்நிதியில், பாலைய சுவாமிகள் நிரதிசயாநந்த பூரண ராயினர்.

கிளிய னூர் வழியே வரும் சிதம்பர தேவர், அவ் வூர்ச் சோலையிற் பா கோடிக் கொண்டிருந்த செங் குந்தரைப் பசிக் கந்நங் கேட்க, அவர்க ளன்ன மிடுதற்குச் சற்று நேரந் தாமதித்கு மென அங் கிருந்து தமது நிலையைக் குறிப்பா லுணர்ந்த, ஒரு விதந்து வாகிய மூதாட்டி, யிரு வினை யொப்பு மலபரிபாகம் நேரிட் டிருந்தா ளாகையாற், சுவாமிகளைக் கண்டவுடன் பத்தி மேலிட்டு வலம் வந்து, பணிந் துபசரித்துத், தந்த கேழ்வரகா லாய புற்கை யமு தைப் புசித்து, அம் மூதாட்டியைக் கிருபா நோக்கம் செய்து, நடக்கப் பின் தொடர்ந்த அம்மையை நோக்கித், தாயே! நீ தொடர்வது யாது கருதி யென வினவத், தேவ ரீர்க்கு அடியாள் பணிவிடை புரிந்து புசிதை யாக வேண்டி னேன். அது பாலித் தருளல் வேண்டு மென்று போற்றக் கேட்டு, நாம் திருப் போரூர் என்னும் க்ஷேத்திரத்தை ஜீர ணோத்தாரணம் செய்க வென்று மதுரை யங்கையற்க ணம்மை யருளிய வாறு, அப் பதிக்குச் செல்லாநின்றோம். இன் னும் ஓ ராண் டிருந்து நம்பால் வருக வென் றநுஜ்ஞை செய்து, மலை, கான், யாறுகள் பிற்படக் கடந்து, திருப் போரூ ராகிய பனங் காட்டி லணுகி, யங்கு வள்ளைப் பூடால் நிறைந்த ஓ ரோடையைக் கண்ணுற்று, நியமங்களை முற்றி, அவ் வழி வந்தோரை இங்கு கோயி லிருக்கின்றதா

என்ன; சுவாமி! மலைச் சாரலின் கீழ்ப்பால் வேம்படி விநாயகர் கோயி லொன் றுள்ள தெனச் சிதம்பர தேவர், பிள்ளையார் சந்நிதிக்கு வந்திருந்து, அன்று முத லிரண்டு நாள் வரை அத் தீர்த்தத்தின் மூழ்கிச் சிவ பூஜை முதலிய வற்றை முடித்து வசித்தனர். மூன்று நாள் மாலைப் போதில், அத் தீர்த்தத்திற்கு வருகையிற், கள்வர் சிலர் சுவாமிக ளணிந் துள்ள ஆபரணங்களைப் பறித்துக் கொண்டு போகப், பதுக்கி யிருந்து வெளிப்பட்ட மாத் திரத்தில், அவர்களுக்குக் கண்கள் தெரியாமற் போய் நடுங்கி நிற்க, நீங்கள் யா ரென்று சுவாமிகள் கேட்ட வளவில், தாங்கள் இன்னு ரென்றும், செய்ய வந்த காரியம் இன்ன வென்றும் சொன்னவுடன், தாம் பூண் டிருந்த ஆபரணங்களைக் கழற்றிக் கொடுத்தலும், அவர்கள் பெற் றுக் கொள்ளாமல், மிகவும் அச்ச முற்று, நமஸ்கரித்துத் தேவரீது தெய்வத் தன்மையைச் சற்றும் அறியாத பாபிக ளாய்க் கண் ணொளி யிழந்தோம், க்ஷமித்துக் கடாக்ஷிக்க வேண்டு மென முறையிட் டோலமிடச், சுவாமிகள், கள்வர்களே! இழந்த கண்கள் வரக் கூடுமோ வென நாங் கள் அறி வின்றிச் செய்த குற்றங்களைப் பொறுத்து எவ் வாற்றானும் இப் புலைஞ ரான எங்கட்குக் கண்கள் தெரி யும்படி கிருபை செய்ய வேண்டு மென்று பிரார்த்திக்க, நீங்கள் இது காறும் களவாற் சம்பாதித்த பொருள்களுள், உமது ஜீவனும்சத்திற்கு சென்றது போக, மிகையாய், நிற்கும் பொருள்களை, முருகக் கடவுளுக்கு அற்பனமாக்க உடன் படுவீ ராயின், கண்கள் விளங்கு மாறு சுவாமி கடாக்ஷிக்கு மென்றதைக் கேட்டுத், தத்தஞ் செய்தோ மென்று பாதத்தில் வீழ்ந்து தெண்டனிட, அக் கணமே அக் கள்வர் யாவருக்கும் கண்கள் நன்குய்த் தெரிய சுவாமி

கள் அப் பொருளைக் கொண்டு வருக வெனக் கட்டளை யிட்டு, வள்ளையா ரோடையில், நீ ராடி நித்திய நியமங்கள் புரிந்து, அப் பனங் காட்டை நோக்கி வருதலும், அதன் நடுவில், ஒரு பெண் பனை மூலத்தில், ஸ்ரீ சுப்ரமண்யம் ஸ்வயம்பு வாய் முளைத் திருந் தருளியதைப் பார்த்து, அன்று தொடங்கிச் சுவாமி சந்நிதியிற் சரண சம்பந்த மில்லாமல், தரிசந மாத்திரம் செய்து கொண்டு, பிள்ளையார் கோயிலில் வசிப்பவ ராயிருந்தனர். அங்ஙன மிருக்க, ஓர் திநம் முருகக் கடவுள் குமார தேவரைப் போ லெழுந் தருளக் கண்டு, சிதம்பர சுவாமிகள் அச்ச முற்று, விரைந் தோடிச் சென்று, சரணஞ் செய்து நிற்க, ஆசாரியர் நோக்கி நீ இவண் வசிப்பது என்னை யென, அங் கயற்க ணம்மை யருளியதை விண்ணப்பஞ் செய்ய, அவண் யா மிருவரும் முருகக் கடவுளைத் தரிசிப்போம் வருக வென்று முன்னும் பின்னு மாய்த் தொடர்ந் தணுகும் போது, சுவாமிகள் ஆசாரியரை நோக்கி ஆதியில் இவ் வாலயம் எத் துணை விலாசமும் தன்மையு மாகி யிருந்த தெனக் கேட்டனர். அதற்கு, ஆசிரியர் சிதம்பர சுவாமிக்கு நெற் றியில் திரு வெண் ணீறு சாத்தி நேத்திரத்தாற் பரிசித்து, ஆலய அளவும், தீர்த்தம், திரு வீதி முதலியவையும், பார்ப்பா யென்ன, அவ் வாறு பார்க்குங்கால், ஆலயம், கெற்ப கிருஹம், அந்தராளம், மஹா மண்டபம், சர்வ வாத்திய மண்டபம், தேவி யார் சந்நிதி, மடைவ ளாகம், திரு மதில், கோபுர வாயில், மயில் மண்டபம், துஜஸ் தம்பம், பலி பீடம், பிராகார வீதி, மாட வீதி, மடாலயம், தீர்த்த முதலிய யாவும், சிற்ப நூ லளவைப்படி யநந்த விசித்திர மாகவும், சிறப் பாகவும், விளங்கக் கண்டனர்.

ஆசிரியர் அவ் வாலயத்துட் புகுந்து, முருகக் கடவுள் சந்நிதியிற் சிதம்பர தேவர்க்கு அநுக்ரஹித்து, ஹர ஹர வென் றருளிய மஹா வாக்கியத்துடன் மூல ஸ்தாநத்திற் ஸ்வயம்பு வாய் வீற்றிருக்கும் தம்மைத் தாமே நோக்கி, யஞ்சலி முகிழ்த்தா ராயினர். அப் போழ்து, முருகக் கடவு ளாகிய ஆசிரியரது திரு வடிகளை யெதி ராகக் கொண்டு, வடதிசை யாக சாஷ்டாங்க மாய்ச் சரணம் புரிந் தெழு வதற்கு முன், ஆசிரிய வுருவாய் வந்தருளிய மூர்த்தி திரு வுருக் கரந்தனர். சிதம்பர தேவர், எழுந்து பார்க்கையிற் சுவாமி பனை மர மூலத்திற் பழைய படியே யிருக்க நோக்கி யளவிலாத ஆநந்த வசத்தரா யதிசயித்தனர்.

ஸ்ரீ சுப்ரமண்யமே, சிதம்பர சுவாமிகளது ஆசிரிய ராகிய குமார தேவர் வடிவா யெழுந்தருளி, யநுக்ரஹம் புரிந் தாட் கொண்டபடியால், சுவாமியே தமக்குக் குரு மூர்த்த மாக நின்றது. அந் நாள் தொடங்கிச் சரண சம்பந் தம் நடந்து விடுகின்றது. பின்பு, கலி வெண்பாவால் நெஞ் சு விடு தூது என்னும் ஓர் பிரபந்த மியற்றி, விருத்த கிரியின்கண் குமார தேவர்க் கனுப்பி விநாயகர் கோயிலில் வசித்திருந்தனர். அதனை யறிந்த, ஒரு குலாலன் பிள்ளைகள் அவ் வாலயத்தின் வடபா லுள்ள கண்ணுவப் பேடென்னு மூர்க் கருகிற் கீழ்ப்பால் நெடு நா ளாய் நேத்திரந் தெரியா திருந்த தமது தந்தையைப் பார்த்து ஐயா! வேம்படி விநா கர் கோயிலில், ஓர் பெரியவ ரெழுந்தருளி யிருக்கின் றனர். அவரைச் சரண் புகின் உமக்குக் கண் தெரியும்படி செய் தருளுவ ரென்ன, வயதால் முதிர்ந்த அக் குலாலன், மைந்தர் சொல்லை நம்பி, சுவாமிக ளிடத்திற் சென்று

பிரதக்ஷண நமஸ்காரம் செய்து, பக்தி பூர்வ மாக வேண்டு கோள் செய்வதற்கு, சுவாமிகள் ஸ்ரீ சுப்ரமண்யம் நீ யெண்ணியாங்குக் கடாக்ஷித் தருளு மென்று சிந்தித்த வுடன், அவனுக்குக் கண்க ளிரண்டும் தெரிந்தன. அக் குலாலன், தேவரீர் இத் தலத்தினின்றும் அடியேன் சிறு குடிலின்கண் ஒரு புளிய மர மிருக்கின்றது, அங் கெழுந் தருளி வசிக்கலா மென் றுபசரித்துப் பிரார்த்திக்க, அன்று தொட்டு அம் மர நிழலில் வந்து அக்நி வளர்த்துக் கொண்டு வீற்றிருந்தனர். மற் றோர் நாள், திருப் போருரை யடுத்த வட கிழக்கி லுள்ள, கால வாக்க மென்னு மூரில் ஒரு முடவன் சுவாமிகளைத் தரிசித்துச் சரண மடைந்து * நெகிடியிற் பூத்த திரு நீ ரருளப் பெற் றுக் கொண்டு, பவித்திர னுகினன். இம் மகிமையைக் கேட்ட வநேகர் தம்மை வருத்திய வெப்ப நோய், சூலை, வயிற்று வலி, மஹோதரம், காமாலை, குடல் வாதம், குட்டம், பெரும் பாண்டு, தலை வலி முதலிய பெரு நோய் களை நிவிர்த்தி செய்து கொள்ள வேண்டி யங்கு வந்து வழிபட்டு வணங்கிச் சுவாமிகள் அருளிய நெகிடித் திரு நீற்று மருந்து பெற்று, அவ் வவ் வியாதிகளி னின்றும் நீங்கிச் சுக முற்றனர். இப் பான்மையோராற் சில காணிக் கைகள் சேர்ந்தன. அவற்றுடன், முன் சொன்ன கள்வர் கள் கொணர்ந்த திரவிய முதலியவற்றைச் சுவாமிகளிடத் திற் செலுத்தித், தாமும் அடிமையா யேவற் பணி செய்து நின்றனர்.

அங் குள்ள குடித்தனக்காரர்களும், சான்றோர்களும், இம் மகிமையைக் கேள்வியுற்று வந்து பிரதக்ஷண நமஸ்

* ஞெகிழி - நெகிடி என மருவியது.

காரஞ் செய், தெதிர் நின்று, இவ் வூர்ப் பனங் காட்டில் ஸ்ரீ கந்த சுவாமி ஆலயம் சீரண மாகி, சுயம்பு வாகிய சுவாமி மாத்திர மிருக்கின்றது. அதற்குப் பூஜை புரிந்து கற்பூர ஆராதனை செய்யின் ஊர் பற்றிக் கொள்கின்றது. அவ் வா றினி நேரிடா வண்ணம் ஆலய ஜீரணோத்தாரணம் செய்து நித்திய பூஜை முதலியவும் நடத்துவித்து இவ் வெளியோங்களையும் காத்தல் வேண்டு மெனக் குறை யிரப்பக், கருத் திசைந்து, நாம் பரதேசி யானதால் நம்மால் ஆவ தென்ன அள வற்ற நிதி வெண்டுமே யாயினும் நுமது வேண்டுகோளின்படி அவைக்கு முயற்சி புரியத் தொடங்கினால், நீவிர் செய்யு முதவி யா தென வினவ எமது பதி யாகிய இக் கிராமத்தை ஆண்டவர் பொருட் டுத் தந்திடுவது மன்றிக், கடவுளுக்கு வேண்டிய ஏவல்க ளனைத்தும் யாங்களே செய்கின்றோ' மென் றுறுதியா யுரைத்திட, அங்ஙனம், இது போழ்தே செய்யத் தொடங்கு வீ ராயின், திருப் பணி முதலியவற்றை நடத்தலா மென வுரைத் தருளினர். அக் கணமே ஊரார் செப்பேட்டில் வரைந்து தத்தஞ் செய்து கொடுத்துச் சுவாமிக ளநுஞ்ஞை யின்படி நடந்துவரத் தொடங்கினர்.

அன்னோ ருதியாலும், தரிசனார்த்தம் வந்தவர்கள் உதவியாலும், ஆலயத் திருப்பணியை நடத்த வேண்டிக் கற்பக் கிருஹம் செய்யத் தொடங்கிய போது, முன்னர்க் கூறிய கிளிய னூர்ப் பதியின்கண் ணிருந்த மூதாட்டி, சுவாமிகள் கட்டளையின்படி (காணிக்கை சேகரித்துக் கொண்டு) இங்கு வர வேண்டு மென் றன்பு மிகுந்து தனக்குப் பொருள் வருவா யின்மையால் அங் குள்ள செங் குந்தர் நூ லிழைக்கையிலும், பாகோடுகையிலும்,

புடவைகள் நெய்வதிலும், நிலத்திற் சிந்துகின்ற நுண்ணூல்களை நா டோறு மெடுத்துச் சேர்த்துச் சிவத் தியானத்துடன் கோவை செய்து பின் படு வாக்கி அந் நூற் படுவுகளைப் புடவை நெய்வித்து விற்றதில், ஒரு பொன் கிடைத்தது. ஓ ராண்டு கழித்து, அதனைக் கைக்கொண் டங்கிருந்து திருப் போரூர் சேர்ந்து சுவாமிகள் வீற்றிருக்கும் ஆசிரமந் தேடி வந்து தரிசனை பெற்று, அப் பொன் ஒன்றையும், குரு காணிக்கை யாக வைத்து வலம் வந்து நமஸ்கரிக்கச் சுவாமிகள் நோக்கி, யந் நாளளவும் இப் பெண்பால் மெய் வருந்திச் சம்பாதித்துக் கொணர்ந்து செலுத்திய பே ரன்பினை யுள் ளுவந்து, அப் பொன்னைத் தமது திருக் கையி லேந்திச் சென்னியிலும், நெற்றியிலும், கண்ணிலும், தோளிலும், மார்பிலும், வைத்து வைத்து ஆநந்தத்தால் ஆடி அதனைக் கர்பக் கிருஹத்தின் சிகர வேலைக்குபயோகித்தனர். அத் தருணம் தரிசநார்த்தம் அங்கு வந்திருந்த சென்னைப் பாளையத்தான் செட்டியா ரென்பவர் அந்த அற்புதத்தைக் கண்டு இரண்டு பை வராகன் கொண்டு வந்து சுவாமிகளுக்கு முன்னே வைத்து வணங்க, அந் நிதியின் மேல் கண்ணோக்கஞ் செலுத்தாது எட்டு நாளைக்குப் பின்னர் ஒரு வா றுள்ளந் திரும்பி யிந் நிதியைத் திருப் பணிக் குபயோகித்துக் கொண்மின் றேவலோர்க்குக் கட்டளையிட்டனர். அன்றியும், நா டோறுந் தரிசநத்திற்கு வருகின்றவர்கள் செலுத்தும் காணிக்கைக ளாகிய நிதி யனைத்தும் அவ் வவர்களைக் கொண்டே சந்நிதாநத்திற் சேர்த்து, கெற்பக் கிருஹம், அந்த ராளம், மகா மண்டபம், மயில் மண்டபம், துஜ ஸ்தம்பம், பலி பீடம் இவற்றை நிறைவேற்றுவித்து மந்திர விசேட மான ஸ்தம்பநமு மியற்றி யந்திரக் கும்பாபி

ஷேக முதலியவும் நிறைவுறுத்து நித்திய பூஜை ஆராதனை யை நடத்திவந்தனர்.

திருப் போரூர் தலத்தில் வசித்து பிரகிர்தி யுபாதை களை விசர்ச்சநஞ் செய்தது தகுதியற் றதென்று கருதித் தாம் வீற்றிருந்த புளிய மரத்தின் தென் கிழக்கில் தவஞ் செய் வதற் கிசை வுள்ள ஓர் பரிணம மியற்ற வெண்ணிச் சரஸ் வதி கூடம் பூசை பீடம் ஒடுக்க, உறையுள் இவற்றை நிருமித்து அதன் வடபா லிருந்த சிறு குளத்தைத் றடாக மாக்கி, அதன் மேற்பாங்கில் மண் சுவ ரெழுப்பித் தட் டோடு மேய்ந்த ஓர் குற் ருலாலயம் கட்டுவித் ததில் விநாயகப் பிரதிட்டையும், வேலாயுதப் பிரதிட்டையும், புரித்து பிள்ளையார்க்குச் சுந்தர விநாயக ரெனத் திருப் பெயர் சாத்தித், தடாகத்திற்கு லேலாயுத தீர்த்த மெனப் பெயர் கூறினர். முன்னர் ஸ்ரீ சுப்ரமண்ய மூர்த்தியாலயத் திருப்பணி தொடங்கின நாள் தொட்டுப் திருப் போரூர்ச் சந்நிதி முறை யெனப் பெய ரிட்ட ஞாந நூல் பஞ்சாதி கார விளக்க முதலியன நிலை பெற வியற்றி, ஆதியிற் குமார தேவர் முன் னிலையிற் சாந்த லிங்க சுவாமிகள் உரை யிடுக வென் றருளிய வைராக்கிய சதகம் முதலிய எல்லா நூல்களுக்கும், விருத்தி யுரையுஞ், செய்து பாதிரி யம்மையார்க்கு அநுக்ரஹித்து ஞாநம்மை யெனத் தீக்ஷா நாமந் தரித்துக் கட்டளையிட்டபடி, அவர் பரிணமத்தின் கீழ்ப்புற மார்க்கத்திற்கு வட பாரிசத்திருந்த கயத்தைப் பெரிய வாவி யாக்கி,யதற்கு வற்ரு நீர் குள மெனப் பெயர் புனைந்து, அதன் கரை சார்பில், நந்தவநம் தண்ணீர்ப் பந்தல், இத் திருப் பணிகள் செய்து கொண்டு, அதன் வட கரையில், ஆத்மார்த்த மாகச் சிவ லிங்க பிரதிஷ்டை செய்து, பூசித்திருந்தனர். ஒரு நாள், ஞாநம்மை சிதம்பர

தேவரிடத்தில் வந்து, நமஸ்கரித்து மாணிக்க வாசக சுவாமிகள் ஓதி யருளிய திரு வாசகத்திற் "புணர்ப்ப தொக்க, வெந்தை யென்னை" என முத லெடுத்த பாசுரத் திற்குப் பொரு ளருளிச் செய்தல் வேண்டு மென்று விண் ணப்பஞ் செய்து, பன் னாள் தினந் தோறும் பிரார்த்தித்து வருகையில், ஒரு நா ளிறக்க முற்று, அப் பனுவற்குப் பொரு ளுரைக்க, அஃது அள விறந்த ஏட்டி லெழுத இடங் கொடுத்து வளர்ந்து வருகையில், முருகக் கடவுள் ஆசிரிய மூர்த்த மாக வந்து சேவை யருளி, யிப்பனுவல் சொல்லிய திரு வாத வூரரே, திரு வாசகத்திற்குப் பொருள் சொல்லாமற் சிற் சபையே யதற்குப் பொரு ளெனக் காட்டி யிருக்கவும், இப் போது ரையிட் டடங்குமோ வெனத் திரு வாய் மலர்ந்தருளலும், சிதம்பர தேவர் பெண்பால் வேண்டு கோளால் இயந்தவரை செய்யத் தொடங்கிய தென் றிறைஞ்சினர். ஆயின், அவ் வோர் பனுவற்குப் பத வுரை யாகச் சொல்க வென்று கூறிக், கடவுள் மறைந்தருளினர், ஆதலால், அவ் வோர் பனு வற்கு மாத்திரம், சிதம்பர சுவாமிகள் பத வுரை யருளிச் செய்ய கேள்வியுற்று, அம்மை ஆநந்த மடைந்து, அதன் பின்னர், நெடு நா ளிருந்து, ஓர் ஏகாலிப் பெண்ணுக்கு அநுக்ரஹஞ் செய்து, ஆசிரியர் கட்டளை மேற் கொண்டு இளிய னார்ப் பாதிரி யென்னும் தலத்தை நண்ணி, நிஷ்டா நுபவ மெனப் பெயர் பெற்ற தோர் சாத்திர மியற்றி, நிஷ்டா நுபூதியில் ஒடுக்க முற்றனர். சின்னா ளான பின் னர், ஏகாலி யம்மையும் ஒடுக்க மாயினர். இவ் விருவர் சமாதிகளும், அவ் வூரில் இந் நாளவும் ஆராதிக்கப்பட் டுள்ளன.

இங்கு சிதம்பர தேவர், அநந்த மான்மியங்களுடன் ஐம்பதாண்டிற்குக் குறையாமல் வீற்றிருக்கையிற், சென்னைப் பட்டினத்திற்குப் பத்து நாழிகை வழிச் சேய்மையில். மேற்றிசையிலுள்ள பூவிருந்த வல்லியென்னும் ஊருக் குட்கிடையான கோவூரில், துளுவ வேளாளர் மரபிற் றோன்றிய, திரிபுராந்தக முதலி யென்பவர் புத்திரரும் பம்மல் வில்வராய முதலி தௌகித்திரருமாகிய, சிவ சங்கரர் என்னும் பெயருள்ள ஓர் சிறு பிள்ளையை யிளமைப் பருவம் மேற்படுவதற்கு முன்னரே, திருப்போரூர் முருகக் கடவுள் ஆட் கொண்டருளிய வாறு, அவர் சென்னியிற் சடை யுற்பத்தி யாகி மயக்க மடைந்தவர் போலவும், பித்து உடையர் போலவும், தெய்வங் கோட்பட்டார் போலவும், ஓடியும், பாடியும், கூத் தாடியும் தீர்த்தங்களில் மூழ்கியும். விபூதி யுத் தூளநஞ் செய்தும், இவ் வாறு கோலாகல மாக விருக்க, அவர் தந்தை அவற்றி னுண்மையை யறியாமல் ஆயுள் வேதியரைக் கொண்டு மணி மந்திர ஔஷத முதலியவற்றைப் பிரயோகித்தும், அவை நீங்காமையால், அக் காலத்தில், ஜீரணோத்தாரமாகி விளங்கி யுள்ள திருப்போரூர்ச் சந்நிதியின் கடவுட் டன்மையையும், சிதம்பர தேவர் மகாத்மியங்களையும், பலரும் சொல்லக் கேள்வி யுற்றுத், தமது புத்திரருடன் திருப் போரு ரடைந்து சுவாமி தரிசநம் செய்து, இந் நியமத்திற் சின்னாள் ஒழுகியும் அவை நீங்காதிருந்தமையாற், சிதம்பர தேவரிடத்திற்குச் சென்று, வலம் வந்து பணிந்தஞ்சலி செய்து, புத்திரனை யெதிரிற் கிடத்தி, சுவாமிகளே! இக் குழந்தைக்கு நேரிட்ட பிணியை நிவிர்த்தித் தாளல் வேண்டுமென்று வருந்தி முறையிட, அப் பிள்ளையின் குறிப்பை யுள்ளுணர்ந்து

தந்தையை நோக்கி, அப்பா, இப் பிள்ளையை யெடுத்துக் கொண்டு சந்நிதிக்குச் சென்றால், ஆறு முகம் துணை செய்யு மென் றருளிச் செய்ய, அவ் வண்ணம் தந்தை குழந்தை யுடன் அங் கடைந்து, அபிஷேகம் முதலியவை செய்வித்து கர்ப்பூராராதனை செய்யும்போது, முருகக் கடவுளைத் தோத் திரஞ் செய்ய, வந்நிலையில் அங் கிருந்தவருள் ஓர் சிறுவன் பேரில் கடவுள் ஆவேச மாக இக் குழந்தையை நா மாட் கொண்டோ மாதலால், உனது பிள்ளை யன்று, நமது பிள்ளை யாகு, மிப் பிள்ளையை நமது சந்நிதாநத்தில் விட் டிடக் கடவை யெனக் கட்டளையிட, அது கேட்டவுடன் மனங் களித்துத் தந்தை புத்திரரைச் சிதம்பர சுவாமிக ளிடத்தில் ஒப்புவித்து, விடைபெற்று நீங்கின பின்பு, வீர சைவ விதிப்படி சிவ லிங்க தாரண முதலியவற்றை யநுக் ரஹித்துச், சிவ சங்கிரத் தம்பிரான் எனப் பெயர் தந்து, ஓர் திரு நீற்றுப் பையும், வேலாயுதமும், ஓர் தாம்பாள மும் பிள்ளை கையிற் கொடுத்துக், குழந்தாய் நீ யின்று தொட்டு ஆலயத்திற் சென்று நின்று பிச்சை யேற்றுத் திருப் பணிகளை நடத்தி வருக வென்று கட்டளையிடப், பிள்ளை சுவாமி! அடியேன் சிறியன். ஒன்றும் எனக்குத் தெரியாதே யென விண்ணப்பஞ் செய்தலும், சிதம்பர தேவர், அப்பா! அங்கு வருவோர்களுக்கு ஆறு முகம் துணை யென்று திரு நீறு தருவா யாயின் திருப் பணி தானே நிறைவேறும், அது செய்க என்று விடை யளிக்க அதனை மேற்கொண்டு ஆலயத்திற் சென்று இருந் திடை விடாமல் முயன்று திருப் பணிகளை யும், பிரமோற்சவம் முதலிய சிறப்புக்களையும், நடத்தி வந்தனர்.

பரிணமத்துட் பூஜா மடத்தின் மேல் பாற் கூடத் தொடுக்க வுறை யுள் வழியாகச் சுரங்கம் செய்வித்து, அதற்

குத் தென்பால் சமாதி உள்ளறை கட்டுவித்து, அதில் நா டோறும் சுவாமிகள் நிட்டை கூடியிருந்தது. சின்னுள் பின்னர், இடப ரவி விசாக பௌர்ணமியில், தாம் சமாதியில், நிரதிசயாநந்த பரிபூரண நிலையிற் கலவாமல் கலந்து நிற்கும் செவ்வி வருவ துணர்ந்து, அதற்கு முன்னுளாகிய சுவாதி நக்ஷத்திரத்திற் சிவ சங்கர தேவரை யழைத் தருளி அப்பா! இது முத லினி ஆண்டு தோறும் இச் சுவாதி நாளி லிங்கு மகேசுவர பூஜை செய்வித்து, மறு நா ளாகிய விசாகத்தில், ஸ்ரீ சுப்ரமண்ய மூர்த்திக்கு மகாபிஷேகம் நடத்தி, சுவாமி திரு முக மண்டல வுயரப் பிரமாணம் திருப் பா லாடையில், சுத்தாந்நமும், பருப்பு, நெய், பால், தயிர், பதார்த்த பக்ஷண பல வர்க்கங்களும் படைத்து, நிவேதித்து, ஆராதித்துத் தரிசித்து வரக் கடவை யென்றும், மூன்று நாள் இத் தல விநாயகராகிய வேம்படி விக்நேசுவரருக்கு, அபிஷேகம் நடத்தி, ஆண்டு தோறும் வைசாக பௌர்ணமியில், ஸ்ரீ சுப்ரமண்ய சுவாமி மகாபிஷேக முதலிய சிறப்புக்கள் நிர்விக்ந மாக நிறை வேறும் பொருட்டு, நாம் பிரார்த்தனை செய்து கொண்டபடி, ஆயிரக் தெட்டுத் தேங்காய்களுடன் மகா நைவேத்திய முதலியவும், நிறை வேற்றக் கடவை யென்றும், அது தொடங்கிப் பிரணவ மலைத் தியாக கைலாச நாதர் கோயில் முதலிய சந்நிதிகட்கும் முறைப்படி யபிஷேகாதிகள் செய்வித்துத் தரிசநஞ் செய்து, வரக் கடவை யென்றுங், கட்டளை பணித்து, அன்று மகேசுவர பூஜையை நடத்திக் காட்டி, மறு நாள் வைசாக பௌர்ணமி யாதலால், மாணுக்கரை ஆலயத்திற் கனுப்புதலும், மகாபிஷேக முதலியவற்றைத்

தமது கருத்தின்படி நடத்த அவரவ்வாறு அங்கு நண்ணி, அச் சிறப்புகளை நடத்திக் கொண்டிருக்கப் பரிணமத்தில் சுவாமிகள் வேலாயுத தீர்த்தத்தின் மூழ்கிச், சிவ பூஜை ஆராதனைகளை முடித்து ஒடுக்க வுறையுனின்கண் ணிஷ்டை கூடி யிருந்தது. இது நிற்க,

ஆன்மாக்களுக்கு நினைக்க முத்தி தருவதாய், முன் னோர் காலத்தில் பரம சிவமே அழற் பிழம் பாய் வளர்ந் தோங்கிப் பின் யுகங்கட்குத் தக்க வாறு மலை வடிவாய் விளங்கி யிருக்கின்ற, திரு வண்ணு மலையிற் சோணுசல தேவர் என்பவர், தமக்கு அருண கிரி மூர்த்தியே குரு வாய் வந்தநுக் கிரகிக்கப் பெறல் வேண்டு மென்று வைராக்கிய விரத மேற் கொண்டு முப் பதாவது வயது தொடங்கித் தொண் ணூறு வய தாகு மளவும் நியமந் தவருமற் கிரி பிரதக்ஷணஞ் செய்து வருகின்றவர், ஓர் தினத்தில் அடி யண்ணுமலை கோயிற் புறத்து வரும் போது, சிவ பெரு மான் செயலால் தாக மிகுந்து மூர்ச்சை யாயிட, அண்ணு மலையார் ஓர் ஆதி சைவ ராய்க் கலயத்திற் றண்ணீர் கொண்டு வந்து மூர்ச்சை தெளிவித்து, நீ இத் தீர்த்தத்தை யுண்டு சோபந் தவிர்த்தி யெனலும், அடியேன் அறுப தாண் டௗ வாய் அண்ணு மலையார் குரு வடி வாய் வந்தரு ளல் வேண்டு மெனும் விரதத்தாற் கிரி வலம் வருகின் றேன். அது கை கூடு முன்னர், ஜல பானம் செய்யத் தக்க தில்லை யென் றுறுதியா யுரைத்து மறுக்க, அங்ஙனங் கேட்ட ஆதி சைவ வேதியர், கலி யுகத்தில் அண்ணு மலையார் குரு மூர்த்த மாக வந்து அருளிச் செய்வ திய லாது ஆயினும இத் தலத்திற்குக் குண திசைக் கடற் கரைச் சாரலில், ஸ்ரீ பிரணவ சைலம் புறஞ் சூழ்ந் துள்ள

யுத்த புரி யென ஓர் புண்ணிய தல முள்ளது. அதில் சிதம்பர தேவ ரென் றொரு பெரியவ ருளர். அவர் நாளது திங்கள் விசாக நாட் பௌர்ணமியிற் பூரண தசை யடைய வுள்ளார். அதற்குள், அங்குச் சேர்வை யாயின், அவரால் கோறியபடி குரு வுப தேசம் கிடைக்கு மென்று கூறி மறைந்திடச், சோணுசல தேவர் இக் கண்ட வடிவம் சிவ பிரானே யென் றுணர்ந்து தியானித்து ஜல பானம் செய்து, அந் நிலையே தாழ்க்காமல் வழிக் கொண்டு, மலை, காடு, யா றுள்ளன கடந்து, திருப் போரூரில் விரைந்து வந்து (இங்ஙனம் நடந்த வாறு ஞான நோக்கா லறிந்து, தமது வரவு பார்த்திருந்த சிதம்பர சுவாமியைத் தேடித் தரிசித்து வலம் வந்து சரணஞ் செய்யச், சுவாமி நோக்கி நீவிர் யாவ ரென வினவலும் சோணுசல தேவர்.

நேரிசை வெண்பா.

எடுத்தசன னங்கடொறு மீன்றெடுத்த தாய்மார்
கொடுத்தமுலைப் பாலனைத்துங் கூட்டில்— அடுத்துவளர்
பன்னுக ணைத்துயிலும் பாலாழி யுஞ்சிறிதா
மன்னு சிதம்பரதே வா.

நெடி லடி விருத்தம்.

நவகுண முக்கு றும்பு நவைகண்மற் றனைத்துந் தீர்ந்து
பவகுணஞ் சற்றுந் தாக்காப் பரமயோ கிகளாய் நின்ற
சிவகுணச் செல்வர் போற்றுஞ் சிதம்பர தேவா வென்ற
னவகுணம் போக்கி யாள்வ தையநின் கடன தாமால்.

என்ற றிங்ஙனம் சொல்லித் துதித்து வணங்கச் சுவாமிகள் கிருபை கொண்டு அவர் கோரியதை அநுக்ரஹம் செய்தனர். பின்னும் சோணுசல தேவர்,

எழு சீர்க் கழி நெடில் விருத்தம்.

யானெனல் காணேன் பூரண வறிவின்
யாதினு மிகுந்தபே ரொளிநீ
தானென நிற்கச் சமத்துற வென்னைத்
தன்னவ னுக்கவுந் தகுங்காண்
வாவென வயங்கி நின்றனைவம் பூத
மார்க்கமா நெறிதந்து மாருத்
தேனென ருசித்து ளன்பர்கைக் கலந்த
செல்வமே சிவபெரு மானே.

என்று தோத்திரம் செய்தனர். அப் போழ்து, சிவ சங்கர தேவர் ஆலயத்தில் மகாபிஷேகாதிகளை நடத்தித் திபாராதனைக்குச் சிதம்பர சுவாமிகளை யெதிர்பார்க் திருந்தபடி வாராமையால், அதனையும் நடத்தி வருகையிற் பரிஞ்மத்திற் சுவாமிகள் சோஞசல தேவரை நோக்கி, அப்பா! யாம் நிரதிசயானந்த சமாதி புகுகின்றனம். இக் கற்பலகையால் வாய்தலை மூடித் தளம் படுத்து, நமது சிவ சங்கரத்துக்கு இதனை யறிவித் தவன தாராமையைத் தீர்த்து எமது வேண்டுகோள் தவறுமல் சொல்லி யாங்கு நடத்தி வரும் வண்ணம் ஸ்ரீ சண்முக மூர்த்தி துணை செய்யு மென்று தெரிவித்துப், பின்னர் நின் னூர்க்குப் போதுக வெனப் பணித்து, அக் கணமே தமது பூஜா திரவ்யங்களு டன் நில வறை வழி யாகச் சமாதி ஸ்தாநத்தி லிறங்கி ஒடுக்க முற்று நின்றது. அச் சமயம் முருகக் கடவுள் சந்நிதியிற் கர்பூர திபாராதனை நடந்து வரும் வேளையாக லாற் சிதம்பர சுவாமிகள் ஆண்டவர் சந்நிதியில் அஞ்சலி யஸ்தராய்த் தோன்றி, மூல ஸ்தாநத்தில் மறைந்திடக்

கண்டு, சிவ சங்கர மூர்த்தியும், ஆலயத் திருந்த வேதியர் முதலிய பலரும், அற்புதமும், ஆச்சரியமும், ஆநந்தமு முற்று. ஹர ஹர வென்ற வாக்கிய முழக்கத்துடன் நமஸ் கரித்துப் பரவச ராயினர். சிவ சங்கர தேவர், ஆண்டவர் கைங்கரியங்களின் மற்றவையும் நிறை வுருத்திப் பரிஞ மத்தை நோக்கி, வருகையில், ஏவ லாளர் சிதம்பர சுவாமி கள் பூரண தசையி லமர்ந்த முறைமைகளைச் சொல்லக் கேள்வியுற் றடங் கரிய ஆராமை மேற் கொண்டு பூரணு நந்த வசத்த ராய்க், கண்ணீர் ஆரா யோடித் ததும்ப உள் புகுந்து ஆசிரிய ரொடுக்க முற்ற சந்நிதியி னின்று இவ் வாறு சொல்லத் தொடங்கினர்.

எழு சீர் கழி நெடில் விருத்தம்.

இக்கலி யுகத்தி லெழுந்தவென் குருவே
யின்பமே யன்பினு ணிறைந்த,
முக்கனி ரசமே முதிர்சுவை யமுதே
மூதறி வேமறைப் பொருளே,
சக்கரை யொடுகற் கண்டென ருசிக்குந்
தயாளுவே தமியனேன் றனக்குத்,
துக்கசா கரத்தைத் தொலைத்தருள் புரிந்த
தூயநீ யெங்கொளித் தனையே. 1

தாழ்விலாப் பொருளே தனிமுத லாண
தயாளுவே தற்பர வடிவே,
வாழ்வினிற் சிறந்த வதுலமெய்ஞ் ஞாந
வாநந்த வமுதமே யடுப்போர்க்,
கேழ்வினைப் பிறவி யிடர்களைந் தளிக்கு
மின்பமே யெளியனேன் றன்னைச்,

சூழ்வினை யனைத்துந் தொலைத்தருள் புரிந்த
துணைவநீ யெங்கொளித் தனையே, 2

இத்தலத் தினினின் னிணையடி யடைந்தோர்க்
கின்பமே யன்பினி லுறைந்த,
மெய்த்தவக் கொழுந்தே விளங்குமா ரமுதே
வேதவே தாந்ததே சிகனே,
சித்தமுண் மகிழ்ந்தென் செநவெம் பகையைச்
சிதைத்திடச் சிறியனேன் றனக்குச்,
சுத்தமெய்ஞ் ஞாந சுகமளித் தாண்ட
சுகிர்தநீ யெங்கொளித் தனையே 3

அன்பினர்க் குரிய வங்கையிற் களிபோ
லமர்ந்திடு மமுதமே யெவையுந்,
துன்பெனக் கரந்த தோன்றலே துணையே
தொகுத்திடற் கரியவான் பொருளே,
மன்பதைக் கெல்லா மருளுநற் பரமே
மாதவ வடிவமே யடியேற்,
கென்பிறப் பிறப்பைத் தவிர்த்தருள் புரிந்த
வெந்தைநீ யெங்கொளித் தனையே. 4

பத்திமை புரியப் பரிந்தெனை யழைத்துப்
பணித்துவா வெனவெனக் கினிய,
புத்திக ளுரைத்துப் போகென விடுத்துப்
புன்மையேன் றன்மையை யறிந்த,
நித்திய நிமல நிட்கள நிறைவே
நீணிதி யேயருட் குருவே,

முத்தியங் கடலே முழுமறைப் பொருளே
முதல்வநீ யெங்கொளித் தனையே. 5

ஐயனே யருளா லடியனை யாண்டிங்
கருட்குரு வென்னவீற் றிருந்த,
துய்யனே துணையே தோன்றலே நிறைந்த
சுகக்கட லமுதமே யெனையிவ்,
வையமீ திருத்தி வடிவினை மறைத்த
வண்மையை யறிகிலேன் தமியே,
னுய்யுமா றருள்வாய் சிதம்பர தேவே
யோவென வுள்ளநைந் தழுதார். 6

உடனே சோணாசல தேவரோ டிவர் வந் தழைத்துக் கொண்டு போந்து, ஆசநத் திருத்தி, யாராமையை யொருவா ருற்றி, சுவாமிகள் கட்டளையிட்ட முறைமையை விண்ணப்பஞ் செய்து, அமு தருந்தி, தாமும் அமுது கொண்டு, விடை பெற்றுத் திரு வண்ணாமலையிற் சென்றிருந்தார்

1. கொலை மறுத்தல் உரை.
2. வைராக்கிய சதகம் உரை.
3. வைராக்கிய தீபம் உரை.
4. அவிரோத வுந்தியார் உரை.
5. ஒழுவி லொடுக்கம் உரை.
6. திருப் போரூர் சந்நிதி முறை.

இவற்றை செய்தனர்.

32 சிதம்பர சுவாமிகள் சரித்திரம்
முற்றிற்று.

(சேலம் ஜில்லா, ஆத்தூர் சமீபம்)

தொற மங்கலம் (நல்லாற்றூர்)

## 33. சிவப் பிரகாச சுவாமிகள் சரித்திரம்.

தொண்டை நாட்டிலே சப்த புரிகளுள் ஒன்ருய் விளங்குகின்ற காஞ்சி புரியிலே, சுமார் 300௵த்துக்கு முன் தொண்டை மண்டலத்தார் மரபி லுள்ளோருக்குக் குரு வாக விருந்த குமார சுவாமி பண்டார மென்பவர், திருக் கார்த்திகைக்குத் திரு வண்ணுமலை யாத்திரை போகும் போது, வழியில் ஒரு நந்த வநத்திற் பக லிறங் கிச் சிவ பூசை செய்து, அன்று சாயங் காலம் அந்தத் தலம் போய்ச் சேர்ந்து, ஈசாநிய தீர்த்தத்தில் அநுஷ்டாநஞ் செய்து கொண்டு, "பூஜைப் பெட்டக மெங்கே"? என்று தம் முடைய பரிசாரகரைக் கேட்க, அதற் கவர்கள் பக லிறங்கி யிருந்த விடத்திற் ருனே வைத்து மறந்து வந்த தாக விண்ணப்பஞ் செய்ய அப் பொழுது அவர் மிகவும் வியாகூல முற்றவ ராய், அந்தப் பரிசாரகரோடு உள்ளூர் மனித ரொருவனைக் கூட்டிப், பக லிறங்கி யிருந்த இடம் வரைக்கும் போய்ச் சோதனை செய்து வரும்படி சொல்லி யனுப்பிப், பின்பு தாமும், தமது மனைவியும், ஓ ரிடத்திற் றங்கியிருந்து, நம் முடைய ஆத்மார்த்த மாகிய உடைய வரைப் பிரியும்படி நேரிட்டதே யென்று சஞ்சலப்பட் டுக் கொண்டு, அன் றிரா முழுதும் துயி லின்றிச் சிவத் தியாநம் பண்ணிக் கொண் டிருக்கும் போது, இவரது புண்ணிய முதிர்ச்சியினுலே அண்ணுமலையார் ஒரு சங்கம ராகத் திரு வுருக் கொண்டு, இவ ரிடத்திற்கு எழுந் தருளி, "நீர் மனே துக்க மடைய வேண்டிய தென்ன" என்று கேட்க, இவர் தமக்கு நேரிட் டிருக்கும் ஆபத்தை விண்

ணப்பஞ் செய்ய, அதற்குச் சுவாமி யானவர், "நீர் அங் கம் வேறு இலிங்கம் வேருக விருத்தலால் பிரியலாயிற்று. லிங்காலிங்க சம்பந்தியா யிருந்தால் இப்படிக்கு நேரிட மாட்டாதே" என்று, வீர சைவ சமயாசார நெறிகளைக் கிரமப்படி போதித்து, "உமது பூஜைப் பெட்டகம் உதயத்தில் வந்து சேரும், ஆகிலும், நீர் இது முதல் லிங்க தாரணஞ் செய்து கொள்ளும்" என்று அநுக்ரஹிக்க. அதற் கிவர், "எனது சிஷ்யர் பந்துக்கள் முதலானவர் களுக்கு இச் செய்கை விரோத மாக இருக்கும்" என்று விண்ணப்பஞ் செய்ய, அது கேட்டுச் சுவாமி யானவர், "இந்தச் சிஷ்யர் முதலியோரால் உமக்கு யா தொரு பயனு மில்லை, ஆதலால், நா முரைத்த படியே சிவ லிங்க தார ணஞ் செய்து கொண்டால், உம்மிடத்தில் மூன்று புத்திர ரும், ஒரு புத்திரியும், அவதரிப்பார்கள். அவர்களால், இக பர சாதக முண்டு" என்று அருளிச் செய்ய, அதற் கிவர் உடன்பட்டனர். அப் போது, சுவாமி யானவர், "இந்த ஆலயத்திற்குத் தெற்கு வீதியி லிருக்கும் குரு தேவரிடத் திற்குச் சென்று, தாரண தீக்ஷை செய்து கொள்ளும்" என்று அநுக்ரஹித்து, இதைக் குரு தேவருக்குந் தெரி வித்து அந்தர்த் தாந மானுர்.

பின்பு விடியற் காலத்தில், பூஜைப் பெட்டகம் வந்து சேர்ந்தது. அப் பொழுது, குரு தேவர் உத்தரவின்படி அவரது அடியார்கள், இவரைத் தேடி வந் தழைக்க, அவர் களுடனே மடம் போய்ச் சேர்ந்து, குரு தேவரைத் தரி சித்து, அவராலே தாரண தீக்ஷை அநுக்ரஹிக்கப் பெற்றுத், திருக் காத்திகைத் திரு விழா நிறை வேறிய பின்பு, கச்சிப்

பதிக்கு வந்து சேர்ந்து, தமது அநுஷ்டாநத்தின்படியே, சிஷ்யருக்கும், தாரண தீக்ஷை செய்து கொண்டிருக்கும் காலத்தில், முன்பு அண்ணுமலையார் அநுக்ரகித்தபடியே மூன்று புத்திரர்களும், ஒரு புத்திரியும், அவதரித்தார்கள். அவர்களுக்கு, முறையே சிவப் பிரகாச மென்றும், வேலா யுத மென்றும், கருணைப் பிரகாச மென்றும், ஞானாம்பை யென்றும், நாம கரணஞ் செய்து, உரிய பருவத்தில் வித்தி யாரம்பஞ் செய்வித்து, வளர்த்து வருங் காலத்தில், தந்தை யான குமார சுவாமி யையர், சிவ லிங் கைக்கிய மானுர். பின்பு, ஜேஷ்ட ராகிய சிவப் பிரகாச சுவாமிகள், தமது தாயாரையும், சகோதரர்களையும், அழைத்துக் கொண்டு, அருணுசலம் போய்ச் சேர்ந்து, குரு தேவரைத் தரிசித்து, அவ் விடத்திற் சில காலம் வாசஞ் செய்யும் நாள்களுள், ஒரு நாள், அந்தச் சோண சைலத்தை வலம் வரும் போது சோண சைல மாலை யென்று நூறு செய்யுள் தோத்திரஞ் செய்தருளினுர்.

இன்னும் இலக்கணப் பயிற்சிக் காகத் தக்ஷிணம் போக வெண்ணித் தனது சகோதரர்களுடனே புறப்பட்டு வாலி கண்ட புரத்துக்குத் தெற்கே ஐந்து கடிகை தூரத் தில், துறை மங்கல மென்னும் கிராமத்திற்கு வட பக்கத்தி லிருக்கும் ஓர் நந்த வநத்தில் இறங்கிச் சிவ பூசை செய்து கொண்டி ருந்த செய்தியை, அந்தக் கிராமாதிபராகி யும், லிங்க தாரண முடையவ ராகியு மிருந்த அண்ணுமலை ரெட்டி யார் கேள்வியுற்று, அந்த வநத்திற்கு வந்து, அவரைத் தரிசித்த மாத்திரத்திலே அவருக்குப் பணிவிடை செய்து, மிகுந்த அன்புள்ளவ ராகியு

அநுக்கிரகம் பெறவேண்டு மென் றெண்ணிச் சுவாமிகளை நோக்கி "இவ்விடத்திற் சில காலம் வாசஞ் செய்ய வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்து, சுவாமிகளது அநுமதி பெற்றுத், தங்கள் குரு வாகிய சென்னபசவையர் மடத்துக்கு அடுத்த மேல் புரத்தில், ஒரு திரு மடங்கட்டிக் கொடுத்துத் தாமும், அவருக்குப் பக்தி செய்து கொண்டு வந்தார்.

சுவாமிகளும், அங்கே இரண்டு வருஷ காலம் வரையில் அண்ணுமலை ரெட்டியாருக்குச் சன்மார்க்கங்களைப் போதித்துக் கொண்டிருந்து, தாம் கொண்ட கருத்தை நிறைவேற்ற வேண்டித் தக்ஷிணம் போய்வர வேண்டுமென்று ரெட்டியாரிடத்திற் சொல்லிக்கொண்டு, திரு நெல்வேலிக் கெழுந் தருளிய போது, அதன், கீழ்ப் புறத்தில் தாம்ரபர்ணி நதியின் கரையி லிருக்கின்ற சிந்து பூந் துறையில், தருமபுரத் தாதீநத்தைச் சார்ந்த வெள்ளியம்பலவாணத் தம்பிரா னென்பவர், இலக்கணத்தில் மிகுந்த வல்லவரா யிருக்கின்ரு ரென்பதைக் கேள்வியுற்று, அவ்விடத்திற் சென்று அவரைக் கண்ட மாத்திரத்தில், அவர் சிவப் பிரகாச சுவாமிகளைப் பார்த்து, "நீங்கள் நம்மிடத்திற்கு வந்த காரியம் என்ன?" என்று வினவ, அதற்குச் சுவாமிகள் "இலக்கணங் கற்சு வேண்டி வந்தோம்" என்று சொல்ல, அப்போது தம்பிரான் இவரது இலக்கியப் பயிற்சியை அறிதற் பொருட்டு "(கு) என் றெடுத்து (ஊருடையான்") என்று இடையில் வைத்துக் குவ் விறுதி யாக ஒரு வெண்பா முடித்துக் காட்டுக" என்று கேட்க, அதற்குச் சுவாமிகள் அருளிச் செய்த,

வெண்பா.

குடக்கோடு வானெயிறு கொண்டார்க்குக் கேழன்,
முடக்கோடு முன்ன மணிவார்க்கு—வடக்கோடு,
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்ள,
லூருடையா னென்னுமு லகு.

என்று அருளிய வெண்பாவில் வடக் கோடு தே ருடையா னென்றதற்குத் தம்பிரான் மிகவும் வியந்து சிவப் பிரகாச சுவாமிகளைத் தழுவிக் கொண்டு,தமது ஆசநத்திற் சம மாக விருக்கச் செய்து, அவ ருடைய சகோதரர்களுக்கு ஐந்து இலக்கணங்களையும், ஒரு பக்ஷத்துக்குள்ளே பாடஞ் சொல்லி நிறைவேற்றிய பின்பு, சுவாமிகள், தங்களுக்கு அண்ணுமலை ரெட்டியார் கொடுத்த முந் நூறு பொன்னை யும், குரு தக்ஷிணை யாக வைப்பித்து உபசாரஞ் சொல்ல, அதற்குத் தம்பிரான், “நமக் கிது வேண்டாம், திருச் செந் தூரில் ஒரு தமிழ்ப் புலவர் நம்மைத் தூஷித்துக் கொண் டிருக்கின்ருர், அவரைக் கல்வியினுல் வென்று நம்மிடத்தில் வந்து வணங்கும்படி செய்விக்க வேண்டும்” என்று சொல்ல, சுவாமிகள் அதற் கியைந்து, தம்பிரானுல் அனுப்பப்பட்ட மாணுக்கரோடு தாமும், திருச் செந்தூருக் குப் போய் முருகக் கடவுளைத் தரிசநஞ் செய்து, பிரதக்ஷி ணம் வரும்போது, அந்தத் தமிழ்ப் புலவர் ஸ்வாமிகளோடு கூட வந்த மாணுக்கரைக் கண்டு, “இவர் யார்?” என்று கேட்க, அதற் கவர்கள், “தம்பிரானிடத்திற் பாடங் கேட் டவர்’ என்று சொன்ன போது, அந்தப் புலவர் தம்பி ரானைத் தூஷிக்க, ஒருவருக் கொருவர் கலகம் நேரிட்டு, அப் போது புலவர், சிவப் பிரகாச சுவாமிகளோடு நூதந மாகப் பாடி வெற்றிகொள்வோ மென்று நினைத்து, “நிரோட்டக யமக மாகப் பாடுகிறது” என்றும், “அப்

படிப் பாடுகையில் நம் மிருவருள் தோல்வி யடைகிறவர் பாடி முடித்தவருக்கு அடிமை யாகிறது" என்றும்,பேசிக் கொண்டு இருவரும் பாடத் தொடங்கினுர்கள், அப் போது சிவப் பிரகாச சுவாமிகள் திருச் செந்தி னிரோட் டக யமக வந்தாதி யென (30) கலித் துறை தோத்திரஞ் செய் துடனே முடித்தார். அப் புலவருக் கொரு பாட லும் நிரம்பாமையால் தோல்வி யடைந்து, சுவாமிகளை வணங்கி" அடிமை யாயினேன்" என்று சொல்ல, அப் புலவரையுங் கூட அழைத்துக் கொண்டு, தம்பிரானிடத் திற்கு வந்து அடிமையாகச் செய்வித்தலால், தம்பிரான் திரு வுள மகிழ்ந்து சுவாமிகளைப் பார்த்து, "தேவரீர் சிதம்பரத்தில் சில காலம் வாசஞ் செய்யவேண்டும்" என்று கேட்க, அதற்கு உடன்பட்ட சிவப் பிரகாச சுவாமிகள் அவரிடத்தில் விடை பெற்றுக் கொண்டு, அவ் விடத்தி லுள்ள சிவ ஸ்தலங்க டோறுஞ் சென்று தரிசஞ் செய்த பின்பு, தொற மங்கலம் வந்து சேர்ந்து, அண்ணுமலே ரெட்டியாருக்கு முன் போலவே அநுக்ரஹித்துக் கொண் டிருக்கும் போது, தம தன்ப ராகிய அண்ணுமலே ரெட்டி யார் பொருட்டு, அவரது கம்பத்தக் கிராம மாகிய வாலி கண்ட புரத்துக்கு வாயு மூலேயி லிருக்கும் வெங்கை மா நகரத்தில், வந் தெழுந்தருளிய பழ மலே நாதர் மீது தோத் திர மாக வெங்கைக் கோவை, வெங்கைக் கலம்பகம், வெங்கை யுலா, வெங்கை யலங்காரம், என்னும் நான்கு பிரபந்தமுஞ் செய்தருளிய பின்னர், அண்ணுமலே ரெட்டி யாரை அழைத்துக் கொண்டு, சிதம்பரத்திற்குப் போய் ஒரு திரு மடங் கட்டுவித்து, அதிற் சில காலம் வாசஞ் செய்திருந்து. பின்பு விருத்தாசலத்திற் கெழுந் தருளி, பழ

மலை நாதர் பேரில் அந்தாதியும், பிக்ஷாடந நவ மணி மாலையும், கொச்சகக் கலிப் பாவும், பெரிய நாயகி யம்மை பேரில் (19) கலித் துறையும், (10) கழி நெடில் விருத்தமும், திரு வாய் மலர்ந் தருளிச், சில காலம் அவ் விடத்தில் வாசஞ் செய்யும் போது, ஒரு நாள் மணி முத்தா நதியின் கரையி லிராநின்ற தோட்டத்தி லுதிர்நது கிடந்த மனோ ரம்மிய மாகிய ஒரு மாம்பழத்தைச் சிவ நைவேத்தியஞ் செய்யத் தக்க தென்று கையி லெடுத்துக் கொண்டு வரு கையில், அதைக் கண்ட தோட்டக்காரன் சுவாமிகள் மந வருத்த முறும்படி கோபித்த போது அருளிச் செய்த,

வெண்பா

அடுத்துவருந் தொண்டனுக்கா வந்தகனைத் தாளா,
லடர்த்ததுவுஞ் சத்தியமே யாகு—லெடுத்ததொரு,
மாங்கனிக்கா வென்னை மடிபிடித்த மாபாவி,
சாங்கனிக்கா தித்தன்வரத் தான். என அருளிச் செய்தனர்.

பின்பு வட திசையை நோக்கிக் காஞ்சி புரத்தைத் தரிசிக்க வரும் போது, பே ரூ ரவிநாசியி லிருந்து சாந்த லிங்க சுவாமிகள் மார்க்கத்தில் வர, அவரைக் கண்டு கூடவே அழைத்துக் கொண்டு, பொம்மைய பாளையத் துக்குச் சமீப மாக வந்த போது, சாந்த லிங்க சுவாமிகள் சிவப் பிரகாச சுவாமிகளைப் பார்த்து, "நாம் சிவ ஞாந பாலைய சுவாமிகள் சந்நிதாநத்துக்குப் போய்த் தரிசநம் செய்ய வேண்டு மாதலால் அவர் பேரில் தோத்திர மாகச் சில பாடல்கள் செய்ய வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்ததற்கு, "அடியேன் நர ஸ்துதி செய்கிற தில்லை" என்று சொல்லி, அன் றிராத்திரி ஓ ரிடத்திற் றங்கி யிருந்த போது. இவரது ஸ்வப்நத்தில் முருகக் கடவுள் மயில்

வாகனாரூட ராய் எழுந்தருளி, ஒரு பாத்திரத்தில் விடு புஷ்பங்களை வைத்து, "இம் மலரை மாலை யாகத் தொடுத்து நமக் கணிய வேண்டும்" என்று திரு வாக்குச் செய்த படியால், விடியற் காலத்திலே, சிவப் பிரகாச சுவாமிகள் நித்திய கர்மங்களை முடித்துக் கொண்டு தாம் கண்ட ஸ்வப்நத்தைச் சாந்த லிங்க சுவாமிகளுக் கறிவிக்க, அதற் கவர், "தேவரீர் பாமாலை தொடுக்கக்கூடா தென்று சொல்லியபடியால், அப் பாமாலையே தொடுக்க வேண்டிக் குறிப்பித்தபடி", என்ற மாத்திரத்தாலே, சிவ ஞான பாலைய சுவாமிகள் பேரில், தா லாட்டு, நெஞ்சு விடு தூது, கலம்பகம், இம் மூன்று பிரபந்தமுஞ் செய்து கொண்டு போய்ச் சந்நிதானத்தி லரங்கேற்றி ஞானோபதேசம் பெற்று, அந்த ஞானாசாரியரது கட்டளையினால்,தமது தங்கை யாகிய ஞானாம்பையைச் சாந்த லிங்க சுவாமிகளுக்கு விவாகஞ் செய்து கொடுத்துப், பின்னர் காஞ்சீ புரம் வந்து, சில காலம் வாசஞ் செய்து கொண்டிருக்கும் போது, மேற் சொல்லிய சுவாமிகள் பேரில், பிள்ளைத் தமிழும், திருப் பள்ளி யெழுச்சியும், அதிசயப் பத்துஞ், செய்து அருளினார். மற் றொரு காலத்தில், அண்ணுமலை ரெட்டியார் சுவாமிகளை விவாகஞ் செய்து கொள்ளும்படி பிரார்த்தித்த போது அருளிய,

கொச்சகக் கலிப்பா

சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்,
பாய்கொண்டான் வந்துதொழும் பட்டீச்சு ரத்தரனே
நோய்கொண்டா லுங்கொளலா நூறுவய தளவிருந்தும்
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே.

பின்பு கருணைப் பிரகாச சுவாமிகளை விவாகஞ் செய்து கொள்ளப் பிரார்த்தித்த போது, அவர் செய் தருளிய பாடல்,

நாணி யென்பதை நாரியென் றுரைத்திடு நசையால்,
வேணு வானது வளைந்துபோய்ப் புகுந்தது வென்றுர்.
காண லாவதோ ருருவமெய் நாரியைக் கண்டால்,
பூணு வார்மயல் காளைய ரென்பதும் புதிதோ.

என்று சொல்லிய பாடலின் கருத்தைச் சுவாமிகள் அறிந்து, தனது சகோதர ரிருவரையும்,இல் லறத்தி லிருக்கச் செய்து, தாம் துற வற மாக வெழுந் தருளியிருந்து, பிரபு லிங்க லீலை, சித்தாந்த சிகாமணி, வேதாந்த சூடாமணி, சிவப் பிரகாச விலாசம், தர்க்க பரிபாஷை, திருக் கூவப் புரா ணம், சத மணி மாலை, நால்வர் நான் மணி மாலை, நிரஞ் சந மாலை, கைத் தல மாலை, அபிஷேக மாலை, இஷ்ட லிங்கப் பெருங் கழி நெடில், குறுங் கழி நெடில், நன் னெறி, சுவ நாம மகிமை, அன்றியும், திருப் பதிகம் பெற்ற தலங்க ளொவ் வொன்றுக்கு, இரண் டிரண்டு வெண்பாக்களும், செய் தருளினர். இவர் சகோதரர் வேலைய சுவாமிகள், "நல் லூர்ப் புராணம், இஷ்ட லிங்கக் கைத்தல மாலை, கும்ப கோணஞ் சாரங்க தேவர் சரித்திர மாகிய, வீர சிங்காதந புராணம், குக நமச் சிவாய மூர்த்தி கள் சரித்திர மென்னும் நமச் சிவாய லீலை, கிருஷ்ண சரித் திர பாரி சாத லீலை, மயிலத் திரட்டை மணி மாலை" என் னும் இப் பிர பந்தங்கள் செய்தருளினர். இவரது கனிஷ்ட ராகிய கருணைப் பிரகாச சுவாமிகள், இஷ்ட லிங்க வகவல், திருக் காளத்தி புராணத்தில் ௪ காளத்திக் சருக்கம் வரையிலுஞ் செய்தருளி, வெங்கைமா நகரத்தில் 18ம் வய

தில், சிவ லிங் கயிக்ய மாய்ச் சமாதி யானார். அப் போது யாத்திரை யாக வெழுந்தருளி யிருந்து வந்த சிவப் பிரகாச சுவாமிகள் செய்த ருளிய,

அறுசீர் விருத்தம்.

முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுண்டு கண்ட சுவை முதிர்ச்சி யாலே, தன்னியலை முழுதுமுரைத் தமை யாமுன் னினைக்கவர்ந்து தடங்கா ளத்தி, மன்னவனுண் டானெனது மாதவத்தின் வலிதீர மண்ணின் மீதே, யென் னுடன்வந் தவரித்த விளங்கருணைப் பிரகாச னென்னுங் கோவே.

அப்பொழுது வேலைய சுவாமிக ளருளிச் செய்த

அறுசீர் விருத்தம்.

"ஆண்டதனை லெனையொவ்வாய் வித்தையினிற் றமையினினு மதிக மென்றே, பூண்டவுல கதனினுள்ளோர் புகல்வதுகேட் டிருந்துமென்ன புதுமை தானே, காண்டகு கண் மணியேநல் விளங்கருணைப் பிரகாசக் காளாய் நீதான், மாண்டனையென் றறிந்திருந்து முயிர்தரித்தேன் யானுமிகு வன்னெஞ் சேனே."

பின்பு, சிவப் பிரகாச சுவாமிகள், மிகவும் மகிமை யோ டிருந்து காளத்திப் புராணத்தில், கண்ணப்பர் சருக்க மும், நக்கீரர் சருக்கமும், செய்தருளி 32ம் வயதிலே நல் லாற்றூரில், சிவ ஞாந பாலைய சுவாமிகளால் விடப்பட் டிருந்த மடத்திலே, சிவ லிங் க ஐக்கிய மாய்ச் சமாதி யாயி னார்.

அப் போது வேலைய சுவாமிகள் அருளிச் செய்த

வெண்பா.

அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந்த றிவித்த,
சொல்லுமி ருவரிடைத் தோன்றிய யான்—முல்லை,
யரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய்,
கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்.

பின்பு, காளத்திப் புராணத்தைப் பாடி நிறை வேற்றிப், பெரு மாத்தூர் மடத்தில், 72ம் வயதில், சிவ லிங்கயிக்ய மாய்ச் சமாதி யாயினர்.

33. சிவப் பிரகாச சுவாமிகள் சரிதம் முற்றுப் பெற்றது.

---

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

## 34. சொரூபாநந்த, தத்துவ ராய சுவாமிகளின் சரித்திரம்.

வடக்கே, திரு வேங்கட மலையையும், தெற்கே, குமரி யாற்றையும், கிழக்கே, கடலையும், மேற்கே, கடலை யும், எல்லை யாக வுடைய தான, தமிழ் நாட்டின்க ணுள்ள தொண்டை நாடு, மகத நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு, மலை நாடு, துளுவ நாடு என்ப வற்று ளொன் ருகிய, மகத நாடு, அல்லது, நடு நாட்டிலே, வீரை மா நகரிலே, இற்றைக் கேறக் குறைய 600 வருஷத் திற்கு முன்னர்த், தமிழ் மக்கள் செய்த தவப் பய னுக வைதிக சைவப் பிராஹ்மண வருணத்திலே, புண்ணிய மூர்த்திக ளிருவர், அம்மான் மருமக னென்னும் முறை யுடையவர்க ளாகத் திரு வவதாரஞ் செய்தார்கள். அவர் கள் நல் லாசிரியரை யடுத்து, வட மொழி, தென் மொழி

களுள், கற்க வேண்டியனவற்றை ஐயந் திரியறக் கற்று, அறி வொழுக்க முடையவர்க ளாக வளர் பிறை போல வளர்ந்து வருங் காலத்தில், அவர்களுள், ஒருவர் தத்துவ விசாரமும், மற் றொருவர், சொருப விசாரமும், செய்து, வந்தமையின், அவ் விருவரும், முறையே, தத்துவ ராய னென்றும், சொருபானந்த ரென்றுங் காரணப் பெயர் பெற்று விளங்குவா ராயினர்.

தத்துவ ராயரும், சொருபானந்தரும், நீக்க மற்ற, நண் பினை யுடையவர்க ளாய்க், கல்வி யறி வொழுக்கங்களால் மேம்பட்டுப் பிரமசரிய நிலையினின்றுந் தவறாது விளங்கி வருங் காலத்தில், ஒரு நாள், அவ் விருவரும், நாம் சற் குரு மூர்த்தியை யடைந்து தத்துவோபதேசம் பெற்று, உயர் வற வுயர் நல முடைய முத்தியினை யடைதல் வேண்டும். இதுவே, மனிதப் பிறப்பின் பய னாகு மென்று, தம் முட் பேசி யொரு முடிவிற்கு வந்து, பசியால் வருந்துவோன் அன்னத்தைத் தேடு மாறு போன்றும், தீயால் வருந்து வோன், தண்ணீ ரைத் தேடு மாறு போன்றும், வெயிலால் வருந்துவோன், நிழலைத் தேடு மாறு போன்றும், சற் குரு நாதனைப் பிறவிப் பிணியை யொழிக்கு மாறு, தேடுவா ராயி னர்; இவர்கள், புண்ய க்ஷேத்திரங்களிலும், புண்ணிய நதி தீரங்களிலும், இன்னும் பல விடங்களிலும், பல நாள் தேடிப் பார்த்தும், சிவ சொருப மாந் தேசிக மூர்த்தி, தமக் கெதிர்ப்படாமையால், மிகவும் வருத்த முற்று, நம் முள் யாவருக்கு, முன்னர்ச் சற்குரு நாத னநுக்கிரஹங் கிடைக் கின்றதோ, அவர்க்கு, மற்றவர் சீட ராதல் வேண்டு மென்று உறுதி செய்து கொண்டார்கள். பிறகு, சொருபா நந்தர் தெற்கிலும், தத்துவ ராயர் வடக்கிலு மாகப் பிரிந்து

போனார்கள். தெற்கே சென்று சொரூபானந்தர், திருப் பைஞ்ஞிலி யென்னும் சிவ க்ஷேத்திரத்தையும், திரு வெள்ளறை யென்னும், விஷ்ணு க்ஷேத்திரத்தையும், தன் பக்கத்தே யுடையதா யிருக்கின்ற, கோ வத்த மென்னும் ஊரை யடைந்த போது, அவருக்கு, "வேர்க்குங்கண் ணீர்ததும்பும் கம்பிக்கு மெய்ந்நடுங்கும், வார்த்தை நழுவு மனம் பதறுங்-கார்க்கதமாய்க், காந்துமுரோ மாஞ்சலியாகுங் காதலித்தார்க், கேய்ந்த குணங்கா ணிவையெட் டும்" என்று ஒழிவி லொடுக்கம் கூறுகின்ற வாறு, வேர்த்தல், கண்ணீர் ததும்பல் முதலிய நற் குறிக ளுண்டாயின, உண்டாகவே, அவர் இந்தப் பதி நமது குரு நாத னெழுந் தருளியிருக்குந் திருப் பதியாகும் என்று சிந்தித்து, ஊரினுட் சென்று, அங் குள்ளாரை நோக்கி, இங்கே மஹாத் மாக் கள் எழுந்தருளி யிருக்கின்றார்களோ வென்று வினவினார். அதற் கவர்கள், இவ் வூர்ப் புறத்திலே நாணற் புத ரொன் றிருக்கின்றது. அப் புதரிலே ஒரு பெரியவ ரிருக்கின்றார். அவர் பெயர் சிவப் பிரகாச சுவாமிகள்; அவர் எப் போ தாவது மாலைக் காலத்திலே அப் புதரினின்று வெளியே வருவா ரென்று கூறினார்கள். அது கேட்ட சொருபா நந்தர், அப் புத ரிருக்கு மிடஞ் சென்று, அவரது வரு கையை யெதிர் பார்த்துக் கொண்டிருந்தார், அவ் வா றவர் காத்துக் கொண்டிருக்கும் போது, ஒரு நாள் மாலை யிலே சிவப் பிரகாச சுவாமிகள் வெளியே வந்தார்; அது கண்டு சொருபாநந்தர், "சைதந்யம் சாஸ்வதஞ் சாந்தம் நிரஞ்சநம், நாதபிந்து கலாதீதம் தஸ்மை வியோமாதீதம் ஸ்ரீ குரவே நம." என்று கூறித், துதித்து, அவரது திரு வடியில் விழுந்து நமஸ்காரஞ் செய்து, அடியேனை பிறவிப்

பெருங் கடலினின்றுங் கரை யேற்ற வேண்டு மென்று பிரார்த்தித்தனர்.

அவர், இவன் அதி தீவிரத்தர பக்குவ னென்று குணங் குறிகளால், செவ்வி தாக வறிந்து, சொருபாநந்தருக்கு, "நினை வரிய வொரு பிரமம் நீயே" என்று தத்துவோப தேசத்தை, ஐயந் திரி பில்லா வாறு செய்தனர். அதனால், அவர் சகஜ நிஷ்டை பெற்றவ ராகி அவ் விடத்திலேயே யிருந்தார். இஃ திங்ஙன மாக, வடக்கே சென்ற தத்துவ ராயர், குரு நாதன் கிடைக்கப் பெருமையால், மழை யில் லாப் பயிர் போல, மனம் வாடித் தெற்கே வந்து கோவத் தத்தில் சொருபாநந்தரைக் கண்டு, பரவச முற்று, நடந்த வரலாற்றினைச் செவ்வி தாக வறிந்து, அவரிடத்து ஒரு மொழியி னுண்மைப் பொருளை யுள்ளவா ரறிந்து, நிர்வி கற்ப நிஷ்டை கூடி நிரதிசயாநந்த வடிவ மாக விளங்கி யிருந்தார்.

இவ் வாறிருக்குங் காலத்தில், சொருபாநந்தர், தமிழிற் கவி பாடுந் திறமை கருவிலே யமையப் பெற்ற தத்துவ ராயரை நோக்கி, அன்பனே! நீ உலோகோபகாரமாகச் சில நூல்க ளியற்ற வேண்டு மென்று குறிப் பாகப் பல முறை தெரிவித்து வந்தனர். சொருபாநந்தர், வற்புறுத்திக் கூருமை யாலும், நிஷ்டையின் மிகுதியாலும், நூ லியற்ற வேண்டு மென்னு மெண்ணம் தத்துவராயருக் குண்டாகா திருந் தது. அது தோன்றும்படி சொருபாநந்தர், ஒரு நாள் அமாவாசையில் எண்ணை இட்டுக் கொள்ள, ஏவலாளரை நோக்கி, எண் ணெய் கொண்டு வரு மாறு கூறினர். அது கேட்ட தத்துவ ராயர், இன்று அமாவாசை யெனக் கூற வேண்டி, அம் என்றார். அப் போது சொருபாநந்தர் விதி

நிஷேத சூந்ய ஞான வெனக்கா, நீ விதி கற்பிக்க வந்தாய், எதிரே நில்லாதே, ஓடிப் போ என்று (வேண்டு மென்று) கடு கடுத்துக் கூறினார். அதற்குத் தத்துவ ராயர் மிகவும் பயந்து நடுக்க முற்று, இனி நான் இச் சரீரத்தோ டிருத்தல் தகுதி யுடைய தாகாது; கடலில் விழுந் திறப்பதே தகுதி யென்று குரு சந்நிதாநத்தை நோக்கிக் கொண்டே பின்னடி வைத்து நடந்து பிரி வாற்றாமை காரண மாகக் கண்களில், நீர் தாரை தாரை யாக வொழுக, பரமாசாரிய ராகிய சிவப் பிரகாச சுவாமிகள் மீதும், ஆசிரிய ராகிய சொரூபாநந்தர் மீதும், சிவப் பிரகாச வெண்பா, தத்துவாமிர்த மென்னும் நூல்களையும், திருத் தாலாட்டு முதல் அமிர்த சார மீறா யுள்ள அடங்கல் முறையினையும், பாடிப் போம் போது, அவற்றைத் தொடர்ந்து சென்ற அடியார்கள் அப் போதப் போ தெழுதிக் கொண்டு போய்ச் சொரூபாநந்தர் முன்னர் வைத்தார்கள். அவர் அந் நூல்களின் மீது விருப்ப மில்லாதவர் போல, மயி ருள்ளவன் வாரி முடிப்பது போல், வாய் உள்ளவன் பாடி யனுப்புகின்றா னென்று கூறிக் கொண்டிருந்தார். இஃதிங்ஙன மாக, தத்துவ ராயர், குரு தரிசநங் கிட்டாது போனமை பற்றி, மிகவும் வருத்த முற்றுப் பாடு துறையில் திரு வடி மாலையைப் பாடிக் கொண்டு கடலில் விழுந் திறக்கச் சமீபித்துச் சென்றதை யடியார்களுட் சிலர் விரைந் தோடி வந்து சொரூபாநந்தருக்குத் தெரிவித்தார்கள். அதற் கவர், "அந்தக் குருவிற்கு வீங்கியை வரச் சொல்லுங்கள்" என்று கட்டளையிட, அவ்வடியார்கள், விரைந் தோடிப் போய்த், தத்துவ ராயருக்கதனைத் தெரிவித்தார்கள், அதனை லவர் அங்க மெல்லாம் பூரித்து, 'என்னையும் சுவாமி வரக் கட்டளையிட்

டதோ? என் பிழையையும், பொருத்தருளிற்றே? என்று தழு தழுத்துக் கூறிப், பின்னர்,

"ஆடுங் கழலா மடியி லொளித்தக்கால், தேடுவ தில்லையென் ருடாய் கழல், திருவடி யல்லதென் ருடாய் கழல்" என் றிறுதி யாக வுடைய பாடு துறையைப் பாடிக் கொண்டே வந்து சொருபாநந்தரை யடைந்து, "பிழை பொறுத்தருள்க" என்று பல முறை வணங்கி, அவர் இரு வெனக் கூற, பரவசப்பட் டிருந்து, பணிவிடைகளைச் செய்து கொண்டிருந்தார். இவ் வா றிருக்கும் போது, சொருபாநந்தர், தத்துவ ராயர், பாடிய நூல்களைச் செவ்வி தாக ஆராய்ந்து பார்த்துப் பெரு மகிழ்ச்சி யடைந்து, அதை வெளியே காட்டாது, தத்துவ ராயரை நோக்கி, அன்பனே! இந் நூல்கள் உனக்கே யுபயோக மாம், பொது வாக யாவருக்கு முபயோக மாகா என்று கூறினர். கூறின அச் சமயத்தில் மடைத் தொழி லாளர் சொருபாநந்தரை, யமுது கொள்ள அழைத்தார்கள். அவர் அமுது கொண்டு வருவதற்குள், தத்துவ ராயர், குரு மூர்த்தியின் குறிப்பைச் சிந்தித் துணர்ந்து, மோக வதைப் பரணியில், ஒரு பிரகரண மாக வமைத்துச் சசி வர்ண போதத்தைப் பாடி முடித்து, குரு மூர்த்தி வந்ததும், அவர் திரு வடியில், அந் நூலை வைத்து வணங்கினர். அதனைச் சொருபாநந்த சுவாமிகள் பார்த்து வியந்து பெரு மகிழ் யடைந்தனர்.

பிறகு, தத்துவ ராய சுவாமிகள், ஈசுவர கீதை, பிரம கீதை முதலிய நூல்களைப் பாடி முடித்து நிர்விகற்ப சமாதி புரிந்திருந்தார். இவ ரிவ்வா றிருக்குங் காலத்தில், யாத்திரை செய்து வந்த சில வாராத்தியர்களும், சில வித்துவான்களும், சொருபாநந்தரது சந்நிதாநத் திருந்த தத்துவ ராயர் முன்

னர் வந்து, போர் முகத் தாயிரங் களிற் றியானையைத் தனக் கூறுபா டின்றிக் கொன்ற வீரனைத் தலைவ னாகக் கொண்டு பாடப்படும் பரணி யென்னும் பிரபந்தத்தை, வீர மென் பதைச் சொப்பனத்தும் பெற் றில்லாத உம் முடைய குரு வைத் தலைவ னாகக் கொண்டு, "அஞ்ஞ வதைப் பரணி, மோக வதைப் பரணி" யென்னும் பிரபந்தங்களை நீர் பாடிய தெவ் வா றமையும் என்று வினவ, அதற் கவர், நமது தேசிகோத்தமர் தம்மை யடுத்த, அள விறந்த சிஷ்யர்களது அகங்கார மாகிய யானைகளை, யுப தேச மாகிய போர் முகத் திலே, மிகு வெளி தாகக் கொன்று விடுகின்றமை பற்றி, அப் பிரபந்தங்களைப் பாடினே மென்று கூறினர். அதற் கவர்கள், நீர் கூறும் அகங்கார மாகிய யானை நேத்திரேந்திரி யத்தா லறியப்படுவ தன்றாகலின், அது பொருந்தாது; பொருந்துவ தாகக் கொள்ளினும், ஒரு சிஷ்யனது அகங் கார மாகிய யானையைக் கொல்லுவதற்கு, அநேக நாள் வேண்டும்; உமது குரு, ஏக காலத்தில் ஆயிரஞ் சிஷ்யர் களது, அகங்கார மாகிய யானைகளைக் கொல்லுவ தெவ் வா றமையு மென்று வினவ, அதற்குத் தத்துவ ராய சுவாமி கள், அதனை யவர்கட் கநுபவ மாகக் காட்ட வேண்டு மென்று கருதி, விடை கூறாது மநத்தை யுள் விழிப் பார்வை யாக்கிச், சமாதி கூடி யிருந்தார். ஆக்ஷேபஞ் செய் தவர், சொருபாநந்தரது சந்நிதாந விசேஷத்தால், இராப் பக லறியாது மூன்று நாள் பரியந்தம் நிர்விகற்ப ஸ்திதியினைப் பெற் றிருப்பா ராயினர். நா லாம் நாளில், தத்துவ ராயர் சமாதி கலைந்து, வெளி முகப் பட்ட போது, அவர்களும், வெளிப் பட் டெழுந்து, சொருபாநந்தரையும், தத்துவராய ரையும், பல முறை வணங்கித், துதித்து, நாங்கள் அஞ்ஞா நத்தின் மிகுதிப் பாட்டால், ஆக்ஷேபித்தோம்; தங்களது

சந்நிதாந விசேஷம் பதி னுயிரஞ் சிஷ்யர்களது அஞ்ஞா நத்தையு மேக காலத்தி லொழிக்கு மாற்ற லுடைய தென்று கூறி, வித்துவான்க ளியாவரும் தத்துவ ராயரது பிரபந்தங்கட்குப் போற்றுக் கவிகள் புகல, யாவரும் அவ் விரு மூர்த்திகட்கும் சிஷ்யர்க ளாகிச் சென்றூர்கள். பிறகு, சொரூபாநந்தர் உலோகோபகார மாகத் தமிழி லுள்ள வேதாந்த சாஸ்திரங்கள் பலவற்றையும், நன் காராய்ந்து வேண்டிய செய்யுட்களை யதிகார வடை வாக வெடுத் தமைத்துத் தமது குரு மூர்த்தியின் பெயர் விளங்கச் சிவப் பிரகாசப் பெருந் திரட் டென் றொரு நூலைத் திரட்டி யருளினூர். (*சிவப் பிரகாசர் திரட் டியது பற்றி, அது சிவப்பிரகாசப் பெருந் திரட்டென்று பெயர் பெற்ற தென்று கூறுவாருமுளர்.)

சிவப் பிரகாசப் பெருந்திரட் டென்று சொல்லப் படும் அத் திரட்டைத், தத்துவ ராயர் சங்கிரக மாகத் திரட்டி, இடை யிடையே தாம் வகுத்த வகுப்பிற் கேற்ற வண்ணம், 424 செய்யுட்களைச் சேர்த்துக், "குறுந் திரட் டென் றொரு நூலைத் திரட்டியருளினூர். சிவப் பிரகாசப் பெருந் திரட்டின் செய்யுட் டொகை 2821. குறுந் திரட் டின் செய்யுட் டொகை 1390. பின்னர், தத்துவ ராயர் சொரூபாநந்தரை (கண்) இமை போற் பிரியா திருந்து வருங் காலத்தி, லொரு நாள், சொரூபாநந்தர் தத்துவ ராயரை விட்டுப் பிரிந்து போவா ராயினர். அது கண்டு, தத்துவ ராயர் அவரைப் பின் தொடர்ந்து போகையில்,

*"ஆனை யாயிர மமரிடை வென்ற, மாணவ னுக்கு வகுப்பது பரணி" இலக்கண விளக்கம்.

சொரூபாநந்தர் கா டென்றும், மலை யென்றும், கருதாது பல விடங்கட்கு, சென்று திரிந்து, பின்னர் கடற் கரையை யடுத்துப் போய்க் கடலின் மீது தமது யோக மகிமையாற் போவா ராஞர். பிரியாது கூடவே சென்ற தத்துவ ராயர், தாம் செல்லுவதற்குக் கட லிடங் கொடுக்காமைக் காகப் பெருங் கவலை யுற்று, தேசிகோத்தமரை நினைந்து, நினைந்து, இளங் கன்றைப் பிரிந்த பசுவைப் போலக், கதறிக் கதறி, யழுது தேடிச் சோர்வுற்ற போது, சொரூபாநந்தர் அவர்க்குத் தரிசநந் தந்து, சில நாள் அவ ருடனிருந்து, திருநெல் வேலிக்கு வடக்கு ஆற்றங் கரை யோரத்தி லுள்ள சேந்த மங்கலத்தில், பரிபூரண தசையை யடைந்தார். தத்துவ ராயர், சிதம்பரத்திற்கும், விருத்தாசலத்திற்கும், இடையே யுள்ள எறும் பூரில் மகா மௌந தசையை யடைந்தார்.

தத்துவராயர் இயற்றிய நூல்களாவன.

1. அடங்கன் முறை, 2. பாடு துறை, 3. சிவப் பிரகாச வெண்பா, 4. தத்வாமிர்தம், 5. ஈசுவர கீதை, 6. பிரஹ்ம கீதை, 7. குறுந் திரட்டு, 8. பெருந் திரட்டு ஆம்.

சொரூபாநந்த தத்துவராய சுவாமிகள் சரித்திரம் முற்றிற்று.

## 35. ஸ்ரீ கர பாத்திர சிவப் பிரகாச சுவாமிகள் சரித்திரம்.

கருணை தென்னச் சொரிதரும் மதம்சேர்
கயமுகன் றனைக்கனை அசுரப்.
பருவரல் உறவேற் படைவிடு குகனைப்
பாநுபு ரிசரை உலகை,
அருள்மர கதவல் லியின்மலர் அடியை
அறம்வளர் வியாசர்பா டியில்வாழ்,

தெருள் உறும் கருணைச் சிவப்பிர காச
தேசிகன் தனைத்திநம் பணிவாம்

புண்ணிய பூமி யாகிய பரத கண்டத்தின் தென் பாக மான சென்னை மாகாணத்திலே, தொண்ட வள நாட்டிலே, சென்னியம் பாக்க மென்னும் திருப் பதியிலே, தர்ம சிவா சாரியரைக் குரு வாகக் கொண்ட, பேரி செட்டிமார் மரபிலே, வீர சைவத்தை மேற் கொண் டுள்ள, பத்தர் குல, நற் குண, நற் செய்கை யுள்ள மருதுண மகரிஷி கோத்தி ரம், முத்து சாமி பத்தரும், அவரது கற் புடைய மனைவி யார், வள்ளி யம்மையாரும், இல் லறம் வழுவாது நடத்தி வாழ்ந்து வந்தனர் அவ் வாறு வாழும் நாளில், அவர்கள் செய்த பூர்வ புண்ணிய விசேஷத்தால், சாதந சதுஷ்டய மிகுந் துள்ள உத்தம ஞாந பரிபாகிகள் செய்த தவப் பே றென் றுரைக்கும் வண்ணம், வேதாந்த மான, சித்தாந்த போத வாக்கிய லட்சியார்த்தப் பொருளே திரண்டு ஒரு மானிட சட்டை சாத்தி வந்த தென்று சொல்லும்படி அருமைப் புதல்வ ராக, அவர்கட்கு 'சிவப்பிரகாசம்'. என் னும், ஓர் பெய ரிய சத் புத்திரர் அவதரித்தனர்,

இவர், பாலிய பருவந் தொடங்கியே சம தமாதி குணங் களை யுடையவ ராக விருந்து, ஞாந நூற்களையே யோதி யுணரும் பக்குவம் வாய்ந்தவ ராகவும், பொறுமை, அடக் கம், அன்பு, சத்தியம், நிராசை, பயனில் பாராட்டாமை முதலிய நற் குண, நற் செய்கைக ளெல்லாம் உடையவ ராயும், அமைந்திருந்தனர். மேலும், இம் மகான் தமது குலத் தொழிலில் ஈடுபடாததைக், கண்ட, அவரது சகோ தரர், அவர் மேற் கொண்ட மார்க்கத்தைத், தமது குடும்ப அபிவிர்த்தியை நோக்கித் தடைசெய்து வந்தனர். ஆயினும்,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்" என்னும் பெரியார் திரு வாக்குக் கிணங்க, அவருடைய பிறவிப் பெரும் பயனை அடையும் நோக்க முடையவராகவே இருந்தனர்."

அப்போது, திருக்கு திரிசிய விவேகம், அத னுரை, பிரத்தியட்சா நுபூதி விளக்கம், உத்தம வாதம், சிவகாருண்ய விளக்கம், மற்றும் பல ஞாந நூல்களுக் காசிரியரும், உலகத்தி லியங்கும் சீவ கோடிகள் தம் முடைய பவக் கடலி லிருந்து உய்யும் வண்ணம் வேதாந்த ரசமாகிய ஆகாரத்தை உண்பித்தவரு மாகிய, ஈசூர், ஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிக ளருளைப் பெற்றவரும், சென்னைமா நகரில், ஞாநா நுபா நுவா யிருந்தவரு மாகிய, சாது இரத்ந சற்குருவின் சந்நிதாநத்தை அடுத்து, ஞாந அப்பியாசம் செய்து வந்தனர். பாஹிய திருஷ்டி யின்றிச், சதா அந்தர்முக திருஷ்டி யுள்ள வராய்ச், சித்திர தீபம் போல, நிர்விகற்ப சகஜ நிஷ்டா நுபவ நிரதிசயாநந்த வாழ்வி லிருந்து வந்தனர். தமது ஞாநாசாரியர், பரிபூரண தசையை அடைந்த பின், "எல்லார்க்குக் காலன் துறவீவன், ஈயாமுன் நல்லோர் துறப்பர்" என்னும் மெய் யுரையை மேற்கொண்டவராய்த், தமது இல்லத்தினின்றும் புறப்பட்டுச் சென்னையை யடுத்துள்ள, திரு வான்மியூர்க்குச் சென்று, கடுந் துறவை மேற் கொண்டு, மௌந விரதம் பூண்டு, நிஷ்டை சாதித்திருந்தனர்; இந் நிலையி லிருந்த இவர், பிறர்க்குப் பயன் படா திருப்பதைக் கண்ட, மேற்படி, ஸ்ரீ சாது இரத்ந குருவினிடத்து ஞாந அப்பியாசம் பெற்று வந்த அவருடைய சகபாடிகள், அவரைச் சென்னையின்கண் அழைத்து வந்தனர். அக் காலம், சென்னையின்கண் எழுந்தருளி

விருந்து, மௌந நிலையை விட்டு, ஞாந நூற்களைப் பலர்க்கும் போதித்து வந்தனர். இவர்க்குச் சற் சீடர்கள், நூற்றுக் கணக் காகப் பெருகினர். இச் சற் சீடர் குழாம், பெருகுவது, தமது நிஷ்டைக்குத் தடையா யிருக்கிறதென்று கருதி, இவர் சென்னையை விட்டு நீங்கினர். அவர் சென்ற நெறி அறியாராய்ச், சீடர்கள் நெடுங் காலம், அவரைத் தேடிக் காணுது வருந்திக், கடைசியில் பொதிய மலையில் கண்டு, தரிசித்து அவரைச் சென்னைக்கெழுந்தருளுமாறு மன்றுடிக் கேட்டுக் கொண்டனர். சுவாமிகள், இயற்கையிலேயே சாந்தமும், பூத தயாளமு முடையவராதலின், அவர் தம் வேண்டுகோளுக் கிணங்கிச், சென்னைக்கெழுந் தருளினர். சுவாமிகள் எதனிடத்தும் ஒட்டுப் பற்றின்றிக் கடுந் துறவு பூண்டிருந்தமையின், அவர்பால், சென்னையில், பல சீமான்களும், சீமாட்டிகளும், செல்வாராயினர், அவர்பா லடைந்து, இஷ்ட சித்திகளைப் பெற்ற சில கன தனவான்கள், அவர்க்குச் சென்னைச் சூளை ஸ்ரீமான் பி டி, செங்கல்வ ராய நாயகர், பூந் தோட்டத்தில், அவர்க்கென்று, ஓர் ஆச்சிரமம் கட்டி வைத்தனர். மேற்படி நாயகர் குடும்பத்தினரும், சுவாமிகள், அருங் குணங்களைக் கண்டு, தமது தோட்டத்தில் சுவாமிகளுக்கு ஓர் ஆச்சிரமம் கட்ட இடந் தந்தனர். சுவாமிகள், ஆச்சிரமத்தில் தனியே யிருந்து, நிஷ்டை சாதித்து வந்தனர். சுவாமிகள், பகிர் முக மாகுங் காலங்களில், தம்மை வந் தடுக்கும், சாதந சதுஷ்டய முள்ள முமுட்சுச்களுக்கு அஞ்ஞாந விருள் நீங்குதற்கு, ஓர் ஞாந சூரியராயும், நின்று, நியாயம், சோதனை, பொருத்தமுற வேதாந்தப் பிரசங்கம் புரிந்து, அதனுல், அவர்களது சந்தேக விபரீதங்களை யெல்லாம் ஒழித்து மகா வாக்கிய ஞாநோபதேசம் புரிந்து, பகிர் முக திருஷ்டியை

நிவிர்த்தித்து, அந்தர் முக திருஷ்டி யுள்ளவர்க ளாக்கு வித்து, அவர்களை நிர்விகற்ப ஞாநாநந்த வாரிதியில், மூழ்கச் செய்தனர். மேலும், சுவாமிகள் சென்னையில், வேதாந்தம் பரவ வேண்டு மென்னும் பெரு நோக்க முடையவராய்ச், சாது மகா சங்க மென் ஞெரு சங்கத்தை யேற்படுத்தினர், அது, சென்ற பல வருஷங்க ளாக மிகச் சிறப் பாக நடைபெற்று வருகின்றது. சென்னையின்கண், வரும் சாதுக்களுக்கு உண்டி முதலிய வசதி இன்மையைச் சுவாமிகள் பெரிதுங் கவனித்து. அக் குறைவை நிவிர்த்தித் தற் பொருட்டுச்,சென்னைக் கடுத் துள்ள,வியாசர் பாடியில். புற்றிற்கு பால் வார்க்குந் தோட்டத்தை, அன்பர்களைக் கொண்டு வாங்குவித்து, அதில், சாதுக்கள் தங்குவதற்கு போதிய கட்டடங்களைக் கட்டுவித்திருக்கிறுர். இங்குச் சாதுக்களுக்குச் சமஸ்கிருத பாட சாலை முதலியவற்றை ஏற்படுத்துவதற்கு வேண்டிய யோசனைகள் செய்யப்பட்டு வந்தன.

சென்ற பல வருஷங்க ளாக மேற்படி தோட்டத்திலும், செங்கல்வ ராயநாயகர் பூந் தோட்டத்திலும், சாதுக்கள் பலர் வருதல், போத லுடையவரா யிருந்தனர். தினந் தோறும், 20 சாதுக்களுக்கு குறையாது வியாசர் பாடி, ஆநந்தாச்சிரமத்தில், தங்கி யிருப்ப துண்டு. சுவாமிகள், சந்நிதான விசேஷத்தினுல், எல்லாத் திருப் பணிகளும்,குறை வின்றி நடந்து வந்தன. மேற்படி சாதுக்கள், சமஸ்கிருத பாட சாலை முதலிய திருப் பணிக் காக, ஒரு லட்சம் ரூபாய் திட்டஞ் செய்யப் பட்டிருந்தது. வெண் ணெய் திரண்டு வரும் போது தாழி உடைந்தது போல், சுவாமிகள் (5—4—1918) உதயாதி பூர்வம் 1-20க்குத் தமது 45வது வயதில், பரிபூரண தசையை யடைந்தனர். ஆயினும்,

சுவாமிகளின் சத்திய சங்கற்பம் வீணுகா தன்ருே? அது, சுவாமிகளின் சிஷ்ய கோடிகளுள் ஒருவரது மனத்திலா வது, உற்பூத மாகாம லிராது. காலக் கிரமத்தில், அது முற் றுப் பெறுவ தாம். பய னேக்காது செய்யும் ஞானிகளின் சங்கற்பங்களை முடிக்கப் பகவான் கங்கணங் கட்டிக் கொண்டிருக்கின்ருரென்பது சாஸ்திர சம்மத மாதலின், நமது சுவாமிகளது, சாது சமஸ்கிருத பாடசாலை முதலிய கைங்கரிய நோக்கம், அவர் தம் சிஷியர் வாயி லாகத் தொடர்ந்து பற்றிப் பூர்த்தியாவ தாம்.

சுவாமிகளுக்கு, ஹேம வித்தை தெரியு மென்று கருதி, அவரை அடுத்து, ஏமாற்ற மடைந்த சிலர், அவருண்ணும் அன்னத்தில், விஷங் கலந்து விட முயற்சியும் செய்தனர். ஆயினும், சுவாமிகள், தமது சரீர பாதுகாப்பில் திருஷ்டி யில்லாதவரா யிருந்தனர். சுவாமிகள், தம்மை நேரில் தூஷிப்பவரிடத்தும், புன் சிரிப்பும், இன் சொல்லும், உடையவரா யிருந்தனர், அவர். தம் அரிய பெரிய குணங் களை அளவிட்டுச் சொல்லுதல் ஆயிர நாவை யுடைய ஆதிசேஷனுலும், அளவிடற்பால தன்று. மண், பெண், பொன், ஆசைகளைப் பற்றறத் துறந்த பெரியார்க்கு, உயர்வு தாழ்வுக ளில்லை யென்பதனைச் சுவாமிகள்பால் நிதரிசன மாகக் கண்டனம். தம்பால் வரும் பல்லோரையும், உயர்வு தாழ்வு கருதாது, சுவாமிகள், சகோதர ராகப் பாவித்து வந்தன ரென்று கூறுவது மிகையாகாது. மேற்படி திருப் பணிகள், நிறை வேறுவதற்கு வேண்டிய பொருள்கள் எவ் வாறு எங் கிருந்து வந்த தென்று ஒருவருக்கும் இதுகாறும் விளக்க மாகத் தெரியாது. சுவாமிகள், ஒருவரையும் உள்ள வரையிலும் ஒன்றும் கேட்ட தில்லை. காந்தத்தின் சந்நிதா

நத்தில், இரும்பு சேடிப்பது போலச், சுவாமிகள் சந்நிதா நத்தில், எல்லாம் குறை வின்றி நடந்தேறி வந்தன,

வருடந் தோறும், ஸ்ரீ சங்கர் ஜயந்தி, சித்திரா பௌர்ணிமை மஹோற்சவ முதலியன, மித சிறப்பாக நடந்தேறி வந்தன. சென்னை, ஸ்ரீ செங்கல்வ ராய பூந் தோட்டத்தில், மங்கள வாரந் தோறும் சுவாமிகள் வேதாந்த பாடம் நடத்தி வந்தனர். இவ் வழியால் ஆயிரக் கணக்கான ஜநங்கட்கு வேதாந்த சாஸ்திரங்களில், சிரத்தையும். ஈசுவரோபாபாசனையில், விருப்பமும், சாதுக்களிடத்தில், பக்தியும், பெருகி வந்தன. ஸ்ரீ சங்கர பூஜ்ப பகவத் பாதாசாரிய, சுவாமிக ளவர்கட்கு ஆலய மொன்று வியாசர்பாடி ஆநந்தாஸிரமத்திலும், சென்னை, ஆநந்தாஸிரமத்திலும், கட்ட வேண்டு மென்பது, சுவாமிகளின் நோக்கங்களி லொன்று, அந் நோக்கம் முற்றுப் பெருது போனது பெரிய தோர் நஷ்ட மாம்.

சுவாமிகள் வேதாந்த அபிவிர்த்தியின் பொருட்டுச் சமஸ்கிருத ஹிந்தி பாஷைகளி லிருந்து, ஆத்ம புராண முதலிய பல அரிய நூல்களை வெளியா மாறு செய்திருக்கின்றார். பல சாஸ்திரங்களி னின்றும், இன்றியமையாத செய்யுட்களைத் திரட்டி அமைத்த, வேதாந்த மனன சிந்தாமணி யென்னும் ஒரு பெரிய வேதாந்த நூலை அச் சேற்றி வெளியிட்டிருக்கின்றார். ஞாந சாதக சகாய மென்னு மொரு நூலை, சாதகர் பொருட் டெழுதி அச்சிட்டு வெளி யாக்கியு மிருக்கின்றார். வேதாந்த வித்தை சென்னையிலும், பிற விடங்களிலும், பரவுதற் குரிய மார்க்கங்களைப் பல வழியாலும், செய்திருக்கின்றார். சுவாமிகள், இவ் வாறு பல வேலைகள் செய்து வந்த காலத்தில், அநேகருக்குப் பல

நன்மைகள் உண்டாயின. சுவாமிகள் பரிபூரண தசையடைந்தது வேதாந்தத்திற்கே பெரிய நஷ்ட மாகும்.

அம் மகாத்மா தம் முடன் ஒத்து உழைத்துவந்த தமது நண்பர் ஒருவரது பேருதவியைக் கொண்டு சென்னையில், சாது மகாசங்கத்தை ஸ்தாபித்த பின், இவ் விருவரும் சுத்த சங்கல்பத்தோடு சென்னையிலிருந்தே செய்துவந்த பெருமுயற்சினாலே, சென்னை மாகாணத்தின் பல இடங்களில், இச் சாது மகாசங்கத்தைத் தொடர்ந்து பல சாது சங்கங்கள் ஏற்பட்டு மிகு விமரிசையாய் நடைபெற்று வருகின்றன.

சுவாமிகள் தம் முடைய வாழ் நாள் முற்றும் சுகப் பிரம்மத்தைப் போல, பிரமசாரிய வ்ரதத்தையே மேற் கொண்டிருந்தார். இவர் யாவரும் வியந்து போற்றத் தக்க காம ஜித்துவா யிருந்தபடியால், இம் மகானிடத்து உயர் குல, மாது சிரோண்மணிகளும், மிக ஆர்வ மாய் வேதாந்த சாஸ்திர சிரவணஞ் செய்துவந்தனர். சுவாமிகளது நோக்கம் பலவும் பரமேசுவரனது கருணையால் முற்றுப்பெறுமென்று நம்பியிருக்கின்றோம்.

கர பாத்திர சிவப் பிரகாச சுவாமிகள் சரித்திரம் முற்றிற்று.

## 36. காளையார் கோவில், செல்லப்ப சுவாமிகள் சரித்திரம்.

பாண்டி வள நாட்டிலே, புதுக்கோட்டை சீமையிலே, அரிமளம் என்னும் ஊரிலே, நல் லொழுக்கம், நற் செயல் உடைய மாதா பிதாக்கள் இருவருக்கும் நல்ல நேரத்தில்

ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு செல்லப்பன் என்று பெயர் வைத்து வளர்த்து வந்தனர். அந்தச் செல்லப்பன் வயது வந்ததும் பள்ளிக் கூடத்தில் கல்வி கற்று வந்தனர். கல்வி கற்று முடிந்து, நகரத்தார் வழக்கப்படி சிலோன் சென்று கடையில் வேலை பார்த்து வந்தனர். அங்கு சில சமயங்களில், வைராக்கியம் உண்டாகி, ஊர் வந்து இருந்தனர். பின் ஒரு சமயம் கோவிலூரில், இராம சாமி ஞான தேசிகரிடம் போய் தனக்கு ஏற்பட்ட துன்பத்தை சொல்லி சரணாகதி அடைந்தனர். அவர்களும், இவரை பக்குவி என்று அறிந்து பிரமக்ஞான உபதேசம் செய்தனர். அதனை கேட்டு, அங்கு அப்பியாசம் செய்து கொண்டு இருந்தனர். அதன் பின் தஞ்சா வூர் பால் சாமி மடம் போய், மடாதிபதி யாக, இருந்தனர். அங்கு சில காலம் இருந்த பின், மதுரை, தெற்கு வெளி வீதி குட்டையா மடத்திற்த அதிபதி யாக இருந்தனர். அங்கு வெகு காலம் அதி பதி யாக இருந்து பலருக்கு பிரமக்ஞான உபதேசம் செய்தனர். அதன் பின், காளையார் கோவிலுக்கு சென்று, ஒரு மட ஸ்தாபநம் செய்து, கொண்டு இருந்து, தேவ கோட்டை ஜமீந்தாருக்கு ஞான உபதேசம் செய்து நீண்ட நாள் இருந்து காளையார் கோவிலிலேயே மடத்தில் சமாதி ஆயினர்.

கண்ட னூர், பிரமவித்யாப் பிரசாரண சபைக்
காரிய தரிசி, முத்தி ராமையா இயற்றியது.

அணிகொண்ட கலியுகமை யாயிரத் திருபத்து மூன்றுந் துந்துபி,
யாடிமா தத்திரு பத்தொன்ப தாந்தேதி யானதோ ரமரபக்க

மமர்சஷ்டி யாதித்த வாரமிரே வதியுற்ற தானதோர்
சுபதினத்தில்,
ஆண்டவர் மரபினி லருள்பெற்றி டும்ராம சாமிகட்
கடிமை பூண்டு,
மணியான ஞானம தடைந்துமே தஞ்சைநகர் மாமதுரை
சாக்கையுற்ற,
மடங்களுக் கதிபதி யாயிருந் தவற்றிற்கு வாள் பொருள்க
டேடிவைத்தும்
வைராக்கிய முபரதிந டையுள்ள சீடரை மதித்துமே
யருள்புரிந்தும்
வையகந் தனிலுற்ற வணிகர்கள் புகழுமிக வாழ்ந்துமே
யுலகின்மிக்க,
இணியான தேவாங்க ராளுமரு ஞசலஞ் செட்டியா
ரவர்களுக்குத்
தீக்கையி லுயர்மகா வாக்கியம துதனைத் தெளிவாய
நுக்ரகித்துந்
தென்பாண்டி நாட்டிலுயர் காளையார் கோயிலிற்
றிருமடங் கட்டுவித்துக்
தேவர்முத லியாவரும் பார்த்துக்க ளித்திடச் சிறப்புட
னங்கிருந்தே
பணிகொண்ட பொருமையிற் றருமரைப் போலவும்
பக்திவா கீசர்போலும்
பாங்கான போதனைவ சிட்டரைப் போலவும்
பகரரிச் சந்தரனெனவும்
பண்பான கொடையினிற் கன்னனைப் போலவும்
பார்ப்பவரெ லாமதிக்கப்
பாரிலுயர் செல்லப்ப சாமிநிற் குணமான பரசொருப
மாயினரரோ.

காளையார் கோவில்
செல்லப்ப சுவாமிகள் சரித்திரம் முற்றுப் பெற்றது.
ஓம் தத் ஸத்;

## 37. சாக் கோட்டை வீரப்ப சுவாமிகள் சரித்திரம்.

பரமேசுவரன் அறு பத்து நான்கு திரு விளையாடல் செய்த பாண்டி வள நாட்டிலே, புது வயல் என்னும் ஊரிலே, மாதா பிதாக்கள் என்னும் இருவரும் நல் ஒழுக்கம், நற் செயல், அடியார் பக்தி உடையவர் களாய் இருந்தனர் அவர்களுக்கு நல்ல வருஷத்தின் நல்ல மாதத்தில், நல்ல வாரத்தில், ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அந்த குழந்தைக்கு வீரப்பன் என்று பெயர் வைத்து வளர்த்து வந்தனர். வயது ஐந்து ஆனவுடன் பள்ளிக்கு வைத்தனர். அவனும் பள்ளிக் கூடம் சென்று கல்வி கற்று வந்தனன் வயது ஆக ஆக சம்சாரத்தின் வெறுப்பு உண்டாகி, கோவிலூர் போய் இராம சாமி ஞாந தேசிகரை குரு வாக அடைந்து சரணுகதி ஆயினன். அவரும் அந்த வீரப்பன் என்பவனுக்கு பரிச்சை செய்து, பிரம வித்தையை உபதேசித்தனர். அவனும் அதைக் கேட்டு அங்கு இருந்தே ஞாநாப்பியாசம் செய்து வந்தனர். அங்கு இராம சாமி ஞாந தேசிகர் பரிபூரண தசையை அடைந்த பின்னர், அவரது இரு பாத குரடு ஆகிய திரு வடிகளை கையில் கொண்டு, சாக் கோட்டை என்னும் ஊருக்கு வந்து சேர்ந்தனர். அங்கு மடம் ஒன்று ஸ்தாபித்து, வந்த பக்துவிகளுக்கு பிரம வித்தையை உபதேசம் செய்து வந்தனர் நீண்ட நாள் இருந்து பலருக்கும் உபதேசம் செய்து விட்டு ஓர் நற் றிநத்தில் சமாதி ஆயினர்.

### வீரப்ப சுவாமிகள விதேக முத்தி ஆசிரிய விருத்தம்.

ஓங்குகலி யையாயி ரத்தாறு குரோதியி லுயர்மகர ரவிய மைந்த—வொருபத்து மூன்றுடன் புதன்வார மேலான

வொளி குறைவு கிருஷ்ண பக்கம், பாங்குடைய பஞ்சமித் திதியோடு நட்சத்திர பரமான வுத்த ரத்தில்-பரமனுரு சமிவநச் சேத்திரமெ னுங்கோயி லூரதாம்-பதியு றைந்து, தீங்குறும வித்தையாற் கட்டுண்ட சீவரைச் சிவமாக்கி வீட ளித்துச், சித்திவிளை யாடல்புரி முத்திரா மேசகுரு சீர்பரவீ மரபில் வந்தே, ஈங்குநற் சாக்கையி லெழுந்தருளும் வீரப்ப வெந்தை குரு பரம முத்தி—யெய்தியது மியாநங்கள் தொழு முருவினை மறைத்தது மியாவர்க்கு மிக வியப்பே.

சாக்கோட்டை,

வீரப்ப சுவாமிகள் சரித்திரம் முற்றுப் பெற்றது.

## 38. *அரசப்ப சுவாமிகள் சரித்திரம்.*

நாடரும் பொருளை நமக்கருள் சித்தி
நாயகன் நளிநநன் மலரைத்,
தாடரும் பாற்கும் பரங்கிரி இறையைத்
தாணுவாம் சுந்தரேச் சுரனை.
நீடிய வினைகள் யாவையும் பொடிசெய்
நீள்கயற் கண்ணியம் மையினைத்
தேடமர் கூடல் அசுவத்த நாத
தேசிகன் தனைத்திநம் பணிவாம்.

கடல் புடை சூழ்ந்த பூலோகத்திலே, பரமசிவன் அறுபத்து நான்கு திரு விளையாடல் செய்த பாண்டி வளநாட்டிலே, காரைக் குடி என்னும் நகரத்திலே. தந வைசிய குலத்திலே, பிள்ளையார் பட்டி கோத்திரத்திலே அவதரித்தவர் அரசப்ப சுவாமிகள்.

காரைக் குடி யென்னும் ஊரில் மது க்ஷேத்திர மெனக்
கியாதி யடைந்ததாயும், கலியினை நாசம் செய்கின்றதாயும்,
கோவி லூ ரென்று விசேஷ மாகப் பிரசித்தி அடைந்த
தாயும், அநேகம் பெரியோர்களாற் சூழப்பட்டதாயும்,
ஒரு ஸ்தாநம் இருக்கின்றது. அந்த ஸ்தாநத்தில், ஆத்ம
நிஷ்டர்க ளாயும், விஷய விரக்தர்க ளாயும், சிவ பக்தர்க
ளாயும், மகாத்மாக்க ளாயும், இருக்கின்றவர்களாற்
சூழப்பட்டு, முத்தி ராம லிங்க மென்ற பெயரை யுடைய
ஒரு மகான் இருந்தனர். மகாத்மா வாயும், ஆத்மாநந்தத்
தில், எப் பொழுதும் ரமித்துக் கொண்டு, சதா பிஹ்மத்
தியாநத்தில் மூழ்கி இருக்கின்ற அந்த மகானுக்குச் சாலி
வாடீஸ்வரி தேவி சதா பிரசந்ந மாய், அடிக் கடி தரிசநம்
கொடுத்தனள். சாக்ஷாத் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி யான
குருவே, அந்தத் திருமேனியை அடைந்து, பஜித்தவர்
களைச் சமுசார சமுத்திரத்தினின்றும் கரை யேற்றிக்
கொண்டிருந்தார். அவருக்குச் சிஷ்யர்க ளாக விசேஷக்
கியாதி யுடைய சநகாதிகளே, சிதம்பரம், வெள்ளையன்
குட்டையன், ஸ்கந்தன், பெரிய அருணாசலம், சின்ன
அருணாசலம், குழந்தை யென்னும் பெயர்களுடன் அவ
தரித்தனர். இன்னும் அநேக விரக்தர்கள் சிஷ்யர்க ளாக
இருந்தார்கள். அவர்களைச் சரணாகதியாய்ப் போ யடை
ந்து பிரஹ்ம ஞாநத்தை அறிய வேண்டு மென்ற விருப்பத்
தோடு அரசப்ப ரென்னும் பெயரை யுடைய நமது ஸ்வாமி
கள் சதா தம் சற் குருவிற்குத் திருப்தி யுண்டாகு மாறு
சேவை செய்து வந்தார்கள் அந்த முத்தி ராம லிங்க
ஞாந தேசிகரும், இவரைப் பார்த்து, நீயே பிரஹ்மம்,
ஜகத்ப் பொய் என்று போதித்தார்கள். அந்தச் சற் குரு

உபதேசத்தினுல் பிரத்தியகாத்மாவின் ஸ்வரூபத்தினை அறிந்தார். அநந்ப பக்தியாகின்ற சிஷ்ருஷையினுல் குருவை ஆராதித்துக் கொண்டு, விதேக முத்தி வரை குரு சமீபத்தில் (நிழல் போல்) வசித்து வந்தார்கள்.

அதன் பின், சில காலம் ஆண்டே வசித்து வரும் போது, உத்தம மான சிவ க்ஷேத்திரத்தில், ஜீவ னுள்ள வரை வசிக்க வேண்டு மென்று மநதில் எண்ணினர். ஆ ளுடையார், கோவில், ஆலாசியம், (மதுரை) சிதம்பரம் என்னும் மூன்ற னுள் யாண்டு வசிப்பது சிலாக்கியம்? என்று சிந்தையோடு கூடியிருக்கும் சமயத்தில், ஸ்வாமி களுடைய ஸ்வப்நத்தில், மிக ஆதரவோடு நீ ஆலாசியத் திற்கு வருக வென்று, ஸ்ரீ சுந்தரேசுரர் ஆஞ்ஞை பண்ணி, மீனுக்ஷி சுந்தரேசுவரர்க ளுடைய சந்நிதியில் தீபாராதனையையும் தரிசிப்பித்து மறைந்தார். பக்தர்களு டைய இஷ்டத்தினைச் செய்விக்கின்றவராயுங், கருணு நிதியாயு மிருக்கின்ற சுந்தரேசுவர ருடைய ஆஞ்ஞை யினுல், சுவாமிகளும், மதுரமா யிருக்கின்ற மதுரா புரியை வந்து அடைந்தார். தென் றிசையி லிருக்கின்ற கிருத மாலா நதிக் கரையில் உள்ள ஒரு மடத்தில், அநேக காலம் வசித்துக் கொண்டிருந்தார்கள். அந்த பட்டணத்திற்கு ஈசுவரராயும், சகல ஜகத்திற்கும் அதிபராயும், மேலான பிரஹ்ம வித்யா ஸ்வரூபி யான மீனுக்ஷிக்கு நாயக ராயும், இவ் வள வென்று அளவிடக் கூடாத கருணையினுற் பூரண மான மநத்தினை யுடையவராயும், ஏழைகளை இர க்ஷிப்பதில் அதிக ஆதரவுடன் கூடினவராயும், ஆச்சரிய மான லீலா விநோதத்தினை யுடையவராயு மிருக்கின்ற சுந்தரேசுவர ருடைய சரித்திரத்தினை, அகாதமா யிருக்கின்ற

எல்லாச் சமுத்திரங்களேயும் உள்ளங் கை ஜலமாய்ச செய்வதில் சமர்த்தராயும், லோக கண்டக ளான மாதாபி, இல்வலனைப் பக்ஷணம் செய்வதில் சமர்த்தராயும், சூரிய சந்திரர்களுடைய போக்குவரவைத் தடுத்த விந்திய மலை யின் கர்வத்தினைப் பங்கம் பண்ணினவராயும், குற்ருலத்தி லிருந்த விஷ்ணுவைச் சிவ லிங்க மாகச் செய்து, துஷ்ட வைணவரவர்களுக்குத் துக்கத்தினைக் கொடுத்தவராயும், உலகத்தினுடைய துன்பத்தை நிவிர்த்திக்கும் பொருட்டுப் பூமியினுடைய தென் திசையில் வந்து சமன் செய்தவரா யும், தக்ஷிண திக்கி லிருக்கின்ற ஜனங்களுக்கு இதம் செய் யும் பொருட்டு ஈசுவரனிடத்தி லிருந்து தமிழ்ச் சூத்திரத் தினை அடைந்தவ ராயும், சிவனே நான் என்னும் பாவனை யினுல் சாக்ஷாத் ஈசுவரனுக்கு இரண்டாவது ஈசுவர விக்கிர தராயும்,தமது சித்தத்தில் ஸ்ரீ சுப்பிரமணியருடைய பாதார விந்தத்தைச் சதா தியானஞ் செய்து கொண்டிருக்கின்ற வராயும், ஒருவராலும் சாதிக்கக் கூடாதிருக்கின்ற தபசி ஞல் சந்தோஷத்தினை யடைந்த ஸ்ரீ சதாசிவத்தினின்றும் சர்வப் பிராணிகளுக்கும் குருவாயிருக்கும் தன்மை பெற்று ஜகத்குருவாயும்,இருக்கின்ற, அகஸ்திய மகரிஷியை யன்றி, யாவர் வர்ணிக்கச் சமர்தத ராவர். சர்வ ஜகத்திற்கும், மாதா பிதாக்க ளாய் இருப்பினும், பாவனு பலத்தின் விசேஷத்தினுல், தமது மாதா பிதாக்க ளாய மீனுக்ஷி சுந்த ரேஸ்வரர்களை, ஸ்வாமிகள் பக்தியோடு நாடோறும் நன் ருகப் பிரதக்ஷிண நமஸ்கார தோத்திரங்களால் சந்தோஷம் செய்வித்துக் கொண்டு வசித்துக் கொண்டிருந்தார்கள். அப்படி வசித்துக்கொண்டு வரும் போது, பங்குனி உத்த ரத்தில் நடக்கின்ற குரு பூஜைக்குக் கோவி லூருக்கு வருஷந் தோறும் போய் வந்து கொண்டிருந்தார்கள். ஒரு

வருஷத்தில், குரு பூசைக்கு ஒரு வாரத்திற்கு முன் சுந்த
ரே சுவரர் வந்து இவ் வூரிலேயே குரு பூசையை நடத்துக.
அங்கு செல்ல வேண்டாம் என்று உத்தரவு கொடுத்ததை
லக்ஷியம் பண்ணாமல், குரு விஷயத்தில் ஈசுவர வாக்கியம்
செரி தல்ல வென்று கருதி மடத்தி லிருந்து புறப்பட்டுச்
சந்நிதி மண்டபத்தில் வந்து உட்கார்ந்தவுடன், ஸ்வப்நத்
தில் குரவ ரெழுந்தருளி, நீ கோவி லூருக்கு வர வேண்
டாம் இவ் விடத்தில், குரு பூசை நடக்கும். நீ அதைப்
பற்றி கவலைப்பட வேண்டாம், தடைப்படாது என்று
கூறித், தெற்கு வாசலி லிருக்கின்ற நாயக்கர்மார்களுக்
கும் இந்தக் குரு பூசையை நீங்கள் எல்லோரும் சேர்ந்து
நடத்த் வேண்டு மென்றும் ஆக்ஞை செய்தனர்- உத்தர
வான பிரகாரம் அவர்களும் அவ் வாறே நடத்தி வந்தார்
கள். சுவாமிகள் வசிக்கும் மடத்தில், குரு பீடத்தில், சம்பு
வாகிய நடராசரைத் தியானித்துப் புஷ்பங்களால் பூஜித்து
அநேக காலம் வசித்து வந்தார்கள். ஒரு கால் சுவாமிகள்
வசிக்கும் மட த்தில் மீனாக்ஷி தேவி சகிகளோடு ஸ்வப்நத்
தில் வந்து அந்த மடத்தி லிருக்கின்ற குப்பையைக் கூட்
டிக் கொண்டு இருக்கும்போது, அம்பிகையை அந்தச்
சகிகள் பார்த்து, சுவாமி கோபித்துக் கொள்வர் வா"
வென்று கூப்பிட்டனர். அப் போது தேவி நான் என்
செய்வேன், நமது புத்திர னை அரசப்பன் சுப்பராய
னென்கின்ற துஷ்டனோடு சேர்ந்து மடத்தினை அசுத்தப்
படுத்திவிட்டான். அதற் காக இந்த மனோ மடத்தினைக்
கூட்டுகின்றேன். என்று சொன்னவுடன் பரமாத்ம ஞானி
யாகிய சுவாமிகளும் விழித்துக் கொண்டு, அது முதல்
வஞ்சக னையும், விட னையும், இருக்கின்ற சுப்பராயனை விட்டு

நீங்கி வசித்து வந்தார்கள். இவ் வாறு, நீளுட் சென்ற பின், கால யுக்தி வருஷம், கார்த்திகை மாசத்தில் அவர்களது ஸ்வப்நத்தில் சுந்தரேஸ்வரர் தேவியோடு வந்து, ஹே தேவி உன் புத்திரனுல் பூசை செய்யப்பட்ட சருகான பத்திரத்தைப் பார் என்று கூறியதும், தேவியும் புத்திமானுகிய புத்திரனுல் யாது செய்ய முடியும்? புஷ்பத் தோட்டமோ மழையில்லா திருப்பினும் தண்ணீர் இறைப்பதற்கு பண மில்லாததனுல் காய்ந்திருக்கின்றது இவனுல் யாது செய்ய முடியும் என்று மறு மொழி கூறினர். இவ் வாறு, கூறிய மாதா பிதாக்க ளாகிய மீனுக்ஷி சுந்தரேசுவரர்களினது வார்த்தையினைக் கேட்டு சுவாமிகள் ஸ்வப்நத்தினின்றும் சகஜ மாக விழித்துக் கொண்டு, அந்த மடத்திற்கு நாய னுக யிருக்கின்ற கிருஷ்ண நாயக்கனை அழைத்து (அவனுக்கு) தர்மத்தைப் போதித்து, இந்தப் புஷ்பச் செடிகளை நா டோறும் இறைவைத் தண்ணீரால் ஆதரவோடு பரிபாலிப்பையேயாயின், அதனுல் உனக்கு நிகரில்லாத புண்ணியமும், சுகமும், கிடைக்கும் என்று கூறியதும், அவனும், மந மின்றி அங்ஙனமே செய்வேன் என்று கூறினன். இவ் வாறு அநேக முறை கூறியும் அவன் சுவாமிகள் நோக்கம் போற் செய்ய வில்லை. பின் ஒரு தினத்தில் சுவாமிகள் கிருஷ்ண நாயக்கனை அழைத்து என் இதமான வார்த்தையினை நீ யேன் கேட்கவில்லை என்று கேட்க, அவனும் அவ்வாறே செய்கின்றேனென்று பொய் வசநம் கூறினுன். அப்போது வாக்கினுல் மட்டும் சொல்லுகின்ருய், செய்கையினுல் காண்பிக்கின்ருயில்லை. ஆனதால், முன் போன்று பொய் கூறேன், உமது வசனத்தின் பிரகாரம் அவசியம் செய்கின்றேன் என்று உன் நாதனை ராமனிடத்தில் ஆணை வைத்துப் பிரமாண பூர்வக

மாகக் கூறுவாயாயின், உன் வார்த்தையில் எனக்கு நம்பிக்கை வருமென்று கூறினர்கள்! கிருஷ்ண நாயக்கன் அக்கால் ஒன்றும் பதில் கூருமல் வேறு சித்த முடையவனுய்ப் போய்விட்டான். அதன் பின் சுவாமிகள் தம் வாக்கியத்தினைப் பிரீதியோடு கேட்டுப் பதில் சொல்லாமற் போனதை அறிந்து, மநதில் வியசநத்தோடு சிவாலயத்தினை அடைந்து மாதா பிதாக்க ளாகிய மீனுக்ஷி சுந்தரேஸ்வரருடைய சந்நிதியில் விநயத்தோடு நமஸ்கரித்து, சுந்தரேஸா? தயா சிந்துவே? என்னுடைய விண்ணப்பத்தைக்கேளும்' நீர் பூர்வத்தில் திரிபுராசுராதிகளை சம்ஹரித்தும், 64 விதமான லீலைகளைச் செய்தும், முன்னம் செய்திருக்கின்ற காரியங்கள் எல்லாம் சத்தியமா யிருக்குமாயின், கிருஷ்ண நாயக்கனிடத்தி லிருந்து எனக்கு வந்திருக்கின்ற அவமானம் உமக்கு வந்திருக்கின்றதாகும். இன்னும், விசேஷ துக்கத்தைக் கொடுக்கின்ற உபாதியும் அவனுக்கு உண்டாகட்டும், என்று தெரிவித்துத் தம் மடத்திற்கு வந்து ஈசுவரனை ஸ்மரித்துக் கொண்டிருந்தார்கள். அதன் பின், முற் புகன்ற வருஷம் மாதம் 16ந் தேதியில் கிருஷ்ண நாயக்க னுடைய பாரியையின் ஸ்வப்நத்தில் சில ஜனங்கள் வந்து உன் புருஷன் அரசப்ப சுவாமிகளை அவமானஞ் செய்தான், அதனுல் கொல்லுவதற்கு மீனுக்ஷி சுந்தரேஸ்வரர்கள் வருகின்ருர்க ளென்று நாங்கள் கேள்விப்பட்டோம், ஆகையால், உன் பதியை ஒளித்து வைத்துக் கொள் என்று சொன்னது போல, ஸ்பநத்தில் கண்டு' அந்த ஸ்பநத்தில் அந்த க்ஷணத்தில் அவ் வாறே பல்லக்கிலேறிக் கொண்டு சைந்நியங்களோடு மீனுக்ஷி சுந்தரேஸ்வரர்கள் வருகின்றதை அவளும் பார்த்தாள். உடனே எழுந்து பரபரப்போடு அந்த விருத்தாந்தத்தைச் சொல்லு

கின்றதாகச் சீக்கிரமாய் தன் பர்த்தாவின் சமீபம் வந்தாள். அதற்கு முன்பே அவன் ஸ்வப்நத்தில் விமாநத்தில் ஏறிக் கொண்டு சைதந்யங்களோடு தெற்கு சின்னக் கடை வீதியில் மீனுக்ஷி சுந்தரேஸ்வரர்கள் வருகின்றனர் போலும். அதனைப் பார்க்கின்றதற்கு பட்டணத்து ஜநங்கள் கூட்டம் கூட்டமாய்க் கூடியிருப்பது போலும், பார்த்திருக்கும்போது, அவ் விஷயத்தைக் கூறுவது போல ஒரு சிவபக்தன், தன் சமீபத்தில் வந்து, அடே கிருஷ்ண நாயக்கா நீ அரசப்ப சுவாமிகளை நிந்தனை செய்ததால் உன்னைக் கொல்வதற்கு மீனுக்ஷி சுந்தரேஸ்வரர்கள் இதோ வருகின்றார்கள் என்று சொன்னதைக் கேட்டு அவருக்கு இவன்.

அவர்கள் கோபத்திற்கு நான் பாத்திரமாவேனே வென்று பிரதி யுத்தரம் சொன்னது போற் கண்டு நன்கு விழித்தனன், அவ் வாறே பாரியையும், சொன்னாள். அதனை கிருஷ்ண நாயக்கன் கேட்டு, நான் அரசப்ப சுவாமிகளுடைய வாக்கியத்தை அங்கீகரியாமல் அவமானஞ் செய்தேனல்லவா. அதற்காக அச் சுவாமிகள் பரமசிவனிடத்தில் தெரியப்படுத்தி யிருப்பார்கள் என்று விளங்குகின்றது, அதனுல், அந்த விருத்தாந்தத்தை நஷ்டபூர்வகமாகச் சிவன் அறிவிக்கின்ருர் என்று மநதில் சிந்தித்து விபசநத்தோடு கிரகத்தில் வசித்து வந்தான். அதன் பின் அந்த மாதம் 26-வது தேதியில் அவன் தேகத்தில் வாந்தி, பேதி யுண்டாயிற்று, அதனுல், அவன் பிராணுந்தமாகும்படியாகிவிட்டான். பின்னும், அவனுடைய நிலத்தில் விளைந்திருந்த நெற்களும் சதா திருடர்களால் நாச மடைந்தன. இவற்றை யெல்லாம் கிருபையோடு கூடிய சுவாமிகள் கேட்டு மாதா பிதாக்களாகிய

மீனுக்ஷி சுந்தரேஸ்வரர்களிடத்தில் நமஸ்கரித்துச் சாம்ப மூர்த்தி யாகிய தயாநிதியே? கிருஷ்ண நாயக்கனுக்குச் சிக்ஷை பண்ணினது போதும், அவனைக் கொல்ல வேண்டாம். நான் முன் உபாதி வர வேண்டுமென்று தெரிவித்தேனே யன்றி அவனைக் கொல்லும்படி தெரிவிக்க வில்லை என்று தெரிவித்து, தம் ஸ்தாநம் வந்து சேர்ந்தார்கள். அதன் பின் கிருஷ்ண நாயக்கன் ஈசுவர கிருபையினுல் ஆரோக்கியத்தினை அடைந்தான். பின் சித்தார்த்தி வருஷம் ஆனி மாதம் 1உயில் தெற்குக் கடை வீதியில் இருவரும் சந்தித்தார்கள். அப் பொழுது சுவாமிகள் அவனைப் பார்த்து க்ஷேமமா? பூர்வ விருத்தாந்தத்தை நினைத்துக் கொள், என் வாக்கியத்தை அவமானஞ் செய்து என்னை அநாதரவு செய்தாய். அதனுல் வியசநத்தோடு சுவாமி சந்நிதியில் நான் தெரிவித்தேன். அதனுல் கெர்வி யாகிய உனக்கு வாந்தி பேதியும், நெல் நஷ்டமும் உண்டாயின. அதைக் கேள்விப்பட்டு மீண்டும் உனது ரோகம் சாந்தி யாகும் பொருட்டுச், சுவாமி சந்நிதியில் பிரார்த்தித்தேன். அதனுல் நீ ரோகத்தினின்றும் பிழைத்தாய் இதில் சந்தேகம் இல்லை என்று கூறிய வார்த்தையைக் கேட்டு, அந்த ராத்திரியில் கிருஷ்ண நாயக்கன், தன் ஸ்வப்நத்தில் மீனுக்ஷிசுந்தரேஸ்வரர்கள் யுத்தத்திற்கு வந்ததாகக் கண்டதையும், தன் பாரியை ஸ்வப்நத்திற் கண்டு வந்து சொன்னதையும், தனக்குப் பேதி உண்டாய்ப் பிராணன் போகும்படி வந்ததையும், நெற் கொள்ளை போனதையும், அரசப்ப சுவாமிகள் கூறிய வார்த்தையையும், ஆலோசித்து, மகாப் பிரபு வாயும், பக்தர்களுக்கு இஷ்டத்தைச் செய்கின்றவ ராயு மிருக்கின்ற சுந்தரேஸ்வர ருடைய விசித்திரமான

லீலே இவையாம் என்று நிச்சயம் செய்து, இந்தச் சரித்திரம் யாவற்றையும் ஒரு புஸ்தகத்தில் எழுதி வைத்துக் கொண்டான். இவ் வாறிருக்கும்போது அந்த மாதம் 22-ந்தேதி இரவில் ஸ்வாமிகளது ஸ்வப்நத்திற் பரமசிவன் சித்த ரூபியாய் வந்து, உனக்கு மகா விஷ்ணு மாமன், அந்த விஷ்ணு பக்தன் உனக்கு மைத்துனன், உனது மைத்துனை கிருஷ்ண நாயக்கனிடத்தில் என்னுடைய திரு விளையாடல் புத்தகம் இருக்கின்றது. அதை வாங்கி நீ பார் என்று கூறியதற்கு, அவனிடத்தில் அந்தப் புத்தகம் இல்லை, என்னிடத்தில் இருக்கின்றது நான் திரு விளையாடலைப் படித்து முடித்தேன் என்று சுவாமிகள் பதில் சொன்னபின், பரம சிவன் மீண்டும் சுவாமிகளை விளித்து, அந்தப் பழைய திருவிளை யாட லன்று, இது புதிதாயும், உன்னிமித்தம் செய்ததாயும், என் சரித்திர மாயும் 65வது என்று பெயருடையதாயு மிருக்கின்ற திரு விளையாடற் புத்தகம் அவனிடத்திருக்கின்றது, அதனை வாங்கி நீ பார், மற்றும், உன் புஷ்பத் தோட்டத்தில் இருக்கின்ற எல்லாப் புஷ்பங்களையும் சுப்பராயன் அபகரித்துக் கொண்டு போகின்றான், அதையும் பார் என்று சொல்லி மறைந்தார். அதன் பின் சுவாமிகள் உஷத் காலத்தில் சிவனைத் தியானஞ் செய்து கொண்டு எழுந்து புஷ்ப மின்றி யிருக்கின்ற தோட்டத்தினைப் பார்த்து ஆச்சரிய முள்ள மநதோடு கிருஷ்ண நாயக்கனை அழைத்துப் புஷ்பத்தோட்டத்தைக் காண்பித்து ஸ்வப்நத்தில் பரம சிவன் கூறியதனையும் சொன்னார்கள். அதனைக் கேட்டு, அவன் இது ஆச்சரியமா? முன் நான் உங்களை அவமானஞ் செய்ததற்காகச் சுவாமி சந்நிதியில் என்னைச் இரக்ஷிக்க வேண்டு மென்று வியசாமநதோடு நீங்கள் தெரி

வித்த பிரகாரம் எனது ஸ்வப்நத்திலும், என் சம்சாரத்தின் ஸ்வப்நத்திலும், மீனுக்ஷி சுந்தரேஸ்வரர்கள் சகல சைந்யங்களோடும் யுத்தத்திற்கு வந்தார்கள். அதற்குமேல் என்ன ஆச்சரியமிருக்கின்றது? மற்றும் உங்கள் ஸ்வப்நத்தில் பரமசிவனின் உங்கள் மைத்துனன் என்னிடத்தில் திருவிளையாடற் சரித்திரப் புத்தக மிருக்கின்றது. அதை வாங்கிப் பார் என்று கூறியது, இது தான் என்று கூறி, அந்தக் காகிதங்களைக் கொடுத்தான். ஸ்வாமிகள் அதை வாங்கிப் பார்த்து இவனது ஸ்வப்நத்திலும், இவனுடைய பத்நியினது ஸ்வப்நத்திலும், பரம சிவன் செய்த திருவிளையாடலை இதுவரையில் இவன் சுயமாக வெளிப்படுத்தவில்லை என்று நினைத்து பரமசிவன் நம் ஸ்வப்நத்தில் தம் சரித்திரம் இவனிடம் இருக்கின்றது. அதை வாங்கி நீ பார் என்று கூறினுர். இக் காரணத்தினுல் இந்த லீலை உலகில் பிரசித்தமாதல் வேண்டும் என்பது திருக் கருத்தே போலும், ஆச்சரியம் பரமசிவனுக்குப் பக்தனிடத்திலுள்ள காருண்யம் அளவிடக் கூடாததாக இருப்பது பிரகாசமாயிருக்கின்றதென்று மநதில் எண்ணிப் பரம சந்தோஷத்தை அடைந்தார்கள். அதன் பின், கிருஷ்ண நாயக்கனும், சுவாமிகளும், நம் விஷயத்தில் சாக்ஷாத் ஸ்ரீ சுந்தரேசர் இவ்வளவு அதிக சிரமத்தை எடுத்துக் கொண்டாரென்று மநதில் அதிக மான வியசநத்தையும், சந்தோஷத்தையும், ஒரே காலத்தில் அடைந்தார்ள். இவ் வாறு சுவாமிகள் விஷயத்தில் அநேகம் விசித்திரமான லீலைகள் சுந்தரேஸ்வரரால் காண்பிக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் சுவாமிகளுக்கு ஒரு கால் ரிஷபாரூடராயும், சித்த ரூபராயும், விமாநத்தி லிருக்கின்ற விக்கிரக ரூபராயும் வந்து தயாளுவாகிய சம்புவினுல் அநேக வித மாய் அநுக்கிரகஞ் செய்

யப்பட்டிருக்கின்றது. ஒரு கால் பரமசிவன் சுவாமிகள் ஸ்வப்நத்தில் வந்து மலையாளத்தி லிருந்து ஒரு மறையோன் நடேச மூர்த்தியைக் கொண்டு வந்து உனக்குக் கொடுப்பான். அதனை வாங்கிச் சந்தோஷ மாய்ப் பூஜிக்க என்று ஆக்ஞாபித்தனர். அவ் வாஞ்ஞையின்படியே சுவாமிகள் விழித்துச் சிவ வாக்கியத்தினை ஸ்மரித்துக் கொண்டிருந்தார்கள். அவ் வாறே, ஒருவன் வந்து இந்த நடராஜ மூர்த்தியினுடைய சுந்தர ஆகிருதியைப் பாரும் என்று கூறி, அதனை சுவாமிகளிடத்தில் கொடுத்தான். சுவாமிகள் ஆச்சரியத்தோடு அந்த முர்த்தியை வாங்கிப் பக்தியோடு பூஜித்து வந்தார்கள். பரமசிவன் சுவாமிகளிடத்தில் எப்பொழுதும் மிகுந்த ஆச்சரியத்தைச் செய்கின்றவராக இருக்கின்றார். சுவாமிகளும், பக்தர்களுடைய சித்தத்துக்கு ஸ்தாநபூதமா யிருக்கின்ற சுந்தரேஸ்வரருடைய ஆலயத்தில் நாடோறும் சென்று கால் மாறி நடஞ் செய்கின்ற நடராஜவைப் பூஜித்துக் கொண்டு அநேக காலம் இருந்து வந்தார்கள். இவ் வாறு சுவாமிகள் அந்தர் முக புருஷர்களுக்குள் அக்ர கண்ணியராயும், சாந்த முதலான சற் குணக் கூட்டங்களுக்கு நிதியாயும், மஹா ஆசார சீலராயு மிருந்தார்கள். ஒரு கால் சுவாமிகள் ஸ்வப்நத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் வந்து, அஞ்ஞானத்தை எறித்தார். ஒரு கால் சுவாமிகள் ஸ்வப்நத்தில் வந்து மன்மதனை கண்டு நீயார் என்று கேட்டார்கள். நான் மன் மதன் என்று பதில் கூறிய மர்த்திரத்தில் ஈசுவர வடிவான சுவாமிகள் நெற்றிக் கண்ணால் எரித்தார். சுவாமிகள் நந்திகேஸ்வரர் விக்நேஸ்வரர், ஸ்கந்தர் மால் முதலான தெய்வங்களிடத்தில் பக்தி யுடையவர்களாயினும், விசேஷ மாய் நடராஜாவினிடத்திலும். குருவினிடத்திலும்,

பக்தி செய்பவர்கள், அவர்கள் பிரசாதத்தால், பிரஹ்மாத்ம
ஐக்கிய ஞானத்தை அடைந்தவர்கள், அநேக காலம் சிவ
ஸ்தான உத்தம மான துவாதசாந்த க்ஷேத்திரத்தில் வசித்
துக் கொண்டு, மீனாக்ஷி சுந்தரேஸ்வரர்களை அகோராத்
திரம் ஆராதித்துக் கொண்டு வந்தார்கள். ஜீவன் முக்தி
தசையை அடைந்து, குரு பக்தர்களோடு ஜீவன் முக்தி
புரத்தில் இருப்பவர்களாயும், காமாதி வைரிகளை ஜயித்த
வர்களாயும், சாந்தியுடையவர்களாயும், முமுக்ஷுக்களாயு
மிருக்கின்றவர்கட்கு, ஜீவன் முக்தி சுகம் கிடைக்கும்
பொருட்டு வசித்து வந்தார்கள். விசேஷ மாக மீனாக்ஷி
சுந்தரேஸ்வரர்களுடைய புத்திர ராய், ராம லிங்கம் என்ற
பெயரை யுடையவருக்குப் பிரஹ்ம ஞானத்தைக் கொடுப்
பதற்கும், ஜீவன் முக்தி சுகத்தைக் கொடுப்பதற்கும்,
சாக்ஷாத் சச்சிதானந்த அகண்டாகார அத்வைதப் பிரஹ்
மமே, ஜலம் ஆலங் கட்டி ஆனது போலவும், நெய் விழு
தானது போலவும், பஸ்பம் போன்று விளங்கும் அரசப்ப
வடிவ மாய்ப் பக்தர்களுக் கநுக்கிரகிக்கு நிமித்த மாய்
அவதாரம் செய்தது, சுவாமிகள் இந்தப் பரிசுத்த மான
ஆத்ம நிஷ்டையானே பக்தர்களுக் கநுக்கிரகஞ் செய்து
கொண்டு இருந்து, பவ வருஷம், மார்கழி மாதம், சஷ்டி
திதி, பூர நக்ஷத்திரம், சோம வாரத் தன்று விதேக முக்தியை
காற்று அசை வின்றி போல், அடைந்து பரிபூரணப் பரப்
பிரஹ்ம ஸ்வரூபத்தில் ஐக்கிய மானார்கள். மீனாக்ஷி சுந்த
ரேஸ்வரது இந்த லீலை யாவும் அமிர்தத்தினைக் கொடுக்
கின்றன, மீனாக்ஷி சுந்தரேஸ்வரரைப் போல், அபீஷ்டத்
தினைக் கொடுக்கின்ற தெய்வம், மூன்று உலகத்துலு மில்லை.
அவரை உபாசிக்கின்ற புண்ணிவான்களுக்கு ஈண்டுத்

துர்லபம் என்ன விருக்கின்றது. அநேக கோடி ஜன்மங்களில், நிஷ்காமியமாய்ச் செய்த புண்ணிய சமூகத்தினுல் சித்த சுத்தி வந்து, முடிவான ஜென்மம் உடையவர்கட்கு இந்தத் துவாதசாந்த ஸ்தல வாசம் கிடைக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. சுபம் அஸ்து.

அரசப்ப சுவாமிகள் சரித்திரம் முற்றுப் பெற்றது.

## 39. சென்னை, சூளை சுப்பைய ஞாந தேசிக சுவாமிகள் சரித்திரம்.

கொங்கு நாட்டின்கண், கோயம் புத்தூருக்கு அருகில் உள்ள வேட்டைக்காரன் புதூர் என்னும் கிராமத்தில், மருதாசலம் பிள்ளைக்கும், அப்மணி அம்மாளுக்கும், உதித்து, இளமையின்கண்ணே ஆங்கிலம் கற்று, ஔடதப் பணிய ராய், அரிய பெரிய புகழுடன் இல்லின்கண் இருந்து முற்பவத்தில் செய்த சற் கர்மங்களின் பயனுக விக்நேசப் பெருமானின் விமல அருள் விளக்கால், விராகத்தை அடைந்து, பற்றைத் துறந்து, வெளிப் போந்து, திருக்குற்றாலத்தை அணுகி, ஆங்குள்ள விக்நேசப் பெருமானை வணங்கித் துதித்துக் கொண்டு வருங்கால், கோவிலூர், விர சேகரப் பெருந்தகையாரின் மாணுக்கர், பனையூர் பட்டி அருணுசல சுவாமிகள் என்னும் பெரியார், அருணகிரியாருக்கு அறுமுகவன் வந்தாங்கு, எதிர் பட்டனர். அவர் இவரது நற் குணங்களை கண்டு, கோவிலூர் என்றோர் வேதாந்த மட ஸ்தாநம் இருக்கின்றது, ஆங்கு நீர் செல்வீரேல், நலமாம் என்று உரைத்த, அவ் வுரை கேட்டு அவ் வண்ணமே கோவிலூரை அடைந்து, அங்குள்ள வீர சேகர விமல மாதவ வித்தகருடைய திருப்பாதத்தை சர

னடைந்து, மாணுக்க ராகி, அந்த பிரம சபைக்கண் ஆசிரி யர் அருகில் இருந்து, ஆத்தாதி பணிகளை அன்போடு செய்து அருள் பெற்று, வேதாந்த நூல்களை விதிப்படி பாடங் கேட்டு தெரிந்து, நிட்டை யுடைய ராய், வாரணசி அடைந்து, வட மொழி, கற்று, திட முறு வித்துவா ணய் விவேகாநந்த சுவாமிகள் போன்று, பிரசங்கம் செய்து, உலகத்தை ஈடு ஏற்றுபவ ராய், பல அடியார்கட்கும், ஆயி ரக்கணக்கான அன்பர்கட்கும், வட மொழி, தென் மொழி நூல்களை போதிக்கும் ஆசிரிய ராய், நியாய சந்திர ராய், வேதாந்த பாஸ்கர ராய், சென்னை சூளை ஆநந்த ஆசிரமத் தில், இருபத் தைந்து வருஷம் பிரதி தினம் மாலை ஏழு மணி முதல் எட்டு மணி வரை வேதாந்த பிரசங்கம் கேட்போர் ஆநந்திக்கும்படி ஆயிரம் பேருக்கு உபந்யாசம் செய்து கொண்டு இருந்து, ஆத்ம புராணம், பகவத் கீதை உரை, வாசிஷ்ட உரை. சமஸ்கிருதமொழி பெயர்ப்பு நூல் இருப் பத்து ஒன்று மொழி பெயர்த்து, தமிழ்க் கவி நூல் இருபது செய்து கொண்டும், நீண்ட நாள் திடகாத்திர மாய் இருந்து சமாதி ஆகிருர்கள்.

## சென்னை சூளை ஸ்ரீமத் வீர சுப்பைய ஞாந தேசிக சுவாமிகளின் விதேக முத்தி நாட் குறிப்புக் கவி.

பதினுன்கு சீர்க் கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

சொல்லுறுங் கலியை யாயிரத் தோடு
தோயுமுப் பத்திரண் டதனில்
துதைந்திடும் பிரஜோத் பத்தியாம் ஆண்டு
துணும்புரட் டாசியாம் மாதம்

புல்லுறு மிருபத் தாறதாந் தேதி
புகன்றிடுஞ் சோமவா ரத்தே
பொருந்திடும் பூர்வ பிரதமை திதியார்
புனிதசு வாதியாம் உடுநாள்

நல்லுத யாதி இருபத்தா றேகால்
நாழிகை வேளையில் சென்னை
நகருறு சூளை நியாயசந் திரரும்
ஞாநவே தாந்தபாஸ் கரரும்

வெல்லுமா மகிமை மண்டலே சுரரும்
விளங்குசொன் முகிலுமாம் திருவார்
வீரசுப் பைய ஞாநதே சிகரார்
விதேகமா முத்தியுற் றனரே.

கலியுக வருஷம் 5032, தமிழ் வருஷம் பிரஜோத்பத்தி வருஷம், புரட்டாசி மாதம், 26ம் தேதி திங்கட் கிழமை உதயாதி நாழிகை 26½ (பிற் பகல் மணி 4½) ஆங்கில வருஷம் 12—10—1931 பூர்வபக்ஷ பிரதமை திதி. சுவாதி நக்ஷத்திரம்.

## 40 வேத மொழி பெயர்ப்பு
## சிவாநந்த சுவாமிகள் சரித்திரம்.

வேதாரணியத்தில், அகம்படியர் குலத்தில், சாமித் தேவர், மதுரையம்மை, என்பவர் வயிற்றில் நல் ஓரையில் உதித்து இளமையில் தமிழ் கற்று முன் செய்த நல் வினைப் பயனால், இளமையிலேயே பல பெரியார்களை அடைந்து யோகாப்பியாசம் முதலியவற்றை மனம் தூயதாம் வண்

ணம் பழகி, பின்னர், சண்முகக் கடவுளின் தண் அருளால்,
கோவி லூரை அடைந்து, வீரசேகரப் பெருமானார் திரு
வடியை சரண் அடைந்து, அன்போடு இவ் வெந்தை
யாருக்கு, ஆத்த முதலிய பணிகளை செய்து கொண்டு விதிப்
படி வேதாந்த நூல்களை பாடம் கேட்டு, தெளிந்து சிந்தித்
துக் கொண்டு, வாராணசி சென்று, விதிப்படி பரம அம்ச
சந்நியாசம் பெற்றுக் கொண்டு, எந்தையாரின் திரு வடித்
திறத்தால், வட மொழியில், வியாகரணம் தர்க்கம் முதலிய
கருவி நூல்களும், பூர்வ மீமாம்சை முதலிய உபாங்க நூல்
களையும் கற்று, உத்தர மீமாம்சை நூல்கள் அத்வைத
சித்தி, கண்டந காத்தியம் முடிவாயுள்ளவற்றையும, கற்
றுணர்ந்து, அங்கு உள்ளாருக்கும், ஓதுவித்துக் கொண்டு,
இருக்க, இவ் வீரசேகரப் பெருமானார் திரு வருள் தென்
நாட்டிற்கு இழுத்துவர, இங்கு வந்து வேதம் மொழி
பெயர்ப்பு, வீரதேசிக ஞான தேசிக வசன புராணம், மேற்படி
கவி புராணம், பிள்ளைத் தமிழ், திரு வொற்றியூர் புராணம்,
முதலிய பல நூல் இயற்றிக் கொண்டு நீண்ட நாள் இருந்து,
ஏகாம்பர குப்பத்தில் சமாதி ஆனார்கள்.

## சிவானந்த சுவாமிகள் விதேக கைவல்யம்.

சீர்மிகுங் கலியை யாயிரத் தோடு
    சேருநாற் பத்தினோ டைந்தில்
திகழுதா ரணவாண் டைப்பசி மாதம்
    தேதியார் பதினைந்தோ டமையும்
நேர்மிகுங் கிழமை மங்கள வாரம்
    நிருமலப் பௌர்ணமி திதியும்
நிகழ்ந்திடும் பரணி யுடுவுறு நாளில்
    நிலைமிகுந் திருக்களர்த் தலமார்

பேர்மிகும் வீர தேசிக ரருளைப்
பெற்றுல குக்கருள் புரிந்தோன்
பிறங்கிடுங் தெய்வ வடமொழி வேதம்
பெருமைசங் கரவிஜ யாதி.
தேர்மிகுந் தமிழில் மொழி பெயர்த்தளித்தோன்
திகழுமே காம்பரக் குப்பத்
திருக்குமப் பேட்டை சிவாநந்த ஞாந
தேசிகன் முத்தியுற் றனனே.

கலியுக வருஷம் 5045, தமிழ் வருஷம் தாரண வருஷம், ஐப்பசி மாதம் 15தேதி, செவ்வாய்க் கிழமை பௌர்ணமி திதி பரணி நக்ஷத்திரம், ஆங்கில வருஷம் 31–10–1944.

மகாத்ம சரிதாமிருதம்
40 பெயர் சரித வசநம் முற்றுப்பெற்றது.

---



இராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வணம்,
வேதாந்த மடம், காசிகாநந்த ஞாநாச்சாரிய சுவாமிகள்
இயற்றிய நூல்கள்.

## 1 ஹிந்தி மொழி பெயர்ப்பு.

| | | |
|---|---|---|
| 1 | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா வசநம் | 2 50 |
| 2 | விசார சாகரம் வசநம் | 2 50 |

## 2 சமஸ்கிருத மொழி பெயர்ப்பு

| | | |
|---|---|---|
| 3 | கதா சரித் சாகரம் (கதை வசநம்) | 2 25 |
| 4 | ஹரிமீடே, ஹரிதத்வ மூக்தாவலி பத உரை | 0 75 |
| 5 | வியாச தாத்பரிய நிர்ணயம் வசநம் | 0 50 |
| 6 | நைஷ்க்கர்மிய சித்தி வசநம் | 0 50 |
| 7 | வேதாந்த சித்தாந்த முத்தாவலி வசநம் | 0 50 |
| 8 | ஸ்வராஜ்ய சித்தி வசநம் | 0 50 |
| 9 | பகவற்கீதை 15-வது அத்தியாயம் சமஸ்கிருதம் தமிழ் பத உரை, தமிழ். பாட்டு, தமிழ் உரை, மூர்க்க சதகம் சமஸ்கிருதம் தமிழ் பத உரை நிர்க்குண அஷ்டோத்தர சத நாமாவளி சமஸ்கிருதம் தமிழ் நாலு சேர்ந்தது | 0 50 |
| 10 | வேதாந்த பரிபாஷை வசநம் 0 44 [வசநம் | 0 25 |
| 11 | மண்டல பிராஹ்மண உபநிஷத்-ராஜ யோக பாஷ்யம் | |
| 12 | ஈசாவாஸ்ய உபநிஷத்-சங்கர பாஷ்யம் வசநம் | 0 25 |
| 13 | வேதாந்த சஞ்ஞா வசநம் | 0 13 |

## 3 தமிழ் உரை நூல்

| | | |
|---|---|---|
| 14 | நாநா ஜீவ வாதக் கட்டளை சத்யார்த்தப் பிரகாசிகை உரை | 2 00 |
| 15 | கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை | 2 00 |
| 16 | மேற்படி, நக்ஷத்திர விளக்க உரை | 0 50 |
| 17 | சசிவந்ந போதம், பதார்த்த பாஸ்கரன் உரை | 2 00 |
| 18 | மகாராஜத் துறவு-மநப் பிரசாதிநி உரை | 2 00 |
| 19 | பக்தி (வைராக்கிய) சதக பத உரை பொழிப்புரை | 1 50 |
| 20 | மேற்படி உரை உதாரணக் கவி, பக்திரச உரை | 1 00 |
| 21 | வைராக்கிய தீபம் பத உரை பொழிப் புரை | 0 50 |
| 22 | மேற்படி உரை உதாரணக் கவி, சுடர் உரை | 1 00 |
| 23 | சிடாசாரம் பால போதிநி உரை | 0 50 |
| 24 | கைவல்ய நவநீதம், தத்துவார்த்ததீபிகை உரை உதாரணக் கவி 233க்கு, ஆதித்தன் உரை | 2 50 |
| 25 | சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி பரிமள தீப உரை | 1 50 |

| | | |
|---|---|---|
| 26 | திருவெம்பாவை, திருப்பள்ளி எழுச்சி மணி மாலை, சிறுசுடர் உலா | 0 75 |
| 27 | மந்திர உபதேசம் வசநம் | 0 25 |
| 28 | த்ரிம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி, நுந்தா ஒளி உரை | 0 25 |
| 29 | வட நாட்டில் அரித்துவாரக் கும்பமேளாவும், தென்னாட்டில் சாதுக்கள் மேளாவும் வசநம் | 0 13 |
| | சாது சங்க நிறுவல் விழா வைபவம | 0 50 |
| 30 | மடங்களின் உத்பத்தியும், தற்போதுள்ள நிலைமையும் | 0 13 |
| 31 | அதிஷ்டாநத்தில் இருப்பவர்கட்கும், அத்வைதிகட்கும் ஓர் அறிக்கை | 0 25 |
| 32 | ஒன்பது துறவியர் பாடிய அருட் பா மாலை கவி 280 | 1 00 |
| 33 | திருக்களர், வீரசேகர ஞாந தேசிகர் சரிதம் வசநம் | 1 00 |
| 34 | காசிகாநந்த விஜயம் வசநம் | 0 25 |
| 35 | மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி கவி (62) | 0 50 |
| 36 | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி (9) சேர்ந்தது | 3 00 |
| 37 | வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம் விவேக சூடாமணி கவி 671, அஞ்ஞவதைப் பரணி கவி 494, பஞ்சதசி கவி 796 (3) சேர்ந்தது கவி (1961) | 3 00 |
| 38 | கீதாத் திரயம், ஈசுவர கீதை கவி 338, பகவற் கீதை கவி 545, பிரஹ்ம கீதை கவி 547 மூன்று சேர்ந்தது ஆக கவி 1430) | 3 00 |
| 39 | வாசிட்டம் கவி (2055) | 2 25 |
| 40 | சப்ததா சப்ததி: தோத்திர ரச மஞ்சரி கவி 70 நுந்தா ஒளி உரை | 0 75 |
| 41 | விம்சதி ஸ்தோத்திர ரச மஞ்சரி கவி 20 ஷை உரை | 0 25 |
| 42 | பக்தி சதக தோத்திரம்-தோத்திரப் பிரகாச உரை | 0 19 |
| 43 | திருவெம்பாவை-திருப் பள்ளி எழுச்சி பத உரை | 0 25 |
| 44 | சூட்டுக்கோல் கட்டாரி புச்சம கண்டநப வசநம | 2 00 |
| 45 | கோவிலூர் மடத்தின் அத்புத மகிமா அகூபாரம் | 0 75 |
| 46 | கைவல்ய நவநீதம் சிருதபாந உரை | 3 00 |
| 47 | மேற்படி ஆராய்ச்சி 0 13 48 ஷை பத சார உரை | 3 50 |
| 49 | வேதாந்த சூடாமணி சந்தோஷ தாயினி உரை | 5 00 |
| 50 | வேதாந்த சூடாமணி மூலம் | 0 50 |
| 51 | பிரஹ்ம கீதை கவி 547 | 0 38 |
| 52 | ஈசுவர கீதை கவி 338 | 0 25 |
| 53 | பகவற்கீதை கவி 545, 1 25, 54 பஞ்சதசி கவி 796 | 0 62 |
| 55 | மகாத்ம சரிதாமிருதம் (40 பெயர் சரிதம்) | 4 00 |